# லெனின்



# நூல் திரட்டு

"இடதுசாரி" கம்யூனிசம்—
இளம் பருவக் கோளாறு

இளைஞர் கழகங்களின் பணிகள்

கூட்டுறவு குறித்து

நமது புரட்சி

4

# வி. இ. லெனின்

# நூல் திரட்டு

## நான்காம் பாகம்



முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ

## பதிப்பாளர் குறிப்பு

நான்கு பாகங்களில் வெளியிடப்படும் இந்தத் தமிழ்ப் பதிப்பு வி. இ. லெனின், முழு நூல் திரட்டு, ஐந்தாவது ருஷ்ய மொழிப் பதிப்பிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது.

**В. И. Ленин**

ИЗБРАННЫЕ ПРОИЗВЕДЕНИЯ

Часть четвертая

*На тамильском языке*



Л $\frac{10102-544}{014(01)-78}$ 677—78

சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

## பொருளடக்கம்


''இடதுசாரி'' கம்யூனிசம்—இளம் பருவக் கோளாறு . . . . . . . . . . . . . 9

1. எப்பொருளில் நாம் ருஷ்யப் புரட்சியின் சர்வ தேச முக்கியத்துவம் குறித்துப் பேசலாம் . 9

2. போல்ஷிவிக்குகளுடைய வெற்றிக்கு இன்றியமையாத ஒரு நிபந்தனை . . . . . . . 13

3. போல்ஷிவிச வரலாற்றின் பிரதான கட்டங்கள் . . . . . . . . . . . . . . . 18

4. தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் எந்தெந்தப் பகைகளுக்கு எதிரான போராட்டம் போல்ஷிவிசம் வளர்ந்து வலிமையுற்று உருக்கு உறுதி பெற உதவிற்று . . . . . . . . . . . 27

5. ஜெர்மனியில் ''இடதுசாரி'' கம்யூனிசம். தலைவர்கள், கட்சி, வர்க்கம், வெகுஜனங்கள். . 40

6. புரட்சியாளர்கள் பிற்போக்குத் தொழிற் சங்கங்களில் வேலை செய்யலாமா?. . . . 53

7. முதலாளித்துவ நாடாளுமன்றங்களில் பங்கெடுத்துக் கொள்ளலாமா? . . . . . . 70

8. சமரசம் கூடவே கூடாதா? . . . . . . 87

9. பிரிட்டனில் ''இடதுசாரி'' கம்யூனிசம் . . 107

10. சில முடிவுகள் . . . . . . . . . . . . 129

அனுபந்தம் . . . . . . . . . . . . . . 155

1. ஜெர்மன் கம்யூனிஸ்டுகளிடையே பிளவு . . 156
2. ஜெர்மனியில் கம்யூனிஸ்டுகளும் சுயேச்சை யாளர்களும் . . . . . . . . . . . 159
3. இத்தாலியில் டுராட்டி கோஷ்டியார். . . 163
4. சரியான முதற்கோள்களிலிருந்து பெறப்படும் தவருன முடிவுகள் . . . . . . . . . 166
5. . . . . . . . . . . . . . . 174
வைன்காப்பின் கடிதம் . . . . . . . . . 174
நிலப் பிரச்சினை பற்றிய ஆய்வுரைகளின் பூர் வாங்க நகல் (கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டா வது காங்கிரசுக்காக) . . . . . . . . . . . 176
கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கி ரஸ். 1920 ஜூலை 19—ஆகஸ்டு 7. . . . . . 198
தேசிய இன, காலனிப் பிரச்சினைகள் பற்றிய கமிஷனின் உரை ஜூலை 26 . . . . . . . . 198
இளைஞர் கழகங்களின் பணிகள். ருஷ்யாவின் இளங் கம்யூனிஸ்டுக் கழகத்தின் மூன்ருவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸில் நிகழ்த்திய சொற்பொழிவு 1920, அக்டோபர் 2 . . . . . . . . . 208
பாட்டாளி வர்க்கக் கலாசாரம் குறித்து . . 238
குபேர்னியா, உயெஸ்து கல்வி இலாகாக்களின் அரசியல் கல்விப் பணித்துறையாளர்களது அனைத்து ருஷ்யாவின் மாநாட்டில் நிகழ்த் திய சொற்பொழிவு, 1920 நவம்பர் 3 . . . 241
ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷி விக்குகள்) பத்தாவது காங்கிரஸ் 1921 மார்ச் 8-16 . . . . . . . . . . . . . . . 259
கட்சி ஒற்றுமை குறித்து ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் பத்தாவது காங்கிரஸ் தீர்மானத்தின் ஆரம்ப நகல். . . . . . . . . . . 259

ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியினது (போல்ஷிவிக்குகள்) பத்தாவது அனேத்து ருஷ்ய மாநாடு 1921 மே 26-28 . . . . . . . . 266

மாநாட்டின் முடிவில் நிகழ்த்திய சொற்பொழிவு 1921 மே 28 . . . . . . . . . . . . 266

கம்யூனிஸ்டு அகிலத்தின் மூன்றாவது காங்கிரஸ், 1921 ஜூன் 22—ஜூலை 12 . . . . . . . . . 269

ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியினது போர்த்தந்திரம் பற்றிய உரைக்கான ஆய்வுரைகள் 269

1. ரு.சோ.சோ.கூ. குடியரசின் சர்வதேச நிலைமை . . . . . . . . . . . . . 269
2. சர்வதேச அளவில் வர்க்க சக்திகளது பரஸ்பர உறவுநிலை . . . . . . . . . . . . . 270
3. ருஷ்யாவில் வர்க்க சக்திகளது உறவுநிலை . . 272
4. ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கமும் விவசாயிகளும் . . . . . . . . . . . . . . . 273
5. ரு.சோ.சோ.கூ. குடியரசில் பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்கும் இடையிலான இராணுவக் கூட்டணி . . . . . . . . . 274
6. பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்கும் இடையே ஒழுங்கான பொருளாதார உறவுகளுக்கு மாறிச் செல்லுதல் . . . . . . 275
7. சோவியத் அரசாங்கம் எந்நிலைமைகளில் முதலாளித்துவத்துக்கும் சலுகைகளுக்கும் அனுமதியளிக்கலாம் என்பதும், இப்படி அனுமதியளிப்பதன் உட்பொருளும் . . . . . . . . . 276
8. நமது உணவுக் கொள்கையின் வெற்றி . . . 278
9. சோஷலிசத்தின் பொருளாயத அடித்தளமும் ருஷ்யாவை மின்மயமாக்கும் திட்டமும் . 279
10. ''தூய ஜனநாயகமும்'' இரண்டாவது, இரண்டரையாவது அகிலங்களும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் மூலதனத்தின்

கூட்டாளிகளாய் ஆற்றும் பாத்திரம் . . . . . 280
அக்டோபர் புரட்சியின் நான்காவது ஆண்டு விழா . . . . . . . . . . . . . . 284
தற்போதும் சோஷலிசத்தின் முழுநிறை வெற்றிக்குப் பிற்பாடும் தங்கத்தின் முக்கியத்துவம் 300
போர்க்குணம் கொண்ட பொருள்முதல்வாதத்தின் முக்கியத்துவம் குறித்து . . . . . 314
''பிராவ்தாவின்'' பத்தாவது ஆண்டுவிழா. 332
ஜினேவா மாநாட்டுக்குச் சென்ற பிரதிநிதிக் குழுவின் உரை பற்றிய அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் கமிட்டியின் நகல் தீர்மானம் 339
மாஸ்கோ சோவியத்தின் முழுநிறைக் கூட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு, 1922 நவம்பர் 20 . . . . . . . . . . . . . . . . 342
காங்கிரசுக்குக் கடிதம் . . . . . . . . . . 357
1 . . . . . . . . . . . . . . . . . 357
2 . . . . . . . . . . . . . . . . . 358
1922 டிசம்பர் 24ஆம் தேதிக் கடிதத்துடன் கூடுதலாகச் சேர்க்கப்பட்டது . . . . . . . . 362
3 . . . . . . . . . . . . . . . . . 363
நாட்குறிப்பிலிருந்து சில பக்கங்கள் . . . . . 366
கூட்டுறவு குறித்து. . . . . . . . . . . . 375
1 . . . . . . . . . . . . . . . . . 375
2 . . . . . . . . . . . . . . . . . 382
நமது புரட்சி. (நி. சுகானவின் குறிப்புகள் சம்பந்தமாய்) . . . . . . . . . . . . . . . . 388
1 . . . . . . . . . . . . . . . . . 388
2 . . . . . . . . . . . . . . . . . 393
சொற்பமாயினும் சிறந்ததே நன்று . . . . . 395
பதிப்பாளர் குறிப்புகள் . . . . . . . . . . . 422
பெயர்க் குறிப்பகராதி . . . . . . . . . . 467
பொருட் குறிப்பகராதி . . . . . . . . . . 491

# "இடதுசாரி" கம்யூனிசம்—இளம் பருவக் கோளாறு[1]

## 1

### எப்பொருளில் நாம் ருஷ்யப் புரட்சியின் சர்வதேச முக்கியத்துவம் குறித்துப் பேசலாம்

ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கம் அரசியல் ஆட்சியதிகாரம் வென்றதும் (அக்டோபர் 25 [நவம்பர் 7], 1917) ஆரம்ப மாதங்களில், பிற்பட்ட ருஷ்யாவுக்கும் மேலைய ஐரோப்பாவின் வளர்ச்சியுற்ற நாடுகளுக்கும் இடைப்பட்ட மிகுதியான வேறுபாடு காரணமாய், இந்நாடுகளின் பாட்டாளி வர்க்கப் புரட்சி சிறிதும் எங்களுடையதை ஒத்ததாக இராதென நினைக்கத் தோன்றியிருக்கலாம். இப்பொழுது நமக்குக் கணிசமான அளவில் சர்வதேச அனுபவம் கிடைத்திருக்கிறது; எங்களுடைய புரட்சியின் குறிப்பிட்ட சில அடிப்படை இயல்புகள் ஒரு மண்டலத்துக்கோ, தனியொரு தேசத்துக்கோ, ருஷ்யாவுக்கோ மட்டும் உரித்தான முக்கியத்துவத்துடன் கூட, சர்வதேச முக்கியத்துவமும் பெற்றவை என்பதை இந்த அனுபவம் திட்டவட்டமாகப் புலப்படுத்துகிறது. சர்வதேச முக்கியத்துவம் என்பதாக இங்கு நான் கூறுவது இப்பதத்தின் விரிவான பொருளில் அல்ல; எங்களுடைய புரட்சியால் எல்லா நாடுகளுக்கும் ஏற்படும் விளைவுகளின் பொருளில், இப்புரட்சியின் முதல் நிலைக் கூறுகளில் சிற்சில மட்டுமின்றி யாவுமே, மற்றும் அதன் துணைக் கூறுகளில் பலவுங்கூட, சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்தவையே. இப்பதத்தின் மிகக் குறுகிய பொருளில் தான், எங்கள் நாட்டில் நடந்தேறியது சர்வதேச அளவில் பொருந்துவதாகும், அல்லது சர்வதேச அளவில் திரும்பவும் நடைபெறுவது வரலாற்று வழியில் தவிர்க்க இயலாததாகும் என்கிற பொருளில்தான், இதைப் பற்றி இங்கு நான் கூறுகிறேன். எங்களுடைய புரட்சியின் சில அடிப்படை

இயல்புகள் இந்த முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளன என்பதை ஏற்றுக் கொண்டே ஆக வேண்டும்.

இந்த உண்மையை மிகைப்படுத்திக் கூறி, எங்கள் புரட்சியின் சிற்சில அடிப்படை இயல்புகளுக்கு அப்பாலும் இதனை விரிவுபடுத்திச் செல்வது மிகப் பெரும் பிழையாகிவிடுமென்பதைக் கூறத் தேவையில்லை. வளர்ச்சியுற்ற நாடுகளில் ஏதேனும் ஒன்றிலாவது பாட்டாளி வர்க்கப் புரட்சி வெற்றியடையுமாயின், அதைத் தொடர்ந்து பெரும் மாற்றம் ஏற்படக்கூடும், அதாவது ருஷ்யா முன் மாதிரியாக இருக்கும் நிலை விரைவில் முடிவுற்றுத் திரும்பவும் (''சோவியத்'', சோஷலிசப் பொருளில்) பிற்பட்ட நாடாகிவிடக் கூடும் என்பதைக் காணத் தவறுவதும் பிழையே ஆகும்.

ஆனால் வரலாற்றின் தற்போதைய தருணத்தில் ருஷ்யாவின் முன்மாதிரியே, எல்லா நாடுகளுக்கும் அவற்றின் தவிர்க்கமுடியாத சமீபத்திய எதிர்காலங் குறித்து ஒன்றை — மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றை—புலப்படுத்திக் காட்டுகிறது. எல்லா நாடுகளிலும் முன்னேறிய தொழிலாளர்கள் இதனை முன்பே உணர்ந்து கொண்டு விட்டனர். பல சந்தர்ப்பங்களில், உணர்ந்து கொண்டனர் என்பதற்குப் பதிலாய், தமது புரட்சிகர வர்க்க உள்ளுணர்ச்சியின் துணை கொண்டு இதனை இறுகப் பற்றிக் கொண்டனர் என்றே சொல்ல வேண்டும். சோவியத் ஆட்சியதிகார அமைப்புக்கும், மற்றும் போல்ஷிவிக்குத் தத்துவம், போர்த்தந்திரம் இவற்றின் அடிப்படைக் கூறுகளுக்கும் உள்ள சர்வதேச ''முக்கியத்துவம்'' (இச்சொல்லின் குறுகிய பொருளில்) இதில்தான் அடங்கியிருக்கிறது. இரண்டாவது அகிலத்தின்[2] ''புரட்சிகரத்'' தலைவர்கள்—ஜெர்மனியில் காவுத்ஸ்கியையும், ஆஸ்திரியாவில் ஓட்டோ பௌவரையும் பிரீட்ரிஹ் ஆட்லெரையும் போன்றவர்கள்—இதனைப் புரிந்து கொள்ளத் தவறிவிட்டனர். அவர்கள் பிற்போக்காளர்களாகவும் படுமோசமான சந்தர்ப்பவாதத்தின், சமூகத் துரோகத்தின் ஆதரவாளர்களாகவும் ஆகியதற்கு இதுவேதான் காரணம். எழுதியவர்

பெயர் குறிக்கப்படாமல் உலகப் புரட்சி *(Weltrevolution)*[3] என்ற தலைப்பில் 1919 வியென்னாவில் வெளியான பிரசுரத்தை (Sozialistische Bücherei, Heft 11; Ignaz Brand*) இங்கு குறிப்பிடலாம். இது அவர்களுடைய சிந்தனைப் போக்கு அனைத்தையும், கருத்துக்களின் வீச்சு முழுவதையும், இன்னும் பொருத்தமாய்ச் சொல்வதெனில் அவர்களுடைய மடமை, பகட்டுப் புலமை, இழிநிலை, தொழிலாளி வர்க்க நலன்களுக்கு அவர்கள் இழைக்கும் துரோகம் ஆகியவற்றின் முழு அளவையும் தெளிவாக வெளிப்படுத்துகிறது. அதுவும் ''உலகப் புரட்சி'' என்னும் கருத்தைப் ''பாதுகாப்பதாகக்'' கூறிக் கொண்டு இவ்வளவையும் அவர்கள் செய்வதை வெளிப்படுத்துகிறது.

ஆனால் இந்தப் பிரசுரத்தைப் பற்றி மேலும் விவரமாய் வேறொரு நேரத்தில் பரிசீலிப்போம். இன்னும் ஒரேயொரு விவரத்தை மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்: முன்னொரு காலத்தில் காவுத்ஸ்கி ஓடுகாலியாக இல்லாமல் மார்க்சியவாதியாகவே இருந்தபோது, வரலாற்றியலாளராக அவர் இப்பிரச்சினையைப் பரிசீலிக்கையில், ருஷ்யப் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சித் தன்மை மேலைய ஐரோப்பாவுக்கு முன்மாதிரியாக விளங்கும் ஒரு சூழ்நிலை எழுவதன் சாத்தியப்பாட்டை முன்னறிந்து கூறியிருந்தார். 1902ல் புரட்சிகர இஸ்க்ராவுக்கு[4] ''ஸ்லாவ்களும் புரட்சியும்'' என்று மகுடமிட்டு காவுத்ஸ்கி வரைந்த ஒரு கட்டுரையில் இதனைக் கூறியிருந்தார். அந்தக் கட்டுரையில் அவர் எழுதியதாவது:

''தற்காலத்தில் [1848ல் இருந்ததற்கு மாறாக]** ஸ்லாவ்கள் புரட்சிகரத் தேசங்களது அணிவரிசையில் அடியெடுத்து வைத்துவிட்டனர் என்பதுடன், புரட்சிகரச் சிந்தனையின், புரட்சிகரச் செயலின் மையம் மேலும்

---

* சோஷலிச நூலகம், தொகுதி 11, இக்னத்ஸ் பிராண்ட்.—ப-ர்.

** வேறு விதமாய்க் குறிக்கப்படாத வரை, மேற்கோள்களில் அடைப்புகளுக்கு இடையமைந்த இடைக் குறிப்புகள் லெனினுடையவை.—ப-ர்.

மேலும் ஸ்லாவ்களின் பக்கம் இடம் பெயர்ந்து வருவதாக வும் தெரிகிறது. புரட்சிகர மையம் மேற்றிசையிலிருந்து கீழ்த்திசைக்கு இடம் பெயர்ந்து செல்கிறது. பத்தொன் பதாம் நூற்றூண்டின் முதற்பாதியில் அது பிரான்சில் அமைந்திருந்தது, சிற்சில சமயங்களில் இங்கிலாந்திலும் இருந்தது. 1848ல் ஜெர்மனியும் புரட்சிகரத் தேசங்களது அணிவரிசையில் சேர்ந்து கொண்டது.... புரட்சிகர மையம் மேலும் இடம் பெயர்வதை, அதாவது ருஷ்யாவுக்கு இடம் பெயர்வதை நாம் நெருங்கிக் கொண்டிருக்கிறேம் என்ற கருத்தைச் சுட்டும் நிகழ்ச்சிகளுடன் புதிய நூற் றூண்டு ஆரம்பமாகியுள்ளது.... மேற்கிலிருந்து அவ்வளவு பெரிய அளவில் புரட்சிகர முன்முயற்சியை ஈர்த்துக் கொண்ட ருஷ்யாவானது, இப்பொழுது புரட்சிகர ஆற்றலுக்குரிய ஊற்றூக மேற்கிற்குப் பணிபுரிய ஆயத்தமாயுள்ளது என்பதாகத் தெரிகிறது. நம்மிடையே மலிந்து வரும் ஊதிப் பருத்த குட்டி முதலாளித்துவ அற்பத்தனத்துக்கும் உணர்ச்சி வேகமில்லா அரசியலுக்கும் முடிவு கட்டவல்ல சக்தி மிக்கச் சாதனமாக, தற்போது மூண்டெழுந்து வரும் ருஷ்யப் புரட்சி இயக்கம் செயல் படக்கூடும். போராட்ட ஆர்வத்தையும், நமது மாபெரும் இலட்சியங்கள் பால் உணர்ச்சித் துடிப்புள்ள பற்றுறுதியை யும் அது மீண்டும் கிளர்ந்தெழச் செய்யக்கூடும். மேற்கு ஐரோப்பாவுக்கு ருஷ்யாவானது பிற்போக்கின், வரம்பற்ற எதேச்சாதிகாரத்தின் கொத்தளமாய் இருந்த நிலை முடி வுற்றுப் பல காலமாகிறது. இதற்கு நேர்மாறூன நிலைதான் இன்றுள்ள நிலையாகுமென நினைக்கிறேன். ருஷ்யாவுக்கு மேற்கு ஐரோப்பா பிற்போக்கின், வரம்பற்ற எதேச் சாதிகாரத்தின் கொத்தளமாகி வருகிறது.... ருஷ்யப் புரட்சியாளர்கள் ஜாருடன்கூடவே ஜாரின் கூட்டாளியான ஐரோப்பிய மூலதனத்தையும் ஏககாலத்தில் எதிர்த்துப் போராட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிராவிடில், நெடுங் காலத்துக்கு முன்பே அவர்கள் ஜார் மன்னனைச் சமாளித்திருப்பார்கள். இம்முறை அவர்கள் இரு பகைவர் களையும் சமாளிப்பதில் வெற்றி காண்பார்கள் என்றும், இந்தப் புதிய "புனிதக் கூட்டு" அதன் மூதாதைகளைக் காட்டிலும் மிக விரைவிலேயே தகர்ந்துவிடும் என்றும் எதிர்பார்ப்போமாக. ருஷ்யாவில் தற்போது நடைபெறும் போராட்டம் எப்படி முடிவுறுவதாய் இருப்பினும், அதன் தியாகிகளுடைய இரத்தமும் துன்பதுயரங்களும் — அது தோற்றுவிக்கும் தியாகிகளின் எண்ணிக்கை துரதிருஷ்ட வசமாய் அளவு கடந்ததாகவே இருக்கும்—விரயமாகி விடப்

போவதில்லை. அவை நாகரிக உலகெங்கும் சமுதாயப் புரட்சியின் குருத்துக்களுக்கு ஊட்டமளித்து, அவற்றை மேலும் வளமாகவும் விரைவாகவும் வளரச் செய்யும். 1848ல் ஸ்லாவ்கள் உயிர் கொல்லும் கொடுங்குளிராகி, மக்களது வசந்தத்தின் நறுமலர்களை நலிந்து விழச் செய்தனர். இப்பொழுது அவர்கள், பிற்போக்கின் இறுகிய பனிக்கட்டியை உடைத்து, தேசங்களுக்கு இன்பகரமான புதிய வசந்தத்தை யாராலும் தடுக்கவொண்ணுத முறையில் கொண்டு வந்து அளித்திடும் புயலாகி விடுவார்கள் என்று தோன்றுகிறது.'' (கார்ல் காவுத்ஸ்கி, ''ஸ்லாவ்களும் புரட்சியும்'', இஸ்க்ரா, ருஷ்ய சமூக-ஜனநாயகப் புரட்சிகரச் செய்தி யேடு, இதழ் 18, மார்ச் 10, 1902).

பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு கார்ல் காவுத்ஸ்கி எவ்வளவு நன்றாய் எழுதினுர்!

## 2

## போல்ஷிவிக்குகளுடைய வெற்றிக்கு இன்றியமையாத ஒரு நிபந்தனை

எங்களுடைய கட்சியில் மிகவும் கடுமையான, மெய்யாகவே உருக்கு உறுதி வாய்ந்த கட்டுப்பாடு இல்லாமல், அல்லது தொழிலாளி வர்க்கத்தின் பெருந் திரளானேர் அனைவரின்—அதாவது அதைச் சேர்ந்த சிந்தனையுடைய, நேர்மையான, தன்னலங் கருதாத் தியாக உணர்வு கொண்ட, செல்வாக்குப் படைத்த பகுதியோர் யாவரின்; பிற்பட்ட பகுதிகளுக்குத் தலைமை தாங்கவோ அவற்றைத் தம்முடன் அழைத்துச் செல்லவோ வல்லமை பெற்ற பகுதியோர் யாவரின் — முழுநிறையான தங்குதடையற்ற ஆதரவு இல்லாமல், போல்ஷிவிக்குகளால் இரண்டரை ஆண்டுகள் வேண்டாம், இரண்டரை மாதங்களுக்குங்கூட அதிகாரத்தில் நீடித்திருக்க முடியாது என்பது தற்போது அனேகமாய் எல்லோராலுமே உணரப்படுகிறது என்று நினைக்கிறேன்.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்பது புதிய வர்க்கம் தன்னைக் காட்டிலும் அதிக சக்தி வாய்ந்த பகைவனை

முதலாளித்துவ வர்க்கத்தை எதிர்த்து நடத்தும் மிகமிக வைராக்கியமான ஈவிரக்கமற்ற யுத்தத்தைக் குறிக்கிறது. முதலாளித்துவ வர்க்கம் கவிழ்க்கப்பட்டதால் (ஒரேயொரு நாட்டில் மட்டும்தான் என்ருலுங்கூட) அதன் எதிர்ப்பு பத்து மடங்கு அதிகரித்துவிட்டது. இதன் வலிமை சர்வதேச மூலதனத்தின் பலத்தில் மட்டுமின்றி, இதன் சர்வதேசத் தொடர்புகளின் பலத்திலும் திண்மையிலும் மட்டு மின்றி, பழக்கத்துக்குள்ள பிடிப்பின் வலிவிலும் சிறுவீதப் பொருளுற்பத்திக்குள்ள பலத்திலும் அடங்கியுள்ளது. துரதிருஷ்டவசமாய் உலகில் சிறுவீதப் பொருளுற்பத்தி இன்னமும் மலிந்தே இருக்கிறது. இந்தச் சிறுவீதப் பொருளுற்பத்தி முதலாளித்துவத்தையும் முதலாளித்துவ வர்க்கத்தையும் இடையருது நாள்தோறும் மணிதோறும் தன்னியல்பாகவும் பெருவீத அளவிலும் தோற்றுவிக்கிறது. இக்காரணங்களால் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் இன்றியமையாததாகி விடுகிறது. நெஞ்சுறுதியும் கட்டுப்பாடும் அசைக்க முடியாத ஒருமித்த திடச்சித்தமும் தேவைப்படும் விடாப்பிடியான உக்கிரமான நீண்டதோர் ஜீவ-மரணப் போராட்டமின்றி, முதலாளித்துவ வர்க்கத்தின்மீது வெற்றி பெறுவது சாத்தியமன்று.

திரும்பவும் கூறுகிறேன்: பாட்டாளி வர்க்கத்திடம் முழுமையான மத்தியத்துவமும் கடுமையான கட்டுப்பாடும் இருக்க வேண்டியது முதலாளித்துவ வர்க்கத்தின்மீது வெற்றி பெறுவதற்கான இன்றியமையாத ஒரு நிபந்தனையாகும் என்பதை ருஷ்யாவில் வெற்றி கண்ட பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் அனுபவம், சிந்தனை ஆற்றல் இல்லாதோருக்குங்கூட, அல்லது இதில் சிந்தனை செலுத்த வாய்ப்பு இல்லாமற் போனவர்களுக்குங்கூட தெளிவாகக் காட்டியுள்ளது.

அது அடிக்கடி எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் இதன் பொருள் என்ன, எந்நிலைமைகளில் இது சாத்தியம் என்பதில் போதிய அளவு சிந்தனை செலுத்தப்படவில்லை. சோவியத்துகளுக்கும் போல்ஷிவிக்குகளுக்கும் வாழ்த்துக்கள் தெரிவிப்பதோடுகூட, இன்னும் அடிக்கடி புரட்சிகரப்

பாட்டாளி வர்க்கத்துக்கு வேண்டிய கட்டுப்பாட்டை போல்ஷிவிக்குகளால் எப்படி நிறுவிக் கொள்ள முடிந்தது என்பதன் காரணங்கள் பற்றிய ஆழ்ந்த பகுத்தாராய்வும் செய்யப்படுமானுல் எவ்வளவு நன்ருய் இருக்கும்?

அரசியல் சிந்தனைப் போக்காகவும் அரசியல் கட்சியாகவும் போல்ஷிவிசமானது 1903 முதலாய் இருந்து வந்திருக்கிறது[5]. இக்கட்டம் முழுவதிலுமான போல்ஷிவிசத்தின் வரலாற்றினுல் மட்டுமே, பாட்டாளி வர்க்க வெற்றிக்கு வேண்டிய உருக்கு உறுதி படைத்த கட்டுப்பாட்டை அதனுல் எப்படி நிறுவ முடிந்தது, மிகமிகக் கடினமான நிலைமைகளில் எப்படி அதைக் கட்டிக்காக்க முடிந்தது என்பதைத் திருப்திகரமாய் விளக்க முடியும்.

முதலாவதாக எழும் கேள்வி: பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரக் கட்சியின் கட்டுப்பாட்டைக் கட்டிக்காப்பது எப்படி? அது சோதிக்கப்படுவது எப்படி? அது மேலும் உறுதி யூட்டப் பெறுவது எங்ஙனம்? முதலாவதாக, பாட்டாளிகளின் முன்னணிப் படையின் வர்க்க உணர்வாலும்; புரட்சியின்பால் அதற்குள்ள பற்றுறுதியாலும், தன்னலங் கருதாத் தியாக உணர்வாலும், வீரத்தாலும். இரண்டாவதாக, உழைப்பாளி மக்கள் திரளின் மிகவும் விரிவான பகுதிகளுடனும், முக்கியமாய்ப் பாட்டாளி வர்க்கத்துடனும், மற்றும் உழைப்பாளி மக்களின் பாட்டாளி வர்க்கமல்லாத பகுதிகளுடனும் இணைப்புக் கொள்ளவும், மிக நெருங்கிய தொடர்பைக் கட்டிக்காக்கவும், ஓரளவுக்கு ஒன்றுகலக்கவும் என்றுகூடச் சொல்லலாம், அதற்குள்ள ஆற்றலால். மூன்ருவதாக, இந்த முன்னணிப் படையால் வகிக்கப்படும் அரசியல் தலைமையின் பிழையற்ற தன்மையால், அதன் அரசியல் ஆதார நெறி, போர்த்தந்திரம் இவற்றின் பிழையற்ற தன்மையால் — வெகுஜனப் பகுதிகள் தமது சொந்த அனுபவத்தின் வாயிலாகவே இவை சரியானவை என்பதைக் கண்டு கொண்டாக வேண்டும். முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்தி சமுதாயம் அனைத்தையும் மாற்றியமைத்திடுவதைப் பணியாகக் கொண்ட முன்னேற்றகரமான வர்க்கத்தின் கட்சியாக இருக்கும்

சமுதாயத்தின் எல்லா வர்க்கங்களுக்குமுரிய போராட்டத்தின் இத்தனை விதமான வடிவங்களும் வகைகளும் முறைகளும் இவ்வளவு குறுகிய கால வரம்பினுள் ஒன்று குவிந்ததில்லை. இந்தப் போராட்டம் நாட்டின் பிற்பட்ட நிலை காரணமாகவும், ஜாரிச ஒடுக்குமுறையின் கடுமை காரணமாகவும், வியக்கத்தக்க வேகத்தில் முதிர்ச்சியுற்று, அமெரிக்க ஐரோப்பிய அரசியல் அனுபவத்தின் ''இறுதி முடிவாகக்'' கருதக் கூடியவற்றுள் பொருத்தமானவற்றை மிகுந்த ஆவலுடனும், வெற்றிகரமாகவும் கிரகித்துக் கொண்டது.

## 3

### போல்ஷிவிச வரலாற்றின் பிரதான கட்டங்கள்

*புரட்சியின் தயாரிப்புக்குரிய ஆண்டுகள் (1903-05).* மாபெரும் புயல் நெருங்கி வந்ததை எங்கும் உணர முடிந்தது. எல்லா வர்க்கங்களும் கொந்தளிப்பான நிலைமையில் இருந்தன; தயாரிப்புகளில் முனைந்திருந்தன. நாடுகடத்தப்பட்ட அரசியலாளர்களின் பத்திரிகைகள் வெளிநாடுகளிலிருந்து, புரட்சியின் அடிப்படையான **எல்லாப்** பிரச்சினைகளின் தத்துவார்த்தக் கூறுகள் குறித்தும் விவாதித்து வந்தன. பிரதான மூன்று வர்க்கங்களின், மிதவாத-முதலாளித்துவ, குட்டிமுதலாளித்துவ-ஜனநாயக (''சமூக-ஜனநாயகவாதி'', ''சமூக-புரட்சியாளர்''[6] என்னும் பெயர்களுக்குப் பின்னால் மறைந்து கொண்டு இவை செயல்பட்டன), பாட்டாளி வர்க்கப் புரட்சி ஆகிய முதன்மையான மூன்று அரசியல் போக்குகளின் பிரதிநிதிகள் வேலைத்திட்டம், போர்த்தந்திரம் இவற்றின் பிரச்சினைகள் குறித்து மிகக் கடுமையான போராட்டம் நடத்தி, நெருங்கி வந்த பகிரங்க வர்க்கப் போராட்டத்தை எதிர்பார்த்து, அதற்காகத் தயார் செய்து வந்தனர். 1905-07லும் 1917-20லும் வெகுஜனப் பகுதிகள் ஆயுதமேந்திப் போராடிய **எல்லாப்** பிரச்சினைகளையும் அவற்றின் கரு வடிவில் இக்காலத்திய

பத்திரிகைகளில் படித்தறிந்து கொள்ளலாம் (படித்தறிந்து கொள்ளவும் வேண்டும்). இந்தப் பிரதான மூன்று போக்கு களுக்கு மத்தியில் இடைநிலையிலும் மாறிச் செல்லும் கட்டத்திலும் அரைகுறை நிலையிலுமான போக்குகள் ஏராளமாய் இருக்கத்தான் செய்தன. மெய்யான வர்க்கத் தன்மை கொண்ட அரசியல், சித்தாந்தப் போக்குகள் எல் லாம், பத்திரிகைகளும் கட்சிகளும் பிரிவுகளும் குழுக்களும் நடத்திய போராட்டத்தில் தெளிவான உருவம் பெற்றன என்று சொன்னல் மேலும் பொருத்தமாயிருக்கும். நெருங்கி வந்து கொண்டிருந்த போர்களுக்குத் தேவையான அரசியல், சித்தாந்த ஆயுதங்களை இவ்வர்க்கங்கள் உருவாக்கி வந்தன.

புரட்சி ஆண்டுகள் (1905-07). எல்லா வர்க்கங்களும் பகிரங்கமாய் வெளிவரலாயின. வேலைத்திட்டம், போர்த் தந்திரம் இவை குறித்த எல்லாக் கருத்துக்களும் வெகு ஜனங்களது செயலால் சோதித்துப் பார்க்கப்பட்டன. வேலைநிறுத்தப் போராட்டம் அதன் வீச்சிலும் தீவிரத் திலும் உலகில் எங்குமே இணையற்றதாய் விளங்கிற்று. பொருளாதார வேலை நிறுத்தம் அரசியல் வேலைநிறுத்த மாகவும், அரசியல் வேலைநிறுத்தம் ஆயுதமேந்திய எழுச்சி யாகவும் வளர்ந்துவிட்டது. தலைவனுகச் செயல்பட்ட பாட்டாளி வர்க்கத்துக்கும், தலைமை தாங்கி அழைத்துச் செல்லப்பட்ட ஊசலாட்டம் வாய்ந்த நிலையற்ற விவசாயி களுக்கும் இடையிலான உறவுகள் செயலின் வாயிலாய்ச் சோதித்துப் பார்க்கப்பட்டன. போராட்டத்தின் தன்முனைப் பான வளர்ச்சியின் போது நிறுவன ஒழுங்கமைப்புக்கான சோவியத் வடிவம் உதித்தெழுந்தது. சோவியத்துகளின் முக்கியத்துவம் குறித்து அக்காலத்தில் நடைபெற்ற சர்ச்சை கள் 1917-20ஆம் ஆண்டுகளின் பெரும் போராட்டத்துக்கு முன்னேற்பாடாக அமைந்தன. மாறிமாறிக் கையாளப்பட்ட நாடாளுமன்றப் போராட்ட முறைகளும் நாடாளுமன்றத் துக்குப் புறம்பான போராட்ட முறைகளும், நாடாளு மன்றத்தைப் பகிஷ்காரம் செய்யும் போர்த்தந்திரமும் நாடாளுமன்றத்தில் பங்கு கொள்ளும் போர்த்தந்திரமும்,

சட்டபூர்வமான போராட்ட முறைகளும் சட்டத்துக்குப் புறம்பான போராட்ட முறைகளும், மற்றும் இவற்றுக்கிடையிலான உறவுகளும் தொடர்புகளும் அளவு கடந்த உள்ளடக்கப் பொருள் வளம் மிக்கதாய்த் திகழ்ந்தன. வெகுஜனங்களும் தலைவர்களும், அதேபோல வர்க்கங்களும் கட்சிகளும் அரசியல் விஞ்ஞானத்தின் அடிப்படைகளில் போதனை பெறுவதைப் பொருத்தவரை, இந்தக் காலத்தின் ஒவ்வொரு மாதமும் ''சமாதான பூர்வமான'', ''அரசியலமைப்புச் சட்டக் கட்டுக்கோப்புக்கு உட்பட்டதான'' வளர்ச்சிக்குரிய ஒரு முழு ஆண்டுக்கு ஈடானதாய் இருந்தது. 1905 ஆம் ஆண்டின் ''ஒத்திகை'' நடந்திருக்காவிட்டால் 1917ஆம் ஆண்டின் அக்டோபர் புரட்சி சாத்தியமாய் இருந்திருக்காது.

பிற்போக்கு அரசோச்சிய ஆண்டுகள் (1907-10). ஜாரிசம் வெற்றி பெற்றுவிட்டது. புரட்சிகரக் கட்சிகள், எதிர்க் கட்சிகள் யாவும் நொறுக்கப்பட்டன. தளர்வு, மனச் சோர்வு, பிளவுகள், பூசல்கள், ஓடுகாலித்தனம், ஆபாசம்—இவையே அரசியல் என்றாயிற்று. தத்துவவியல் கருத்துமுதல்வாதத்தை நோக்கி மேலும் மேலும் சரிவு ஏற்பட்டது, மாயாவாதமானது எதிர்ப்புரட்சி உணர்ச்சிகளின் மூடுதிரையாகியது. ஆனால் அதேபோதில் இந்தப் பெருந்தோல்வி புரட்சிகரக் கட்சிகளுக்கும் புரட்சிகர வர்க்கத்துக்கும் மிகவும் பயனுள்ள மெய்யான பாடம் கற்பித்தது; வரலாற்றுத் துறை இயக்கவியலில், அரசியல் போராட்டத்தைப் புரிந்து கொள்வதில், அந்தப் போராட்டத்தை நடத்தும் கலையில் பாடம் கற்பித்தது. ஆபத்தான தருணங்களில்தான் யார் யார் தனது நண்பர்கள் என்பதை ஒருவர் தெரிந்து கொள்கிறார். தோல்வியுற்ற சேனைகள் நன்கு படிப்பினை பெறுகின்றன.

வெற்றி பெற்ற ஜாரிசம் ருஷ்யாவில் முதலாளித்துவத்துக்கு முற்பட்டதான, தந்தைவழிச் சமுதாய வாழ்க்கை முறையின் மீதமிச்சங்களது அழிவைத் துரிதப்படுத்துமாறு நிர்ப்பந்திக்கப்பட்டது. முதலாளித்துவ வழிகளில் நாட்டின் வளர்ச்சி மிக வேகமாக முன்னேறியது. வர்க்கப்

பாகுபாடுகளுக்குப் புறம்பானவையாகவும் மேம்பட்டவை யாகவும் தோன்றிய பிரமைகள், முதலாளித்துவத்தைத் தவிர்த்துக் கொள்வதற்குரிய சாத்தியப்பாடு குறித்த பிரமைகள் சிதறடிக்கப்பட்டன. வர்க்கப் போராட்டம் மிகவும் புதுமையான, மேலும் எடுப்பான முறையில் வெளிப்படலாயிற்று.

புரட்சிகரக் கட்சிகள் தமது கல்வி போதத்தை நிறை வுறச் செய்து கொள்ள வேண்டியிருந்தது. எப்படித் தாக்குதல் தொடுப்பது என்று இதுவரை அவை கற்று வந்தன. இப்பொழுது அவை இந்த அறிவுடன்கூட, எப்படி ஒழுங்கு குலையாமல் பின்வாங்குவது என்ற அறிவைப் பெறுவதும் அவசியமென்பதை உணர வேண்டியதாயிற்று. ஒழுங்கு டன் தாக்குவதற்கும் ஒழுங்குடன் பின்வாங்குவதற்கும் தெரிந்து கொண்டாலொழிய வெற்றி பெற முடியா தென்பதை அவை உணர வேண்டியிருந்தது—கடுமையான அனுபவத்தின் வாயிலாகவே புரட்சிகர வர்க்கம் இதனை உணரத் தெரிந்து கொள்கிறது. தோல்வியுற்ற புரட்சிகரக் கட்சிகள், எதிர்க்கட்சிகள் யாவற்றிலும் போல்ஷிவிக்குகள் தான் மிகவும் கூடுதலான ஒழுங்குடன் பின்வாங்குதலைச் செயல்படுத்திக் கொண்டனர்; தமது ''சேனைக்கு'' மிகவும் குறைவான சேதத்தோடு, அதன் உட்கருவைப் பழு தின்றிப் பாதுகாத்துக் கொண்டு, மிகக் குறைந்த அளவிலான பிளவுகளுடன் (ஆழத்தின் நிலையிலிருந்தும் தீராத்தன்மையின் நிலையிலிருந்தும்), மிகக் குறைவான மனச்சோர்வுடன், மிகவும் விரிவான அளவிலும் பிழையற்ற முறையிலும் விறுவிறுப்பாய் மீண்டும் பணி தொடங்குவதற்குச் சிறந்த நிலையில் இதனைச் செயல்படுத்திக் கொண்டனர். பின் வாங்க வேண்டுமென்பதையும், எப்படிப் பின்வாங்கு வதென்று தெரிந்திருக்க வேண்டுமென்பதையும், நாடாளு மன்றங்களில் மிகவும் பிற்போக்கானவற்றிலும், தொழிற் சங்கங்களிலும் கூட்டுறவுச் சங்கங்களிலும் இன்ஷூரன்ஸ் கழகங்களிலும் இன்ன பிற நிறுவனங்களிலும் மிகவும் பிற்போக்கானவற்றிலும் சட்டபூர்வமான முறையில் வேலை செய்யத் தெரிந்திருக்க வேண்டுமென்பதையும் புரிந்து

கொள்ள விரும்பாத புரட்சிகர வாய்வீச்சுக்காரர்களை போல்ஷிவிக்குகள் ஈவிரக்கமின்றி அம்பலப்படுத்தி விலக்கியதால்தான் அவர்களால் இதைச் செய்ய முடிந்தது.

புத்தெழுச்சி ஆண்டுகள் (1910-14). தொடக்கத்தில் முன்னேற்றம் சொல்ல முடியாத அளவுக்கு மிகமிக மந்தமாகவே இருந்து வந்தது. பிற்பாடு 1912ஆம் ஆண்டின் லேனு நிகழ்ச்சிகளைத்[7] தொடர்ந்து ஓரளவு துரிதமடையலாயிற்று. போல்ஷிவிக்குகள் இதன்முன் என்றும் கண்டிராத மிகப் பெரும் இன்னல்களைச் சமாளித்து மென்ஷிவிக்குகளைப் பின்னிலைக்குத் தள்ளினர். தொழிலாளி வர்க்க இயக்கத்தில் மென்ஷிவிக்குகள் முதலாளித்துவக் கையாட்களாக ஆற்றி வந்த பாத்திரத்தை 1905க்குப் பிற்பாடு முதலாளித்துவ வர்க்கம் அனைத்துமே தெளிவாக உணர்ந்து கொண்டுவிட்டது. ஆகவே முதலாளித்துவ வர்க்கத்தினர் போல்ஷிவிக்குகளுக்கு எதிராய் ஆயிரம் வழிகளில் அவர்களுக்கு ஆதரவு அளித்தனர். போல்ஷிவிக்குகள் சட்ட விரோதமான வேலைகளைச் செய்வதுடன் ''சட்டபூர்வமான வாய்ப்புகளைத்'' தவறுமல் பயன்படுத்திக் கொள்வதையும் இணைத்திடுவதென்ற பிழையற்ற போர்த்தந்திரத்தைப் பின்பற்றி இராவிடில், மென்ஷிவிக்குகளைப் பின்னுக்குத் தள்ளுவதில் அவர்களால் வெற்றி பெற்றிருக்க முடியாது. பழுத்த பிற்போக்குவாத டூமாவுக்கு நடந்த தேர்தல்களில் போல்ஷிவிக்குகள் தொழிலாளர் தொகுதியின் முழு ஆதரவையும் வென்று கொண்டனர்.

முதல் ஏகாதிபத்திய உலகப் போர் (1914-17). கடைகோடியான பிற்போக்குவாத ''நாடாளுமன்றத்தைக்'' கொண்டு நடைபெற்ற சட்டபூர்வமான நாடாளுமன்றச் செயற்பாடானது புரட்சிகரப் பாட்டாளி வர்க்கக் கட்சியினரான போல்ஷிவிக்குகளுக்கு மிகவும் பயனுள்ள பணி ஆற்றியது. போல்ஷிவிக் பிரதிநிதிகள் சைபீரியாவுக்குக் கடத்தப்பட்டனர்.[8] சமூக-ஏகாதிபத்தியம், சமூக-தேசிய வெறி, சமூக-தேசபக்தவாதம், முரண்பாடான சர்வதேசியம், முரணற்ற சர்வதேசியம், சாத்வீகவாதம், சாத்வீகவாதப் பிரமைகளை நிராகரிக்கும் புரட்சிகரப் போக்கு

ஆகியவற்றின் எல்லாச் சாயல்களும் நாடுகடத்தப்பட்டு வெளியிலிருந்து இயங்கிய ருஷ்யப் பத்திரிகைகளில் முழு அளவுக்கு வெளியாயின. ருஷ்ய சோஷலிச இயக்கத்தினுள் ''உட்குழுக்கள்'' மலிந்துவிட்டதென்றும், அவை தம் மிடையே கடுமையான போராட்டம் நடத்தினவென்றும் ஆணவமாகவும் அலட்சியமாகவும் முகத்தைச் சுளித்துக் கொண்ட இரண்டாவது அகிலத்தின் மெத்தப் படித்த முட்டாள்களும் பாட்டிமார்களும்—வளர்ச்சிபெற்ற எல்லா நாடுகளிலும் மெச்சிப் புகழப்பட்ட ''சட்டபூர்வமான நிலையை'' யுத்தமானது தட்டிப் பறித்துக் கொண்டதும்—ருஷ்யப் புரட்சியாளர்கள் ஸ்விட்சர்லாந்திலும் மற்றும் பல நாடுகளிலும் செய்து வந்த அந்தத் தங்குதடையற்ற (சட்டவிரோதமான) கருத்துப் பரிமாற்றத்துக்கும், பிழை யற்ற கருத்துக்களின் தங்குதடையற்ற (சட்டவிரோதமாக) மலர்ச்சிக்கும் சொற்ப அளவுகூட ஒப்பானது எதையும் ஏற்பாடு செய்து கொள்ளத் திராணியற்றவர்களாயினர். எனவே தான் எல்லா நாடுகளையும் சேர்ந்த பகிரங்கமான சமூக-தேசபக்தவாதிகளும் சரி, ''காவுத்ஸ்கிவாதிகளும்'' சரி பாட்டாளி வர்க்கத்தின் படுமோசமான துரோகி களாயினர். 1917-20ல் போல்ஷிவிசம் வெற்றிவாகை சூட முடிந்ததன் பிரதான காரணங்களில் ஒன்று என்னவெனில், 1914ஆம் ஆண்டின் இறுதியிலிருந்தே அது சமூக-தேசிய வெறியின், ''காவுத்ஸ்கிவாதத்தின்'' இழிநிலையையும் கயமையையும் ஈவிரக்கமின்றி அம்பலப்படுத்தி வந்தது. (பிரான்சில் லொங்கேயிசமும்,[9] பிரிட்டனில் சுயேச்சைத் தொழிற் கட்சியின்[10] தலைவர்கள், ஃபேபியன்கள்[11] இவர் களது கருத்துக்களும், இத்தாலியில் டுராட்டியின் கருத்துக் களும் இன்ன பிறவும் ''காவுத்ஸ்கிவாதத்தையே'' ஒத்தவையாகும்). பிற்பாடு வெகுஜனங்கள் போல்ஷிவிக் கருத்துக்களே சரியானவை என்று தமது சொந்த அனு பவத்தின் வாயிலாக மேலும் மேலும் ஐயமற உணர்ந்து கொண்டனர்.

ருஷ்யாவில் இரண்டாவது புரட்சி (1917 பிப்ரவரி யிலிருந்து அக்டோபர் வரை). ஜாரிசத்தின் கிழடு தட்டிய

நிலையும், காலங் கழிந்த நிலையும் சேர்ந்து (மிகக் கொடூர மான யுத்தத்தில் கிடைத்த உதைகளும் அந்த யுத்தத் தால் விளைந்த கேடுகளும் துணை புரிய), ஜாரிசத்துக்கு எதிரான மிகக் கடுமையான நாசகர சக்தி ஒன்றைத் தோற்றுவித்தன. ஒரு சில நாட்களுக்குள் ருஷ்யாவானது ஜனநாயக முதலாளித்துவக் குடியரசாக, உலகின் வேறு எந்த நாட்டையும்விட—யுத்த நிலைமைகளில்—சுதந்திரத் தன்மை கொண்ட ஜனநாயகக் குடியரசாக மாற்றப்பட் டது. மிகக் "கரூரான நாடாளுமன்றக்" குடியரசுகளில் செய்யப்படுவது போலவே இங்கும் புரட்சிகரக் கட்சி களின், எதிர்க் கட்சிகளின் தலைவர்கள் அரசாங்கத்தை அமைக்கத் தொடங்கினர். நாடாளுமன்றத்தில்—மிகவும் பிற்போக்கான நாடாளுமன்றம்தான் என்றாலுங்கூட— ஒருவர் எதிர்க் கட்சி ஒன்றின் தலைவராய் இருந்தார் என்ற உண்மையானது, பிற்பாடு புரட்சியில் அவர் பங்காற்று வதற்கு வசதியாக இருந்தது.

ஒரு சில வாரங்களுக்குள் மென்ஷிவிக்குகளும் சோஷ லிஸ்டு-புரட்சியாளர்களும், இரண்டாவது அகிலத்தின் ஐரோப்பிய தீரர்களுக்கும் அமைச்சரவைவாதிகளுக்கும்[12] ஏனைய சந்தர்ப்பவாதக் கும்பல்களுக்கும் உரிய எல்லா முறைகளையும் பழக்கவழக்கங்களையும் வாதங்களையும் குயுக்திகளையும் கற்றுத் தேர்ந்து கொண்டுவிட்டனர். ஷெய்டெமன்களையும் நோஸ்கேயையும், காவுத்ஸ்கியை யும் ஹில்ஃபர்டிங்கையும், ரென்னரையும் ஆஸ்டர்லித்சை யும், ஓட்டோ பெளவரையும் ஃபிரீட்ரிஹ் ஆட்லெரையும், டுராட்டியையும் லொங்கேயையும், மற்றும் பிரிட்டனின் ஃபேபியன்களையும் சுயேச்சைத் தொழிற் கட்சித் தலைவர் களையும் பற்றி இப்பொழுது நாம் படிப்பவை எல்லாம், ஏற்கெனவே நாம் நன்கு அறிந்த பழைய பல்லவியையே சலிப்புத் தட்டும் முறையில் திருப்பிப் பாடுவதாக, ஒப்பிப்பதாகத் தோன்றுகிறது (உண்மையிலும் அப்படியே தான் இருக்கிறது). இவை யாவற்றையும் மென்ஷிவிக்கு களிடம் ஏற்கெனவே கண்டிருக்கிறோம். வரலாற்றின் கைங்கரி யத்தால், பிற்பட்ட ஒரு நாட்டின் சந்தர்ப்பவாதிகள்,

முன்னேறிய நாடுகள் பலவற்றின் சந்தர்ப்பவாதிகளுக்கு, முன்னோடிகளாக அமைந்துவிட்டனர்.

இரண்டாவது அகிலத்தின் தீரர்கள் எல்லோரும் கையாலாகாதவர்களாகி விட்டனர் என்றால், சோவியத்துகளின், சோவியத் ஆட்சியின் முக்கியத்துவத்தையும் பாத்திரத்தையும் பற்றிய பிரச்சினையில் தம்மைத் தாமே இழிவுபடுத்திக் கொண்டனர் என்றால், இப்பொழுது இரண்டாவது அகிலத்தை விட்டு விலகிச் சென்றுவிட்ட மூன்று மிக முக்கியக் கட்சிகளின் (அதாவது, ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சி[13], பிரெஞ்சு லொங்கேயிஸ்டுக் கட்சி, பிரிட்டிஷ் சுயேச்சைத் தொழிற் கட்சி ஆகியவற்றின்) தலைவர்கள் இப்பிரச்சினையில் மிகவும் ''எடுப்பான'' முறையில் தம்மை இழிவுபடுத்திக் கொண்டு இக்கட்டான நிலையில் சிக்கிக் கொண்டனர் என்றால் இவர்கள் எல்லோருமே குட்டி முதலாளித்துவ ஜனநாயகத்தின் தப்பெண்ணங்களுக்கு (முற்றிலும் 1848ஆம் ஆண்டின் குட்டிமுதலாளித்துவ வர்க்கத்தினருடைய, தம்மை ''சமூக-ஜனநாயகவாதிகள்'' என்று அழைத்துக் கொண்ட இவர்களுடைய மனப்பாங்கிலே) தாம் அடிமைப்பட்டுவிட்டதைக் காட்டிக் கொண்டார்கள் என்றால், இவை யாவற்றையும் நாம் ஏற்கெனவே மென்ஷிவிக்குகளுடைய விவகாரத்தில் கண்டிருக்கிறோம் என்றுதான் கூற வேண்டும். வரலாற்றின் கைங்கரியத்தால் சோவியத்துகள் ருஷ்யாவில் 1905லேயே தோன்றிவிட்டன. 1917 பிப்ரவரியிலிருந்து அக்டோபர் வரையில் அவை மென்ஷிவிக்குகளால் தவறான வழியில் பிரயோகிக்கப்பட்டன. சோவியத்துகளின் பாத்திரத்தையும் முக்கியத்துவத்தையும் மென்ஷிவிக்குகளால் புரிந்துகொள்ளமுடியாத காரணத்தால் அவர்கள் கையாலாகாதவர்களாயினர். இன்று சோவியத்துகளின் ஆட்சி என்னும் கருத்து உலகெங்கும் மலர்ந்து எல்லா நாடுகளின் பாட்டாளி வர்க்கத்தாரிடையிலும் அபார வேகத்தில் பரவி வருகிறது. எங்களுடைய மென்ஷிவிக்குகளைப் போலவே, இரண்டாவது அகிலத்தின் பழைய தீரர்கள் எல்லா இடங்களிலுமே கையாலாகாதவர்களாகி வருகிறார்கள். சோவியத்துகளுடைய

பாத்திரத்தையும் முக்கியத்துவத்தையும் புரிந்து கொள்ள அவர்கள் ஆற்றலற்றவர்களாய் இருப்பதே இதற்குக் காரணம். பாட்டாளி வர்க்கப் புரட்சியின் மிக முக்கிய மான சில பிரச்சினைகளில் எல்லா நாடுகளுமே ருஷ்யா என்ன செய்துள்ளதோ அதையே தவிர்க்க முடியாத வகையில் செய்ய வேண்டியிருக்கும் என்பதை, அனுபவம் தெளிவு படுத்தியிருக்கிறது.

ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் அடிக்கடி காணக் கூடிய கருத்துக்களுக்கு மாருய், போல்ஷிவிக்குகள் நாடாளு மன்ற (உண்மை நிலையில்) முதலாளித்துவக் குடியரசுக்கும், மென்ஷிவிக்குகளுக்கும் எதிரான தமது வெற்றிகரப் போராட்டத்தை மிகவும் எச்சரிக்கையான முறையில்தான் தொடங்கினர்; இதற்காக அவர்கள் செய்த தயாரிப்புகள் எவ்வகையிலும் சுலபமாய் இருக்கவில்லை. குறிப்பிடப்பட்ட இக்கட்டத்தின் தொடக்கத்தில், நாங்கள் அரசாங்கத்தை வீழ்த்தும்படி அறைகூவல் விடுக்கவில்லை. முதலில் சோவி யத்துகளின் அமைப்பையும் மனநிலையையும் மாற்றுமல், அரசாங்கத்தை வீழ்த்த முடியாதென விளக்கி வந்தோம். முதலாளித்துவ நாடாளுமன்றமான அரசியல் நிர்ணய சபையைப் பகிஷ்கரிக்கும்படி நாங்கள் அறைகூவல் விடுக்கவில்லை; அதற்குப் பதில்—எங்கள் கட்சியின் ஏப்ரல் (1917) மாநாட்டைத் தொடர்ந்து, கட்சியின் பெயரிலேயே அதிகார பூர்வமாய் இதைக் கூற முற்பட்டோம்—அரசியல் நிர்ணய சபையைக் கொண்ட முதலாளித்துவக் குடி யரசானது, அரசியல் நிர்ணய சபை இல்லாத முதலாளித் துவக் குடியரசைக் காட்டிலும் சிறந்ததாய் இருக்கும் என்றும், ஆனல் ''தொழிலாளர்கள், விவசாயிகளது'' குடியரசானது—அதாவது ஒரு சோவியத் குடியரசானது —எந்த முதலாளித்துவ-ஜனநாயக, நாடாளுமன்றக் குடியரசைக் காட்டிலும் சிறப்பாய் இருக்கும் என்றும் கூறினேம். இது போன்ற முழுநிறையான, எச்சரிக்கை மிக்க, நீண்ட தயாரிப்புகள் இல்லாமல், எங்களால் 1917 அக்டோபரில் வெற்றி பெற்றிருக்கவோ, அந்த வெற்றியை உறுதிப்படுத்தியிருக்கவோ முடிந்திருக்காது.

## 4

### தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் எந்தெந்தப் பகைகளுக்கு எதிரான போராட்டம் போல்ஷிவிசம் வளர்ந்து வலிமையுற்று உருக்கு உறுதி பெற உதவிற்று

முதலாவதாகவும் முதன்மையானதாகவும் குறிப்பிட வேண்டியது சந்தர்ப்பவாதத்துக்கு எதிரான போராட்டம். சந்தர்ப்பவாதமானது 1914ல் திட்டவட்டமாய் சமூக-தேசியவெறியாக வளர்ந்து, திட்டவட்டமாய்ப் பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராய்ச் சென்று, முதலாளித்துவ வர்க்கத்தின் பக்கம் சேர்ந்து கொண்டது. இயல்பாகவே இது, தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் போல்ஷிவிசத்தின் முதற்பெரும் பகையாகியது. இன்னமும் சர்வதேச அளவில் இது முதற்பெரும் பகையாகவே இருந்து வருகிறது. இந்தப் பகை குறித்து போல்ஷிவிக்குகள் முதன்மையான கவனம் செலுத்தினர், இப்போதும் செலுத்துகின்றனர். போல்ஷிவிக்குகளுடைய செயலாற்றலின் இந்தப் பகுதி இப்பொழுது வெளிநாடுகளிலுங்கூட ஓரளவு நன்கு தெரிந்ததாகிவிட்டது.

ஆனால் தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் இருக்கும் போல்ஷிவிசத்தின் மற்றொரு பகை குறித்து இவ்வாறு சொல்வதற்கில்லை. போல்ஷிவிசமானது குட்டிமுதலாளித்துவப் புரட்சிவாதத்தை எதிர்த்து நீண்ட பல ஆண்டுகள் நடத்திய போராட்டத்தின் மூலமாக உருப்பெற்று வளர்ச்சியுற்று உருக்கு உறுதியடைந்ததென்ற உண்மை குறித்து பிற நாடுகளில் அதிகம் தெரியாது. குட்டி முதலாளித்துவப் புரட்சிவாதம் அராஜகவாதச் சாயல் கொண்டது; அல்லது அராஜகவாதத்திடமிருந்து சில அம்சங்களைக் கடன் வாங்கிக் கொள்கிறது. சாராம்சமான எல்லாத் துறைகளிலும் அது முரணற்ற பாட்டாளி வர்க்கப் போராட்டத்தின் நிலைமைகளுக்கும் தேவைகளுக்கும் உகந்த தகுதிகளைப் பெற்றதல்ல. சிறு உடைமையாளர்களும் சிறு எஜமானர்களும் (இந்தச் சமூக ரகத்தினர் பல ஐரோப்பிய

நாடுகளில் விரிவான அளவில், வெகுஜன அளவிலுங்கூட இருந்து வருகின்றனர்) முதலாளித்துவத்தில் எப்பொழுதுமே ஒடுக்குமுறைக்கு இலக்காகி, அடிக்கடி தமது வாழ்க்கை நிலைமைகளில் மிகக் கடுமையான, மிக விரைவான சீரழிவுக்கு உள்ளாகின்றனர், படுநாசத்துக்குங்கூட ஆளாகின்றனர். இவர்கள் எளிதில் புரட்சிகர அதிதீவிர நிலைகளுக்குச் சென்று விடுகிறார்கள் என்றாலும், விடா முயற்சியுடன் போராடவோ, ஒழுங்கமைப்பு பெறவோ, கட்டுப்பாடும் உறுதிப்பாடும் கொள்ளவோ திராணியற்ற வர்கள் என்பதை மார்க்சியவாதிகளுக்கு இது தத்துவத்தின் வாயிலாக முழு அளவுக்கு நிலை நாட்டப்பட்டிருக்கிறது; ஐரோப்பியப் புரட்சிகள், புரட்சிகர இயக்கங்கள் ஆகிய யாவற்றின் அனுபவத்தாலும் இது பூரணமாக ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. முதலாளித்துவத்தின் கொடுமை களால் குட்டிமுதலாளித்துவப் பகுதியோர் ''வெறிபிடித்த மூர்க்க நிலைக்குத்'' தள்ளிவிடப்படுவதானது—அராஜக வாதத்தைப் போலவே — முதலாளித்துவ நாடுகள் யாவற்றுக்கும் இயல்பாகவே உரித்தான ஒரு சமூக நிகழ்வு ஆகும். இந்தப் புரட்சிவாதத்தின் நிலையற்ற தன்மையும், அதன் வறட்டுத்தனமும், மற்றும் அடங்கி அடிபணிந்துவிடும் நிலையாகவும், மனச்சோர்வாகவும் மாயக் கற்பனைகளாகவும் ஏதேனும் ஒரு முதலாளித்துவ ''ஐம்பக்'' கருத்தின்பால் ''பைத்தியக்கார'' மோகங் கொண்டுவிடும் மடமையாகவுங்கூட அதிவிரைவாய் மாறி விடும்படியான அதன் போக்கும் பொதுவாக எல்லோருக் கும் தெரிந்ததே. ஆயினும் தத்துவார்த்த முறையிலோ, கருத்தியலான முறையிலோ இவ்வுண்மைகளை ஏற்றுக் கொள்வதனால் மட்டும் புரட்சிகரக் கட்சிகள் ஒருபோதும் தமது பழைய தவறுகளிலிருந்து விடுபட்டுவிட முடியாது. எதிர்பாராத சந்தர்ப்பங்களில், ஓரளவு புதிய வடிவங் களில், இதுவரை கண்டிராத ஜோடனைகளிலோ, சுற்றுச் சார்புகளிலோ, விபரீதமான — அல்லது அனேகமாய் விபரீதமான — சூழ்நிலையிலோ இத்தவறுகள் எப்பொழுதும் தலை தூக்கிய வண்ணம்தான் இருக்கும்.

தொழிலாளி வர்க்க இயக்கத்தில் இழைக்கப்படும் சந்தர்ப்பவாதக் குற்றங்களுக்கு, ஒரு வகைத் தண்டனை யாக அராஜகவாதம் தலைதூக்கி விடுவதை அடிக்கடி காணலாம். இவ்விரு கொடும் கோரங்களும் ஒன்றுக் கொன்று துணையாகக் கரங் கோத்துச் செயல்பட்டு வந்தன. ருஷ்யாவில்—பிற ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிடுகையில் அதன் மக்கள் தொகுதி அதிக அளவு குட்டி முதலாளித்துவ இயைபு கொண்டதாய் இருந்தபோதிலும் —அராஜகவாதத்தின் செல்வாக்கு இரு புரட்சிகளின் போதும் (1905, 1917ஆம் ஆண்டுகளின் புரட்சிகள்), அவற் றுக்கான தயாரிப்புகளின் போதும் மிகச் சொற்பமாகவே இருந்தது. சந்தர்ப்பவாதத்தை எதிர்த்து மிகவும் கடுமையாகவும் சிறிதும் விட்டுக்கொடுக்காமலும், எப் பொழுதுமே போராடி வந்துள்ள போல்ஷிவிசத்துக்கே, சந்தேகத்துக்கு இடமின்றி இந்த நிலைமைக்குரிய பெருமை யில் ஒரு பகுதி சார்ந்ததாகும். ''ஒரு பகுதி'' என்று நான் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், ருஷ்யாவில் அராஜகவாதம் பலவீன மடைந்ததற்கு இதைக் காட்டிலும் அதிக முக்கியத்துவம் வாய்ந்த மற்றொரு காரணமும் இருந்தது. கடந்த காலத்தில் (பத்தொன்பதாம் நூற்றாண் டின் எழுபதாம் ஆண்டுகளில்) அராஜகவாதம் அளவு கடந்து வளர்வதற்கு வாய்ப்பு பெற்றிருந்த போது, அது முற்றிலும் தவறானது, புரட்சிகர வர்க்கத்துக்கு வழிகாட்டும் தத்துவமாகப் பணி புரியத் தகுதியற்றது என்பது கண் கூடாய் வெளிப்பட்டதே இந்த மற்றொரு காரணம்.

1903ல் போல்ஷிவிசம் உதித்தெழுந்ததும், அது குட்டி முதலாளித்துவ, அரைவாசி அராஜகவாத (அல்லது அரா ஜகவாதத்துடன் குலாவும்) புரட்சிவாதத்தையும் எதிர்த்து வெஞ்சமர் புரியும் மரபை சுவீகரித்துக் கொண்டது. புரட்சிகர சமூக-ஜனநாயகத்தில் இம்மரபு எப்பொழுதுமே இருந்து வந்தது. புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் வெகுஜனக் கட்சிக்குரிய அடித்தளங்கள் 1900-03ல் ருஷ் யாவில் நிறுவப்பட்டு வந்த போது இம்மரபு எங்கள் நாட் டில் குறிப்பிடத் தக்கவாறு வலிமையடைந்துவிட்டது.

வேறு எந்தக் கட்சியையும்விட அதிகமாய்க் குட்டி முதலாளித்துவப் புரட்சிவாதப் போக்குகளைப் பிரதிபலித்த கட்சியான ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்'' கட்சிக்கு எதிரான போராட்டத்தை போல்ஷிவிசம் சுவீகரித்துக் கொண்டு, அதனைத் தொடர்ந்து நடத்திச் சென்றது. இந்தப் போராட்டத்தை அது மூன்று பிரதான பிரச்சினைகள் சம்பந்தமாய் நடத்திற்று. முதலாவதாக, மார்க்சியத்தை நிராகரித்த அந்தக் கட்சி, எந்த அரசியல் செயலையும் மேற்கொள்ளுமுன் வர்க்க சக்திகளையும் அவற்றின் பரஸ் பரப் பலத்தையும் முற்றிலும் புறநோக்கு நிலையிலிருந்து மதிப்பீடு செய்வதன் அவசியத்தைப் புரிந்து கொள்ளப் பிடிவாதமாய் மறுத்தது (அல்லது இன்னும் பொருத்தமாகச் சொல்வதெனில் புரிந்து கொள்ளும் திறனற்றதாய் இருந்தது) என்று சொல்லலாம். இரண்டாவதாக, அந்தக் கட்சி தனிநபர் பயங்கரவாதத்தை, தனியாட்களைக் கொலை புரிவதை — மார்க்சியவாதிகளான நாம் தீர்மானமாய் நிராகரித்த இதனை—அங்கீகரித்த காரணத்தால் தன்னை அது மிகமிகப் ''புரட்சிகரமானதாக'', மிகமிக ''இடதுசாரித் தன்மையுடையதாகக்'' கருதிக் கொண்டது. தனிநபர் பயங்கரவாதம் உசிதமானதல்ல என்ற காரணத்துக்காக மட்டுமேதான் நாம் அதை நிராகரித்தோம். ஆனால் ''கோட்பாட்டு அடிப்படையில்'' மாபெரும் பிரெஞ்சுப் புரட்சியின் பயங்கரத்தை, அல்லது அனைத்து உலகின் முதலாளித்துவ வர்க்கத்தால் முற்றுகையிடப்பட்டிருக்கும் வெற்றிகரப் புரட்சிக் கட்சி ஒன்றால் கையாளப்படும் பயங்கரத்தைப் பொதுப்படையாகக் கண்டனம் செய்யக் கூடியவர்களை, 1900-03ல் பிளெஹானவ், அவர் மார்க்சிய வாதியாகவும் புரட்சியாளராகவும் இருந்தபோது, நையாண்டி செய்து எள்ளி நகையாடினார். மூன்றாவதாக, ''சோஷலிஸ்டு - புரட்சியாளர்கள்'' ஜெர்மன் சமூக-ஜன நாயகக் கட்சியின் ஒப்பளவில் அற்பமான சந்தர்ப்பவாதக் குற்றங்களைச் சுட்டிக்காட்டி ஏளனம் செய்வது மிகவும் ''இடதுசாரித் தன்மையதாகும்'' எனக் கருதினார்கள். ஆனால் அதேபோதில் அவர்கள் அக்கட்சியின் கடைந்

தெடுத்த சந்தர்ப்பவாதிகளை — உதாரணமாய் நிலப் பிரச்சினையிலும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் பற்றிய பிரச்சினையிலும்—தாமே பின்பற்றி வந்தனர்.

இதற்கிடையில், நாம் எப்பொழுதுமே முன்வைத்து ஆதரித்து வந்த கருத்தை, அதாவது ஜெர்மன் புரட்சிகர சமூக-ஜனநாயகம்தான் (1900-03லேயே பிளெஹானவ் அக்கட்சியிலிருந்து பெர்ன்ஷ்டைன் வெளியேற்றப்பட வேண்டுமென்று கோரினர் என்பதையும், இந்த மரபை எப்பொழுதுமே பின்பற்றி வந்துள்ள போல்ஷிவிக்குகள் 1913ல் லெகினது இழிநிலையையும் கயமையையும் துரோகத் தையும் அம்பலப்படுத்தினர் என்பதையும் கவனிக்கவும்) வெற்றிவாகை சூடுவதற்குப் புரட்சிகரப் பாட்டாளி வர்க் கத்துக்குத் தேவைப்படும் கட்சியாக அமையும் நிலைக்கு மிக அருகாமையில் வந்த கட்சியாகும் என்பதைப் பரவலான, உலகு தழுவிய அளவில் வரலாறு இப்பொழுது ஊர்ஜிதம் செய்திருக்கிறது. இன்று, 1920ல் யுத்த காலத்துக்கும் யுத்தப் பிற்கால ஆரம்ப ஆண்டுகளுக்கும் உரிய வெட்க கரமான எல்லாத் தோல்விகளுக்கும் நெருக்கடிகளுக்கும்பிற் பாடு, மேலையக் கட்சிகள் யாவற்றிலும் ஜெர்மன் புரட்சிகர சமூக-ஜனநாயகவாதிகளின் கட்சிதான் சிறந்த தலைவர் களை உருவாக்கிற்று என்பதையும், ஏனையக் கட்சிகளைக் காட்டிலும் விரைவில் மீட்சியுற்று புது பலம் பெற்றது என்பதையும் தெளிவாகக் காண முடிகிறது. ஸ்பார்த்த கிஸ்டுகளது கட்சியின்[14] உதாரணத்திலும், காவுத்ஸ்கிகள், ஹில்ஃபர்டிங்குகள், லெடெபுர்கள், கிரிஸ்பின்கள் ஆகி யோரது சந்தர்ப்பவாதத்தையும் உறுதியின்மையையும் எதிர்த்து அயராத போராட்டம் நடத்தி வரும் ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சியின் இடதுசாரி, பாட்டாளி வர்க்கப் பிரிவின் உதாரணத்திலும் இதனைக் காணலாம். முழு வரலாற்றுக் கட்டம் ஒன்றின் மீது, அதாவது பாரிஸ் கம்யூனிலிருந்து[15] முதலாவது சோஷலிச சோவியத் குடியரசு வரையிலான கட்டத்தின்மீது பரவ லாகப் பார்வையைச் செலுத்துவோமாளுல், பொதுவாக அராஜகவாதம் குறித்து மார்க்சியத்தின் போக்கு மிகவும்

தெளிவாகவும் சந்தேகத்துக்கு இடமில்லாமலும் புலப்படக் காணலாம். முடிவான பகுத்தாய்வில், மார்க்சியம்தான் சரியானது என்பது நிரூபித்துக் காட்டப்பட்டு விட்டது. பெரும்பாலான சோஷலிஸ்டுக் கட்சிகளில் அரசு குறித்து நிலவி வந்த சந்தர்ப்பவாதக் கருத்துக்களை அராஜகவாதிகள் சுட்டிக் காட்டியது நியாயமே என்றாலுங்கூட, முதலாவதாக, இந்தச் சந்தர்ப்பவாதம் அரசு பற்றிய மார்க்ஸ் கருத்துக்களைப் புரட்டிக் கூறியதோடல்லாமல், வேண்டுமென்றே மூடிமறைத்தும் வந்ததால் ஏற்பட்டதாகும் என்பதைக் குறிப்பிட வேண்டும் (அரசும் புரட்சியும் என்ற எனது புத்தகத்தில், அரசு குறித்து நடப்பிலிருந்த சமூக-ஜனநாயகக் கருத்துக்களின் சந்தர்ப்பவாதத்தைத் தெளிவாகவும் கண்கூடாகவும் அப்பட்டமாகவும் திட்டவட்டமாகவும் அம்பலம் செய்த எங்கெல்சின் கடிதம் ஒன்றை முப்பத்தாறு ஆண்டுகளாய், 1875லிருந்து 1911 வரையில், பெபெல் வெளியிடாமலே வைத்திருந்ததை எடுத்துரைத்தேன்). இரண்டாவதாக, இந்தச் சந்தர்ப்பவாதக் கருத்துக்களைத்திருத்திச் சரிசெய்வதும், சோவியத் ஆட்சியதிகாரத்தையும் முதலாளித்துவ நாடாளுமன்ற ஜனநாயகத்தைவிட அது மேம்பாடானதாய் இருப்பதையும் ஏற்றுக்கொள்வதும் ஐரோப்பிய, அமெரிக்க சோஷலிஸ்டுக் கட்சிகளில் மிகுதியான அளவுக்கு மார்க்சியத்தன்மை கொண்டிருந்த பகுதிகளிடையே மிகவும் விரைவாகவும் விரிவாகவும் நடந்தேறியதையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

போல்ஷிவிசம் தனது கட்சிக்குள்ளேயே ''இடதுசாரித்'' திரிபுகளை எதிர்த்து நடத்திய போராட்டம் இரு சந்தர்ப்பங்களில் மிகவும் குறிப்பிடத்தக்க வீச்சு பெறலாயிற்று: 1908ல் மிகவும் பிற்போக்கான ஒரு ''நாடாளுமன்றத்திலும்'' மிகவும் பிற்போக்கான சட்டங்களால் விலங்கிடப்பட்ட சட்டபூர்வமான தொழிலாளர் கழகங்களிலும் பங்கெடுத்துக் கொள்வதா இல்லையா என்னும் பிரச்சினை குறித்தும்; திரும்பவும் 1918ல் (பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் உடன்படிக்கை[16]), எந்த விதமான சமரசத்துக்கும்

இடமில்லையா என்னும் பிரச்சினை குறித்தும் இப்போராட்டம் விரிவும் வீச்சும் மிக்கதாய் நடந்தேறியது.

மிகவும் பிற்போக்கான ஒரு ''நாடாளுமன்றத்தில்'' பங்கெடுத்துக் கொள்வதன் அவசியத்தைப் புரிந்து கொள்ளப் பிடிவாதமாய் மறுத்ததற்காக ''இடதுசாரி'' போல்ஷிவிக்குகள் 1908ல் எங்கள் கட்சியிலிருந்து விலக்கப் பட்டனர்[17]. இந்த ''இடதுசாரிகள்''—இவர்களில் பலர் கம்யூனிஸ்டுக் கட்சியின் போற்றத்தக்க உறுப்பினர்களாகப் பிற்பாடு இருந்த (இன்னமும் இருந்துவரும்) சிறந்த புரட்சியாளர்களாவர் — 1905ஆம் ஆண்டுப் பகிஷ்காரத்தின் வெற்றிகர அனுபவத்தைத் தமக்கு ஆதாரமாகக் கொண்டிருந்தனர். 1905 ஆகஸ்டில் ஆலோசனை அந்தஸ்துடைய ''நாடாளுமன்றம்''[18] கூட்டப்படுவதாக ஜார் பிரகடனம் செய்தபோது, போல்ஷிவிக்குகள் எல்லா எதிர்க் கட்சிகளுக்கும் மென்ஷிவிக்குகளுக்கும் எதிரான நிலையை ஏற்று, அதனைப் பகிஷ்காரம் செய்யும்படி அறைகூவினர். உண்மையில் இந்த ''நாடாளுமன்றம்'' 1905 அக்டோபரில் மூண்ட புரட்சியால்[19] துடைத்தெறியப்பட்டுவிட்டது. அக்காலத்தில், பகிஷ்காரமே பிழையற்றதாக இருந்தது. பிற்போக்கான நாடாளுமன்றங்களில் பங்குகொள்ளாது இருப்பது பொதுவாகச் சரியானதே என்பதல்ல காரணம்; எதார்த்த நிலைமையை நாங்கள் பிழையின்றி மதிப்பிட்டோம் என்பதே காரணம். வெகுஜன வேலைநிறுத்தங்கள் முதலில் அரசியல் வேலைநிறுத்தமாகவும், பிறகு புரட்சிகர வேலைநிறுத்தமாகவும், முடிவில் ஓர் எழுச்சியாகவும் வேகமாய் வளர்ச்சியுற்று வந்தன என்பதே அப்போதிருந்த எதார்த்த நிலைமை. தவிரவும், முதலாவது பிரதிநிதித்துவ சபை கூட்டப்படுவதை ஜாரின் கையில் விட்டுவிடுவதா, அல்லது அதனைப் பழைய ஆட்சியிடமிருந்து பறிப்பதற்கு முயற்சி செய்வதா என்பதே அக்காலத்தியப் போராட்டத்தின் மையப் பிரச்சினையாக இருந்தது. எதார்த்த நிலைமை இதையொத்ததாக இருக்கும் என்ற நிச்சயம் இல்லாத போதும் இருக்க முடியாத போதும், இதையொத்த ஒரு போக்கும் இதே வளர்ச்சி வேகமும் இருக்கு

மென்ற நிச்சயம் இல்லாத போதும் இருக்க முடியாத போதும் பகிஷ்காரம் சரியானதல்ல.

1905ல் போல்ஷிவிக்குகள் ''நாடாளுமன்றத்தைப்'' பகிஷ்கரித்ததானது, புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்கு மதிப்பிடற்கரிய அரசியல் அனுபவத்தை அளித்துச் செழுமைப்படுத்திற்று. சட்டபூர்வமான, சட்டவிரோதமான போராட்ட வடிவங்களும், நாடாளுமன்ற, நாடாளுமன்றத்துக்குப் புறம்பான போராட்ட வடிவங்களும் ஒன்றிணைக்கப்படுகையில், சில நேரங்களில் நாடாளுமன்ற வடிவங்களைக் கைவிடுவது பயனளிப்பதாக இருப்பதுடன் அவசியமும் ஆகிவிடுகிறது என்பதை அது தெளிவு படுத்திற்று. ஆனல் இந்த அனுபவத்தைக் கண்ணை மூடிக்கொண்டு அப்படியே காப்பியடிப்பதும், விமர்சனப் பார்வையின்றி பிற நிலைமைகளிலும் பிற சூழல்களிலும் அனுசரிப்பதும் பெருந் தவருகிவிடும். 1906ல் போல்ஷிவிக்குகள் டூமாவைப் பகிஷ்கரித்தது சிறிய பிழையே என்ருலும், எளிதில் நிவர்த்தி செய்து கொள்ளத் தக்கதே என்ருலும் பிழையே ஆகும்.* 1907லும் 1908லும் அடுத்து வந்த ஆண்டுகளிலும் டூமாவின் பகிஷ்காரம் மிகவும் கடுமையான, நிவர்த்தி செய்வது கடினமான தவருகிவிட்டது. ஏனெனில் ஒரு புறத்தில், புரட்சி அலை வேகமாக உயர்ந்தெழுந்து, எழுச்சியாக மாறிவிடுமென்று எதிர்பார்க்க முடியாமல் இருந்தது. மறு புறத்தில், முதலாளித்துவ முடியாட்சி புதுப்பிக்கப்பட்டபோது உருவான வரலாற்று நிலைமை சட்டபூர்வமான செயற்பாடுகளையும் சட்டவிரோதமான செயற்பாடுகளையும் ஒன்றிணைத்துக் கொள்வதை அவசியமாக்கிவிட்டது. முழு நிறைவு எய்திவிட்ட இந்த

---

* தனிநபர்களுக்குப் பொருந்துவது, தக்க மாறுதல்களுடன், அரசியலுக்கும் கட்சிகளுக்கும் பொருந்தும். பிழையே செய்யாதவரல்ல புத்திசாலி. அத்தகையோர் யாருமில்லை, இருக்கவும் முடியாது. யாருடைய பிழைகள் கடுமையான பிழைகளாய் இல்லையோ, யார் அவற்றைச் சுலபமாகவும் சீக்கிரமாகவும் சரிசெய்து கொள்ள முடிகிறதோ, அவர்தான் புத்திசாலி.

வரலாற்றுக் கட்டம் இதற்குப் பிந்தைய கட்டங்களுடன் கொண்டுள்ள இணைப்பு இப்பொழுது மிகத் தெளிவாகப் புலப்படுகிறது. முடிவுற்றுவிட்ட இக்கட்டத்தை இன்று நாம் திரும்பிப் பார்க்கையில், சட்டபூர்வமான போராட்ட வடிவங்களையும் சட்டவிரோதமான போராட்ட வடிவங்களையும் ஒன்றிணைத்துக் கொள்வது இன்றியமையாத கடமையாகும், மிகவும் பிற்போக்கான நாடாளுமன்றத்திலும் பிற்போக்கான சட்டங்களால் கட்டுண்டிருக்கும் இதர பல நிறுவனங்களிலும் (நோய்க்கால உதவிச் சங்கங்கள் முதலானவை) பங்கெடுத்துக் கொள்வது இன்றியமையாத கடமையாகும் என்னும் கருத்தோட்டத்தை போல்ஷிவிக்குகள் மிக உக்கிரமாய்ப் போராடி நிலைநிறுத்தியிராவிடில், 1908-14ல் அவர்களால் பாட்டாளி வர்க்கப் புரட்சிக் கட்சியின் உறுதியான மையப் பகுதியை (பலப்படுத்துவதும் வளர்த்திடுவதும் இருக்கட்டும்) சிதையாது பாதுகாத்துக் கொள்ளக்கூட முடியாமற் போயிருந்திருக்கும் என்று மிகத் தெளிவாய்த் தெரிகிறது.

1918ல் பிளவு ஏற்படும் நிலை தோன்றிவிடவில்லை. அக்காலத்தில் ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள்[20] எங்கள் கட்சிக்குள் அமைந்த ஒரு தனிப் பிரிவாகவே, அல்லது ''உட்குழுவாகவே'' இருந்து வந்தனர். அதுவுங்கூட அதிக காலத்துக்கு நீடிக்கவில்லை. அதே ஆண்டில், 1918லேயே, ''இடதுசாரி கம்யூனிசத்தின்'' மிக முக்கியப் பிரதிநிதிகள், உதாரணமாய் தோழர்கள் ராதெக்கும் புகாரினும், தமது தவறைப் பகிரங்கமாகவே ஒப்புக் கொண்டனர். பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் ஒப்பந்தம், கோட்பாட்டு அடிப்படையில் எந்த நியாயமும் இல்லாமலும், புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் கட்சிக்குத் தீங்கு பயக்கும் விதத்திலும் ஏகாதிபத்தியவாதிகளுடன் செய்து கொள்ளப்பட்ட ஒரு சமரசமாகும் என்று அவர்களுக்குத் தோன்றிற்று. அது ஏகாதிபத்தியவாதிகளுடன் செய்து கொள்ளப்பட்ட ஒரு சமரசம் என்பது மெய்தான், ஆனால் அப்போதிருந்த நிலைமைகளில் செய்தே ஆக வேண்டியிருந்த ஒரு சமரசமாகும்.

பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் ஒப்பந்தத்தில் கையெழுத்

திட்ட எங்களது போர்த்தந்திரம் இன்று, உதாரணமாக, சோஷலிஸ்டு-புரட்சியாளர்களால் தாக்கப்படுவதைக் கேட்கும் போதும், அல்லது தோழர் லான்ஸ்பரி என்னுடன் உரையாடுகையில் ''சமரசம் செய்து கொள்ள போல்ஷிவிக்குகளுக்கு அனுமதி உண்டெனில், சமரசம் செய்து கொள்ளத் தமக்கும் அனுமதி உண்டென எங்கள் பிரிட்டிஷ் தொழிற் சங்கத் தலைவர்கள் சொல்கிறார்கள்'' என்று கூறுவதைக் கேட்கும் போதும், முதலில் நான் சாதாரணமாய் ''ஜனரஞ்சகமான'' ஓர் எளிய எடுத்துக் காட்டைக் குறிப்பிட்டு, பின்வருமாறு பதிலளிக்கிறேன்:

ஆயுதங்கள் கொண்ட கொள்ளைக் கூட்டத்தினர் உங்களுடைய காரை வழிமறித்துக் கொள்வதாய் நினைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய பணம், பாஸ்போர்ட், கைத்துப்பாக்கி, கார் ஆகிய யாவற்றையும் அவர்களிடம் கொடுத்து விடுகிறீர்கள். இதற்குப் பதில் நீங்கள் கொள்ளைக் கூட்டத்தினரின் விரும்பத்தகாத சகவாசத்திலிருந்து விடுபடுகிறீர்கள். இது ஒரு சமரசமே என்பதில் சந்தேகமில்லை. “Do ut des” (பணம், ஆயுதம், கார் ஆகியவற்றை நான் உனக்குத் ''தருகிறேன்'', முழு உடலுடன் போய்ச் சேரும் வாய்ப்பை ''நீ எனக்குத் தா''). ஆனால் இத்தகைய ஒரு சமரசம் ''கோட்பாட்டு அடிப்படையில் எந்த நியாயமும் இல்லாதது'' என்றோ, (கொள்ளைக் கூட்டத்தினர் இந்தக் காரையும் துப்பாக்கியையும் மேலும் பலரையும் கொள்ளையடிப்பதற்காகப் பயன்படுத்தலாம் என்றாலும்) சமரசம் செய்து கொண்டவரைக் கொள்ளைக் கூட்டத்தினருக்கு உடந்தையாக இருந்தவர் என்றோ சித்த சுவாதீனமுடையவர் எவரும் கூறமாட்டார். ஜெர்மன் ஏகாதிபத்தியக் கொள்ளைக் கூட்டத்தினருடன் நாங்கள் செய்து கொண்ட சமரசம் இது போன்றதொரு சமரசமேயாகும்.

ஆனால் 1914-18லும் பிறகு 1918-20லும் ருஷ்யாவில் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும், ஜெர்மனியில் ஷெய்டெமன்களும் (கணிசமான அளவுக்கு காவுத்ஸ்கிவாதிகளும்), ஆஸ்திரியாவில் ஓட்டோ பௌவரும் ஃபிரீட்ரிஹ் ஆட்லெரும் (ரென்னர்களையும் அவர்களைச்

சேர்ந்தோரையும் கூறவே வேண்டியதில்லை), பிரான்சில் ரெனெடேல்களும் லொங்கேகளும், அவர்கள் கூட்டத்தினரும், பிரிட்டனில் ஃபேபியன்களும் ''சுயேச்சையாளர்களும்'' ''தொழிற் கட்சியினரும்[21] தமது சொந்த நாடுகளின் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராக, தமது சொந்த முதலாளித்துவ வர்க்கத்துடனும் சில நேரங்களில் ''நேச நாடுகளது'' முதலாளித்துவ வர்க்கத்துடனும் சமரசங்கள் செய்து கொண்டபோது, இந்தக் கனவான்கள் எல்லோரும் உண்மையில் கொள்ளைக்கு உடந்தையாளர்களாகவே செயல்பட்டனர்.

முடிவு தெளிவாக விளங்குகிறது: ''கோட்பாட்டு அடிப்படையில்'' சமரசங்களை நிராகரிப்பது, எவ்வகையானவை என்பதைக் கருதாமலே பொதுப்பட எல்லாச் சமரசங்களையும் நிராகரிப்பது சிறுபிள்ளைத்தனமாகும்; பரிசீலனை செய்வதற்கே தகுதியற்ற ஒன்றாகும். புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்குப் பயனுள்ள பணியாற்ற விரும்பும் அரசியல் தலைவருக்கு, சமரசங்களில் சிறிதும் நியாயமில்லாத, சந்தர்ப்பவாதத்தின், துரோகத்தின் வெளியீடாக அமைந்த ஸ்தூலமான உதாரணங்களை இனம் கண்டு கொள்ளத் தெரிந்திருக்க வேண்டும். குற்றவிமர்சனத்தின் முழு சக்தியையும், தயவு தாட்சண்யமின்றி அம்பலம் செய்து சிறிதும் விட்டுக் கொடுக்காமல் போராடுவதன் முழுத் தீவிரத்தையும் அவர் இந்த ஸ்தூலமான சமரசங்களுக்கு எதிராகச் செயல்பட வைக்க வேண்டும். அனுபவமிக்க ''வியாபாரிகளான'' சோஷலிஸ்டுகளும் நாடாளுமன்ற எத்தர்களும் ''பொதுப்படையாக சமரசங்கள்'' பற்றிய வியாக்கியானங்கள் மூலமாய்த் தமது பொறுப்பைத் தட்டிக் கழித்துத் தப்பியோடுவதற்கு அவர் அனுமதிக்கலாகாது. பிரிட்டிஷ் தொழிற் சங்கங்கள், மற்றும் ஃபேபியன் கழகம் ''சுயேச்சைத்'' தொழிற் கட்சி இவற்றின் ''தலைவர்கள்'' தாம் புரிந்த துரோகத்துக்கான பொறுப்பை — மெய்யாகவே படுமோசமான சந்தர்ப்பவாதமாகவும் துரோகமாகவும் காட்டிக்கொடுக்கும் வஞ்சகமாகவும் விளங்கும் ஒரு சமரசத்தைச் செய்து கொண்டதற்கான

பொறுப்பை — இம்முறையில்தான் தட்டிக் கழித்துத் தப்பிக்க முயலுகின்றனர்.

சமரசங்களில் பல வகை உண்டு. அந்தந்த சமரசத்துக்குமான அல்லது சமரசத்தின் ஒவ்வொரு வகைக்குமான சூழ்நிலையையும் ஸ்தூல நிலைமைகளையும் பகுத்தாராயத் தெரிந்திருக்க வேண்டியது அவசியமாகும். கொள்ளைக் கூட்டத்தினர் செய்யக்கூடிய தீங்கைக் குறைக்கும் பொருட்டும், அவர்கள் பிடிபட்டு மரண தண்டனை விதிக்கப் படுவதற்கு உதவும் பொருட்டும், அவர்களிடம் தனது பணத்தையும் துப்பாக்கியையும் கொடுக்கும் ஒருவரையும், கொள்ளையில் பங்கு பெறும் பொருட்டுத் தனது பணத்தையும் துப்பாக்கியையும் கொள்ளைக் கூட்டத்தினருக்குக் கொடுக்கும் ஒருவரையும் வேறுபடுத்தி இனம் கண்டு கொள்ளத் தெரிந்து கொள்வது அவசியமாகும். சிறு பிள்ளைக்குரிய இந்த எளிய உதாரணத்தில் இருப்பது போல் அரசியலில் எப்பொழுதும் இது அவ்வளவு சுலபமாக இருப்பதில்லை. ஆனால் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அப்படியே எடுத்துக் கையாளக்கூடிய தயார் நிலையிலுள்ள தீர்வுகளை அளிக்கக் கூடிய ஒரு வகைச் சூத்திரத்தைத் தொழிலாளர்களுக்கு வகுத்தளிக்க முற்படுகிறவர் எவரும், அல்லது புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் கொள்கை எக்காலத்திலும் கடினமான அல்லது சிக்கலான நிலைமைகளை எதிர்ப்படாதெனை வாக்குறுதி அளிப்பவர் எவரும் ஏமாற்று வித்தைக்காரரே ஆவார்.

தவறான விளக்கத்துக்கு இடந் தராமல் இருக்கும் பொருட்டு, ஸ்தூலமான சமரசங்களின் பகுத்தாராய்வுக் கான சில அடிப்படை விதிகளை மிகச் சுருக்கமாகவேனும் இங்கு குறிப்பிட முயலுகிறேன்.

பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு ஜெர்மன் ஏகாதிபத்தியவாதிகளுடன் ஒரு சமரசம் செய்து கொண்ட எங்கள் கட்சியானது, 1914ஆம் ஆண்டின் முடிவிலிருந்தே தனது சர்வதேசியத்தை நடைமுறையில் உருவாக்கி வந்துள்ளது. ஜாரிச முடியாட்சியை முறியடிக்குமாறு அறைகூவல் விடுக்கவோ, இரு ஏகாதிபத்தியக் கொள்ளைக்

காரர்களிடையே நடைபெற்ற ஒரு யுத்தத்தில் ''தாயகப் பாதுகாப்பைக்'' கண்டனம் செய்யவோ அது அஞ்சியதில்லை. இக்கட்சியின் நாடாளுமன்றப் பிரதிநிதிகள் முதலாளித்துவ சர்க்காரில் அமைச்சர் பதவிக்கு இட்டுச் செல்லும் பாதையை மேற்கொள்வதைக் காட்டிலும் தண்டனைக்கு உள்ளாகி சைபீரியாவுக்குக் கடத்தப் படுவதே மேலெனக் கொண்டனர். ஜாரிசத்தைக் கவிழ்த்துவிட்டு ஒரு ஜனநாயகக் குடியரசை நிறுவிய புரட்சியானது இக்கட்சியை மகத்தான தொரு புதிய சோதனைக்கு உள்ளாக்கிற்று — இக்கட்சி தனது ''சொந்த'' ஏகாதிபத்தியவாதிகளுடன் எந்த உடன் பாடுகளிலும் இறங்கவில்லை, அதற்குப் பதில் அவர்களைக் கவிழ்ப்பதற்காக வேலை செய்து, அவ்வாறே கவிழ்க்கவும் செய்தது. இக்கட்சி அரசியல் ஆட்சியதிகாரம் ஏற்றதும், அது நிலப்பிரபுத்துவ உடைமையையும் முதலாளித்துவ உடைமையையும் தகர்த்துத் தரைமட்டமாக்கிவிட்டது. ஏகாதிபத்தியவாதிகளது இரகசிய ஒப்பந்தங்களைப் பகிரங்கப்படுத்தி அவற்றை நிராகரித்தபின், இக்கட்சி எல்லா நாடுகளின் மக்களுக்கும் சமாதானத்தைப் பிரேரணை செய்தது. பிரிட்டிஷ்-பிரெஞ்சு ஏகாதிபத்தியவாதிகள் சமாதானம் ஏற்படாதபடி குழிபறித்த பிற்பாடுதான், ஜெர்மனியிலும் பிற நாடுகளிலும் புரட்சியைத் துரிதப்படுத்துவதற்காக போல்ஷிவிக்குகள் மனித சக்திக்கு இயன்றதனைத்தையும் செய்த பிற்பாடுதான், இக்கட்சி பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் கொள்ளைக்காரர்களின் வன்முறைக்குப் பணிந்தது. இத்தகைய ஒரு கட்சி இத்தகைய ஒரு நிலையில் செய்துகொண்ட இந்தச் சமரசம் முற்றிலும் சரியே என்பது நாளுக்கு நாள் மேலும் மேலும் கண்கூடாகி வருகிறது.

ருஷ்யாவில் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு - புரட்சியாளர்களும் (உலகெங்கும் 1914-20ல் இரண்டாவது அகிலத்தின் தலைவர்கள் எல்லோரும் செய்தது போலவே), நேரிடையாகவோ மறைமுகமாகவோ ''தாயகப் பாதுகாப்பு,'' அதாவது தமது சொந்தக் கொள்ளைக்கார முதலாளித்துவ வர்க்கத்தின் பாதுகாப்பு, நியாயமானதே என்பதாக வாதாடி, துரோகச் செயலுடன் தமது பணியைத் துவக்

கினர். தமது சொந்த நாட்டின் முதலாளித்துவ வர்க்கத்துடன் கூட்டு சேர்ந்து கொண்டு, தமது சொந்த முதலாளித்துவ வர்க்கத்துடன் தோளிணைத்து, தமது சொந்த நாட்டின் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராகப் போராடி அவர்கள் தமது துரோகத்தைத் தொடர்ந்து செயல்படுத்திச் சென்றனர். ருஷ்யாவில் முதலில் கேரென்ஸ்கியுடனும் காடேட்டுகளுடனும்,[22] பிற்பாடு கல்ச்சாக்குடனும் தெனீக்கினுடனுமான அவர்களுடைய கூட்டு—அவர்களது சகாக்கள் வெளிநாடுகளில் அவரவரது நாட்டின் முதலாளித்துவ வர்க்கத்துடன் நிறுவிக் கொண்ட கூட்டைப் போலவே—உண்மையில் அவர்கள் பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராளிகளாகி, முதலாளித்துவ வர்க்கத்தின் பக்கத்துக்கு ஓடித் துரோகம் புரிந்ததையே குறித்தது. ஏகாதிபத்தியக் கொள்ளைக் கூட்டத்தினருடன் செய்து கொள்ளப்பட்ட அவர்களுடைய சமரசமானது ஆதி முதல் அந்தம் வரை ஏகாதிபத்தியக் கொள்ளையில் அவர்கள் உடந்தையாளர்கள் ஆகிவிட்டனர் என்பதையே குறித்தது.

## 5

### ஜெர்மனியில் ''இடதுசாரி'' கம்யூனிசம். தலைவர்கள், கட்சி, வர்க்கம், வெகுஜனங்கள்

இப்பொழுது நாம் குறிப்பிடப் போகும் ஜெர்மன் கம்யூனிஸ்டுகள் தம்மை ''இடதுசாரிகள்'' என அழைத்துக் கொள்வதில்லை; இதற்குப் பதில், எனக்குத் தெரிந்தவரை, ''கோட்பாடு வழிப்பட்ட எதிர்த்தரப்பாளர்கள்'' என்பதாகத் தம்மை அழைத்துக் கொள்கிறார்கள். ஆனால் இவர்கள் ''இடதுசாரிவாதத்தின் இளம் பருவக் கோளாறுக்குரிய'' எல்லா அறிகுறிகளையும் வெளிப்படுத்திக் கொள்கிறார்கள் என்பது பின்வருவதிலிருந்து புலனாகும்.

**ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியில் பிளவு, (ஸ்பார்த்தக்கஸ் கழகம்)** என்ற தலைப்பில், இந்த எதிர்த்தரப்பாளர்களது கருத்தோட்டத்தை எடுத்துரைத்து ''மாயின் கரை

யிலுள்ள ஃபிராங்ஃபுர்ட்டின் உள்ளூர்க் குழு'' வெளியிட்டிருக்கும் பிரசுரம், இந்த எதிர்த்தரப்பாளர்களுடைய கருத்துக்களை மிகவும் எடுப்பாகவும், தெட்டத் தெளிவாகவும், சுருக்கமாகவும் எடுத்துரைக்கிறது. இதன் சாராம்சத்தை வாசகர்களுக்கு அறிமுகம் செய்ய ஒரு சில மேற்கோள்களே போதும்:

கம்யூனிஸ்டுக் கட்சியானது மிகவும் வைராக்கியமான வர்க்கப் போராட்டத்தின் கட்சியாகும்....''

''... அரசியல் வழியில், இடைக்காலக் கட்டமானது'' (முதலாளித்துவத்துக்கும் சோஷலிசத்துக்கும் இடைப்பட்டது) ''பாட்டாளி வர்க்க சர்வாதிகாரக் கட்டமாகும்....''

''... ஒரு கேள்வி எழுகிறது: இந்த சர்வாதிகாரத்தைச் செலுத்த வேண்டியது எது? **கம்யூனிஸ்டுக் கட்சியா, அல்லது பாட்டாளி வர்க்கமா?... கோட்பாடு அடிப்படையில்** நாம் பாடுபட வேண்டியது கம்யூனிஸ்டுக் கட்சியின் சர்வாதிகாரத்துக்கா, அல்லது பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரத்துக்கா?...''

(அழுத்தங்கள் யாவும் மூலத்தில் இருப்பவை.)

இந்தப் பிரசுரத்தின் ஆசிரியர் ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டி மீது குற்றம் சாட்ட முற்படுகிறார். அது **ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சியுடன் கூட்டணி** ஏற்படுத்துவதற்கான வழிகளைத் தேடுகிறது என்றும், சுயேச்சையாளர்களுடன் கூட்டணி நிறுவிக் கொள்வதற்கான மெய்யான, பிரதானமான தனது முயற்சிகளை மூடிமறைக்க வேண்டுமென்ற ஒரே குறிக்கோளுடன் நாடாளுமன்றவாதம் அடங்கலாய்ப் போராட்டத்துக்குரிய **''எல்லா அரசியல் வழிகளையும் கோட்பாடு அடிப்படையில் ஏற்றுக் கொள்ளும் பிரச்சினையை''** எழுப்புகிறது என்றும் இவ்வாசிரியர் அதன் மீது குற்றம் சாட்டுகிறார். இந்தப் பிரசுரம் மேலும் கூறுவதாவது:

''எதிர்த்தரப்பாளர்கள் வேறொரு பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுள்ளனர். கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதிக்கத்தையும் கட்சியின் சர்வாதிகாரத்தையும் பற்றிய பிரச்சினை வெறும் போர்த்தந்திரப் பிரச்சினையே

ஆகுமென்று அவர்கள் கருதுகிறார்கள். எப்படியும் கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதிக்கம்தான் எவ்வகையான கட்சி ஆதிக்கத்திற்குமுரிய இறுதி வடிவமாகும். கோட்பாடு அடிப்படையில் நாம் பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரத்துக்காகப் பாடுபட வேண்டும். ஆகவே கட்சியின் எல்லா நடவடிக்கைகளும், அதன் நிறுவனங்களும், போராட்ட முறைகளும், ஆதார நெறியும் போர்த்தந்திரமும் இதனையே குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும். எனவே, பிற கட்சிகளுடனான எல்லா வித சமரசத்தையும், வரலாற்று வழியிலும் அரசியல் வழியிலும் காலாவதியாகிவிட்ட நாடாளுமன்றப் போராட்ட வடிவங்களுக்குச் சரிந்து செல்லும் எவ்வகையான பின்னடைவையும், வளைந்து கொடுப்பதற்கும் இணக்கத்துக்குமுரிய எந்தக் கொள்கையையும் தீர்மானமாய் நிராகரித்தே ஆக வேண்டும்''. ''பாட்டாளி வர்க்கத்துக்குரிய தனிவகையான புரட்சிகரப் போராட்ட முறைகளை வன்மையாக வலியுறுத்த வேண்டும். கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைமையில், புரட்சிகரப் போராட்டத்தில் மிகவும் பரவலான பாட்டாளி வர்க்க வட்டாரங்களும் பகுதிகளும் பங்கு கொள்ளும்படி அணி திரளும் பொருட்டு புதிய நிறுவன வடிவங்களை மிக விரிவான அடிப்படையிலும் மிக விரிவான வீச்சிலும் தோற்றுவித்தாக வேண்டும். ஆலை நிறுவனங்களை அடிப்படையாகக் கொண்ட தொழிலாளர் சங்கம் எல்லாப் புரட்சிகர சக்திகளையும் ஒன்று திரட்டும் மையமாக வேண்டும். 'தொழிற் சங்கங்களிலிருந்து வெளியேறுங்கள்!' என்னும் கோஷத்தைப் பின்பற்றும் எல்லாத் தொழிலாளர்களையும் இது ஐக்கியப்படுத்த வேண்டும். போரிடும் பாட்டாளி வர்க்கம் இங்குதான் தனது அணிகளைப் போருக்கு ஒன்று திரட்டுகிறது. வர்க்கப் போராட்டம், சோவியத் அமைப்பு, சர்வாதிகாரம் இவற்றை ஏற்றுக்கொள்வதே உறுப்பினராய்ச் சேர்க்கப்படுவதற்குப் போதுமானதாய் இருக்க வேண்டும். போராடும் வெகுஜனங்கள் மேற்கொண்டு அரசியல் கல்விஞானம் பெற்று, போராட்டத்தில் அரசியல் திசை வழி காண்பது தொழிலாளர் சங்கத்துக்கு வெளியிலுள்ள கம்யூனிஸ்டுக் கட்சிக்குரிய பணியாகும்....

''... இதன் விளைவாக, இப்பொழுது இரு கம்யூனிஸ்டுக் கட்சிகள் ஒன்றுக்கொன்று எதிராக அணி வகுத்து நிற்கின்றன:

''ஒன்று தலைவர்களுடைய கட்சி. இது புரட்சிப் போராட்டத்தை ஒழுங்கமைத்து மேலிருந்து

அதனை நடத்திச் செல்வதில் முனைந்துள்ளது; சர்வாதிகாரம் செலுத்தும் கூட்டணி அரசாங்கத்தில் தான் சேர்ந்து கொள்வதற்கு வகை செய்யும் நிலைமையைத் தோற்று விக்கும் பொருட்டு சமரசங்களையும் நாடாளுமன்றவாதத் தையும் ஏற்றுக் கொள்கிறது.

''மற்றொன்று வெகுஜனங்களுடைய கட்சி. இது அடியிலிருந்து புரட்சிப் போராட்டம் எழுச்சியுறுமென எதிர்பார்க்கிறது. இந்தப் போராட்டத்தில் அதற்குத் தெரிந்ததும், அது அனுசரிப்பதும் ஒரேயொரு போராட்ட முறைதான் — தெளிவாகக் குறிக்கோளுக்கு இட்டுச் செல் லும் போராட்ட முறைதான். நாடாளுமன்ற, சந்தர்ப்ப வாத முறைகள் யாவற்றையும் அது நிராகரிக்கிறது. நிபந்தனையின்றி முதலாளித்துவ வர்க்கத்தைக் கவிழ்த்து, அதன்பின் சோஷலிசத்தை அடைவதற்காகப் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நிறுவுவதென்ற ஒரேயொரு போராட்ட முறைதான் அது....

''... அங்கே—தலைவர்களது சர்வாதிகாரம்; இங்கே— வெகுஜனங்களது சர்வாதிகாரம்! அதுவே நமது கோஷம்.''

ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியிலுள்ள எதிர்த்தரப்பின் கருத்துக்களது பிரதான கூறுகள் இவையே.

1903 முதலாய் போல்ஷிவிசத்தின் வளர்ச்சியில் உணர்வு பூர்வமாய்ப் பங்குகொண்டுள்ள, அல்லது நெருங்கி நின்று அந்த வளர்ச்சியைக் கவனித்து வந்துள்ள எந்த போல் ஷிவிக்கும், இந்த வாதங்களைப் படித்ததும், ''இது நாம் நன்கு அறிந்த அதே பழங் குப்பைதான்! அதே 'இடது சாரிச்' சிறுபிள்ளைத் தனம்தான்!'' என்று உடனே கூறி விடுவார்.

எனினும் இந்த வாதங்களை இன்னும் சற்று நெருங்கிச் சென்று பரிசீலித்துப் பார்க்கலாம்.

''கட்சியின் சர்வாதிகாரமா, அல்லது வர்க்கத்தின் சர்வாதிகாரமா? தலைவர்களின் சர்வாதிகரமா (கட்சியா), அல்லது வெகுஜனங்களின் சர்வாதிகாரமா (கட்சியா)?'' என்று இந்தக் கேள்வி எழுப்பப்படும் விதமே நம்பமுடி யாத படுமோசமான சிந்தனைக் குழப்பத்திற்குச் சான்றாகி விடுகிறது. ஏதோ மிகவும் நூதனமான ஒன்றை இவர்கள் கண்டுபிடித்துக் கூற விரும்பி, சாமர்த்தியசாலிகளாய்

இருக்க முயற்சித்து, தம்மைக் கேலிக்கு உரியவர்களாக்கிக் கொள்கிறார்கள். வெகுஜனங்கள் வர்க்கங்களாய்ப் பிரிக்கப் பட்டிருக்கிறார்கள்; பொதுவாக மிகப் பெருவாரியானோரை, சமுதாயப் பொருளுற்பத்தி அமைப்பில் வகிக்கும் நிலைக்கு ஏற்றவாறு அவர்கள் பிரிக்கப்பட்டிருப்பதை கருதாமலே, சமுதாயப் பொருளுற்பத்தி அமைப்பில் குறிப் பிட்ட நிலையினை வகிக்கும் வகையினங்களுடன் ஒப்பிட்டு வேறுபடுத்துவதன் மூலமே வெகுஜனங்களை வர்க்கங்களுடன் ஒப்பிட்டு வேறுபடுத்த முடியும்; பொதுவாகவும் மிகப் பெருவாரியான சந்தர்ப்பங்களிலும், எப்படியும் இன்றைய நாகரிக நாடுகளில், வர்க்கங்கள் அரசியல் கட்சிகளால் தலைமை தாங்கப்பெற்று வழிகாட்டப்படுகின்றன; பொது வாக அரசியல் கட்சிகள் பொறுப்பு மிக்கப் பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு தலைவர்கள் என்றழைக்கப்படும் அதிகாரமும் செல்வாக்கும் படைத்த, அனுபவம் வாய்ந்த உறுப்பினர்களாலாகிய ஓரளவு நிலையான குழுக்களால் நிர்வகிக்கப்படுகின்றன — இவை எல்லார்க்கும் தெரிந்த வையே. இவை யாவும் சர்வசாதாரணமானவை. இவை யாவும் தெளிவானவை, எளிமையானவை. இவற்றை ஒதுக்கிவிட்டு, இவற்றுக்குப் பதிலாய்ப் பொருளற்ற பேச்சை, வோலாபுக்[23] போன்ற புதிய செயற்கை மொழியைச் சிருஷ்டிப்பானேன்? ஒரு புறத்தில், கட்சியானது திடுதிப் பென்று சட்டபூர்வமான நிலையிலிருந்து சட்டவிரோத மான நிலைக்கு மாற்றப்பட்டு அதனால் தலைவர்களுக்கும் கட்சிகளுக்கும் வர்க்கங்களுக்குமுள்ள வழக்கமான, முறை யான, எளிய உறவுகள் குலைக்கப்பட்டுவிட்ட சூழ்நிலைக்குத் தாம் வந்துவிட்டதைக் கண்டதும், இவர்கள் குழம்பி விட்டதாகத் தெரிகிறது. ஏனைய ஐரோப்பிய நாடுகளைப் போலவே ஜெர்மனியிலும் சட்டபூர்வமான நிலைக்கு மக்கள் தம்மை மட்டு மீறிப் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டனர். முறைப்படி நடைபெறும் கட்சிக் காங்கிரஸ்களில் ''தலைவர்கள்'' தங்கு தடையின்றி ஒழுங்கான முறையில் தேர்ந்தெடுக்கப்படுவதற்கும், நாடாளுமன்றத் தேர்தல் கள், பொதுக் கூட்டங்கள், பத்திரிகைகள், தொழிற்

சங்கங்கள் மூலமாகவும், பிற நிறுவனங்கள் மூலமாகவும் வெளிப்படும் உணர்ச்சிகள் வாயிலாகக் கட்சிகளின் வர்க்க இயைபைச் சோதித்துப் பார்க்கும் வசதியான முறைக்கும், இன்ன பிறவற்றுக்கும் மட்டுமீறி மக்கள் தம்மைப் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டனர். இவர்களது இந்த வழக்கமான செயல்முறைக்குப் பதிலாய், புரட்சிப் புயலின் வளர்ச்சி காரணமாகவும், உள்நாட்டுப் போரின் வளர்ச்சி காரணமாகவும் சட்டபூர்வமான நிலையிலிருந்து சட்டவிரோதமான நிலைக்கு விரைவாய் மாறிச் சென்று, இரண்டையும் ஒன்றிணைத்துக் கொண்டு, ''தலைவர்களது குழுக்களைத்'' தேர்வு செய்ய வேண்டிய அல்லது அமைக்க வேண்டிய அல்லது பாதுகாத்துக் கொள்ள வேண்டிய ''வசதியற்ற'', ''ஜனநாயகமல்லாத'' முறைகளைக் கையாள வேண்டி வந்ததும்—இவர்கள் நிலை தடுமாறி, கலப்பற்ற அபத்தக் கற்பனையில் இறங்கத் தலைப்பட்டு விட்டனர். ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியின் சில உறுப்பினர்கள்* மிகுந்த சலுகைக்கும் மிகவும் நிலையான சட்டபூர்வ அந்தஸ்துக்குமுரிய மரபுகளையும் நிலைமைகளையும் கொண்ட ஒரு சிறு நாட்டில் பிறக்க வேண்டிய துரதிருஷ்டத்துக்கு உள்ளாகி, சட்டபூர்வ நிலையிலிருந்து சட்டவிரோத நிலைக்கான மாற்றத்தை என்றும் காணுதவர்களாய் இருந்து விட்டதால், குழப்பத்துக்கு இரையாகி, சித்தப் பிரமை அடைந்து இந்த அபத்தக் கண்டுபிடிப்புகளைத் தோற்றுவிக்க உதவியதாகத் தெரிகிறது.

மறு புறத்தில், தற்போது ''நவநாகரிக'' வழக்குக்குரிய சொற்களாகிவிட்ட ''வெகுஜனங்கள்'', ''தலைவர்கள்'' ஆகிய இரண்டும் சிந்தனையின்றியும் தாறுமாறுகவும் கையாளப்படுவதையே காண்கிறேம். ''தலைவர்கள்'' மீது தொடுக்கப்படும் மிகப் பல தாக்குதல்களிலும் தலைவர்கள் ''வெகுஜனங்களுக்கு'' எதிராக வைத்துப் பேசப்படுவதை இவர்கள் கேட்டு மனப்பாடம் செய்து கொண்டுவிட்டனர். ஆனுல் இவ்விவகாரங்கள் குறித்துச் சிந்தனை செய்யவும்,

---

* குறிப்பு 56ஐப் பார்க்கவும்.—ப-ர்.

இவற்றின் பொருளைத் தெளிவாகப் புரிந்து கொள்ளவும் தாம் திறனற்றவர்கள் என்பதை நிரூபித்துக் கொண்டு விட்டனர்.

''தலைவர்களுக்கும்'' ''வெகுஜனங்களுக்கும்'' இடையிலான வேற்றுமை ஏகாதிபத்தியப் போரின் முடிவிலும், அதற்குப் பிற்பாடும் எல்லா நாடுகளிலும் குறிப்பிடத்தக்க தெளிவுடனும் கூர்மையுடனும் வெளிப்பட்டது. இதற்குரிய தலைமையான காரணத்தை மார்க்சும் எங்கெல்சும் 1852க்கும் 1892க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் பிரிட்டனின் உதாரணத்தைக் கொண்டு பன்முறை விளக்கிக் கூறினர். இந்நாட்டின் ஏகபோக நிலை காரணமாய், ''வெகுஜனங்களிலிருந்து'' அரைவாசிக் குட்டிமுதலாளித்துவ, சந்தர்ப்பவாதத் ''தொழிலாளர் பிரபுக்குலத்தார்'' பிரிவு ஒன்று தோன்றலாயிற்று. இந்தத் தொழிலாளர் பிரபுக்குலத்தாரின் தலைவர்கள், முதலாளித்துவ வர்க்கத்தின் பக்கத்துக்கு ஓடி, நிலையாக அதனுடன் ஒட்டிக் கொண்டு நேரடியாகவோ, மறைமுகமாகவோ அதனிடம் கூலி பெற்று அதற்குச் சேவகம் புரிந்தனர். இந்தக் கழிசடைப் பிறவிகளுக்குப் பகிரங்கமாய்த் துரோகிகளென நாமம் சூட்டி இவர்களுடைய வெறுப்புக்குப் பாத்திரமாகும் சிறப்பை மார்க்ஸ் பெற்றுக் கொண்டார். நவீன (இருபதாம் நூற்றுண்டின்) ஏகாதிபத்தியம் வளர்ச்சி பெற்ற ஒரு சில நாடுகளுக்குத் தனிச்சலுகைக்குரிய விசேஷ நிலையை அளித்துள்ளது. இதனுல் இரண்டாவது அகிலத்தினுள் எல்லா இடங்களிலும் துரோகத்துக்கும் சந்தர்ப்பவாதத்துக்கும் சமூக-தேசியவெறிக்கும் பெயர் பெற்ற தலைவர்களது ஒரு ரகம் தோற்றுவிக்கப் பட்டிருக்கிறது. இவர்கள், தமது குலத்தொழிலின் நலன்களுக்காகவும், தொழிலாளர் பிரபுக்குலத்தாரில் தமது சொந்தப் பிரிவின் நலன்களுக்காகவும் பாடுபடுகிறவர்கள். சந்தர்ப்பவாதக் கட்சிகள் ''வெகுஜனங்களிடமிருந்து'', அதாவது உழைப்பாளி மக்களின் மிகவும் விரிவான பகுதிகளிடமிருந்து, பெரும்பான்மையோரான மிகக் குறைந்த சம்பளம் பெறும் தொழிலாளர்களிடமிருந்து பிரிந்து சென்றுவிட்டன. இந்தச்

சீர்கேட்டை எதிர்த்துப் போராடினுல் ஒழிய, சந்தர்ப்பவாத சமூக-துரோகத் தலைவர்களை அம்பலப்படுத்தி, இழிவு படுத்தி வெளியேற்றினுல் ஒழிய, புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் வெற்றி பெற முடியாது. இக்கொள்கையைத் தான் மூன்ருவது அகிலம்[24] மேற்கொண்டிருக்கிறது.

இது சம்பந்தமாய், **பொத்தாம் பொதுவில்** வெகுஜனங்களது சர்வாதிகாரமா, தலைவர்களது சர்வாதி காரமா என்று இவற்றை ஒன்றுக்கு ஒன்று எதிராய் வைக் கும் அளவுக்குச் செல்வதானது நகைக்கத் தக்க அபத்தமும் மடமையுமே ஆகும். இதில் மிகப் பெரும் வேடிக்கை என்னவெனில், எளிய பிரச்சினைகள் குறித்துப் பொது வாக ஏற்கப்பட்டுள்ள கருத்துக்களைக் கொண்ட தலைவர் களுக்குப் பதிலாய், அர்த்தமற்ற சுத்த அபத்தம் பேசும் **புதிய தலைவர்கள்** (''தலைவர்கள் ஒழிக!'' என்னும் முழக்கத்தால் மூடி மறைக்கப்பட்டு) முன்னுக்குக் கொண்டு வரப்படுகிருர்கள். ஜெர்மனியில் லௌபென்பெர்கும், வொல்ப்ஹெயிமும், ஹோர்னெரும், கார்ல் ஷ்ரேடரும், ஃபிரீட்ரிஹ் வெண்டெலும், கார்ல் எர்லெரும்* இத்தகைய

* கார்ல் எர்லெர், **கட்சியின் கலைப்பு**, ''கம்யூனிஸ்டுத் தொழிலாளர் பத்திரிகை''[25], ஹாம்பர்க், 1920, பிப்ர வரி 7, இதழ் 32: ''முதலாளித்துவ ஜனநாயகத்தை அழிக்காமல், தொழிலாளி வர்க்கத்தால் முதலாளித்துவ அரசை அழித்துவிட முடியாது; கட்சிகளை அழிக்காமல் அதனுல் முதலாளித்துவ ஜனநாயகத்தை அழித்துவிட முடியாது.''

தம்மை மார்க்சியவாதிகளாகக் கூறிக் கொள்ளும் நிதானமான ஜெர்மானியர்களும் (மேற்கூறிய பத்திரிகை யில் கா. எர்லெரும் கா. ஹோர்னெரும் தமது கட்டுரை களின் மூலம், தம்மை நிதானமான மார்க்சியவாதி களாகவே கருதிக் கொள்கிருர்கள் என்பதையும், ஆனுல் தாம் நகைக்கத் தக்க அபத்தமே பேசுகிறவர்கள், மார்க்சியத் தின் அரிச்சுவடியைக் கூடப் புரிந்து கொள்ளாதவர்கள் என்பதையும் பட்டவர்த்தனமாய்க் காட்டிக் கொண்டு விடுகிருர்கள்), முற்றிலும் மடத்தனமான முடிவுகளை எடுத்துரைக்கும் அளவுக்குச் செல்வது குறித்து லத்தீன் நாடுகளைச் சேர்ந்த சிண்டிகலிஸ்டுகளிலும் அராஜகவாதி

வர்கள்தான். இப்பிரச்சினையில் ''ஆழ்ந்த புலமை'' வெளிப் படுத்திப் பொதுவாகவே அரசியல் கட்சிகள் தேவை யற்றவை, ''முதலாளித்துவத் தன்மை வாய்ந்தவை'' என்பதாக முடிவுகட்டுவதற்கு எர்லெர் மேற்கொள்ளும் முயற்சிகள் அடிமுட்டாள்தனமாயிருப்பதால், எள்ளி நகை யாடுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்வதற்கில்லை. சிறு பிழையானாலும் தொடர்ந்து அனுசரிக்கப்படுமானால், அதற்கு நியாயம் கற்பிப்பதற்காக ஆழ்ந்த வாதங்களைத் தேடிப்பிடிக்க முயற்சி செய்யப்படுமானால், தர்க்க வழியிலான அதன் ''இறுதி நிலைக்கு'' அது எடுத்துச் செல்லப் படுமானால், பூதாகார அளவுக்கு அது பெரிதாகிவிடும் என்ற உண்மை யையே இவை யாவும் வலியுறுத்துகின்றன,

கட்சிக் கோட்பாட்டையும் கட்சிக் கட்டுப்பாட்டையும் நிராகரித்தல் — எதிர்த்தரப்பார் **வந்தடைந்துள்ள** நிலை யாகும். **முதலாளித்துவ வர்க்கத்தின் நலன்களுக்காகப்** பாட் டாளி வர்க்கத்தை முற்றிலும் நிராயுதபாணியாக்கு வதற்கே இது ஒப்பானது. இவை எல்லாம் சேர்ந்ததுதான் அந்தச் சிறு முதலாளித்துவச் சிதறலும் நிலையின்மையும், விடாமுயற்சி, ஒற்றுமை, ஒழுங்கமைந்த செயல் ஆகிய இவற்றுக்கான திராணியின்மையும். இவ்வியல்புகள் ஊக்குவிக்கப்பட்டால், தவிர்க்க முடியாத வகையில் இவை எந்தப் பாட்டாளி வர்க்கப் புரட்சி இயக்கத்தையும் அழித்தே தீரும். கட்சிக் கோட்பாட்டை நிராகரிப் பதானது, கம்யூனிசத்தின் கண்ணோட்டத்தில், முதலாளித் துவத்தின் வீழ்ச்சி நிலையிலிருந்து (ஜெர்மனியில்) கம்யூனிசத் தின் கீழ்க் கட்டத்துக்கோ இடைநிலைக் கட்டத்துக்கோ அல்ல, நேரே உயர் கட்டத்துக்கே பாய்வதற்கான முயற்சியைத்தான் குறிக்கிறது. ருஷ்யாவிலுள்ள நாங்கள்

---

களிலும் அதிகப்படியாய்ச் சிந்தனைக் குழப்பமுற்றோர் ''மன நிறைவு'' கொள்ளலாம். மார்க்சியத்தை ஏற்றுக் கொள்வதால் மட்டும் தவறுகளிலிருந்து தப்பிவிட முடியாது. ருஷ்யர்களாகிய நாங்கள் இதனை மிக நன்றாய் அறிவோம், ஏனெனில் பல சந்தர்ப்பங்களில் எங்கள் நாட்டில் மார்க்சியம் ''மோஸ்தராய்'' இருந்துள்ளது.

(முதலாளித்துவ வர்க்கத்தைக் கவிழ்த்ததற்குப் பிற்பாடான இந்த மூன்றும் ஆண்டில்) முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்கு, அதாவது கம்யூனிசத்தின் கீழ்நிலைக் கட்டத்துக்கு, மாறிச் செல்வதற்கான துவக்க நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறோம். வர்க்கங்கள் இன்னமும் இருந்து வருகின்றன; பாட்டாளி வர்க்கம் ஆட்சியதிகாரம் வென்று கொண்ட பிற்பாடும் பல ஆண்டுகளுக்கு எங்கும் இருக்கவே செய்யும். விவசாயிகள் இல்லாத (ஆனல் சிறு உடைமையாளர் இருந்து வரும்) பிரிட்டனில் வேண்டுமானுல் ஒருவேளை இந்தக் காலம் குறுகியதாய் இருக்கலாம். வர்க்கங்களை ஒழிப்பதென்பதன் பொருள் நிலப்பிரபுக்களையும் முதலாளிகளையும் அகற்றுவதென்பது மட்டுமல்ல—இதனை நாங்கள் ஒப்பளவில் சுலபமாய்ச் செய்துவிட்டோம்; சிறுவீதப் பண்ட உற்பத்தியாளர்களை ஒழித்திடுவதென்பதும் இதன் பொருளாகும். இவர்களை அ க ற் றி வி ட மு டி யா து, நசுக்கிவிடவும் முடியாது; நாம் இவர்களுடன் சேர்ந்து வாழ்ந்தாக வேண்டும். நீடித்த, மெதுவான, எச்சரிக்கையான ஒழுங்கமைப்புப் பணியின் மூலமாக மட்டுமே இவர்களை மாற்றவும், போதனை அளித்துத் திருத்தவும் முடியும் (அவ்வாறே செய்யவும் வேண்டும்). பாட்டாளி வர்க்கத்தை இவர்கள் எல்லாப் பக்கங்களிலும் குட்டிமுதலாளித்துவச் சூழ்நிலையால் சுற்றி வளைத்துள்ளனர். இச்சூழ்நிலை பாட்டாளி வர்க்கத்தினுள் கசிந்து அதனை மாசுபடுத்துகிறது; பாட்டாளி வர்க்கத்தினுள் குட்டிமுதலாளித்துவ உறுதியின்மையையும், ஒற்றுமையின்மையையும், தனிநபர் மனப்பான்மையையும், மாறிமாறி மனவெழுச்சியையும் மனச்சோர்வையும் ஓயாது மீண்டும் மீண்டும் தலை தூக்கச் செய்கிறது. இதனை எதிர்த்துச் சமாளிக்கும் பொருட்டு, பாட்டாளி வர்க்கத்தின் ஒழுங்கமைப்புப் பாத்திரம் (அதுவே அதன் தலைமையான பாத்திரம்) பிழையின்றியும் பயனுள்ள முறையிலும் வெற்றிகரமாகவும் நிறைவேற்றப்படும் பொருட்டு, பாட்டாளி வர்க்கக் கட்சியினுள் மிகவும் கண்டிப்பான மத்தியத்துவமும் கட்டுப்பாடும் அவசியமாகும். பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்

என்றால் பழைய சமுதாயத்தின் சக்திகளுக்கும் மரபுகளுக்கும் எதிரான இடையருத போராட்டம் என்று அர்த்தம்; இரத்தக் களறியானதும் இரத்தமற்றதுமான, வன்முறையானதும் அமைதியானதுமான, இராணுவ வழிப்பட்டதும் பொருளாதார வழிப்பட்டதுமான, போதனைத் துறையிலானதும் நிர்வாகத் துறையிலானதுமான போராட்டம் என்று அர்த்தம். லட்சோப லட்சக் கணக்கானோரிடையிலும், கோடானு கோடியானோர் இடையிலும் நிலவும் பழக்கத்தின் சக்தி அபாரமானதொரு சக்தியாகும். போராட்டத்தில் புடம் போடப்பட்டு உருக்கு உறுதி கொண்ட ஒரு கட்சி இல்லையேல், குறிப்பிட்ட அந்த வர்க்கத்திலுள்ள நேர்மையானோர் அனைவரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு கட்சி இல்லையேல், வெகுஜனங்களது மனப்பாங்கைக் கவனித்து வருவதற்கும் வயப்படுத்துவதற்குமான திறன் கொண்ட ஒரு கட்சி இல்லையேல், இத்தகைய ஒரு போராட்டத்தை வெற்றிகரமாய் நடத்த முடியாது. கோடானு கோடியாயுள்ள சிறு உடைமையாளர்களைத் ''தோற்கடிப்பதை'' விட மத்தியத்துவமடைந்த பெரு முதலாளிகளைத் தோற்கடிப்பது ஆயிரம் மடங்கு சுலபமானது. இந்தச் சிறு உடைமையாளர்கள் தமது சாதாரணமான, அன்றாட, கண்ணுக்குப் புலப்படாத, பிடிகொடுக்காத, சீர்கேடு உண்டாக்கும் நடவடிக்கைகள் மூலம் முதலாளித்துவ வர்க்கத்துக்குத் தேவையான அதே பலன்களைத்தான், முதலாளித்துவ வர்க்கத்தைப் புத்துயிர் பெற்றெழச் செய்யும் அதே பலன்களைத்தான் உண்டாக்குகிறார்கள். பாட்டாளி வர்க்கக் கட்சியின் உருக்குக் கட்டுப்பாட்டை (முக்கியமாய் அதன் சர்வாதிகாரத்தின் போது) இம்மியளவு பலவீனமாக்குகிறவருங்கூட, பாட்டாளி வர்க்கத்துக்கு விரோதமாய் முதலாளித்துவ வர்க்கத்துக்கு உதவுகிறவரே ஆவார்.

தலைவர்கள்—கட்சி—வர்க்கம்—வெகுஜனங்கள் பற்றிய பிரச்சினைக்கு இணைவாகவே, ''பிற்போக்குத்'' தொழிற் சங்கங்கள் பற்றிய பிரச்சினையையும் நாம் எழுப்பியாக வேண்டும். ஆனால் முதலில், எங்கள் கட்சியினுடைய அனு

பவத்தின் அடைப்படையில் சில முடிவுரைகளைக் கூற விரும்புகிறேன். நமது கட்சியில் ''தலைவர்களது சர்வாதிகாரம்'' குறித்து தாக்குதல்கள் எப்பொழுதுமே நடத்தப் பட்டு வந்துள்ளன. இத்தகைய தாக்குதல்களைப் பற்றி 1895ல் நான் முதன்முதலாய்க் கேட்டது நினைவுக்கு வருகிறது. அப்பொழுது அதிகாரபூர்வமாய்க் கட்சி எதுவும் இருக்கவில்லை; செயின்ட் பீட்டர்ஸ்பர்கில் வட்டாரக் குழுக்களுக்குத் தலைமை ஏற்பதற்குரிய ஒரு மையக் குழு[26] உருவாகத் தொடங்கியது. எங்களுடைய கட்சியின் ஒன்பதாவது காங்கிரசில் (1920 ஏப்ரல்)[27] இருந்த ஒரு சிறு எதிர்த்தரப்பும் இதேபோல ''தலைவர்களின் சர்வாதிகாரம்'', ''சிலராட்சி'' என்றெல்லாம் குறிப்பிட்டு எதிர்த்துப் பேசிற்று. ஆகவே ஜெர்மானியர்களிடையிலான ''இடது சாரி கம்யூனிசம்'' எனும் இந்த ''இளம் பருவக் கோளாற்றில்'' வியப்புக்குரியதோ, புதியதோ, பயங்கரமானதோ எதுவும் இல்லை. இந்த வியாதி ஆபத்தானதல்ல; இது வந்து சென்றதும் உடலமைப்பு முன்னிலும் அதிக வலுவானதாகி விடுகிறது. ஆனால் எங்களுடைய விவகாரத்தில், தலைமையகத்தை — தலைவர்களை—''மூடிமறைத்துப்'' பரம இரகசியமாய் வைத்துக் கொள்வது அவசியமாகி விடும்படி சட்டபூர்வமான வேலைகளும் சட்டவிரோதமான வேலைகளும் வேகமாய் மாறி மாறி வந்ததால், சில நேரங்களில் மிகவும் அபாயகரமான விளைவுகள் ஏற்பட்டன. இவ்விளைவுகளில் மிகவும் மோசமானது 1912ல் போலீஸ் கையாள் மலினேவ்ஸ்கி போல்ஷிவிக் மத்தியக் கமிட்டியில் புகுந்து கொண்டதுதான். மிகச் சிறந்த, பற்றுறுதி மிக்க எத்தனையோ பல தோழர்களைக் காட்டிக் கொடுத்து, அவர்களுக்குக் கடுங் காவல் தண்டனை கிடைக்கச் செய்து, பலரும் விரைவிலேயே மரணமடைய அவன் காரணமாயிருந்தான். இன்னும் அவன் அதிக அளவில் தீங்கிழைக்க முடியாமற் போயிற்று என்றால், சட்டபூர்வமான வேலைகளுக்கும் சட்டவிரோத வேலைகளுக்கும் இடையில் இருந்த சரியான இணைவுதான் அதற்குக் காரணம். கட்சியின் மத்தியக் கமிட்டி உறுப்பினர் என்ற முறையிலும், டூமா

பிரதிநிதி என்ற முறையிலும் மலினோவ்ஸ்கி எங்கள் நம் பிக்கைக்கு உரியவனுகும் பொருட்டு, சட்டபூர்வமான தினசரிப் பத்திரிகைகளை நிறுவ எங்களுக்கு உதவும்படி நிர்ப்பந்திக்கப்பட்டான். ஜாரிச ஆட்சியிலுங்கூட இப் பத்திரிகைகளால் மென்ஷிவிக்குகளின் சந்தர்ப்பவாதத்தை எதிர்த்துப் போராட்டம் நடத்தவும், தக்கபடி மறைத்து போல்ஷிவிசத்தின் அடிப்படைக் கூறுகளைப் பரப்பவும் முடிந்தது. மலினோவ்ஸ்கி ஒருபுறம் மிகச் சிறந்த போல்ஷிவிக்குகள் பலரையும் கடுங்காவல் தண்டனைக்கும் மரணத்துக்கும் உள்ளாக்கிய அதே நேரத்தில், மறுபுறம் பத்தாயிரக் கணக்கான புதிய போல்ஷிவிக்குகள் சட்டபூர்வமான பத்திரிகைகளின் வாயிலாய் அரசியல் போதம் பெறத் துணை புரிய வேண்டியதாயிற்று. பிற்போக்கான தொழிற் சங்கங்களில் புரட்சிகர வேலைகளை நடத்திச் செல்வதற்குக் கற்றுக் கொள்வது சம்பந்தமான பணிகளை எதிர்நோக்கும் ஜெர்மன் (அதேபோல பிரிட்டிஷ், அமெரிக்க, பிரெஞ்சு, இத்தாலிய) தோழர்கள் இவ்வுண்மை குறித்து ஆழ்ந்த ஆலோசனை செய்வது நல்லது.*

* மலினோவ்ஸ்கி ஜெர்மனியில் போர்க் கைதியாக இருந்தான். போல்ஷிவிக்குகள் ஆட்சியதிகாரத்தில் இருக்கையில் ருஷ்யாவுக்குத் திரும்பிய உடனே, அவன் நீதி விசாரணை செய்யப்பட்டு எங்களது தொழிலாளர்களால் சுட்டுக் கொல்லப் பட்டான். நமது தவறுக்காக—அதாவது போலீஸ் கையாள் ஒருவன் நமது கட்சியின் மத்தியக் கமிட்டி உறுப்பினனுகிவிட்டதற்காக — மென்ஷிவிக்குகள் நம்மை மிகக் கடுமையாகத் தாக்கினர். ஆனுல் கேரென்ஸ்கியின் கீழ், டூமாவின் தலைவர் ரொத்ஸியான்கோவுக்கு மலினோவ்ஸ்கி ஒரு போலீஸ் கையாள் என்பது யுத்தத்துக்கு முன்பே தெரிந்திருந்தும் டூமாவில் துருதொவிக்குகளுக்கோ[28] தொழிலாளர்களுக்கோ அவர் தகவல் தெரிவிக்காமல் இருந்ததால், அவரைக் கைது செய்து நீதி விசாரணை செய்ய வேண்டுமென நாங்கள் கோரிய போது, கேரென்ஸ்கி அரசாங்கத்திலிருந்த மென்ஷிவிக்குகளோ சோஷலிஸ்டு-புரட்சியாளர்களோ எங்கள் கோரிக்கையை ஆதரிக்கவில்லை. ரொத்ஸியான்கோ சுதந்திரமாகத்தான் இருந்து வந்தார். சுதந்திரமாக ஓடிச் சென்று தெனீக்கினுடன் அவர் சேர்ந்து கொண்டார்.

மிகவும் முன்னேறிய நாடுகள் அடங்கலாய்ப் பல நாடுகளில், முதலாளித்துவ வர்க்கம், கம்யூனிஸ்டுக் கட்சிகளுக்குள் தனது உளவாளிகளை அனுப்பி வருகிறது என்பதில் ஐயமில்லை. இனியும் அது அவ்வாறே அனுப்பி வரும். இந்த அபாயத்தை எதிர்த்துப் போராடுவதற்கான முறைகளில் ஒன்று, சட்டவிரோதமான பணிகளையும், சட்டபூர்வமான பணிகளையும் சாமர்த்தியமாய் இணைத்துச் செல்வதாகும்.

## 6

## புரட்சியாளர்கள் பிற்போக்குத் தொழிற் சங்கங்களில் வேலை செய்யலாமா?

ஜெர்மன் ''இடதுசாரிகள்'' தம்மைப் பொறுத்தவரை நிபந்தனையற்ற தீர்மானகரமான எதிர்மறையே இக் கேள்விக்குரிய பதிலாகுமெனக் கருதுகிறார்கள். கீழ்த்தரமான, சமூக-தேசியவெறி கொண்ட, சமரசவாத, லெகின் ரகத்தைச் சேர்ந்த புரட்சி-எதிர்ப்புத் தொழிற் சங்கங்களில் புரட்சியாளர்களும் கம்யூனிஸ்டுகளும் வேலை செய்யத் தேவையில்லை என்பதுடன், அவ்வாறு வேலை செய்வது மன்னிக்க முடியாத குற்றம் ஆகும் என்றும், ''புரட்சி-எதிர்ப்பு'', ''பிற்போக்குத்'' தொழிற் சங்கங்களுக்கு எதிரான கண்டன முழக்கங்களும் ஆத்திரக் கூப்பாடுகளுமே (இவற்றுள் குறிப்பிடத்தக்க ''ஆதாரத்தோடும்'', குறிப்பிடத்தக்க அசட்டு முறையிலும் அமைந்தவை கா. ஹோர்னெர் எழுப்பியவை) போதுமான ''நிரூபணமாகும்'' என்றும் அவர்கள் கருதுகிறார்கள்.

இத்தகைய போர்த்தந்திரத்தின் புரட்சித் தன்மை குறித்து ஜெர்மன் ''இடதுசாரிகள்'' எவ்வளவுதான் திட நம்பிக்கை கொண்டிருந்த போதிலும், உண்மையில் இது அடிப்படையிலேயே தவறானது, வெற்றுச் சொல்லடுக்குகளைத் தவிர வேறு எதுவும் இல்லாதது.

இதனைத் தெளிவுபடுத்தும் பொருட்டு, எங்களுடைய சொந்த அனுபவத்தை முதலில் எடுத்துரைக்கிறேன். போல்ஷிவிசத்தின் வரலாற்றிலும் அதன் இன்றைய போர்த் தந்திரத்திலும் அனைத்துலகுக்கும் எதெல்லாம் பொருத்த முடையதோ, எதெல்லாம் முக்கியத்துவமுடையதோ, எதெல்லாம் இன்றியமையாததோ அதனை மேற்கு ஐரோப்பாவுக்குப் பயன் படுத்துவதை நோக்கமாகக் கொண்ட இந்தப் பிரசுரத்தின் பொது திட்டத்துக்கேற்ப, முதலில் எங்கள் அனுபவத்தை எடுத்துரைக்கிறேன்.

இன்று ருஷ்யாவில் தலைவர்களுக்கும் கட்சிக்கும் வர்க்கத் துக்கும் வெகுஜனங்களுக்கும் இடையிலுள்ள சம்பந்த மும், மற்றும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமும் அதன் கட்சியும் தொழிற் சங்கங்கள் பால் கொண்டுள்ள போக்கும் ஸ்தூலமாய்ப் பின்வருமாறு உள்ளன: சோவியத்துகளின் மூலம் ஒழுங்கமைந்து பாட்டாளி வர்க்கம் சர்வாதி காரத்தைச் செலுத்துகிறது; இந்தப் பாட்டாளி வர்க்கம் போல்ஷிவிக்குகளது கம்யூனிஸ்டுக் கட்சியால் வழிகாட்டப் படுகிறது. கடந்த கட்சிக் காங்கிரசின் (1920 ஏப்ரல்) புள்ளி விவரங்களின்படி, இக்கட்சியின் உறுப்பினர் எண் ணிக்கை 6, 11, 000. உறுப்பினர் எண்ணிக்கை அக்டோபர் புரட்சிக்கு முன்பும் அதற்குப் பிற்பாடும் பெரிதும் மாறு பட்டு வந்தது. 1918லும் 1919லும் கூட இதைவிடவும் மிகக் குறைவாகவே இருந்தது. கட்சி அளவுமீறி பெருகி விடுவதை நாங்கள் அச்சத்துக்குரியதாகவே கருதுகிறோம். ஏனெனில் சுட்டுத் தள்ளப்பட வேண்டிய பதவி வேட்டை யாளர்களும், எத்தர்களும் ஆளும் கட்சியின் அணிகளுக்குள் நுழைந்து கொள்வதற்காக, தவிர்க்க முடியாத வகையில் எல்லா வழிகளிலும் முயலுகிறார்கள். கடைசித் தரம் கட்சியின் கதவுகளை நாங்கள் விரியத் திறந்தது—தொழி லாளர்கள் விவசாயிகளுக்கு மட்டுமேதான்—1919ஆம் ஆண்டு குளிர்காலத்தில், யுதேனிச் பெத்ரொகிராதுக்கு ஒரு சில கிலோமீட்டர் தொலைவிலும், தெனீக்கின் ஒரியோலுக் கும் (மாஸ்கோவிலிருந்து சுமார் 350 கிலோமீட்டர் தொலை வில்) வந்துவிட்ட ஒரு நேரத்தில்: அதாவது, சோவியத்

குடியரசு கொடிய அபாயத்துக்கு உள்ளாகியிருந்தபோது, துணிகர சுயநலக்காரர்களும் பதவி வேட்டையாளர்களும் எத்தர்களும் நம்பத்தகாத ஆட்களும் கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து கொள்வதன் மூலம் லாபகரமான பதவி பெறலா மென சிறிதும் எதிர்பார்க்க முடியாத போது (தூக்கு மேடையையும் சித்திரவதையையுமே அதிகம் எதிர்பார்க்க வேண்டியிருந்த போது) இது நடைபெற்றது.[31] கட்சி யானது வருடாந்திரக் காங்கிரஸ்களைக் கூட்டுகிறது (கடந்த காங்கிரஸ், 1,000 உறுப்பினர்களுக்கு ஒரு பிரதிநிதி என்ற அடிப்படையில் நடைபெற்றது); காங்கிரசால் தேர்ந் தெடுக்கப்படும் பத்தொன்பது உறுப்பினர்கள் அடங்கிய மத்திய கமிட்டியால் கட்சி நடத்திச் செல்லப்படுகிறது. மாஸ்கோவிலிருந்து நடப்பு வேலைகளைக் கவனித்துக் கொள் பவை இன்னும் சிறிய குழுக்களாகும். ஒழுங்கமைப்புக் குழு, அரசியல் குழு எனப்படும் இவை, மத்திய கமிட்டியின் முழுக் கூட்டங்களில் ஒவ்வொரு குழுவுக்கும் ஐந்து மத்திய கமிட்டி உறுப்பினர்கள் என்னும் விகிதத்தில் தேர்ந் தெடுக்கப்படுகின்றன. இது முழுக்க முழுக்க ''சிலர் ஆட்சி யாகத்'' தோன்றக் கூடும். கட்சி மத்தியக் கமிட்டியின் வழிகாட்டுதல் இல்லாமல் எங்களது குடியரசில் எந்த முக்கிய அரசியல் அல்லது நிறுவனப் பிரச்சினை குறித்தும் முடிவு எடுக்கப் படுவதில்லை.

கட்சி அதன் வேலைகளில் நேரடியாகத் தொழிற் சங்கங்களையே ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது. தொழிற் சங்கங்கள், கடந்த காங்கிரசின் (1920 ஏப்ரல்) புள்ளிகளின்படி, நாற்பது லட்சத்துக்கும் கூடுதலான உறுப்பினர்களைக் கொண்டிருக்கின்றன. இவை உருவில் கட்சிசார்பற்ற நிறுவனங்கள். ஆனால் நடைமுறையில் மிகப் பெரும்பாலான தொழிற்சங்கங்களின் தலைமை அமைப்பு கள் யாவும், முதன்மையாக அனைத்துருஷ்யத் தொழிற் சங்கப் பொது மையம் அல்லது குழு (தொழிற் சங்கங் களின் அனைத்துருஷ்ய மத்தியக் கவுன்சில்) கம்யூனிஸ்டு களால் ஆனவைதான்; கட்சியின் எல்லாத் தாக்கீதுகளையும் இவை நிறைவேற்றுகின்றன. இவ்வாறாக, மொத்தத்தில்

நாங்கள் உருவில் கம்யூனிஸ்டல்லாத, நெகிழ்வுள்ள, ஒப்பளவில் மிகவும் விரிவான, சக்தி மிக்கப் பாட்டாளி வர்க்க நிறுவன ஏற்பாட்டைப் பெற்றிருக்கிறோம். இதன் மூலம் கட்சியானது வர்க்கத்துடனும் வெகுஜனங்களுடனும் நெருங்கிய முறையில் பிணைக்கப்பட்டிருக்கிறது. இதன் மூலம்தான் கட்சியினுடைய தலைமையில், வர்க்கச் சர்வாதிகாரம் செலுத்தப்படுகிறது. தொழிற் சங்கங்களுடன் நெருங்கிய தொடர்புகளின்றி, பொருளாதார விவகாரங்களில் மட்டுமின்றி இராணுவ விவகாரங்களிலுங்கூட அவற்றின் சக்தி வாய்ந்த ஆதரவும் பற்றுறுதி கொண்ட முயற்சிகளுமின்றி, இரண்டரை ஆண்டுகள் இருக்கட்டும், இரண்டரை மாதங்களுக்குக்கூட நாட்டை அரசாள்வதும் சர்வாதிகாரத்தைப் பாதுகாத்துக் கொள்வதும் முடியாமற் போயிருந்திருக்கும். நடைமுறையில் இந்த மிக நெருங்கிய தொடர்புகளுக்கு இயல்பாகவே, பிரசாரத்தின் வடிவிலும் கிளர்ச்சியின் வடிவிலும் தலைமையான தொழிற் சங்க ஊழியர்களுடன் மட்டுமின்றி, பொதுவாகச் செல்வாக்கு படைத்த தொழிற் சங்க ஊழியர்களுடனும் தக்க காலத்திலும் அடிக்கடியும் நடைபெறும் மாநாடுகளின் வடிவிலும் மிகவும் சிக்கலான, பல்வகைப்பட்ட பணிகளும் இன்றியமையாதனவாகி விடுகின்றன. மென்ஷிவிக்குகளை எதிர்த்து வைராக்கியமாய்ப் போராடுவதும் இவற்றுக்கு அவசியமாகும். மென்ஷிவிக்குகளைப் பின்பற்றுவோர் சொற்பமேயாயினும், குறிப்பிட்ட சில பகுதியோர் இன்னமும் அவர்கள் பின்னல் செல்லத்தான் செய்கிறார்கள். இவர்களுக்கு மென்ஷிவிக்குகள் (முதலாளித்துவ) ஜன நாயகத்தைச் சித்தாந்த வழியில் ஆதரிப்பது முதலாய், தொழிற் சங்கங்கள் ''சுயேச்சையாய்'' இருக்க வேண்டும் (பாட்டாளி வர்க்க அரசு அதிகாரத்திலிருந்து!) என்று போதிப்பது முதலாய், பாட்டாளி வர்க்கக் கட்டுப்பாட்டுக்குக் குழிபறிப்பது வரையிலான எல்லா வகைப்பட்ட எதிர்ப்புரட்சிச் சூழ்ச்சிகளையும் கற்றுத் தருகின்றனர்.

''வெகுஜனங்களுடன்'' தொழிற் சங்கங்கள் மூலமாக மட்டும் தொடர்புகள் கொண்டால் போதாதென நாங்கள்

கருதுகிறோம். எங்களது புரட்சியின் போது நடைமுறை யானது கட்சிசார்பற்ற தொழிலாளர்கள், விவசாயிகளது மாநாடுகள் போன்ற ஏற்பாடுகளைத் தோற்றுவித்தது. வெகு ஜனங்களுடைய மனநிலையைக் கண்டறிந்து கொள்வது, அவர்களை மேலும் நெருங்கிச் செல்வது, அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வது, அவர்களில் மிகச் சிறந்தோரை அரசாங்கப் பதவிகளுக்கு உயர்த்துவது முதலான பலவும் செய்யும் பொருட்டு, இந்த ஏற்பாடுகளை ஆதரிக்கவும் வளர்த்துச் செல்லவும் விரிவுபடுத்தவும் நாங்கள் எல்லா வழிகளிலும் முயலுகிறோம். அரசாங்கக் கண்காணிப்பு மக்கள் கமிசாரகத்தைத் தொழிலாளர், விவசாயிகளது மேற்பார்வைத் துறையாக மாற்றுவது குறித்து அண்மையில் பிறப்பிக்கப்பட்ட அரசாணையின்படி, இம்மாதிரியான கட்சிசார்பற்ற மாநாடுகளுக்கு, பல்வேறு வகையான தணிக்கைகளையும் பிறவற்றையும் நடத்தும் அரசாங்கக் கண்காணிப்பின் உறுப்பினர்களைத் தேர்வு செய்யும் அதிகாரம் அளிக்கப்பட்டது.

தவிரவும், கட்சியின் பணிகள் எல்லாம் உழைப்பாளி வெகுஜனங்களை அவர்களது வேலைத் துறை எதுவாயினும் தம்முட் கொண்ட சோவியத்துகளின் மூலமாகவே நடந்தேறுகின்றன என்பதைக் கூறத் தேவையில்லை. சோவியத்து களின் வட்டாரக் காங்கிரசுகள் ஜனநாயக நிறுவன ஏற்பாடுகளாகும். முதலாளித்துவ உலகின் மிகச் சிறந்த ஜனநாயகக் குடியரசுகளுங்கூட இவையொத்த ஜனநாயக நிறுவன ஏற்பாடுகளை முன்பின் கண்டதில்லை. இந்தக் காங்கிர சுகளின் மூலமும் (இவற்றின் நடவடிக்கைகளைக் கட்சி மிக உன்னிப்பாகக் கவனித்துச் செயல்பட முனைகிறது), மற்றும் கிராமங்களில் வர்க்க உணர்வு படைத்த தொழிலாளர் களைத் தொடர்ச்சியாகப் பல்வேறு பதவிகளில் அமர்த்து வதன் மூலமும் பாட்டாளி வர்க்கம் விவசாயிகளது தலை வனுகத் தான் ஆற்ற வேண்டிய பாத்திரத்தை நிறைவேற்று கிறது; நகரப் பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரத்தைச் செயல்படச் செய்தல், விவசாயிகளில் சுரண்டலிலும் கொள்ளை லாபமடிப்பதிலும் ஈடுபடும் பணக்கார,

முதலாளித்துவப் பகுதியோருக்கு எதிராய் இடையருது போராடுதல் முதலான பணிகளை நிறைவேற்றுகிறது.

இதுவே பாட்டாளி வர்க்க அரசு அதிகாரத்தை ''மேலிருந்து'' நோக்குகையில், சர்வாதிகாரத்தை நடைமுறையில் செயல்படுத்துவதன் கண்ணேட்டத்திலிருந்து பார்க்கையில், தெரியவரும் பொது அமைப்பு முறையாகும். இந்த அமைப்பு முறை இருபத்தைந்து ஆண்டுகளாய் எப்படிச் சிறிய, சட்டவிரோத, தலைமறைவுக் குழுக்களிலிருந்து வளர்ந்து உருவாயிற்று என்பதைக் கண்டுள்ள ருஷ்ய போல்ஷிவிக்குகள், ''மேலிருந்தா'' அல்லது ''கீழிருந்தா'' என்பதாகவும், தலைவர்களின் சர்வாதிகாரமா அல்லது வெகுஜனங்களின் சர்வாதிகாரமா என்பதாகவும், இன்னும் பலவாருகவும் பேசப்படுகிற இந்தப் பேச்சை எல்லாம் நகைக்கத்தக்க, சிறுபிள்ளைத்தனமான அபத்தமாகவும், ஒருவருக்கு அதிகமாய்ப் பயன்படுவது அவரது இடது காலா அல்லது வலது கரமா என்று விவாதிக்க முற்படுவதை ஒத்ததாகவுமே கருத வேண்டியிருக்கிறதென்பதை வாசகர் புரிந்து கொள்வாரென நினைக்கிறேம்.

இதேபோல, கம்யூனிஸ்டுகள் பிற்போக்குத் தொழிற் சங்கங்களில் வேலை செய்ய முடியாது, வேலை செய்யக் கூடாதென்றும், இது போன்ற வேலையைக் கைவிட்டுவிடலாமென்றும், தொழிற் சங்கங்களை விட்டு வெளியேறி மிக அருமையான (பெருமளவுக்கு மிக இளம் பருவத்தினராகவே இருக்கக்கூடிய) கம்யூனிஸ்டுகளால் கண்டு பிடிக்கப்பட்ட புத்தம் புதிய வகைப்பட்ட அப்பழுக்கற்ற ''தொழிலாளர் சங்கத்தை'' உருவாக்குவது அவசியமென்றும், மற்றும் பலவாருகவும் கூறும் ஜெர்மன் இடது சாரிகளின் ஆடம்பரமான, மெத்தப் படித்த மேதாவித்தனமான, பயங்கரப் புரட்சிகரமான பல பேச்சுக்களையும் நாங்கள் நகைக்கத்தக்க, சிறுபிள்ளைத்தனமான அபத்தமாகவே கருத வேண்டியிருக்கிறது.

முதலாளித்துவமானது, சோஷலிசத்துக்குரிய மரபுரிமைச் சம்பத்தாக, ஒரு புறத்தில் தொழிலாளர்களிடையே பல நூற்றுண்டுகளாய் வளர்ந்து உருவான பழைய பணித்

துறை, கைவினைத் துறைப் பாகுபாடுகளையும், மறு புறத்தில் தொழிற் சங்கங்களையும் தவிர்க்க முடியாதபடி விட்டுச் செல்கிறது. இந்த தொழிற் சங்கங்கள் மிக மெதுவாகவே, பல்லாண்டுக் காலப் போக்கில், தேர்ச்சித் துறைச் சங்கங்களுக்குரிய தன்மை குறைந்து செல்ல, மேன்மேலும் விரிவான தொழில் துறைச் சங்கங்களாய் (தேர்ச்சித் துறைகளையும் கைவினைத் துறைகளையும் பணித் துறைகளையும் மட்டுமின்றி, முழுமுழுத் தொழில்கள் பூராவையுமே தம்முட் கொண்டனவாய்) வளர முடிகிறது, வளரவும் செய்யும். இதன் பிறகு இந்தத் தொழில் துறைச் சங்கங்கள் மூலமாய் இவை, மக்களிடையே உழைப்புப் பிரிவினையை அகற்றவும், மக்களுக்குப் போதமளித்து, கல்வியறிவூட்டி வளர்த்திடவும், யாவற்றையும் செய்யும் திறன் பெறும் படி அவர்களுக்கு முழுநிறைவான வளர்ச்சியும் முழுநிறைவான பயிற்சியும் அளித்திடவும் முற்படும். கம்யூனிசம் இந்தக் குறிக்கோளை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறது, முன்னேறவும் வேண்டும், கட்டாயம் அதனை வந்தடையவும் செய்யும். ஆனால் இதற்கு மிகப் பல ஆண்டுகள் வேண்டியிருக்கும். முழு வளர்ச்சி பெற்று, முழு வலுவுடையதாய் நிறுவப்பெற்று, முழு வீச்சுடைய முதிர்ச்சி பெற்ற கம்யூனிசமான இந்த வருங்கால விளைவை முன்கூட்டி இன்றே நடைமுறையில் காண முயலுவதானது, நான்கு வயதேயான குழந்தைக்கு உயர் கணிதம் கற்றுத் தரும் முயற்சிக்கு ஒப்பானதே ஆகும்.

சோஷலிசத்தை நாம் கட்டியமைக்க முற்பட முடியும், முற்படவும் வேண்டும் — கற்பனையான மானுடத்தைக் கொண்டோ, தனியே இதற்கென நாம் தயார் செய்யும் மானுடத்தைக் கொண்டோ அல்ல, முதலாளித்துவம் நமக்கு விட்டுச் சென்றுள்ள மானுடத்தைக் கொண்டு நாம் இதனைச் செய்ய வேண்டியிருக்கிறது. இது மிகவும் ''கடினமானதே'' என்பதைக் கூறத் தேவையில்லை. ஆனால் இப் பணிக்கு இதன்றி வேறு எந்த விதமான அணுகு முறையும் விவாதிப்பதற்குக்கூட தகுதி வாய்ந்தாய் இருக்காது.

தொழிற் சங்கங்கள் முதலாளித்துவ வளர்ச்சியின்

ஆரம்ப நாட்களில் தொழிலாளி வர்க்கத்துக்கு மகத்தானதொரு முன்னேற்றப் படியைக் குறித்தன. எப்படியெனில் தொழிலாளர்கள் சிதறிய நிலையில் திக்கற்றவர்களாக இருந்ததிலிருந்து மாறி வர்க்க ஒற்றுமையின் குருத்துக்களைப் பெற்றதை அவை குறித்தன. பாட்டாளி வர்க்க ஒற்றுமையின் மிக உயர்ந்த வடிவமான பாட்டாளி வர்க்கப் புரட்சிக் கட்சி உருவாகத் தொடங்கியதும் (கட்சியானது தலைவர்களை வர்க்கத்தோடும் வெகுஜனங்களோடும் பிரிக்க முடியாதவாறு ஒன்றிவிடச் செய்யத் தெரிந்து கொள்ளாத வரை அது கட்சி என்னும் பெயருக்கே ஏற்றதாகாது), தொழிற் சங்கங்கள் தவிர்க்க முடியாதபடி சிற்சில பிற்போக்கு இயல்புகளை, தேர்ச்சித் துறைக்குரிய ஒரு குறுகிய கண்ணோட்டத்தையும், அரசியல் அக்கறையின்மைக்கான ஒருவிதப் போக்கையும், ஒருவகை மந்த நிலையையும், இன்ன பிறவற்றையும் வெளிப்படுத்தலாயின. ஆயினும் பாட்டாளி வர்க்கத்தின் வளர்ச்சி உலகில் எங்கணுமே தொழிற் சங்கங்களல்லாத பிற வழிகளில், தொழிற் சங்கங்களுக்கும் தொழிலாளி வர்க்கக் கட்சிக்கும் இடையிலான பரஸ்பரச் செயற்பாட்டின் மூலமல்லாத பிற வழிகளில் நடைபெற்றதில்லை, நடைபெறவும் முடியாது. பாட்டாளி வர்க்கம் அரசியல் ஆட்சியதிகாரம் வென்றதானது பாட்டாளி வர்க்கத்துக்கு ஒரு வர்க்கம் என்ற முறையில் பிரம்மாண்டமானதொரு முன்னேற்றப் படியாகும். கட்சியானது இப்பொழுது பழைய வழியில் மட்டுமின்றி ஒரு புதிய வழியிலுங்கூட தொழிற் சங்கங்களுக்குப் போதமளித்து வழிகாட்டியாக வேண்டும். அதேபோதில் தொழிற் சங்கங்கள் அத்தியாவசியமான ''கம்யூனிசப் பயிற்சிப் பள்ளியாகவும்,'' பாட்டாளி வர்க்கத்தினர் சர்வாதிகாரத்தைச் செலுத்துவதற்கு அவர்களுக்குப் பயிற்சி தரும் தயாரிப்புப் பள்ளியாகவும், நாட்டின் பொருளாதாரம் முழுவதுக்குமான நிர்வாகம் படிப்படியாகத் தொழிலாளி வர்க்கத்துக்கும் (தனித்தனிப் பணிப் பிரிவுகளுக்கல்ல), பிற்பாடு உழைப்பாளி மக்கள் அனைவருக்கும் மாற்றப்படுவதற்கு அத்தியாவசியமான தொழிலாளர் ஒற்றுமைக்

கான வடிவமாகவும் இருக்கின்றன, நெடுங்காலத்துக்கு அவ்வாறு இருக்கவும் செய்யும் என்பதையும் கருத்தில் கொண்டிருக்க வேண்டும்.

மேலே குறிப்பிடப்பட்ட பொருளில், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தில் தொழிற் சங்கங்கள் ஒருவகை ''பிற்போக்குத் தன்மை'' கொண்டவையாய் இருப்பது தவிர்க்க முடியாததாகும். இதைப் புரிந்து கொள்ளத் தவறுவது, முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்கு மாறிச் செல்வதற்கான இடைக்காலத்துக்குரிய அடிப்படை நிலைமைகளைப் புரிந்து கொள்ள முற்றுகத் தவறுவதே ஆகும். இந்தப் ''பிற்போக்குத் தன்மையைக்'' கண்டு அஞ்சுவதோ, அதனைத் தட்டிக் கழிக்க அல்லது தாவிச் செல்ல முயலுவதோ படுமோசமான மடமையே ஆகும். ஏனெனில் தொழிலாளி வர்க்கத்தின், விவசாயிகளின் மிகவும் பிற்பட்ட பிரிவினரையும் பெருந் திரளினரையும் பயிற்றுவித்து, போதமளித்து, அறிவொளிபெறச் செய்து, புது வாழ்வினுள் ஈர்த்திடுவதென்ற பாட்டாளி வர்க்க முன்னணிப் படைக்குரிய அந்தப் பணியைக் கண்டு அஞ்சுவதாகவே இதற்கு அர்த்தம். ஆனுல் குறுகிய பணித் துறைக்குரிய கண்ணேட்டமோ, தேர்ச்சித் துறைக்கும் தொழிற் சங்கவாதத்துக்குமான தப்பெண்ணங்களோ கொண்ட எந்தவொரு தொழிலாளியும் இல்லாத ஒரு காலம் வரும் வரை பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தைச் சாதிக்காமல் ஒத்திப் போடுவதானது இன்னும் கடுமையான தவருகிவிடும். பாட்டாளி வர்க்கத்தின் முன்னணிப் படை வெற்றிகரமாய் ஆட்சியதிகாரம் ஏற்பதற்கும், ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றும் போதும் பிற்பாடும் தொழிலாளி வர்க்கத்தையும் பாட்டாளி வர்க்கமல்லாத பிற உழைப்பாளி வெகுஜனங்களையும் சேர்ந்த போதிய அளவுக்கு விரிவான பகுதியோரின் ஆதரவைப் போதிய அளவு பெறுவதற்கும், அதன்பின் மேலும் மேலும் விரிவான உழைப்பாளி மக்கட் திரளினருக்குப் போதமளித்தும் பயிற்றுவித்தும் அவர்களை ஈர்த்துக் கொண்டும் தனது மேலாதிக்கத்தைப் பாதுகாத்து, உறுதியாக்கி, விரிவுபடுத்திக் கொள்வதற்கும்

முடியும்படியான நிலைமைகளையும் தருணத்தையும் பிழையின்றிக் கணக்கிட்டு நிர்ணயிப்பதில்தான் அரசியலின் கலையும் (கம்யூனிஸ்டு தனக்குள்ள கடமைகளைச் சரிவர புரிந்து கொள்வதும்) அடங்கியுள்ளன.

அது மட்டுமல்ல. ருஷ்யாவைக் காட்டிலும் அதிக அளவு முன்னேறிய நாடுகளில், தொழிற் சங்கங்களின் ஒரு வகைப் பிற்போக்குத்தனம் எங்களுடைய நாட்டைவிட மிகவும் கூடுதலான அளவில் வெளிப்பட்டிருக்கிறது, வெளிப்பட்டே ஆக வேண்டியிருந்தது. தொழிற் சங்கங்களின் குறுகிய தேர்ச்சித் துறை மனப்பான்மை, பணித் துறைத் தன்னலம், சந்தர்ப்பவாதம் ஆகியவை காரணமாய், எங்களது மென்ஷிவிக்குகள் தொழிற் சங்கங்களில் ஆதரவு பெற்றனர் (ஒரு சிலவற்றில் இன்னுங்கூட ஓரளவு ஆதரவு பெற்று வருகிறார்கள்). மேலைய நாடுகளின் மென்ஷிவிக்குகள் தொழிற் சங்கங்களில் மேலும் உறுதியான அடிப்படையைப் பெற்றிருக்கிறார்கள். எங்கள் நாட்டில் இருந்ததைவிட அங்கு பணித் துறைக் கண்ணோட்டமும் குறுகிய மனப்பான்மையும் தன்னலமுமிக்க, தடிப்பேறிய, பேராசை பிடித்த, ஏகாதிபத்திய மனப்போக்கு கொண்டதும் ஏகாதிபத்தியத்தால் லஞ்சங் கொடுத்துக் கெடுக்கப்பட்டதுமான குட்டிமுதலாளித்துவ ''தொழிலாளர் பிரபுக்குலமானது'' மிகவும் வலுவுள்ள பிரிவாக வளர்ச்சி பெற்றிருக்கிறது. இது மறுக்க முடியாததாகும். மேற்கு ஐரோப்பாவில் கோம்பர்ஸ்களுக்கும், ழுவோக்கள், ஹெண்டர்சன்கள், மெர்ஹெயிம்கள், லெகின்கள் முதலானோருக்கும் எதிரான போராட்டம், முற்றிலும் ஒருபடித்தான சமூக, அரசியல் ரகத்தவரான எங்களது மென்ஷிவிக்குகளுக்கு எதிரான போராட்டத்தைவிட மிகக் கடுமையானதாகும். இந்தப் போராட்டம் தயவு தாட்சண்யமின்றி நடத்தப்பட்டாக வேண்டும். நாங்கள் செய்தது போலவே, சந்தர்ப்பவாதத்தின், சமூக-தேசியவெறியின் கடைந்தெடுத்த தலைவர்கள் பூரணமாக முகமூடி கிழிக்கப்பட்டுத் தொழிற் சங்கங்களிலிருந்து விரட்டப்படும் நிலைக்கு இந்தப் போராட்டம் தயக்கமின்றி நடத்திச் செல்லப்பட்டாக வேண்டும். போராட்டம் குறிப்பிட்ட

கட்டத்தை வந்தடைவதற்கு முன்னால் அரசியல் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்ற முடியாது (கைப்பற்றுவதற்கான முயற்சியும் செய்யப்படலாகாது). இந்தக் ''குறிப்பிட்ட கட்டம்'' வெவ்வேறு நாடுகளிலும், வெவ்வேறு நிலைமைகளிலும் **வெவ்வேறானதாய்** இருக்கும். அந்தந்த நாட்டிலுள்ள சிந்தனை மிகுந்த, அனுபவம் வாய்ந்த, அறிவு சார்ந்த பாட்டாளி வர்க்கத் தலைவர்களால் மட்டுமே இதனைச் சரியாகக் கணக்கிட்டு நிர்ணயிக்க முடியும். (ருஷ்யாவில் 1917 அக்டோபர் 25 பாட்டாளி வர்க்கப் புரட்சிக்குச் சில நாட்களுக்குப் பிற்பாடு 1917 நவம்பரில் அரசியல் நிர்ணயச் சபைக்கு[29] நடைபெற்ற தேர்தல்கள் இந்தப் போராட்டம் கண்ட வெற்றிக்கு ஓர் உரைகல்லாக அமைந்தன. இத்தேர்தல்களில் மென்ஷிவிக்குகள் அடியோடு தோற்கடிக்கப்பட்டனர். அவர்களுக்குக் கிடைத்தது 7,00,000 வாக்குகள்தான்—டிரான்ஸ் காக்கேஷியாவின் வாக்குகளும் சேர்த்துக் கொள்ளப்பட்டால் 14,00,000 வாக்குகள்தான்; ஆனால் போல்ஷிவிக்குகளுக்குக் கிடைத்ததோ 90,00,000 வாக்குகள். **கம்யூனிஸ்டு அகிலம்,**[30] இதழ் 7-8ல் ''அரசியல் நிர்ணயச் சபைத் தேர்தல்களும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமும்'' என்னும் எனது கட்டுரையைப் பார்க்கவும்.)

தொழிலாளர் வெகுஜனத் திரளினரது பெயரில் தான், அவர்களை நம் பக்கத்துக்கு ஈர்த்துக் கொள்ளும் பொருட்டுதான், நாம் ''தொழிலாளர் பிரபுக்குலத்தை'' எதிர்த்துப் போராடுகிறோம். தொழிலாளி வர்க்கத்தை நம் பக்கத்துக்கு ஈர்த்துக் கொள்ளும் பொருட்டுதான் நாம் சந்தர்ப்பவாத, சமூக-தேசியவெறித் தலைவர்களை எதிர்த்துப் போராடுகிறோம். மிகவும் சர்வசாதாரணமான, கண்கூடான இந்த உண்மையை மறப்பது மடமையே ஆகும். ஆயினும் தொழிற் சங்க உச்சத் **தலைவர்கள்** பிற்போக்கு, எதிர்ப்புரட்சித் தன்மை கொண்டோராய் இருப்பதைக் **காரணமாகக் காட்டி,** தொழிற் சங்கங்களைத் துறந்துவிட்டு நாம் வெளியே வந்துவிட வேண்டும், அவற்றில் வேலை செய்ய மறுக்க வேண்டும், தொழிலாளர்களுடைய நிறுவன

ஒழுங்கமைப்புக்கான செயற்கையான புதிய வடிவங்களைத் தோற்றுவிக்க வேண்டும் என்னும் முடிவுக்கு வருகையில் ஜெர்மன் ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள் இதே மடமையைத்தான் வெளிப்படுத்துகிருர்கள்!! கம்யூனிஸ்டுகள் முதலாளித்துவ வர்க்கத்துக்கு ஆற்றக்கூடிய மிகப் பெருஞ் சேவையாகிவிடும் அளவுக்கு இது மன்னிக்க முடியாத மடமையாகும். சந்தர்ப்பவாத, சமூக-தேசியவெறி கொண்ட, காவுத்ஸ்கிவாதத் தொழிற் சங்கத் தலைவர்கள் எல்லோரையும் போலவே, எங்களது மென்ஷிவிக்குகளும் ''தொழிலாளி வர்க்க இயக்கத்திலுள்ள முதலாளித்துவ வர்க்கக் கைக்கூலிகளே''யன்றி வேறல்லர் (மென்ஷிவிக்குகளைப் பற்றி எப்பொழுதுமே நாங்கள் இவ்வாறுதான் கூறி வந்திருக்கிறேம்), அல்லது அமெரிக்காவில் டேனியல் தெலியோனைப் பின்பற்றுவோரின் அற்புதமான, நூற்றுக்கு நூறு உண்மையான தொடரில் சொல்வதெனில் ''முதலாளித்துவ வர்க்கத்தின் தொழிலாளர் துறை சேவகர்களே'' (labour lieutenants of the capitalist class) அன்றி வேறல்லர். பிற்போக்குத் தொழிற் சங்கங்களில் வேலை செய்ய மறுப்பதானது, தொழிலாளர்களில் போதிய அளவுக்கு வளர்ச்சி பெருத அல்லது பிற்பட்ட பகுதியோரைப் பிற்போக்குத் தலைவர்கள் அல்லது முதலாளித்துவ வர்க்கக் கைக்கூலிகள் அல்லது தொழிலாளர் பிரபுக்குலத்தோர் அல்லது ''முற்றிலும் முதலாளித்துவமயமாகிவிட்ட தொழிலாளர்கள்'' (பிரிட்டிஷ் தொழிலாளர்கள் குறித்து 1858ல் மார்க்சுக்கு எங்கெல்ஸ் எழுதிய கடிதத்தைப் பார்க்கவும்[31]) செல்வாக்கிலே விட்டு வைப்பதையே குறிக்கிறது.

கம்யூனிஸ்டுகள் பிற்போக்குத் தொழிற் சங்கங்களில் வேலை செய்யக் கூடாதென்னும் இந்த நகைக்கத்தக்கத் ''தத்துவம்'', ''வெகுஜனங்களை'' வயப்படுத்தும் பிரச்சினையை ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள் எவ்வளவு துச்சமாய் மதிக்கிருர்கள் என்பதையும், ''வெகுஜனங்களைப்'' பற்றிய கூப்பாட்டை எப்படி துஷ்பிரயோகம் செய்கிருர்கள் என்பதையும் மிகத் தெளிவாகப் புலப்படுத்துகிறது. ''வெகுஜனங்களுக்கு'' உதவி செய்வதற்கும், ''வெகுஜனங்

களின்'' நம்பிக்கையையும் ஆதரவையும் பெறுவதற்கும் தெரிந்து கொள்ள விரும்புவீர்களானால், நீங்கள் இன்னல்களையும் இந்தத் ''தலைவர்களால்'' ஏற்படும் தொல்லைகளையும் புரட்டுகளையும் அடக்குமுறையையும் கண்டு அஞ்சாமல் (சந்தர்ப்பவாதிகளும் சமூக-தேசியவெறியர்களுமான இவர்கள் மிகப் பெருவாரியான சந்தர்ப்பங்களில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ முதலாளித்துவ வர்க்கத்துடனும் போலீசுடனும் இணைப்பு கொண்டவர்களாவர்), நிச்சயம் **வெகுஜனங்கள் காணப்படும் இடங்களில் எல்லாம் வேலை செய்தாக வேண்டும்.** பாட்டாளி வர்க்க அல்லது அரைவாசிப் பாட்டாளி வர்க்க வெகுஜனங்கள் காணப்படும் நிலையங்களிலும் கழகங்களிலும் சங்கங்களிலும்—மிகவும் பிற்போக்கானவற்றிலுங்கூட—கிளர்ச்சியும் பிரசாரமும் முறையாகவும் விடாமுயற்சியோடும் இடையருமலும் பொறுமையோடும் செய்யும் பொருட்டு, நீங்கள் எந்தத் தியாகம் புரியவும், மிகப் பெரிய இடையூறுகளைச் சமாளிக்கவும் கூடியவர்களாக இருத்தல் வேண்டும். தொழிற் சங்கங்களும் தொழிலாளர் கூட்டுறவுகளும்தான் (பின்னவை சிற்சில சந்தர்ப்பங்களிலேனும்) வெகுஜனங்கள் இருக்ககூடிய நிறுவனங்கள். ஸ்வீடிஷ் பத்திரிகை Folkets Dagblad Politiken[32] இல் (1920 மார்ச் 10 இதழில்) எடுத்துரைக்கப்பட்டிருக்கும் புள்ளிகளின்படி பிரிட்டனில் தொழிற் சங்க உறுப்பினர் தொகை 1917 இறுதிக்கும், 1918 இறுதிக்கும் இடையில் 55,00,000விருந்து 66,00,000 ஆக அதிகரித்தது; 19 சதவீதமான பெருக்கமாகும் இது. 1919 முடிவின் வாக்கில் உறுப்பினர் தொகை 75,00,000 ஆக மதிப்பிடப்பட்டது. பிரான்சுக்கும் ஜெர்மனிக்குமான இந்தப் புள்ளிகள் என்னிடம் இல்லை என்றாலும், சிறிதும் மறுக்க முடியாத பொதுவாகத் தெரிந்த உண்மைகள், இந்நாடுகளிலும் தொழிற் சங்க உறுப்பினர் தொகை மிக வேகமாய் உயர்ந்திருப்பதை நிரூபிக்கின்றன.

இவ்வுண்மைகள், ஆயிரக் கணக்கான வேறு பல அறிகுறிகளால் ஊர்ஜிதம் செய்யப்படும் ஒன்றை—அதாவது

பாட்டாளி வர்க்க வெகுஜனங்களிடையே, ''அடித்தட்டுப்'' பகுதியோரிடையே, பிற்பட்ட பிரிவினரிடையே வர்க்க உணர்வும் நிறுவன ஒழுங்கமைப்பு வேண்டுமென்ற அவாவும் பெருகி வருகின்றன என்பதை—தெட்டத் தெளி வாக்குகின்றன. பிரிட்டனிலும் பிரான்சிலும் ஜெர்மனி யிலும் லட்சோபலட்சத் தொழிலாளர்கள், நிறுவன ஒழுங் கமைப்பு அறவே இல்லாத ஒரு நிலையிலிருந்து ஆரம்பப் படியான, அடிநிலையான, மிக எளிய, (இன்னமும் முத லாளித்துவ-ஜனநாயகத் தப்பெண்ணங்களில் மூழ்கி யுள்ளோர்) மிகச் சுலபமாய்ப் புரிந்து கொள்ளக் கூடிய நிறுவன வடிவத்துக்கு, அதாவது தொழிற் சங்கங்களுக்கு முதன்முதலாய் மாறி வந்து கொண்டிருக்கிறார்கள். இந் நிலையிலும் புரட்சிகரமான, ஆனால் யோசனை இல்லாத இடதுசாரி கம்யூனிஸ்டுகள் தொழிற்சங்கங்களில் வேலை செய்ய மறுத்துவிட்டு விலகி நின்று ''வெகுஜனங்கள்,'' ''வெகுஜனங்கள்!'' என்று கத்துகிறார்கள்; தொழிற் சங்கங்கள் ''பிற்போக்கானவை'' என்பதாக இதற்கு அவர் கள் காரணம் கூறுகிறார்கள்; முதலாளித்துவ-ஜனநாயகத் தப்பெண்ணங்களால் மாசுபடுத்தப்படாத, தேர்ச்சித் துறை அல்லது குறுகிய பணித் துறை மனப்பாங்கினருக் குரிய குற்றங் குறைகளால் களங்கப்படுத்தப்படாத, புத்தம் புதிய, அப்பழுக்கற்ற ''தொழிலாளர் சங்கத்தைக்'' கற்பனை செய்து கண்டுபிடிக்கிறார்கள்—இந்தச் சங்கம் பரந்து விரிந்த ஒரு நிறுவனமாக இருக்கும் (!) என்று சாதிக் கிறார்கள். ''சோவியத் அமைப்பையும் சர்வாதிகாரத்தை யும் ஏற்றுக் கொள்வதுதான்'' உறுப்பினராவதற்குரிய ஒரேயொரு (!) நிபந்தனையாக இருக்கும். (மேலே கொடுக்கப் பட்ட மேற்கோளைப் பார்க்கவும்.)

இதைவிட முட்டாள்தனமான ஒன்றை, ''இடதுசாரிப்'' புரட்சியாளர்களால் புரட்சிக்கு ஏற்படும் கேட்டைவிட பெரிய ஒன்றைக் கற்பனை செய்வதுகூட கடினம்! ஏன், ருஷ்யாவின், ஆன்டான்டின்[33] முதலாளித்துவ வர்க்கத்தின் மீது முன்பின் கண்டிராத வெற்றிகளை இரண்டரை ஆண்டுகளாய்ப் பெற்ற பின்னரும் இன்று, ருஷ்யாவில்

நாங்கள் ''சர்வாதிகாரத்தை ஏற்பதை'' தொழிற் சங்க உறுப்பினராவதற்குரிய ஒரு நிபந்தனையாக்குவோமாயின், முழு முட்டாளுக்குரிய செயல் புரிவோரே ஆவோம்; வெகு ஜனங்களிடையே எங்களுக்குள்ள செல்வாக்குக்குத் தீங்கிழைத்து மென்ஷிவிக்குகளுக்கு உதவி புரிவோரே ஆவோம். கம்யூனிஸ்டுகள் முன்னுள்ள பணி பிற்பட்ட பகுதியோரின் நம்பிக்கையைப் பெறுவதும், அவர்களுக்கிடையே வேலை செய்வதுமேயன்றி, செயற்கைத் தன்மை வாய்ந்த சிறுபிள்ளைத்தனமான ''இடதுசாரிக்'' கோஷங்களைக் கொண்டு அவர்களிடமிருந்து தம்மைப் பிரித்து விலக்கி வேலி கட்டிக்கொள்வதல்ல.

''கோட்பாடு வழிப்பட்ட'' ஜெர்மன் எதிர்த்தரப்பினரைப் போல (இத்தகைய ''கோட்பாடு வழிபாட்டிலிருந்து'' கடவுள் நம்மைக் காப்பாற்றுவாராக!), அல்லது அமெரிக்க உலக ஆலைத் தொழிலாளர் நிறுவனத்தின்[34] புரட்சியாளர்கள் சிலரைப் போல, பிற்போக்குத் தொழிற் சங்கங்களை விட்டு வெளியேற வேண்டுமென்று வாதாடி இவற்றில் வேலை செய்ய மறுக்கும் அந்த ''இடதுசாரிப்'' புரட்சியாளர்களுக்கு கோம்பர்ஸ்களும் ஹெண்டர்சன்களும் ழுவோக்களும் லெகின்களும் மிகுந்த நன்றி செலுத்துகிறார்கள் என்பதில் ஐயப்பாட்டுக்கு இடமில்லை. சந்தர்ப்பவாதத்தின் ''தலைவர்களான'' இந்த ஆட்கள், கம்யூனிஸ்டுகளைத் தொழிற்சங்கங்களில் நுழையவிடாமல் தடுப்பதற்கும், எல்லா வழிகளிலும் இவற்றிலிருந்து அவர்களை விலக்கி வெளியே தள்ளுவதற்கும், தொழிற் சங்கங்களில் அவர்களுடைய பணியை எவ்வளவு சங்கடமாக்க முடியுமோ அவ்வளவும் செய்வதற்கும், அவர்களை அவமானப்படுத்துவதற்கும், வேட்டையாடுவதற்கும், அடக்குமுறைக்கு உள்ளாக்குவதற்கும் முதலாளித்துவ சூழ்ச்சிகளின் ஒவ்வொரு உபாயத்தையும் கையாளுவார்கள், முதலாளித்துவ அரசாங்கங்கள், பாதிரிமார்கள், போலீசார், நீதி மன்றத்தார் ஆகிய அனைவரது உதவியையும் பயன்படுத்திக் கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. இவற்றுக்கு எல்லாம் சளைக்காமல் நாம் எதிர்த்து நிற்கும் திறனுடையோ

ராய் இருக்க வேண்டும்; எந்தத் தியாகமும் புரிய சித்தமாயிருக்க வேண்டும்; தேவை ஏற்பட்டால், பல்வேறு தந்திரங்களையும் உபாயங்களையும் சட்டவிரோத முறைகளையும் கையாளுவதற்குங்கூட, உண்மையைச் சொல்லாமலும், மறைத்தும் சமாளிப்பதற்குங்கூட தயாராயிருக்க வேண்டும்—எப்பாடு பட்டாகிலும் தொழிற் சங்கங்களில் புகுந்து, தொடர்ந்து அவற்றில் இருந்து, கம்யூனிஸ்டுப் பணியை அவற்றினுள்ளிருந்து நடத்திச் சென்றாக வேண்டும். ஜாரிசத்தில் 1905 வரையில், எங்களுக்குச் ''சட்ட பூர்வமான சந்தர்ப்பங்கள்'' எவையும் இருக்கவில்லை; ஆயினும் இரகசியப் போலீஸின் அதிகாரியான ஸுபாத்தவ் புரட்சியாளர்களைக் கண்ணி வைத்துப் பிடிக்கும் பொருட்டும், அவர்களை எதிர்த்துச் செயல்படும் பொருட்டும் கறுப்பு நூற்றுவர்[35] தொழிலாளர் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்த போதும், கழகங்களை நிறுவிய போதும் கட்சி உறுப்பினர்களை நாங்கள் இந்தக் கூட்டங்களுக்கும், இந்தக் கழகங்களினுள்ளும் அனுப்பினோம் (இவர்களில் ஒருவரான செயின்ட் பீட்டர்ஸ்பர்கின் சிறந்த ஆலைத் தொழிலாளர் தோழர் பாபுஷ்கின் என் நினைவில் இருக்கிறார்; ஜாரின் ஜெனரல்களது உத்தரவின் பேரில் இவர் 1906ல் சுட்டுக் கொல்லப்பட்டார்). இவர்கள் வெகுஜனங்களுடன் தொடர்புகள் நிறுவிக் கொண்டனர்; இவர்களால் தமது கிளர்ச்சியை நடத்திச் செல்ல முடிந்தது; ஸுபாத்தவ் ஆட்களது* செல்வாக்கிலிருந்து தொழிலாளர்களை விடுவிப்பதில் இவர்கள் வெற்றி பெற்றனர். ஆனால் ஆழமாக வேர்விட்டிருக்கும் சட்டவாத, அரசியலமைப்புச்

---

* கோம்பர்ஸ்களும் ஹெண்டர்சன்களும் ஜுவோக்களும் லெகின்களும் ஸுபாத்தவ்களேயன்றி வேறல்லர்; அவர்களது ஐரோப்பிய ஜோடனையிலும், மெருகிலும், கேடுகெட்ட கொள்கையைச் செயல்படுத்துவதில் அவர்கள் அனுசரிக்கும் நாகரிகமான, பண்பட்ட, ஜனநாயகப் பாணியில் அமைந்த சாமர்த்திய முறையிலும்தான் எங்களது ஸுபாத்தவிடமிருந்து வித்தியாசப் படுகிறார்கள்.

சட்டபூர்வ, முதலாளித்துவ-ஜனநாயகத் தப்பெண்ணங்களில் மூழ்கிக் கிடக்கும் மேற்கு ஐரோப்பாவில் இதனைச் சாதிப்பது மிகவும் கடினமென்பது உண்மையே. ஆயினும் இதனைச் செய்ய முடியும், செய்தே ஆக வேண்டும்— அதுவும் முறையாகவும் தொடர்ச்சியாகவும் செய்தாக வேண்டும்.

என்னுடைய கருத்துப்படி, மூன்றுவது அகிலத்தின் செயற் குழு, பிற்போக்குத் தொழிற் சங்கங்களில் வேலை செய்ய மறுப்பதானது, எப்படி விவேகமற்றது என்பதையும், பாட்டாளி வர்க்கப் புரட்சியின் இலட்சியத்துக்கு இதனுல் ஏற்படும் பெருங் கேட்டையும் விவரமாக விளக்கிக் கூறிப் பொதுவாக இக்கொள்கையையும், குறிப்பாக இந்தத் தவருன கொள்கையை ஆதரித்துள்ள—நேரடியாகவா அல்லது மறைமுகமாகவா, பகிரங்கமாகவா அல்லது இரகசியமாகவா, முழுமையாகவா அல்லது பகுதியாகவா என்பது குறித்துக் கருதத் தேவையில்லை—ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர்கள் சிலரது செயல்முறையையும் திட்டவட்டமாகக் கண்டனம் செய்வதுடன், கம்யூனிஸ்டு அகிலத்தின் அடுத்த காங்கிரசையும் இவற்றைக் கண்டனம் செய்யுமாறு அறைகூவல் விடுக்க வேண்டும். மூன்றுவது அகிலம் இரண்டாம் அகிலத்தின் போர்த்தந்திரத்திலிருந்து தன்னைத் துண்டித்துக் கொண்டு விட வேண்டும். சங்கடமான விவகாரங்களை அது தட்டிக் கழிக்கவோ, குறைத்துக் கூறி மெழுகவோ கூடாது; அதற்குப் பதில் அவற்றை நேர்முகமான முறையில் எடுத்துரைத்தாக வேண்டும். ''சுயேச்சையாளர்களை'' (ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சி) பொறுத்தவரை சுற்றி வளைக்காமல் முழு உண்மையும் நேருக்குநேர் எடுத்துரைக்கப் பட்டிருக்கிறது; இதே போல ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள் குறித்தும் சுற்றி வளைக்காமல் முழு உண்மையும் நேருக்குநேர் எடுத்துரைக்கப்பட்டாக வேண்டும்.

## 7

### முதலாளித்துவ நாடாளுமன்றங்களில் பங்கெடுத்துக் கொள்ளலாமா?

மகா அலட்சியமாய், கிஞ்சிற்றும் பொறுப்புணர்வின்றி, ஜெர்மன் ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள் இக்கேள்விக்கு எதிர்மறையில் பதிலளிக்கிறார்கள். அவர்களுடைய வாதங்கள் யாவை? மேலே எடுத்துரைக்கப்பட்ட மேற்கோளில் பார்த்தோம்:

''... வரலாற்று வழியிலும் அரசியல் வழியிலும் காலாவதியாகிவிட்ட நாடாளுமன்றப் போராட்ட வடிவங்களுக்குச் சரிந்து செல்லும் எவ்வகையான பின்னடைவையும்... தீர்மானமாய் நிராகரித்தே ஆக வேண்டும்....''

நகைக்கத்தக்க ஆடம்பரத்துடன் இது கூறப்படுகிறது. கண்கூடாகவே தவறானது இது. நாடாளுமன்ற முறைக்குச் ''சரியும் பின்னடைவு'' என்கிறார்கள்! ஜெர்மனியில் ஏற்கெனவே சோவியத் குடியரசு ஒன்று உதித்துவிட்டதா, என்ன? அப்படி ஒன்றும் தெரியவில்லையே! ''சரியும் பின்னடைவு'' என்பதாகப் பேசுகிறார்களே, எப்படி அது? பொருளற்றச் சொல்லடுக்கேயன்றி வேறு என்ன?

நாடாளுமன்ற முறை ''வரலாற்று வழியில் காலாவதியாகிவிட்ட'' ஒன்றுதான். பிரசார அர்த்தத்தில் இது மெய்தான். ஆனால் நடைமுறையில் அதனை வெற்றி கொள்ளும் நிலையை வந்தடைய இன்னும் நெடுந் தொலைவுள்ளதென்பது யாவரும் அறிந்ததே. முதலாளித்துவத்தையும் ''வரலாற்று வழியில் காலாவதியாகி விட்ட'' ஒன்றாக மிகப் பல பத்தாண்டுகளுக்கு முன்பே, முழு நியாயத்துடன் அறிவித்திருக்கலாம். ஆயினும் அது, முதலாளித்துவத்தின் அடிப்படைமீது மிக நீண்ட, மிகவும் விடாப்பிடியான ஒரு போராட்டத்துக்கான அவசியத்தை நீக்கி விடவில்லையே. நாடாளுமன்ற முறை உலக வரலாற்றின் கண்ணோட்டத்தில் ''வரலாற்று வழியில் காலாவதியானது தான்''; அதாவது முதலாளித்துவப் நாடாளுமன்ற

முறையின் சகாப்தம் முடிவுற்றுவிட்டதும், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் சகாப்தம் தொடங்கிவிட்டதும் மெய்தான். இது மறுக்க முடியாததே. ஆனால் உலக வரலாறு பல பத்தாண்டுக் கணக்கில் அளக்கப்படும் ஒன்று; உலக வரலாற்றின் அளவுகோலைக் கொண்டு அளக்கையில், பத்து அல்லது இருபது ஆண்டுகள் முன்னதாகவோ பின்ன தாகவோ கொள்வதால் மாறுபாடு ஏற்பட்டுவிடுவதில்லை; உலக வரலாற்றின் கண்ணோட்டத்தில் இது உத்தேசமாகக் கூட மதிப்பிட முடியாத ஓர் அற்ப விவகாரம். ஆனால் உலக வரலாற்றின் இந்த அளவுகோலை அன்றாட நடைமுறை அரசியலில் பிரயோகிப்பது அப்பட்டமான தத்துவார்த்தப் பிழையாகிவிடுமே.

நாடாளுமன்ற முறை ''அரசியல் வழியில் காலாவதி யாகி விட்டதா''? இது முற்றிலும் வேறொரு விவகாரம்; இது உண்மையானல், ''இடதுசாரிகளின்'' நிலை வலுமிக்கது தான். ஆனால் துருவிப் பரிசீலிக்கும் பகுத்தாய்வினால் நிரூபிக்கப்பட வேண்டிய ஒன்று இது. ''இடதுசாரிகளுக்கு'' இந்த விவகாரத்தை எப்படி அணுகுவது என்பது கூட தெரியவில்லை. கம்யூனிஸ்டு அகிலத்தின் ஆம்ஸ்டர்டாமிலுள்ள இடைக்காலக் குழுவின் செய்தி வெளியீடு (*Bulletin of the Provisional Bureau in Amsterdam of the Communist International, February 1920*), இதழ் 1ல் வெளிவந்த ''நாடாளு மன்ற முறை பற்றிய விரிவுரை'' டச்சு-இடதுசாரி, அல்லது இடதுசாரி-டச்சு முயற்சிகளை வெளியிடுகிறது என்பது தெளிவு — இதிலுள்ள பகுத்தாய்வும், அடியில் நாம் காணப் போவது போல, படுமட்டமாகவே இருக்கிறது;

முதலாவதாக, ரோசா லுக்சம்பர்க், கார்ல் லீப்க் னெஹ்ட் போன்ற சிறந்த அரசியல் தலைவர்களின் கருத் துக்கு விரோதமாய் ஜெர்மன் ''இடதுசாரிகள்'', நாடாளு மன்ற முறை ''அரசியல் வழியில் காலாவதியாகிவிட்டது'' என்று 1919 ஜனவரியிலேயே கருதியது நமக்குத் தெரிந் ததே. ''இடதுசாரிகளின்'' இந்தக் கருத்து தவறானது என் பதும் நாம் அறிந்ததே. நாடாளுமன்ற முறை ''அரசியல் வழியில் காலாவதியாகிவிட்டது'' என்னும் நிர்ணயிப்பை

ஒரே அடியில் ஒழித்திட இந்த ஒரு உண்மையே போதும். அக்காலத்தில் சர்ச்சைக்கு இடமில்லாததாய் இருந்த அவர்களது தவறு, இனி தவறல்ல என்றானது எப்படி என்பதை நிரூபிக்க வேண்டிய பொறுப்பு இந்த ''இடதுசாரிகளுடையது'' ஆகும். இதை நிரூபிக்க அவர்கள் துளிக்கூட சான்று அளிக்கவில்லை, அளிக்கவும் முடியாது. ஓர் அரசியல் கட்சி தன்னுடைய தவறுகள் குறித்து அனுசரிக்கும் போக்கு, அக்கட்சி எந்த அளவுக்குப் பொறுப்புணர்ச்சி கொண்டுள்ளது என்பதையும், அதன் வர்க்கத்துக்கும் உழைப்பாளி வெகுஜனங்களுக்கும் அதற்குள்ள கடமைகளை நடைமுறையில் எந்த அளவுக்கு அது நிறைவேற்றுகிறது என்பதையும் மதிப்பிட்டு முடிவு செய்வதற்கான மிக முக்கியமான, நம்பகமான வழிகளில் ஒன்றாகும். தவறை ஒளிவுமறைவின்றி ஒப்புக் கொள்ளுதல், அத்தவறுக்குரிய காரணங்களை நிச்சயித்துக் கொள்ளுதல், அதனை நோக்கி இட்டுச் சென்ற நிலைமைகளைப் பகுத்தாய்தல், அதைச் சரிசெய்வதற்குரிய வழிகளை ஆராய்ந்தறிந்து வகுத்துக் கொள்ளுதல் — இவையே பொறுப்புணர்ச்சி கொண்ட ஒரு கட்சிக்குரிய அடையாளம்; இவ்வாறுதான் அது தனது கடமைகளைச் செய்து முடிக்க வேண்டும்; இவ்வாறுதான் அது தனது வர்க்கத்துக்கும் பிறகு வெகுஜனங்களுக்கும் போதமளித்துப் பயிற்றுவிக்க வேண்டும். ஜெர்மனியிலும் (ஹாலந்திலும்) உள்ள ''இடதுசாரிகள்'' இந்தக் கடமையை நிறைவேற்றவும், கண்கூடான தமது தவறை ஆராய்வதில் முக்கிய கருத்தும் கவனமும் செலுத்தவும் தவறியதன் மூலம், தாம் ஒரு சிறு குழுவே அன்றி ஒரு வர்க்கத்தின் கட்சி அல்ல என்பதையும், அறிவுத் துறையினரையும் அறிவுத்துறைவாதத்தின் மோசமான இயல்புகளைக் காப்பியடிக்கும் ஒருசில தொழிலாளர்களையும் கொண்ட சிறு குழுவேயன்றி வெகுஜனங்களது கட்சி அல்ல என்பதையும் நிரூபித்துக் கொண்டு விட்டனர்.

இரண்டாவதாக, ஏற்கெனவே நாம் விவரமாய் மேற்கோள் கூறிய ஃபிராங்ஃபுர்ட் ''இடதுசாரிக்'' குழுவின் அதே பிரசுரத்தில் நாம் படிப்பதாவது:

''... இன்னும் மையத்தை (கத்தோலிக்க 'மையக்' கட்சி) பின்பற்றும் லட்சக்கணக்கான தொழிலாளர்கள் எதிர்ப்புரட்சித்தன்மை வாய்ந்தோரே ஆவர். கிராமப் பாட்டாளி வர்க்கத்தினர் எண்ணற்ற எதிர்ப்புரட்சித் துருப்புகளாகி விடுகின்றனர்'' (மேலே கூறிய பிரசுரத்தின் 3ஆம் பக்கம்).

இந்த முடிவு வரையறையற்றதாகவும் மிகைப்படக் கூறுவதாகவும் உள்ளதென்பதை யாவும் புலப்படுத்து கின்றன. ஆனால் இங்கு எடுத்துரைக்கப்படும் அடிப்படை உண்மை மறுக்க முடியாததாகும். இதனை ''இடதுசாரி கள்'' ஏற்றுக்கொள்வதானது அவர்களுடைய தவறுக்குரிய தெளிவான சான்றாகி விடுகிறது. பாட்டாளி வர்க்கத் தினரில் ''லட்சக் கணக்கானோரும்'' ''எண்ணற்றோரும்'' இன்னமும் பொதுவாக நாடாளுமன்ற முறையை ஆதரிப் பதோடன்றி, அப்பட்டமான ''எதிர்ப்புரட்சித்தன்மை வாய்ந்தோராகவும்'' இருக்கையில், ''நாடாளுமன்ற முறை அரசியல் வழியில் காலாவதியாகிவிட்டதென்று'' கூறுவது எப்படி!? ஜெர்மனியில் நாடாளுமன்ற முறை இன்னமும் அரசியல் வழியில் காலாவதி ஆகிவிடவில்லை என்பது தெளிவு. ஜெர்மனியிலுள்ள ''இடதுசாரிகள்'' தமது விருப் பத்தை, தமது அரசியல்-சித்தாந்தப் போக்கை எதார்த்த உண்மையாகத் தவறாய் நினைத்துக் கொண்டு விட்டனர் என்பது விளங்குகிறது. புரட்சியாளர்கள் செய்யக் கூடிய மிகவும் அபாயகரமான தவறாகும் இது. ருஷ்யாவில் மிகவும் நீண்ட நெடுங்காலத்துக்கு மிகப் பல்வேறு வடிவங் களில் ஜாரிசத்தின் மிகக் கொடிய காட்டுமிராண்டித்தன மான ஒடுக்குமுறையானது பல்வேறு வகைப்பட்ட புரட் சியாளர்களையும் தோற்றுவித்தது; இப்புரட்சியாளர்கள் வியத்தகு பற்றுறுதியும் ஆர்வமும் வீரமும் நெஞ்சுறுதியும் வெளிப்படுத்தினர். ருஷ்யாவில் நாங்கள் புரட்சியாளர் களுடைய இந்தத் தவறை மிகவும் அருகாமையிலிருந்து கவனித்திருக்கிறோம். மிக உன்னிப்பாய் இதனை நாங்கள் ஆராய்ந்து, இதைப்பற்றி நேரடியாகத் தெரிந்து வைத்திருக்கிறோம். எனவேதான், ஏனையோரிடத்தும் இது

எழும்போது எங்களால் மிகத் தெளிவாய் இதனைப் பார்க்க முடிகிறது. ஜெர்மனியிலுள்ள கம்யூனிஸ்டுகளுக்கு நாடாளு மன்ற முறை ''அரசியல் வழியில் காலாவதியானது தான்''; ஆனால்—இதுவே இங்குள்ள முக்கிய விஷயம்— நமக்குக் காலாவதியாகிவிட்டதால் அது வர்க்கத்துக்கும், வெகுஜனங்களுக்கும் காலாவதியாகிவிட்டதாகும் எனக் கருதக் கூடாது. ''இடதுசாரிகளுக்கு'' ஒரு வர்க்கத்தின் கட்சியாக, வெகுஜனங்களின் கட்சியாகச் சிந்தனை செய்யத் தெரியவில்லை, அவ்வாறு செயல்படத் தெரியவில்லை என்பதையே திரும்பவும் இங்கு காண்கிறோம். வெகு ஜனங்களுடைய நிலைக்கு, வர்க்கத்தின் பிற்பட்ட பகுதியின் நிலைக்கு, நீங்கள் சரிந்துவிடக்கூடாது. அதில் சர்ச்சைக்கு இடமில்லை. அவர்களுக்குக் கசப்பான உண்மையைச் சொல்லத்தான் வேண்டும். அவர்களுடைய முதலாளித்துவ-ஜனநாயக, நாடாளுமன்றவாதத் தப்பெண்ணங்களை, அவை தப்பெண்ணங்கள் என்று சுட்டிக் காட்ட வேண்டியதுதான் உங்களுடைய கடமை. ஆனால் அதேபோதில் (வர்க்கத்தின் கம்யூனிஸ்டு முன்னணிப் படை மட்டுமின்றி) வர்க்கம் அனைத்தின், (உழைப்பாளி மக்களின் முன்னேறிய பகுதி யோர் மட்டுமின்றி) உழைப்பாளி மக்கள் அனைவரின் வர்க்க உணர்வு, தயார் நிலை இவற்றின் எதார்த்த நிலவரத்தை நீங்கள் நிதானமாய்க் கவனித்து மதிப்பிட்டாக வேண்டும்.

ஆலைத் தொழிலாளர்களில் ''லட்சக் கணக்கானோரும்'', ''எண்ணற்றோரும்'' வேண்டாம், ஓரளவு பெரிதான சிறு பான்மையினர் மட்டும்தான் கத்தோலிக்கப் பாதிரிமார் களிடம் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்றாலுங்கூட— கிராமாந்தரத் தொழிலாளர்களிலும் இதேபோன்ற சிறு பான்மையினர் மட்டும்தான் நிலப்பிரபுக்களையும் பணக் கார விவசாயிகளையும் (Grossbauern) பின்பற்றுகிறார்கள் என் றாலுங்கூட—ஜெர்மனியில் நாடாளுமன்ற முறை அரசியல் வழியில் இன்னமும் காலாவதியாகிவிடவில்லை என்பதையே, புரட்சிகரப் பாட்டாளி வர்க்கக் கட்சி அதன் சொந்த வர்க்கத் தின் பிற்பட்ட பகுதியோரைப் போதம் பெறச் செய்யும்

பொருட்டும், அடக்கி ஒடுக்கப்படும், வளர்ச்சியில்லாத, அறியாமையில் ஆழ்ந்த கிராமாந்தர வெகுஜனங்களைப் போதம் பெறச் செய்து அறிவொளி தரும் பொருட்டும், நாடாளுமன்றத் தேர்தல்களிலும் நாடாளுமன்ற அரங்கில் நடைபெறும் போராட்டத்திலும் பங்கெடுத்துக் கொள்வது இக்கட்சியின் கடமையாகும் என்பதையே, இது சந்தேகத்துக்கு இடமின்றி குறிப்பிடுகிறது. முதலாளித்துவ நாடாளுமன்றங்களையும் இதர வகையான பிற்போக்கு நிறுவனங்கள் அனைத்தையும் அகற்றிடும் பலம் உங்களிடம் இல்லாத வரை, அவற்றில் நீங்கள் வேலை செய்தே ஆகவேண்டும்; ஏனெனில் பாதிரிமார்களால் ஏமாற்றப்பட்டும், கிராம வாழ்க்கை முறையின் பிற்பட்ட நிலைமைகளால் முடக்கப்பட்டும் வரும் தொழிலாளர்களை இவற்றில்தான் இன்னமும் நீங்கள் காண்பீர்கள். இவ்வாறு வேலை செய்யாவிடில், நீங்கள் வாய்வீச்சடிப்பதைத் தவிர வேறு எதற்கும் உதவாதோராய் மாறிவிடும் அபாயம் ஏற்படும்.

மூன்ருவதாக, ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள் போல்ஷிவிக்குகளாகிய எங்களைப் புகழ்ந்து நிறையவே பேசுகிருர்கள். எங்களைப் புகழ்வதைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டு, போல்ஷிவிக்குகளுடைய போர்த்தந்திரத்தை மேலும் நன்கு தெரிந்து கொள்ள முயலுங்கள் என்பதாக அவர்களுக்குச் சொல்ல வேண்டுமென்று சில நேரங்களில் தோன்றுகிறது. ருஷ்ய முதலாளித்துவ நாடாளுமன்றமான அரசியல் நிர்ணய சபையின் தேர்தல்களில், 1917 செப்டம்பர்-நவம்பரில், நாங்கள் பங்கெடுத்துக் கொண்டோம். எங்களுடைய போர்த்தந்திரம் சரியா, தவரு? சரியல்ல என்ருல், இதனைத் தெளிவாக எடுத்துரைத்து நிரூபிக்க வேண்டும்; சர்வதேசக் கம்யூனிசத்தின் பிழையற்ற போர்த்தந்திரத்தை வகுத்து உருவாக்குவதற்கு இது அவசியமாகும். அது சரியானதே என்ருல், இதிலிருந்து சில முடிவுகளைக் கிரகித்துக் கொண்டாக வேண்டும். ருஷ்யாவின் நிலைமைகளும் மேற்கு ஐரோப்பாவின் நிலைமைகளும் ஒன்றெனக் கொள்ளலாகாது என்பது உண்மையே. ஆனுல் ''நாடாளுமன்ற முறை அரசியல் வழியில் காலாவதியாகிவிட்டது''

என்ற நிர்ணயிப்பின் பொருள் பற்றிய இந்தக் குறிப்பிட்ட பிரச்சினையைப் பொறுத்தவரை, எங்களுடைய அனுபவத்தைத் தக்கபடி கணக்கில் எடுத்துக் கொண்டாக வேண்டும். ஏனெனில் ஸ்தூலமான அனுபவம் கணக்கில் எடுக்கப்பட்டாலொழிய இது போன்ற நிர்ணயிப்புகள் பொருளற்ற வெற்றுச் சொல்லடுக்குகளாக எளிதில் மாறிவிடும். 1917 செப்டம்பர்-நவம்பரில், நாடாளுமன்ற முறை ருஷ்யாவில் அரசியல் வழியில் காலாவதியாகிவிட்டதாகக் கருத ருஷ்ய போல்ஷிவிக்குகளான எங்களுக்கு மேலையக் கம்யூனிஸ்டுகள் யாரையும்விட அதிக அளவு நியாயம் இருக்கவில்லையா? இருந்ததென்பதில் ஐயத்துக்கு இடமில்லை. இங்கு எழும் கேள்வி முதலாளித்துவ நாடாளுமன்றங்கள் அதிக காலம் இருந்துள்ளனவா அல்லது சிறிது காலமாய்த்தான் உள்ளனவா என்பதல்ல; பெருந் திரளான உழைப்பாளி மக்கள் சோவியத் அமைப்பை ஏற்றுக் கொள்ளவும், முதலாளித்துவ-ஜனநாயக நாடாளுமன்றத்தைக் கலைக்கவும் (அல்லது அது கலைக்கப்பட அனுமதிக்கவும்) எந்த அளவுக்கு (சித்தாந்த வழியிலும் அரசியல் வழியிலும் நடைமுறையிலும்) தயாராய் இருக்கிறார்கள் என்பதே இங்கு எழும் கேள்வி. 1917 செப்டம்பர்-நவம்பரில் ருஷ்யாவில் நகரத் தொழிலாளி வர்க்கமும் படைவீரர்களும் விவசாயிகளும், விசேஷ நிலைமைகள் பலவும் காரணமாய், சோவியத் அமைப்பை ஏற்றுக்கொள்ளவும், முதலாளித்துவ நாடாளுமன்றங்களிலே மிகவும் ஜனநாயகமானதைக் கலைத்திடவும், மிகவும் சிறப்பான அளவுக்குத் தயார் நிலையில் இருந்தனர் என்பது கிஞ்சித்தும் மறுக்க முடியாத, நூற்றுக்கு நூறு நிலைநாட்டப்பெற்ற வரலாற்று உண்மையாகும். இருந்தபோதிலும் போல்ஷிவிக்குகள் அரசியல் நிர்ணய சபையைப் பகிஷ்காரம் செய்யவில்லை; அதற்குப் பதில் பாட்டாளி வர்க்கம் அரசியல் ஆட்சியதிகாரம் வென்று கொள்வதற்கு முன்பும் **பிற்பாடும்** தேர்தல்களில் பங்கெடுத்துக் கொண்டனர். ருஷ்யாவில் அரசியல் நிர்ணய சபையின் தேர்தல் முடிவுகளை விவரமாகப் பகுத்தாயும் மேற்கூறிய கட்டுரையில், இந்தத் தேர்தல்கள் மதிப்பிடற்

கரிய (பாட்டாளி வர்க்கத்துக்கு மிகமிகப் பயனுள்ள) அரசியல் பலன்களை அளித்தன என்பது என்னுல் நிரூபிக்கப் பட்டிருக்கிறதென நான் திடமாக நம்புகிறேன்.

இதிலிருந்து பெறப்படும் முடிவு சிறிதளவும் மறுக்க முடியாததாகும்: சோவியத் குடியரசின் வெற்றிக்குச் சில வாரங்களே முன்னதாகவும், இந்த வெற்றிக்குப் பிற்பாடுங்கூட, முதலாளித்துவ-ஜனநாயக நாடாளுமன்றம் ஒன்றில் பங்கெடுத்துக் கொள்வதானது புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்குத் தீங்கிழைப்பதற்குப் பதிலாய், இது போன்ற நாடாளுமன்றங்கள் கலைக்கப்பட வேண்டியது எப்படி அவசியமென்பதைப் பிற்பட்ட நிலையிலுள்ள வெகு ஜனப் பகுதியோருக்கு நிரூபிப்பதற்கு நடைமுறையில் உதவுகிறது என்பதும், இந்நாடாளுமன்றங்கள் வெற்றிகர மாய்க் கலைக்கப்படுவதற்கு வகை செய்கிறது என்பதும், முதலாளித்துவ நாடாளுமன்ற முறையை ''அரசியல் வழியில் காலாவதியாக்குவதற்குத்'' துணை புரிகிறது என்பதும் மெய்ப்பிக்கப் பட்டுள்ளன. இந்த அனுபவத்தை உதாசீனம் செய்துவிட்டு, அதே நேரத்தில் கம்யூனிஸ்டு அகிலத்துடன் — தனது போர்த்தந்திரத்தைச் சர்வதேசரீதியில் (குறு கலான, அல்லது தனிப்பட்டதான எந்தவொரு தேசத்துக்கு மான போர்த்தந்திரமாயிராது, சர்வதேசப் போர்த்தந் திரமாய்) வகுத்துக் கொள்ள வேண்டிய கம்யூனிஸ்டு அகிலத்துடன்—இணைப்புரிமை கொண்டாடுவதானது மிகக் கொடுந் தவறிழைப்பதாகவும், சர்வதேசியத்தைச் சொல்ல ளவில் ஏற்றுக் கொண்டு செயலில் கைவிடுவதாகவுமே அமைகிறது.

நாடாளுமன்றங்களில் பங்கு கொள்ளாதிருப்பதற்கு ஆதரவான ''டச்சு-இடதுசாரி'' வாதங்களை இனிப் பரிசீலனை செய்வோம். மேற்கூறிய ''டச்சு'' விரிவுரைகளில் மிகவும் முக்கியமானதான 4 ஆவது விரிவுரையின் வாசகம் வரு மாறு:

''முதலாளித்துவப் பொருளுற்பத்தி அமைப்பு முறிந்து போய், சமுதாயம் புரட்சிக்குரிய நிலையில் இருக்கையில்,

நாடாளுமன்றச் செயலானது வெகுஜனங்களது நேரடியான செயலுடன் ஒப்பிடும்போது படிப்படியாக முக்கியத்துவம் இழந்துவிடுகிறது. இந்நிலைமைகளில் நாடாளுமன்றம் எதிர்ப்புரட்சியின் மையமாகவும் செயலுறுப்பாகவும் ஆகிவிடும் போது, மறுபுறத்தில் தொழிலாளி வர்க்கம் சோவியத்துகளைத் தனது ஆட்சியதிகாரத்துக்கான கருவிகளாக உருவாக்கிக் கொள்ளும்போது, நாடாளுமன்றச் செயலில் பங்கு கொள்வதை முற்றுகவும் முழுவதாகவும் கைவிடுவது அவசியமாகவும்கூட ஆகிவிடலாம்.''

முதலாவது வாக்கியம் தவறென்பது தெளிவாக விளங்குகிறது. ஏனெனில் வெகுஜனங்களது செயல் — உதாரணமாய் ஒரு பெரிய வேலைநிறுத்தம்—புரட்சியின்போதோ, புரட்சிகர நிலையிலோ மட்டுமின்றி, எல்லாக் காலங்களிலுமே நாடாளுமன்றச் செயற்பாட்டைவிட மிகவும் முக்கியமானதாகும். வரலாற்று வழியிலும் அரசியல் வழியிலும் தவறுன, ஏற்கப்பட முடியாத, அபத்தமான இந்த வாதம், சட்டபூர்வமான போராட்டத்தையும் சட்ட விரோதமான போராட்டத்தையும் இணைத்திடுவதன் முக்கியத்துவம் குறித்த பொதுவான ஐரோப்பிய அனுபவத்தையும் (1848, 1870 ஆம் ஆண்டுப் புரட்சிகளுக்கு முந்திய பிரெஞ்சு அனுபவம், 1878-90 ஆம் ஆண்டுகளில் ஜெர்மன் அனுபவம் முதலியவை) ருஷ்ய அனுபவத்தையும் (மேலே பார்க்கவும்) இவ்வாசிரியர்கள் அறவே உதாசீனம் செய்கிருர்கள் என்பதைத்தான் மிகத் தெளிவாகக் காட்டுகிறது. இப்பிரச்சினை, பொதுவாகவும் குறிப்பாகவும் அளவுகடந்த முக்கியத்துவமுடையதாகும். ஏனெனில் நாகரிக வளர்ச்சியுடைய முன்னேறிய நாடுகள் யாவற்றிலும் இது போல இணைத்திடுதல் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் கட்சிக்கு மேலும் மேலும் அவசியமாகிவிடும் காலம் — ஏற்கெனவே ஓரளவுக்கு இது அவசியமாகி விட்டதென்றும் கூறலாம் — விரைவாக நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. பாட்டாளி வர்க்கத்துக்கும், முதலாளித்துவ வர்க்கத்துக்கும் இடையிலான உள்நாட்டுப் போர் முதிர்ச்சியடைந்து நெருங்கி வர இருப்பதாலும், சட்ட முறையைத் துச்சமாக மதித்து எல்லா வழிகளிலும் அதனை

மீறிடும் குடியரசு அரசாங்கங்களும் பொதுவாக முதலாளித்துவ அரசாங்கங்களும் (அமெரிக்கா இதற்கு ஓர் உதாரணமாய் விளங்குகிறது) கம்யூனிஸ்டுகள்மீது வெறித்தனமான அடக்குமுறையை ஏவிவிடுவதாலும் இன்ன பிறவற்ருலும் இந்நிலைமை ஏற்பட்டு வருகிறது. மிகவும் முக்கியமான இந்தப் பிரச்சினையை டச்சு-இடதுசாரிகளும், பொதுவாக எல்லா இடதுசாரிகளும் உணர முற்றிலும் தவறி விட்டனர்.

இரண்டாவது வாக்கியம், முதலாவதாக வரலாற்று வழியில் தவருனது. போல்ஷிவிக்குகளான நாங்கள் படுமோசமான எதிர்ப்புரட்சி நாடாளுமன்றங்களில் பங்கெடுத்துக் கொண்டோம். இவ்வாறு பங்கு கொண்டதானது, ருஷ்யாவில் முதலாவது முதலாளித்துவப் புரட்சிக்கு (1905) பிறகு, இரண்டாவது முதலாளித்துவப் புரட்சிக்கும் (பிப்ரவரி 1917), பிற்பாடு சோஷலிசப் புரட்சிக்கும் (அக்டோபர் 1917) பாதையைச் செப்பனிடுவதற்குப் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கக் கட்சிக்குப் பயனுள்ளதாக இருந்ததுடன்கூட, அத்தியாவசியமாகவும் இருந்ததென்பதை அனுபவம் தெளிவுபடுத்தியிருக்கிறது. இரண்டாவதாக, இவ்வாக்கியம் வியக்கத்தக்கவாறு முன்னுக்குப்பின் முரணுயிருக்கிறது. நாடாளுமன்றம் எதிர்ப்புரட்சியின் செயலுறுப்பாகவும் ''மையமாகவும்'' ஆகிவிடுமாஞல் (உண்மையில் அது ''மையமாக'' இருந்ததே இல்லை, எந்நாளும் இருக்கவும் முடியாது—ஆனல் இது வேறு விவகாரம்), அதேபோதில் தொழிலாளர்கள் தமது ஆட்சியதிகாரத்தின் கருவிகளை சோவியத்துகளின் வடிவில் உருவாக்கிக் கொள்வார்களாஞல், பிறகு நாடாளுமன்றத்துக்கு எதிரான சோவியத்துகளின் போராட்டத்துக்கு, சோவியத்துகளால் நாடாளுமன்றம் கலைக்கப்படுவதற்குத் தொழிலாளர்கள் சித்தாந்த வழியிலும் அரசியல் வழியிலும் செயல் நுட்ப வழியிலும் தயார் செய்ய வேண்டுமென்பதே இதிலிருந்து பெறப்படும் முடிவு. ஆனல் எதிர்ப்புரட்சி நாடாளுமன்றத்தின் உள்ளே சோவியத் எதிர்த்தரப்பு ஒன்று இருப்பதானது இந்தக் கலைப்புக்கு இடையூருகிவிடுமென்ருே,

அனுசரணையாக இருக்காதென்றே இதிலிருந்து எவ்வகையிலும் பெறப்படவில்லை. தெனீக்கினுக்கும் கல்ச்சாக்குக்கும் எதிரான எங்களது வெற்றிகரமான போராட்டத்தின் போது, அவர்களுடைய முகாமில் இருந்த சோவியத், பாட்டாளி வர்க்க எதிர்த்தரப்பு எங்களது வெற்றிகளுக்குப் பயனற்றதாயிருக்க நாங்கள் காணவில்லையே; கலைக்கப்படும் தருவாயிலிருந்த எதிர்ப்புரட்சி அரசியல் நிர்ணய சபையினுள் முரணற்ற போல்ஷிவிக் சோவியத் எதிர்த்தரப்பும், மற்றும் முரணுடைய இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் சோவியத் எதிர்த்தரப்பு ஒன்றும் இருந்ததானது, 1918 ஜனவரி 5ல் இந்த அரசியல் நிர்ணய சபை கலைக்கப்படுவதற்குத் தடங்கலாகிவிடவில்லை, அதற்குப் பதில் அனுகூலமாகவே இருந்தது என்பதை நாம் நன்கு அறிவோம். இந்த விரிவுரைகளின் ஆசிரியர்கள் சிந்தனையைக் குழப்படி செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள். எல்லாப் புரட்சிகளின் அனுபவத்தை இல்லாவிட்டாலும், மிகப் பல புரட்சிகளின் அனுபவத்தை இவர்கள் மறந்துவிட்டனர். புரட்சியின் போது, பிற்போக்கு நாடாளுமன்றத்துக்கு வெளியே நடைபெறும் வெகுஜன நடவடிக்கைகள், நாடாளுமன்றத்தினுள் செயல்படும் புரட்சி அனுதாபங் கொண்ட (நேரடியாகப் புரட்சியை ஆதரிப்பதாய் இருப்பின் இன்னும் நல்லதே) ஓர் எதிர்த்தரப்புடன் இணைக்கப் படுவதானது பெரும் பயன் தரத் தக்கதென்பதே இப் புரட்சிகளின் அனுபவமாகும். டச்சு ''இடதுசாரிகளும்'' பொதுவாகவே எல்லா ''இடதுசாரிகளும்'' மெய்யான புரட்சி ஒன்றில் ஒருபோதும் பங்குகொள்ளாத, அல்லது புரட்சிகளின் வரலாறு குறித்து சிந்தனையே செய்திராத, அல்லது பிற்போக்கு அமைப்பு ஒன்றின் அகநிலை ''நிராகரிப்பை'' பல புறநிலைக் காரணக் கூறுகளின் ஒன்றிணைந்த செயற்பாட்டினால் நடைமுறையில் ஒழிக்கப்படுவதற்குச் சமமானதாகச் சிறுபிள்ளைத்தனமாய்த் தவறாக நினைத்துக் கொள்ளும் புரட்சியின் வறட்டுச் சூத்திரவாதிகளைப் போல், இவ்விவகாரத்தில் வாதாடுகிறார்கள். ஒரு புதிய அரசியல் கருத்தை (அரசியல் கருத்தல்லாத பிற கருத்துக்களுக்கும்

இது பொருந்தக் கூடியதே) இழிவுபடுத்துவதற்கும் கெடுப்பதற்குமான நிச்சயமான ஒரு வழி என்னவெனில், அதை ஆதரித்து வாதாடுவதாகக் கூறிக் கொண்டு அதனை அபத்தமாகும்படிச் சிறுமைப்படுத்துவதுதான். எந்த உண்மையும் (டித்ஸ்கென் சீனியர் குறிப்பிட்டது போல) ''அளவு மீறி விரிக்கப்பட்டால்'' மிகையாக்கப்பட்டால், அல்லது அதன் மெய்யான பயன்பாட்டுக்குரிய வரம்புகளுக்கு அப்பால் எடுத்துச் செல்லப்பட்டால் அபத்தமாய்ச் சிறுமையுற நேரும்; இந்நிலைமைகளில் அது கட்டாயம் அபத்தமாகியே தீருமென்றுகூடச் சொல்லலாம். ஆட்சியதிகாரத்தின் சோவியத் வடிவம் முதலாளித்துவ-ஜனநாயக நாடாளுமன்றங்களைக் காட்டிலும் மேலானதென்ற புதிய உண்மைக்கு டச்சு, ஜெர்மன் இடதுசாரிகள் இவ்வாறேதான் தீங்கிழைக்கின்றனர். காலத்துக்கு ஒவ்வாத கருத்தை யாராவது உரைத்தால், அல்லது முதலாளித்துவ நாடாளுமன்றங்களில் பங்கு கொள்வதை எல்லா நிலைமைகளிலும் நிராகரிக்கலாகாது என்று பொதுவாகவே யாராவது கருதினுல், அது தவறே ஆகுமென்பதில் சந்தேகமில்லை. பகிஷ்காரம் பயனுள்ளதாயிருக்கும் நிலைமைகளை வரையறுக்க இங்கு நான் முயற்சிப்பதற்கில்லை. ஏனெனில், இந்தக் கட்டுரையின் நோக்கம் அவ்வளவு விரிவானதல்ல; அதாவது, சர்வதேசக் கம்யூனிஸ்டுப் போர்த்தந்திரம் சம்பந்தமான இந்நாளையப் பிரச்சினைகள் சிலவற்றில் ருஷ்ய அனுபவத்தை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். ருஷ்ய அனுபவமானது போல்ஷிவிக்குகள் பகிஷ்காரத்தைப் பயன்படுத்தியதில் வெற்றிகரமான பிழையற்ற ஓர் உதாரணத்தையும் (1905), தவருன மற்ருேர் உதாரணத்தையும் (1906) நமக்கு அளித்திருக்கிறது. முதலாவது உதாரணத்தைப் பகுத்தாராய்வோமாயின், நாடாளுமன்றத்துக்கு வெளியே நடைபெற்ற புரட்சிகர வெகுஜன நடவடிக்கைகள் (குறிப்பாக வேலைநிறுத்தங்கள்) மிக வேகமாய் வளர்ச்சியுற்று வந்த ஒரு நிலைமையில், பாட்டாளி வர்க்கத்தையும் விவசாயிகளையும் சேர்ந்த எந்தவொரு பகுதியும் பிற்போக்கு ஆட்சி முறைக்கு எவ்வழி

யிலும் ஆதரவளிக்க முடியாத நிலைமையில், வேலைநிறுத்தப் போராட்டத்தின் மூலமாகவும் விவசாயி இயக்கத்தின் மூலமாகவும் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் பிற்பட்ட வெகுஜனங்கள்மீது செல்வாக்குப் பெற்று வந்த நிலைமையில், பிற்போக்கு அரசு பிற்போக்கு நாடாளுமன்றம் ஒன்றைக் கூட்டுவதைத் தடுப்பதில் நாங்கள் வெற்றி பெற்றோம் என்பதைக் காண்கிறோம். இன்றைய ஐரோப்பிய நிலைமைகளில் இந்த அனுபவம் அனுசரிக்கப்படத் தக்கதல்ல என்பது தெளிவாக விளங்குகிறது. இதே போல, டச்சு ''இடதுசாரிகளும்'' பிற ''இடதுசாரிகளும்'' நாடாளுமன்றங்களில் பங்கெடுத்துக் கொள்ள மறுப்பதை ஆதரித்து வாதாடுவதானது—சில நிபந்தனைகளுடன்தான் என்றாலுங்கூட—அடிப்படையான முறையில் தவறாகும், புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் இலட்சியத்துக்குக் குந்தகமானதாகும் என்பதும் தெளிவாக விளங்குகிறது. முன்கூறிய வாதங்கள் இதை நிரூபிக்கின்றன.

மேற்கு ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகர முன்னணிப் படைக்கு நாடாளுமன்றம் மிகவும் வெறுக்கத் தக்கதாகி விட்டது. இதனை மறுக்க முடியாது. இது எளிதில் புரிந்து கொள்ளக் கூடியதே. ஏனெனில் யுத்தத்தின்போதும் யுத்தத்துக்குப் பிற்பாடும் மிகப் பெரும்பாலான சோஷலிஸ்டு, சமூக-ஜனநாயக நாடாளுமன்றப் பிரதிநிதிகளின் நடத்தையைக் காட்டிலும் அருவருக்கத்தக்கதையோ, இழிவானதையோ, துரோகமானதையோ கற்பனை செய்வதுங்கூட கடினமாகும். ஆயினும் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும் இந்தத் தீங்கினை எதிர்த்து எப்படிப் போராடுவது என்பதைத் தீர்மானிக்கையில், இந்த மனப்பான்மைக்கு அடிபணிவது நியாயமல்ல என்பதுடன், உண்மையில் ஒரு பெருங் குற்றமுமாகும். மேற்கு ஐரோப்பாவில் பல நாடுகளில் தற்பொழுது புரட்சிகர மனப்பான்மையானது ''காணாத புதுமை'' அல்லது ''அரிதினும் அரிது'' என்பதாகவே கூற வேண்டியிருக்கிறது. மிக நீண்ட காலமாய் அடங்காத ஆவலோடு, ஆனால் பயனின்றி இது எதிர்பார்க்கப்பட்டு

வந்துள்ளது. இதனுல்தான் போலும் பலரும் எளிதில் இந்த மனப்பான்மைக்கு அடிபணிந்துவிடுகிருர்கள். வெகு ஜனங்களிடையே புரட்சிகர மனப்பான்மை இல்லாமல், இந்த மனப்பான்மை வளர்வதற்கு அனுசரணையான நிலைமைகள் இல்லாமல், புரட்சிகர போர்த்தந்திரம் ஒரு நாளும் செயல் நிலைக்கு வளர்ச்சியுற முடியாது என்பதைக் கூறத் தேவையில்லை. ஆனுல் ருஷ்யாவில் இரத்தம் தோய்ந்த நீண்டநெடிய கொடிய அனுபவமானது, புரட்சிகரப் போர்த்தந்திரத்தைப் புரட்சிகர மனப்பான்மையின் அடிப்படையில் மட்டும் உருவாக்கிவிட முடியாதென்ற உண்மையை எங்களுக்குப் போதித்துள்ளது. குறிப்பிட்ட அரசிலும் (அதனைச் சுற்றிலுமுள்ள அரசுகளிலும் மற்றும் உலகெங்குமுள்ள அரசுகளிலும்) இருக்கும் வர்க்க சக்திகள் யாவற்றையும், மற்றும் புரட்சி இயக்கங்களது அனுபவத்தையும் பற்றிய நிதானமான, முற்றிலும் புறநிலை நோக்குடன்கூடிய மதிப்பீட்டையே போர்த்தந்திரம் அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். நாடாளுமன்ற சந்தர்ப்பவாதத்தைத் தூற்றுவதால் மட்டுமோ, நாடாளுமன்றங்களில் பங்கெடுத்துக் கொள்வதை நிராகரிப்பதால் மட்டுமோ ஒருவர் தமது ''புரட்சிகர'' மனேபாவத்தை வெளிப்படுத்திக் கொண்டு விடுவது மிகமிகச் சுலபம். ஆனுல் இந்தச் சுலபத்தின் காரணமாய், இது கடினமான, மிகமிகக் கடினமான ஒரு பிரச்சினைக்குரிய தீர்வாகிவிடுவதில்லை. ஐரோப்பிய நாடாளுமன்றம் ஒன்றில் மெய்யாகவே புரட்சிகரமான நாடாளுமன்றக் குழுவினைத் தோற்றுவிப்பது ருஷ்யாவில் இருந்ததைக் காட்டிலும் மிகமிகக் கடினமாகும். இது புரிந்துகொள்ளக் கூடியதே. இருந்தபோதிலும் இது, 1917ல் நிலவிய பிரத்தியேகமானதும் வரலாற்று வழியில் மிகவும் விசேஷமானதுமான நிலைமையில் சோஷலிசப் புரட்சியைத் தொடங்குவது ருஷ்யாவுக்குச் சுலபமாயிருந்ததென்ற பொதுவான உண்மையின் குறிப்பிட்டதொரு வெளியீடே ஆகும். ஆனுல் இந்தப் புரட்சியைத் தொடர்ந்து நடத்திச் செல்வதும், அதனை நிறைவுறச் செய்வதும் ஐரோப்பிய நாடுகளைக் காட்டிலும்

ருஷ்யாவுக்கு மிகவும் கடினமானதாகும். 1918ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே இதனை நான் சுட்டிக்காட்டியிருக்கிறேன். எங்களுடைய கடந்த இரு ஆண்டு அனுபவம் இக்கருத்து முற்றிலும் சரியே என்பதைப் பூரணமாக மெய்ப்பித்திருக்கிறது. குறிப்பிட்ட சில பிரத்தியேக நிலைமைகள், அதாவது (1) சோவியத் புரட்சியை, தொழிலாளர்களையும் விவசாயிகளையும் சொல்லொணு அளவுக்குக் கசக்கிப் பிழிந்து வருத்திய ஏகாதிபத்திய யுத்தத்துக்கு இப்புரட்சியின் விளைவாய் முடிவு கட்டுவதுடன் இணைத்திடுவதற்கிருந்த சாத்தியப்பாடு; (2) தமது சோவியத் பகைவனை எதிர்த்து ஒன்றுபட முடியாதிருந்த ஏகாதிபத்தியக் கொள்ளைக்காரர்களாலான உலகின் மிகவும் சக்தி வாய்ந்த இரு கோஷ்டிகளிடையே ஏற்பட்ட ஜீவமரண மோதலைத் தற்காலிகமாய்ப் பயன்படுத்தி அனுகூலமடைவதற்கிருந்த சாத்தியப்பாடு; (3) ஒப்பளவில் மிக நீண்ட உள்நாட்டு யுத்தத்தை ஓரளவு நாட்டின் பிரம்மாண்டப் பரப்பு காரணமாகவும் போக்குவரத்துச் சாதனங்கள் மோசமாயிருந்ததன் காரணமாகவும் சகித்துக் கொள்வதற்கிருந்த சாத்தியப்பாடு; (4) விவசாயிகளிடையே மிகவும் தீர்க்கமான முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சி இயக்கம் அலைமோதிய காரணத்தால், பாட்டாளி வர்க்கத்தின் கட்சி விவசாயிகளின் கட்சியினுடைய (அதாவது பெரும்பாலான உறுப்பினர்கள் போல்ஷிவிசத்தின்பால் முற்றிலும் பகைமை கொண்டிருந்த சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியினுடைய) புரட்சிகரக் கோரிக்கைகளை ஏற்றுக் கொள்வதும், பாட்டாளி வர்க்கம் அரசியல் ஆட்சியதிகாரம் வென்று கொண்டதன் விளைவாய் இக்கோரிக்கைகளை உடனே பூர்த்தி செய்வதும் சாத்தியமாகிவிட்ட ஒரு நிலைமை[36]—ஆகிய இந்தப் பிரத்தியேக நிலைமைகள் யாவும் தற்போது மேற்கு ஐரோப்பாவில் இருக்கவில்லை; இந்த நிலைமைகள், அல்லது இவற்றையொத்த நிலைமைகள், அவ்வளவு சுலபமாய் ஏற்பட்டுவிடப் போவதுமில்லை. இதனுல்தான் — இதர பல காரணங்களுடனும்கூட — சோஷலிசப் புரட்சியைத் துவக்குவது எங்களைக் காட்டிலும் மேற்கு ஐரோப்பாவுக்கு

அதிகக் கடினமாயிருக்கிறது என்பதை இச்சந்தர்ப்பத்தில் குறிப்பிடலாம். பிற்போக்கு நாடாளுமன்றத்தைப் புரட்சிகர நோக்கங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ளும் கடுமையான பணியைத் ''தட்டிக்கழிப்பதன்'' மூலம் இந்தக் கடின நிலைமையைச் ''சமாளிக்க'' முயலுவதானது முற்றிலும் சிறுபிள்ளைத்தனமானதே ஆகும். நீங்கள் ஒரு புதிய சமுதாயம் சமைக்க விரும்புகிறீர்கள், ஆயினும் திடநம்பிக்கையும் பற்றுறுதியும் கொண்ட வீரமிக்க கம்யூனிஸ்டுகளாலான சிறந்த நாடாளுமன்றக் குழு ஒன்றினைப் பிற்போக்கு நாடாளுமன்றத்தில் நிறுவிக் கொள்வதிலுள்ள சிரமங்களைக் கண்டு அஞ்சுகிறீர்கள்! இது சிறுபிள்ளைத்தனம் அல்லவா? ஜெர்மனியில் கார்ல் லீப்க்னெஹ்டும் ஸ்வீடனில் ஹோக்லண்டும் அடியிலிருந்து வெகுஜன ஆதரவு இல்லாமலேயே, பிற்போக்கு நாடாளுமன்றத்தை மெய்யாகவே புரட்சிகரமாய்ப் பயன்படுத்திக் கொள்வதில் முன்னுதாரணமாய்த் திகழ முடிந்ததெனில், விரைவாக வளர்ந்து வரும் புரட்சிகர வெகுஜனக் கட்சி ஒன்று யுத்தப் பிற்காலத்தில் வெகுஜனங்களிடையே பிரமைகள் நீங்கி கசப்புணர்ச்சி மேலோங்கியிருக்கும் நிலைமையில், படுமோசமான நாடாளுமன்றங்களாயினும் அவற்றிலும் கம்யூனிஸ்டுக் குழு ஒன்றை உருவாக்கிக் கொள்ள முடியாமற் போவது ஏன்?! தொழிலாளர்களின் பிற்பட்ட பகுதிகளும் இன்னும் அதிகமாய்ச் சிறு விவசாயிகளின் பகுதிகளும், ருஷ்யாவில் இருந்ததை விட மேற்கு ஐரோப்பாவில் மேலும் கூடுதலாய் முதலாளித்துவ-ஜனநாயகத் தப்பெண்ணங்களிலும் நாடாளுமன்றவாதத் தப்பெண்ணங்களிலும் ஊறியிருக்கிறார்கள் என்பதே இதற்குக் காரணம். இதனால் முதலாளித்துவ நாடாளுமன்றங்களைப் போன்ற அமைப்புகளுக்கு உள்ளிருந்து தான் கம்யூனிஸ்டுகள் எவ்விதமான இடையூறுகளாலும் கலக்கமடையாமல் இந்தத் தப்பெண்ணங்களை அம்பலம் செய்யவும் களையவும் முறியடிக்கவும், விடாப்பிடியான நீண்ட போராட்டம் நடத்த முடியும், நடத்தவும் வேண்டும்.

ஜெர்மன் ''இடதுசாரிகள்'' தமது கட்சியில் மோசமான ''தலைவர்கள்'' இருப்பது குறித்து புகார் கூறுகிறார்கள்;

அவநம்பிக்கைக்கும் சோர்வுக்கும் இடந் தருகிறார்கள்; ''தலைவர்களை'' ''மறுத்தொதுக்கும்'' நகைக்கத்தக்க நிலையினையுங்கூட வந்தடைகின்றனர். ஆனால் ''தலைவர்களைத்'' தலைமறைவாக ஒளித்து வைத்துக் கொள்வது அடிக்கடி அவசியமாகிவிடும் நிலைமைகளில் சிறந்த ''தலைவர்களை'', சோதித்து எடுக்கப்பட்ட நம்பகமான, செல்வாக்குடைய ''தலைவர்களை'' உருவாக்குவது மிகவும் கடினமானதாகி விடுகிறது. சட்டபூர்வமான வேலைகளையும் சட்டவிரோதமான வேலைகளையும் ஒன்றிணைத்துக் கொள்ளாமல், வேறு பல வழிகளோடு நாடாளுமன்றங்களிலும் ''தலைவர்களைச்'' சோதித்துப் பார்க்காமல் இதிலுள்ள கஷ்டங்களை வெற்றிகரமாய்ச் சமாளிக்க முடியாது. குற்றவிமர்சனம்—மிகவும் கடுமையான, தாட்சண்யமற்ற, சமரசத்துக்கு இடமில்லாத குற்றவிமர்சனம் — நாடாளுமன்றவாதம் அல்லது நாடாளுமன்றச் செயற்பாடுகளுக்கு எதிராய் அல்லாமல், நாடாளுமன்றத் தேர்தல்களையும் நாடாளுமன்ற அரங்கையும் புரட்சிகரமான, கம்யூனிஸ்டு முறையில் பயன்படுத்திக் கொள்ள முடியாத தலைவர்களுக்கு எதிராய்—இன்னும் அதிகமாய் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பாதவர்களுக்கு எதிராய் — திருப்பி விடப்பட வேண்டும். இத்தகைய குற்றவிமர்சனம்தான்—இதோடுகூட தகுதியற்ற தலைவர்களை நீக்கித் தகுதியுடையோரை அவர்களிடத்தில் அமர்த்த வேண்டுமென்பதைக் கூறத் தேவையில்லை—''தலைவர்களுக்குத்'' தொழிலாளி வர்க்கத்துக்கும் உழைப்பாளி மக்கள் அனைவருக்கும் லாயக்கானவர்களாக இருக்கும்படிப் போதமளித்துப் பயிற்றுவித்து, அதேபோதில் வெகுஜனங்களுக்கும் அரசியல் நிலைமையையும் அந்நிலைமையிலிருந்து எழும் பல சந்தர்ப்பங்களில் மிகவும் குளறுபடியான, சிக்கலான பணிகளைச் சரிவரப் புரிந்து கொள்ளும்படிப் போதமளித்துப் பயிற்றுவிக்கக் கூடியதான பயனுள்ள செழுமை வாய்ந்த புரட்சிகரச் செயற்பாடாய் அமைய முடியும்.*

* இத்தாலியில் இருந்துவரும் ''இடதுசாரி'' கம்யூனிசத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ள

## 8

### சமரசம் கூடவே கூடாதா?

ஃபிராங்ஃபுர்ட் பிரசுரத்திலிருந்து தரப்பட்ட மேற்கோளில் ''இடதுசாரிகள்'' எவ்வளவு அழுத்தம் திருத்தமாய்

---

எனக்குச் சொற்ப அளவு வாய்ப்பே கிடைத்துள்ளது. தோழர் பொர்டீகாவும் அவரது ''பகிஷ்காரக் கம்யூனிஸ்டு'' (Comunista astensionista) கோஷ்டியினரும் நாடாளுமன்றத்தில் பங்கு கொள்ளலாகாது எனக் கூறி வருவது சரியல்லதான். ஆனால் அவருடைய பத்திரிகையான சோவியத்தின் (*Il Soviet*,[37] *1920, ஜனவரி 18, பிப்ரவரி 1 தேதிகளிட்ட இதழ்கள் 3லும் 4லும்*) இரு இதழ்களிலிருந்தும், தோழர் செராட்டியின் சிறந்த வெளியீடான கம்யூனிசத்தின் (*Comunismo*,[38] *1919 அக்டோபர் 1 முதல் நவம்பர் 30 வரையிலான 1 முதல் 4 வரையிலுள்ள இதழ்கள்*) நான்கு இதழ்களிலிருந்தும், மற்றும் நான் பார்த்துள்ள இத்தாலிய முதலாளித்துவப் பத்திரிகைகளின் தனித்தனி இதழ்களிலிருந்தும் தெரிந்து கொள்ள முடிந்த வரை, ஒரு விஷயத்தில் தோழர் பொர்டீகாவின் நிலை சரியானதாகவே எனக்குத் தோன்றுகிறது. தோழர் பொர்டீகாவும் அவர் கோஷ்டியினரும் டுராட்டியையும் அவரது ஆதரவாளர்களையும் தாக்குவது சரியே. டுராட்டியும் அவரைச் சேர்ந்தோரும் சோவியத் ஆட்சியதிகாரத்தையும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தையும் ஏற்றுக் கொள்ளும் ஒரு கட்சியில் இருந்து கொண்டு, அதே நேரத்தில் நாடாளுமன்ற உறுப்பினர்கள் என்ற முறையில் தமது கேடுகெட்ட பழைய சந்தர்ப்பவாதக் கொள்கையையே தொடர்ந்து பின்பற்றுகிறார்கள். இதற்கு இடம் தருவதன் மூலம் தோழர் செராட்டியும் இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சி அனைத்துமே தவறிழைக்கின்றனர். இத்தவறால், ஹங்கேரியில் நேர்ந்த அதே அளவு கேடும், அங்கு எழுந்த அதே அபாயங்களும் இத்தாலியிலும் ஏற்படுமென்று அஞ்ச வேண்டியிருக்கிறது. ஹங்கேரிய டுராட்டிகள் அங்கு கட்சிக்கும் சோவியத் ஆட்சிக்கும் உள்ளிருந்தே குழி பறித்து விட்டனர்.[39] சந்தர்ப்பவாத நாடாளுமன்ற உறுப்பினர்கள் சம்பந்தமாய் அனுசரிக்கப்படும் இத்தகைய தவறான, முரண்பட்ட அல்லது உறுதியற்ற போக்கானது, ஒரு புறத்தில் ''இடதுசாரி'' கம்யூனிசத்தைத் தோற்றுவித்து, மறுபுறத்தில் அதன் இருப்பை ஓரளவு நியாயமாக்கி விடு

இக்கோஷத்தை முன்வைக்கிறார்கள் என்பதைக் கண்டோம். சந்தேகத்துக்கு இடமின்றித் தம்மை மார்க்சியவாதிகளாய்க் கருதிக் கொள்வோர், மார்க்சியவாதிகளாகவே இருக்க விரும்புவோர், மார்க்சியத்தின் அடிப்படை உண்மைகளை மறந்துவிடுவதைக் காணும் போது வருத்தமாய் இருக்கிறது. மார்க்சைப் போலவே எங்கெல்ஸ், அரிதிலும் அரிதான ஆசிரியர்களில் ஒருவர். இவ்வாசிரியர்களின் அடிப்படையான நூல் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வாக்கியமும் பிரமாதமான ஆழ்ந்த உள்ளடக்கம் கொண்டுள்ளது. முப்பத்து மூன்று பிளான்கிஸ்டுக் கம்யூனார்டுகளின்[40] அறிக்கையை எதிர்த்து 1874ல் எங்கெல்ஸ் இவ்வாறு எழுதினார்:

"'நாங்கள் கம்யூனிஸ்டுகள்' (பிளான்கிஸ்டுக் கம்யூனார்டுகள் அவர்களுடைய அறிக்கையில் இப்படித்தான் எழுதினார்கள்), 'ஏனெனில் நாங்கள் இடைநிலையங்களில் நிற்காமலே, சமரசங்கள் எவற்றையும் ஏற்காமலே, எங்களுடைய குறிக்கோளை வந்தடைய விரும்புகிறோம். வெற்றி நாளை ஒத்திப் போடவே, அடிமை வாழ்வின் காலத்தை நீடிக்கச் செய்யவே சமரசங்கள் உதவுகின்றன.'

"'ஜெர்மன் கம்யூனிஸ்டுகள் கம்யூனிஸ்டுகளாக இருப்பதற்குக் காரணம் என்னவெனில், அவர்கள் எல்லா இடைநிலையங்களையும் எல்லா சமரசங்களையும்—அவர்களால் அல்ல, வரலாற்று வளர்ச்சியின் போக்கால் தோற்றுவிக்கப்பட்ட இவற்றை—கடக்கையில் வர்க்கங்களை ஒழித்திடல், நிலத்திலோ உற்பத்திச் சாதனங்களிலோ இனி தனியார் உடைமை இல்லாமற் போய்விடும் ஒரு சமுதாயத்தை அமைத்திடல் என்னும் இறுதி நோக்கத்தைத் தெளிவாகக்

---

கிறது. நாடாளுமன்றப் பிரதிநிதி டுராட்டி "முன்பின் முரண்பாடாக நடந்து கொள்வதாகத்" தோழர் செராட்டி குற்றம் சாட்டுவது (*Comunismo*, இதழ் 3) தவறானதென்பதில் ஐயமில்லை. ஏனெனில் இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியே தான் டுராட்டியையும் அவர் ஆட்களையும் போன்ற சந்தர்ப்பவாத நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு இடம் தருவதன் மூலம் முன்பின் முரண்பாடாக நடந்து கொள்கிறது.

கண்ணுற்று, இடையருது அதனைப் பின்பற்றுகிருர்கள் என்பதே ஆகும். முப்பத்து மூன்று பிளான்கிஸ்டுகள் கம்யூனிஸ்டுகளாய் இருப்பதற்குக் காரணம், இடைநிலையங்களையும் சமரசங்களையும் தாவிச் சென்றுவிடத் தாம் விரும்பும் ஒரே காரணத்தால் விவகாரமே முடிவுற்றுவிடுவதாக அவர்கள் கற்பனை செய்து கொள்வதுதான். அவர்கள் கட்டாயம் நிகழப் போகும் ஒன்ருகக் கருதுவது போல வருகிற சில நாட்களில் 'அது தொடங்கிவிடுமாயின்', அவர்கள் ஆட்சியதிகாரத்தை மேற்கொண்டு விடுவார்களாயின், நாளைக்கு மறு தினமே 'கம்யூனிசம் நிறுவப்பட்டுவிடும்'. அது உடனடியாகச் சாத்தியப்படவில்லை எனில், அவர்கள் கம்யூனிஸ்டுகள் அல்லர்.

''தமது பொறுமையின்மையைத் தத்துவார்த்த வழியில் திடமாய் நிலைநாட்டப்பெற்ற வாதமாக எடுத்துரைப்பதைச் சிறுபிள்ளைக்குரிய தெரியாத்தனம் என்றுதானே கூற வேண்டும்!'' (ஃபிரீட்ரிஹ் எங்கெல்ஸ், **பிளான்கிஸ்டுக் கம்யூனர்டுகளின் வேலைத்திட்டம்**, ஜெர்மன் சமூக-ஜனநாயகச் செய்தியேடு *Volksstaat*,[41] 1874, இதழ் 73லிருந்து ருஷ்ய மொழிபெயர்ப்புக் **கட்டுரைகள், 1871-1875**, பெத்ரோகிராத், 1919, பக்கங்கள் 52-53ல் தரப்படுவது).

இதே கட்டுரையில் வேயானின் பால் தமக்குள்ள ஆழ்ந்த மதிப்பை எங்கெல்ஸ் வெளியிடுகிருர்; அவருடைய ''மறுக்க முடியாத சிறப்பு'' குறித்துப் பேசுகிருர் (கெட்டைப் போலவே வேயானும் சர்வதேச சோஷலிசத்தின் மிக முக்கியத் தலைவர்களில் ஒருவராக இருந்தவர்—1914 ஆகஸ்டில் சோஷலிசத்துக்கு அவர்கள் துரோகம் புரியும்வரையில்). ஆனல் பட்டவர்த்தனமான தவறுபற்றிய விவரமான பகுத்தாய்வை எங்கெல்ஸ் அளிக்காமல் விட்டுவிடவில்லை. அனுபவமில்லாத இளம் புரட்சியாளர்களுக்கும், மற்றும் மதிப்புக்குரிய வயதும் மிகுந்த அனுபவமும் வாய்ந்தவர்களாயினும் குட்டிமுதலாளித்துவப் புரட்சியாளர்களாய் இருப்போருக்கும் ''சமரசங்களை அனுமதிப்பது'' மிகவும் ''அபாயகரமானதாகவும்'', புரிந்துகொள்ள முடியாததாகவும், தவருனதாகவுமே தோன்றும். குதர்க்க

வாதிகள் பலரும் (இவர்கள் அசாதாரண அல்லது அளவு கடந்த ''அனுபவமுடைய'' அரசியல்வாதிகளானதால்) தோழர் லான்ஸ்பரி குறிப்பிட்ட பிரிட்டிஷ் சந்தர்ப்பவாதத் தலைவர்களைப் போல அதே வழியில் வாதாடுகிறார்கள்: ''போல்ஷிவிக்குகள் ஒரு வகை சமரசம் செய்து கொள்ள லாம் என்றால், நாங்கள் எவ்வகையான சமரசமும் செய்து கொள்ளக் கூடாதா, என்ன?'' ஆனால் எண்ணற்ற வேலைநிறுத்தங்களில் (வர்க்கப் போராட்டத்தின் இந்த ஒரு வெளியீட்டை மட்டும் குறிப்பிடுவதெனில்) புடம் போடப் பட்ட பாட்டாளி வர்க்கத்தினர், எங்கெல்ஸ் தெளிவு படுத்திய (தத்துவவியலிலும் வரலாற்றியலிலும் அரசிய லிலும் உளவியலிலும்) மிகவும் ஆழமான உண்மையை மெச்சத்தக்க வகையில் சாதாரணமாய்ப் புரிந்து கொண்டு விடுகிறார்கள். பாட்டாளி வர்க்கத்தவர் ஒவ்வொருவரும் வேலைநிறுத்தங்களை அனுபவித்து அறிந்தவர்; தொழிலாளர் கள் எதனையுமே சாதிக்காமல், அல்லது அவர்களுடைய கோரிக்கைகளில் ஒரு பகுதி மட்டுமே பூர்த்தி செய்யப் படும் நிலைமைக்கு ஒப்புதல் அளித்து, வேலைக்குத் திரும்ப வேண்டியதாகிவிடும் வண்ணம், வெறுக்கத்தக்க ஒடுக்கு முறையாளர்களுடனும் சுரண்டலாளர்களுடனும் ''சமரசங் கள்'' செய்து கொள்ள நேர்வதை அனுபவித்து அறிந்தவர். பாட்டாளி வர்க்கத்தவர் ஒவ்வொருவரும்—வெகு ஜனப் போராட்டத்தின் நிலைமைகளின் விளைவாகவும், அவர் எவற்றினிடையே வாழ்கிறாரோ அந்த வர்க்கப் பகைமை கள் வெகுவாகத் தீவிரமடைவதன் விளைவாகவும்—புற நிலைமைகளின் (வேலைநிறுத்த நிதிகளின் பற்றாக்குறை, வெளி ஆதரவு இல்லாமை, இனி தாளாது என்னும் படியான அளவுக்குப் பட்டினி, தளர்வு முதலான நிலைமைகளின்) நிர்ப்பந்தத்தால் ஏற்படும் சமரசத்துக்கும்—இத்தகைய சமரசத்துக்கு ஒத்துக் கொண்ட தொழிலாளர்களுடைய புரட்சிகரப் பற்றுறுதியும் போராட்டத்தை நடத்திச் செல் வதிலுள்ள ஈடுபாடும் இச்சமரசத்தால் எவ்வகையிலும் குறைந்துவிடுவதில்லை—மறு புறத்தில் துரோகிகள் தமது சுயநலத்தையும் (கருங்காலிகளும் ''சமரசங்கள்'' செய்து

கொள்கிறார்களே!), கோழைத்தனத்தையும், முதலாளி களுக்குத் தொண்டூழியம் புரிவதில் தமக்குள்ள நாட்டத் தையும், முதலாளிகளின் அச்சுறுத்தலுக்கும் சில நேரங் களில் நயமான பேச்சுகளுக்கும் சில நேரங்களில் கைக் கூலிக்கும் சில நேரங்களில் புகழுரைகளுக்கும் பணியத் தாம் தயாராயிருப்பதையும் புறநிலைக் காரணங்களாகத் திரித்துக் கூறிச் செய்து கொள்ளும் சமரசத்துக்கும் இடையே உள்ள வித்தியாசத்தைக் கண்டு கொண்டு விடுகிறார். (பிரிட்டிஷ் தொழிற்சங்கத் தலைவர்கள் செய்து கொள் ளும் இத்தகைய துரோகத்தனமான சமரசங்களுக்குப் பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கத்தின் வரலாற்றிலிருந்து ஏராளமான உதாரணங்கள் கூறலாம்; எல்லா நாடுகளிலும் அனேகமாய் எல்லாத் தொழிலாளர்களும் ஏதேனும் ஒரு வடிவத்தில் இதே போன்றவற்றைக் கண்டிருக்கிறார்கள்.)

இந்த அல்லது அந்த ''சமரசத்தின்'' மெய்யான தன் மையைச் சரிவர நிர்ணயம் செய்வதற்குப் பெருமுயற்சி கள் தேவையாகிவிடும் மிகமிகக் கடினமான, சிக்கல் வாய்ந்த தனிப்பட்ட சந்தர்ப்பங்கள் எழுவது இயற்கையே. எப்படி ஆட்கொலை விவகாரத்தில் ஆட்கொலை முற்றிலும் நியாயமானதா, அவசியமானதா (உதாரணமாய் நியாய மான தற்காப்பிற்காக நிகழ்ந்ததா), அல்லது மன்னிக்க முடியாத கவனக் குறைவாலோ, தந்திரமாய்ச் செய்யப் பட்ட வஞ்சகச் சூழ்ச்சியாலோ நிகழ்ந்ததா என்று நிலை நாட்டுவது எளிதாய் இராத சந்தர்ப்பங்கள் எழு கின்றனவோ, அதே போல இந்த விவகாரத்திலும் எழுவது இயற்கையே. அரசியலில் சில நேரங்களில் வர்க்கங்களுக் கும் கட்சிகளுக்கும் இடையிலான அளவு கடந்த சிக்கல் வாய்ந்த உறவுகள்—தேசிய, சர்வதேசிய உறவுகள்—சம் பந்தமான விவகாரங்கள் எழுவதால், வேலைநிறுத்தத்தில் செய்து கொள்ளப்படும் நியாயமான ''சமரசமா'', அல்லது கருங்காலியாலோ, துரோகத் தலைவராலோ, இன்னோரன்ன பிறராலோ செய்யப்படும் துரோகமான ''சமரசமா'' என்கிற பிரச்சினையைக் காட்டிலும் மிகவும் கடினமான சந்தர்ப்பங்கள் பலவும் ஏற்படும் என்பது தெளிவு.

எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும் பொருந்தக் கூடிய ஒரு சூத்திரத்தையோ, பொது விதியையோ (''சமரசம் கூடவே கூடாது!'') வகுத்திடுவது அறிவுடைமையாகாது. அவரவரும் தமது சொந்த அறிவைப் பயன்படுத்திக் கொண்டு, அந்தந்தச் சந்தர்ப்பத்திலும் தமக்குரிய நிலையை வகுத்துக் கொள்ளும் ஆற்றலுடையவராய் இருத்தல் வேண்டும். குறிப்பிட்ட ஒரு வர்க்கத்தின்* சிந்தனை ஆற்றலுடைய எல்லாப் பிரதிநிதிகளின் நீடித்த, விடாப்பிடியான, பல்வேறுபட்ட, சர்வாம்ச முயற்சிகளின் மூலம் சிக்கலான அரசியல் பிரச்சினைகளுக்குச் சீக்கிரமாகவும் பிழையின்றியும் தீர்வு காண்பதற்குத் தேவையான அறிவும் அனுபவமும் — இவற்றுடன்கூட — அரசியல் நுட்பத் திறனும் பெற வேண்டியது உண்மையில் கட்சி நிறுவனத்துக்கும், தலைமைப் பதவி வகிப்பதற்குள்ள தகுதியுடைய தலைவர்களுக்குமுள்ள கடமைகளில் ஒன்றாகும்.

நாம் அயராத போராட்டம் நடத்தி வரும், கட்டாயம் நடத்த வேண்டியிருக்கும் சந்தர்ப்பவாதத்துக்கும் புரட்சிகர மார்க்சியத்துக்கும், அல்லது கம்யூனிசத்துக்கும், இடையிலுள்ள எல்லாப் பாகுபாடுகளையும் நீக்கிவிடுவதற்கு, பொதுவில் சமரசத்துக்கு இடமுண்டு என்னும் முடிவே

---

* ஒவ்வொரு வர்க்கத்தினுள்ளும், அதிக அளவுக்கு அறிவொளி பரவிய நாடுகளில் நிலவும் நிலைமைகளிலும்கூட, மிகவும் முன்னேறிய வர்க்கத்தினுள்ளும்கூட, அத்தருணத்தின் சூழ்நிலை காரணமாய் அவ்வர்க்கத்தின் ஆன்மீக சக்திகள் யாவும் பிரத்தியேக அளவுக்கு உசுப்பிவிடப்பட்டிருக்கும் போதுகூட, சுயமாகச் சிந்தனை செய்யாத, சிந்தனை செய்யும் தகுதியில்லாத வர்க்கப் பிரதிநிதிகள் எப்பொழுதும் இருக்கவே செய்கிறார்கள்—வர்க்கங்கள் இருக்கும் வரை, வர்க்கங்களில்லாத சமுதாயம் தனக்குரிய அடித்தளத்திலே பூரணமாகத் தன்னை உறுதிப்படுத்தி வளர்த்துக் கொள்ளாத வரை—தவிர்க்க முடியாதபடி இருந்தே வருவார்கள். நிலைமைகள் இவ்வாறின்றி வேறு விதமாய் இருப்பின் முதலாளித்துவத்தால், இப்பொழுது அது உண்மையில் இருப்பது போல், வெகுஜனங்களது ஒடுக்குமுறையாளனாக இருக்க முடியாது.

போதுமானதாகுமெனச் சிறுபிள்ளைத்தனமானோரும் சிறிதும் அனுபவமில்லாதோரும் கற்பனை செய்து கொண்டு விடுகிறார்கள். இத்தகையோர் இயற்கையிலும் சமுதாயத்திலும் எல்லாப் பாகுபாடுகளும் நெகிழ்வுடையவையே என்பதையும் ஓரளவு வரை சம்பிரதாயமானவையே என்பதையும் இன்னும் தெரிந்து கொள்ளவில்லை என்றால், நீண்ட காலப் பயிற்சியும் போதமும் அறிவொளியும் அரசியல் அனுபவமும் அன்றாட அனுபவமும் பெறுவதைத் தவிர இவர்களுக்கு வேறு வழி எதுவுமில்லை. குறிப்பிட்ட எந்த ஒரு வரலாற்றுத் தருணத்திலும் அரசியலில் எழும் நடைமுறைப் பிரச்சினைகளில் புரட்சிகர வர்க்கத்துக்கு ஆபத்தான சந்தர்ப்பவாதத்தின் உருவாக அமைந்த சகிக்கவொண்ணாத, துரோகத்தனமான பிரதான வகை சமரசங்களாக இருப்பவற்றை இனம் கண்டு கொள்வதும், அவற்றை விளக்கிக் கூறவும் எதிர்த்துப் போராடவும் எல்லா முயற்சிகளையும் மேற்கொள்வதும் முக்கியமாகும். ஒத்த அளவுக்குக் கொள்ளைவெறி கொண்ட நாடுகளது இரு கோஷ்டிகளுக்கிடையே நடைபெற்ற 1914-18ஆம் ஆண்டு ஏகாதிபத்திய யுத்தத்தின்போது, சமூக-தேசியவெறிதான், ''தாயகத்தின் பாதுகாப்புக்கு'' ஆதரவளிப்பதெனும் கூற்றுதான்—இத்தகைய ஒரு யுத்தத்தில் ''தாயகத்தின் பாதுகாப்பு'' என்பது உண்மையில் தமது ''சொந்த'' முதலாளித்துவ வர்க்கத்தின் கொள்ளைவெறிக்குரிய நலன்களின் பாதுகாப்பைத்தான் குறித்தது—சந்தர்ப்பவாதத்தின் பிரதானமான அடிப்படையான வகையாய் இருந்தது. இந்த யுத்தத்துக்குப் பிற்பாடு, கொள்ளைக்கார சர்வதேசச் சங்கத்தைப்[42] பாதுகாப்பதும், புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்கும் ''சோவியத்'' இயக்கத்துக்கும் எதிராய்த் தமது சொந்த நாட்டின் முதலாளித்துவ வர்க்கத்துடன் நேரடியாகவோ மறைமுகமாகவோ அமைந்த கூட்டணிகளின் பாதுகாப்பும், ''சோவியத் ஆட்சியதிகாரத்துக்கு'' எதிராய் முதலாளித்துவ ஜனநாயகத்தின், முதலாளித்துவ நாடாளுமன்ற முறையின் பாதுகாப்பும் அந்தச் சகிக்கவொண்ணாத, துரோகத்தனமான சமரசங்களின்

பிரதான வெளியீடுகளாயின. ஒட்டுமொத்தமாய் இந்தச் சமரசங்கள் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்கும் அதன் இலட்சியத்துக்கும் ஆபத்தான சந்தர்ப்பவாதமாய் அமைந்துவிட்டன.

"...பிற கட்சிகளுடனான எல்லா வித சமரசத்தையும்... வளைந்து கொடுப்பதற்கும் இணக்கத்துக்குமுரிய எந்தக் கொள்கையையும் தீர்மானமாய் நிராகரித்தே ஆக வேண்டும்"—

என்று ஜெர்மன் இடதுசாரிகள் ஃபிராங்க்ஃபுர்ட் பிரசுரத்தில் எழுதுகின்றனர்.

இத்தகைய கருத்தோட்டங்களைக் கொண்ட இந்த இடதுசாரிகள் போல்ஷிவிசத்தைத் தீர்மானமாய்க் கண்டனம் செய்யாமலிருப்பது ஆச்சரியம்தான்! போல்ஷிவிசத்தின் வரலாறு பூராவிலும், அக்டோபர் புரட்சிக்கு முன்பும் சரி, பிற்பாடும் சரி, முதலாளித்துவக் கட்சிகள் உட்பட பிற கட்சிகளுடன் வளைந்து கொடுப்பதற்கும் இணக்கங்களுக்கும் சமரசங்களுக்குமான உதாரணங்கள் நிறைய இருக்கின்றன என்பது எப்படியும் ஜெர்மன் இடதுசாரிகளுக்குத் தெரியாமல் இருப்பதற்கில்லை!

சர்வதேச முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்துவதற்காக யுத்தம் நடத்திக் கொண்டு—அரசுகளிடையே நடைபெறும் சாதாரண யுத்தங்களில் மிகவும் மூர்க்கமானதைக் காட்டிலும் மிகவும் கடினமான, சிக்கலான, நீண்ட யுத்தம் நடத்திக் கொண்டு—வளைந்து கொடுப்பதையும், பகைவர்களின் நலன்களுக்கிடையே ஏற்படும் மோதலை (அது தற்காலிகமானதே என்றாலும்) எவ்விதத்திலும் பயன்படுத்திக் கொள்வதையும், சாத்தியமான கூட்டாளிகளுடனான (இக்கூட்டாளிகள் தற்காலிகமானவர்கள், நிலையற்றவர்கள், ஊசலாட்டமுடையவர்கள், குறிப்பிட்ட நிலைமைகளில் மட்டுமே கூட்டாளிகளாய் இருப்போர் என்றாலுங்கூட) எந்த இணக்கத்தையும் அல்லது சமரசத்தையும் முன்கூட்டியே நிராகரித்து விடுவதென்றால் — அது எள்ளி நகையாடத் தக்கதல்லவா? இன்னும் கண்டறியாத, இது வரை எட்டாத

தாயிருந்த ஒரு மலையின் மீது ஏறுவதென்ற கடினமான பணியை மேற்கொண்டு, வளைந்து நெளிந்த பாதையில் சில சமயம் செல்வதையோ, முன்வைத்த காலைச் சில சமயம் பின்வைப்பதையோ, தேர்வு செய்து கொண்ட பாதையைச் சில சமயம் விட்டு விலகிப் பிறிதொன்றில் செல்ல முயலுவதையோ முன்கூட்டியே நிராகரிப்பது போன்றதல்லவா இது? எனினும் சிறிதும் முதிர்ச்சியடையாத, அனுபவமில்லாத இவர்களுக்கு (இளமைப் பருவமே காரணம் என்றால் அது அவ்வளவு மோசமானதல்ல; இளைஞர்கள் குறிப்பிட்ட ஒரு காலத்துக்கு இது போலத்தான் அபத்தம் பேச வேண்டும் என்பது ஆண்டவன் ஆணை) ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியின் சில உறுப்பினர்களிடமிருந்து ஆதரவு—நேரடியானதா மறைமுகமானதா, பகிரங்கமானதா இரகசியமானதா, முழு அளவிலானதா அரைகுறையானதா என்பது முக்கியமல்ல—கிடைத்திருக்கிறது.

பாட்டாளி வர்க்கத்தின் முதலாவது சோஷலிசப் புரட்சிக்குப் பிறகும், ஒரு நாட்டில் முதலாளித்துவ வர்க்கம் வீழ்த்தப்பட்ட பிறகும்கூட, அந்நாட்டின் பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவ வர்க்கத்தைக் காட்டிலும் **நீண்ட காலத்துக்குப் பலவீனமானதாகவே** இருந்து வருகிறது. முதலாளித்துவ வர்க்கத்துக்குள்ள விரிவான சர்வதேசப் பிணைப்புகளும், மற்றும் முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்திய நாட்டில் சிறுவீதப் பண்ட உற்பத்தியாளர்களால் தன்னியல்பாகவும் தொடர்ச்சியாகவும் முதலாளித்துவமும் முதலாளித்துவ வர்க்கமும் திரும்பவும் தோற்றுவிக்கப்படுவதும் புத்துயிரூட்டப்படுவதுமே இதற்குக் காரணம். மிகுந்த வலுவுள்ள இந்தப் பகைவனைத் தோற்கடிப்பதெனில், முழு முனைப்பான முயற்சிகளை மேற்கொள்வதன் மூலமும், பகைவர்களிடையே இருக்கக்கூடிய எந்தப் பிளவையும்—மிகவும் சிறியதே ஆயினும்—பல்வேறு நாடுகளின் முதலாளித்துவ வர்க்கத்தாரின் நலன்களிடையிலும் அந்தந்த நாட்டினுள்ளும் முதலாளித்துவ வர்க்கத்தின் பல்வேறு கோஷ்டிகள் அல்லது வகைகளின் நலன்களிடையிலும் எழக்கூடிய எந்த மோதலையும் மிகவும் தீர்க்கமாக

வும் கவனமாகவும் விழிப்புடனும் சாமர்த்தியமாகவும் கட்டாய மாகவும் பயன்படுத்திக் கொள்வதன் மூலமும், மற்றும் வெகுஜனக் கூட்டாளியை — இக்கூட்டாளி தற்காலிக மானவர்தான், ஊசலாட்டமுடையவர்தான், நிலையற்ற வர்தான், நம்ப முடியாதவர்தான், குறிப்பிட்ட நிலைமை களில் மட்டுமே கூட்டாளியாய் இருப்பவர்தான் என்றாலுங் கூட — வென்று கொள்வதற்கான எந்தவொரு மிகச் சிறிய வாய்ப்பையும் பயன்படுத்திக் கொள்வதன் மூலமும் தான் இது சாத்தியமாகும். இதைப் புரிந்து கொள்ளாத வர்கள், மார்க்சியத்தை, பொதுவாகவே நவீன கால விஞ் ஞான சோஷலிசத்தைக் கடுகளவுங்கூட புரிந்து கொள்ளும் ஆற்றல் தமக்கில்லை என்பதைத்தான் வெளிப்படுத்திக் கொள்கிறார்கள். செயலில் இந்த உண்மையைக் கையாளும் திறன் தமக்குண்டு என்பதை ஓரளவு கணிச அளவிலான காலத்திலும் நானாவிதமான அரசியல் சூழ்நிலைமைகளிலும் நடைமுறையில் நிரூபித்துக் காட்டாதவர்கள், உழைக் கும் மனித சமுதாயத்தார் அனைவரையும் சுரண்டலாளர் களிடமிருந்து விடுவிப்பதற்காகப் புரட்சிகர வர்க்கம் நடத்தும் போராட்டத்தில் அதற்குத் துணை புரியும் வழியை இன்னமும் தெரிந்து கொள்ளாதவர்களே ஆவர். பாட்டாளி வர்க்கம் அரசியல் அதிகாரம் வென்று கொள் வதற்கு முற்பட்ட காலத்துக்கும் அதற்குப் பிற்பட்ட காலத்துக்கும் இது ஒருங்கே பொருந்தும்.

நமது தத்துவம் செயலுக்கான வழிகாட்டியே அன்றி, வறட்டுச் சூத்திரமல்ல என்று மார்க்சும் எங்கெல்சும் கூறி னர். கார்ல் காவுத்ஸ்கி, ஓட்டோ பௌவர் முதலானோர் போன்ற ''முழுமையான'' மார்க்சியவாதிகள் புரிந்த மிகப் பெருந் தவறு, மிகப் பெருங் குற்றம் என்னவெனில், அவர்கள் இதனைப் புரிந்துகொள்ளாததுதான், பாட்டாளி வர்க்கப் புரட்சியின் மிக முக்கியமான தருணங்களில் அவர்கள் இதனைச் செயற்படுத்தும் திறனற்றோராய் இருந் ததுதான். மார்க்சியக் கட்டத்துக்கு முற்பட்ட பிரபல ருஷ்ய சோஷலிஸ்டான நி.க. செர்னிஷேவ்ஸ்கி ''அரசியல் செயற்பாடு நெவ்ஸ்கி பிராஸ்பெக்ட்டின் நடைபாதை

போன்றதல்ல'' (செயின்ட் பீட்டர்ஸ்பர்கின் நேர் ஒழுங்கான பிரதான வீதியின் நன்கு பராமரிக்கப்படும் சமதளமான விசால நடைபாதை) என்று சொல்வது வழக்கம். செர்னிஷேவ்ஸ்கியின் காலத்துக்குப் பிற்பாடு இந்த உண்மையைப் புறக்கணித்ததாலோ, மறந்ததாலோ ருஷ்யப் புரட்சியாளர்கள் அளவிலாத் தியாகங்கள் புரிய வேண்டியதாயிற்று. பிற்பட்ட நிலையிலிருந்த ருஷ்யர்கள் இந்த உண்மையைக் கற்றுணர்வதற்காகச்செலுத்த நேர்ந்தது போல் அவ்வளவு கடுமையான விலையைத் தொழிலாளி வர்க்கத்தின்பால் விசுவாசம் கொண்ட இடதுசாரி கம்யூனிஸ்டுகளும் மேற்கு ஐரோப்பிய, அமெரிக்கப் புரட்சியாளர்களும் செலுத்த நேராதபடித் தடுப்பதற்கு எல்லா வழிகளிலும் நாம் முயன்றாக வேண்டும்.

ஜாரிசத்தின் வீழ்ச்சிக்கு முன்பு ருஷ்யப் புரட்சிகர சமூக-ஜனநாயகவாதிகள் முதலாளித்துவ மிதவாதிகளின் சேவைகளை அடிக்கடி பயன்படுத்திக் கொண்டனர்; அதாவது, இந்த மிதவாதிகளுடன் எத்தனையோ முறை நடைமுறை சார்ந்த சமரசங்கள் செய்து கொண்டனர். போல்ஷிவிசம் உதித்தெழுவதற்குமுன்பே, 1901-02ல் இஸ்க்ராவின் பழைய ஆசிரியர் குழு (பிளெஹானவ், அக்செல்ரோத், ஸசூலிச், மார்த்தவ், பத்ரேசவ் ஆகியோரையும் என்னையும் கொண்டது) முதலாளித்துவ மிதவாதத்தின் அரசியல் தலைவரான ஸ்துரூவேயுடன் (அதிக காலத்துக்கு இல்லை என்பது உண்மையே என்றாலும்) முறைப்படி அரசியல் கூட்டணி நிறுவிக் கொண்டது; அதே போதில் முதலாளித்துவ மிதவாதத்தை எதிர்த்தும், தொழிலாளி வர்க்க இயக்கத்தில் அதன் செல்வாக்கின் அற்பசொற்ப வெளிப்பாடுகளை எதிர்த்தும் அந்த ஆசிரியர் குழு விடாப்பிடியான, தயவு தாட்சண்யமற்ற கடுமையான, சித்தாந்த, அரசியல் போராட்டம் நடத்த முடிந்தது. போல்ஷிவிக்குகள் எப்பொழுதுமே இக்கொள்கையைக் கடைப்பிடித்து வந்துள்ளனர். 1905 முதலாய் அவர்கள் மிதவாத முதலாளித்துவ வர்க்கத்தாருக்கும் ஜாரிசத்துக்கும் எதிராய்த் தொழிலாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்குமிடையிலான

கூட்டணியை இடையறுது ஆதரித்து வந்துள்ளனர். ஆயினும் அவர்கள் ஜாரிசத்துக்கு விரோதமாய் முதலாளித்துவ வர்க்கத்தாருக்கு ஆதரவளிக்க மறுத்ததே இல்லை (உதாரணமாய், தேர்தல்களின் இரண்டாவது கட்டம், அல்லது இரண்டாவது வாக்குப் பதிவின்போது); முதலாளித்துவ-புரட்சிகர விவசாயிக் கட்சியினரான ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுக்கு'' எதிரான எங்களது ஓயாத சித்தாந்த, அரசியல் போராட்டத்தைக் கைவிடவே இல்லை; இவர்கள் தம்மைப் பொய்யாக சோஷலிஸ்டுகள் என்று வர்ணித்துக் கொள்ளும் குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகளாவர் என்பதைத் தொடர்ந்து அம்பலம் செய்து வந்தோம். 1907ல் டூமா தேர்தல்களின் போது குறுகிய காலத்துக்கு போல்ஷிவிக்குகள் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுடன் முறைப்படி அரசியல் கூட்டணி நிறுவிக் கொண்டனர். 1903க்கும் 1912க்கும் இடையில் பல ஆண்டுகளில் நாங்கள் மென்ஷிவிக்குகளுடன் ஒரே சமூக-ஜனநாயகக் கட்சியில் முறைப்படி ஒன்றுபட்டிருந்தோம்; ஆயினும் சந்தர்ப்பவாதிகளும் பாட்டாளி வர்க்கத்தினுள் முதலாளித்துவச் செல்வாக்கினைப் புகுத்துவதற்கான சாதனமாய் இருந்தோருமான அவர்களுக்கு எதிராக எங்களுடைய சித்தாந்த, அரசியல் போராட்டத்தை நாங்கள் ஒருபோதும் நிறுத்தி வைக்கவே இல்லை. யுத்தத்தின் போது காவுத்ஸ்கிவாதிகளுடனும், இடதுசாரி மென்ஷிவிக்குகளுடனும் (மார்த்தவ்), சோஷலிஸ்டு-புரட்சியாளர்களில் ஒரு பகுதியோருடனும் (செர்னேவ், நத்தன்சோன்) சிற்சில சமரசங்கள் செய்து கொண்டோம்; ஸிம்மர்வால்டிலும் கின்தாலிலும்[43] நாங்கள் இவர்களுடன் சேர்ந்திருந்தோம், கூட்டு அறிக்கைகள் வெளியிட்டோம். ஆயினும் நாங்கள் காவுத்ஸ்கிவாதிகளையும் மார்த்தவையும் செர்னேவையும் எதிர்த்து (நத்தன்சோன் ''புரட்சிகர-கம்யூனிஸ்டு''-நரோதியவாதியாக இருந்து[44] 1919ல் இறந்தார், எங்களுக்கு மிகவும் நெருங்கியவராய் இருந்தவர், எங்களுடன் அனேகமாய்க் கருத்து ஒற்றுமை கொண்டிருந்தவர்) எங்களுடைய சித்தாந்த, அரசியல் போராட்டத்தை நிறுத்தவோ தணித்துக்

கொள்ளவோ இல்லை. அக்டோபர் புரட்சி நடைபெற்ற அதே கணத்தில் நாங்கள் குட்டிமுதலாளித்துவ விவசாயி மக்களுடன் முறைப்படி இல்லாவிட்டாலும் மிகவும் முக்கியமான (மிகவும் வெற்றிகரமானதுங்கூட) அரசியல் கூட்டணி வகுத்துக் கொண்டோம். **சோஷலிஸ்டு-புரட்சி யாளர்களின்** நிலத் துறை வேலைத்திட்டத்தை எந்தவொரு மாற்றமுமின்றி **அப்படியே முழுமையாக** ஏற்றுக் கொள்வதன் வாயிலாக இதனைச் செய்தோம்—அதாவது, விவசாயிகளுடன் நாங்கள் உடன்பாடு காண விரும்பினேமே அன்றி அவர்களை ''நசுக்கி ஒடுக்கிவிட'' விரும்பவில்லை என்பதை அவர்களுக்கு நிரூபித்துக் காட்டும் பொருட்டு மறுக்க முடியாததொரு சமரசம் செய்து கொண்டோம். அதேபோதில் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுடன்[45] அரசாங்கத்தில் பங்கு கொள்வதும் அடங்கலாய் முறைப்படியானதோர் அரசியல் கூட்டணி நிறுவிக் கொள்ளலாமென அவர்களிடம் முன்மொழிந்தோம் (விரைவில் அவ்வாறே நிறுவிக் கொண்டோம்). பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் உடன்படிக்கை முடிவான பின் அவர்கள் இந்தக் கூட்டணியை உடைத்தனர்; பிறகு 1918 ஜூலையில் ஆயுதமேந்திக் கலகம் செய்யும் அளவுக்கும், பின்னர் எங்களை எதிர்த்து ஆயுதப் போராட்டம் நடத்தும் அளவுக்கும் சென்றனர்.

ஆகவே ஜெர்மன் இடதுசாரிகள், ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டியானது சுயேச்சையாளர்களுடன் (ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சியான காவுத்ஸ்கிவாதிகளுடன்) கூட்டணி நிறுவிக் கொள்ளும் கருத்தை ஆதரித்ததற்காக அதனைத் தாக்குவது எங்கள் அபிப்பிராயத்தில் முற்றிலும் அர்த்தமற்றதாகும். **தவறு இழைப்பது** ''இடதுசாரிகளே'' என்பது நன்கு விளங்குகிறது. ருஷ்யாவிலுங்கூட ஜெர்மன் ஷெய்டெமன்களுக்கு இணையான வலதுசாரி மென்ஷிவிக்குகளும் (கேரென்ஸ்கி அரசாங்கத்தில் பங்கு கொண்டவர்கள்), ஜெர்மன் காவுத்ஸ்கிவாதிகளுக்கு இணையாகவும் வலதுசாரி மென்ஷிவிக்குகளுக்கு எதிராளிகளாகவும் அமைந்த இடதுசாரி

மென்ஷிவிக்குகளும் (மார்த்தவ்) இருந்து வந்தனர். தொழிலாளி வெகுஜனங்கள் மென்ஷிவிக்குகளின் பக்கமிருந்து படிப்படியாக போல்ஷிவிக்குகளின் பக்கம் வந்தனர் என்பதை 1917ல் தெளிவாகக் காண முடிந்தது. 1917 ஜூனில் நடைபெற்ற சோவியத்துகளின் முதலாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசில் எங்களுக்கு 13 சதவீதமான வாக்குகளே கிடைத்தன. சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் பெரும்பான்மை பெற்றிருந்தனர். சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரசில் (பழைய முறைப்படி 1917 அக்டோபர் 25) எங்களுக்கு 51 சதவீதமான வாக்குகள் கிடைத்தன. ஜெர்மனியில் தொழிலாளர்கள் இதே போலவும் இதற்கு முழுதொத்த முறையிலும் வலதுசாரிகளின் பக்கமிருந்து இடதுசாரிகளின் பக்கத்துக்கு வந்ததானது, உடனே கம்யூனிஸ்டுகளைப் பலப்படுத்தாமல், இடைநிலையிலிருந்த சுயேச்சைக் கட்சியையே—இக்கட்சி எக்காலத்திலும் சுயேச்சையான அரசியல் கருத்துக்களோ, சுயேச்சையான கொள்கையோ இல்லாமல் ஷெய்டெமன்களுக்கும் கம்யூனிஸ்டுகளுக்குமிடையே ஊசலாடிய வண்ணமிருந்த போதிலுங்கூட—முதலில் பலப்படுத்தியதன் காரணம் என்ன?

கண்கூடான காரணங்களில் ஒன்று ஜெர்மன் கம்யூனிஸ்டுகளுடைய தவறான போர்த்தந்திரமாகும். இவர்கள் அச்சமின்றியும் நேர்மையுடனும் இந்தப் பிழையை ஏற்றுக்கொண்டு இதனைத் திருத்திக் கொள்ளக் கற்றுக் கொண்டாக வேண்டும். பிற்போக்கான முதலாளித்துவ நாடாளுமன்றத்திலும் பிற்போக்கான தொழிற் சங்கங்களிலும் பங்கெடுத்துக் கொள்வதன் அவசியத்தை இவர்கள் மறுத்ததில் இந்தத் தவறு அடங்கியிருந்தது; ''இடதுசாரி'' இளம் பருவக் கோளாறின் எண்ணற்ற வெளிப்பாடுகளில் இது அடங்கியிருந்தது. இந்த ''இடதுசாரி'' இளம் பருவக் கோளாறு இப்பொழுது வெளியே தெரியும்படி வெளிப்பட்டுவிட்டது; இதனால் இது முன்னிலும் தீர்க்கமாகவும் விரைவாகவும் உடலுக்கு இன்னும் கூடுதலான அனுகூலம் உண்டாகும் முறையிலும் குணப்படுத்தப்படும்.

ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சி ஒருபடித் தான அமைப்பல்ல என்பது கண்கூடு. பழைய சந்தர்ப்ப வாதத் தலைவர்களுடன் (காவுத்ஸ்கியும் ஹில்ஃபர்டிங்கும் மற்றும் கணிச அளவுக்கு கிரிஸ்பினும் லெடெபுரும் ஏனை யோரும்) கூடவே—இவர்கள் சோவியத் ஆட்சியதிகாரத் துக்கும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்குமுள்ள முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ளவும் பாட்டாளி வர்க் கத்தின் புரட்சிப் போராட்டத்துக்குத் தலைமை தாங்கவும் தமக்கு ஆற்றலில்லை என்பதை வெளிப்படுத்திக் கொண்டு விட்டனர்—இக்கட்சியினுள் இடதுசாரி, பாட்டாளி வர்க்கப் பிரிவு ஒன்றும் தோன்றியுள்ளது; இது மிக வேகமாய் வளர்ந்து வருகிறது. இக்கட்சியின் உறுப்பினர்களில் லட்சக் கணக்கானோர் (இது சுமார் ஏழரை லட்சம் உறுப்பினர் களைக் கொண்டதென்று நினைக்கிறேன்), ஷெய்டெமனை விட் டொழித்து மிக வேகமாய்க் கம்யூனிசத்தின் பக்கத்துக்கு மாறி வந்து கொண்டிருக்கும் பாட்டாளிகளாவர். இந்தப் பாட்டாளி வர்க்கப் பிரிவு, இக்கட்சி உடனடியாகவும் நிபந்தனையின்றியும் மூன்றாவது அகிலத்துடன் இணைந்துவிட வேண்டுமென்று ஏற்கெனவே—சுயேச்சையாளர்களின் லைப்சிக் காங்கிரசில் (1919)—பிரேரணை செய்திருக்கிறது. இக்கட்சியின் இந்தப் பிரிவுடன் ''சமரசம்'' செய்து கொள்ள அஞ்சுவது நிச்சயம் நகைக்கத் தக்கதே ஆகும். இதற்கு மாறாக, அவர்களுடன் பொருத்தமான ஒரு சமரசத்தைத் தேடிக் கண்டுபிடிப்பது கம்யூனிஸ்டுகளுக்குள்ள கடமை ஆகும். இந்தச் சமரசம் ஒரு புறத்தில் இப்பிரிவினருடன் அவசியமான முழுமையான இணைப்புக்கு உதவுவதாகவும், அதனைத் துரிதப்படுத்துவதாகவும், மறு புறத்தில் சுயேச்சை யாளர்களின் சந்தர்ப்பவாத வலதுசாரிப் பிரிவினரை எதிர்த்து கம்யூனிஸ்டுகள் நடத்தும் சித்தாந்த, அரசியல் போராட்டத்துக்கு எவ்வகையிலும் ஊறு செய்யாததாக வும் இருத்தல் வேண்டும். சமரசத்திற்கான தக்க வடிவத்தை வகுத்துக் கொள்வது எளியதாய் இல்லாமல் இருக்கலாம்—ஆனால் ஜெர்மன் தொழிலாளர்களும் ஜெர் மன் கம்யூனிஸ்டுகளும் ''எளிய'' வழியில் வெற்றியை

வந்தடைந்து விடலாமென வாக்குறுதி அளிப்போர் எத்தர்களாகவே இருப்பார்கள்.

பாட்டாளி வர்க்கத்தாருக்கும் அரைகுறைப் பாட்டாளி வர்க்கத்தாருக்கும் (பகுதியளவுக்குத் தமது உழைப்பாற்றலை விற்றுப் பிழைப்பவர்கள்), அரைகுறைப் பாட்டாளி வர்க்கத்தாருக்கும் சிறு விவசாயிகளுக்கும் (சிறு கைவினைஞருக்கும், கைத்தொழிலாளருக்கும், பொதுவாகச் சிறு உடைமையாளருக்கும்), சிறு விவசாயிகளுக்கும் நடுத்தர விவசாயிகளுக்கும், இன்ன பிற பகுதியோருக்கும் இடைப்பட்ட ஏராளமான பல்வேறு வகையோராலும் "தூய்மையான" பாட்டாளி வர்க்கம் சூழப்பட்டிராவிடில், பாட்டாளி வர்க்கமே கூட அதிக வளர்ச்சி பெற்ற பகுதியாகவும் அவ்வளவாக வளர்ச்சி பெறாத பகுதியாகவும் பிரிக்கப்பட்டிராவிடில், பிரதேசம், தொழில், சில நேரங்களில் மதத்தின் அடிப்படையிலும், பிற வழிகளிலும் அது பிரிக்கப்பட்டிராவிடில், முதலாளித்துவம் முதலாளித்துவமாய் இராது. கம்யூனிஸ்டுக் கட்சியானது—பாட்டாளி வர்க்கத்தின், வர்க்க உணர்வு கொண்ட அதன் பகுதியின் முன்னணிப் படையான கம்யூனிஸ்டுக் கட்சியானது—வளைந்து கொடுப்பதும், பாட்டாளி வர்க்கத்தாரின் பல்வேறு தொகுப்புகளுடனும், தொழிலாளர்கள், சிறு உடைமையாளர்களின் பல்வேறு கட்சிகளுடனும் இணக்கத்துக்கு வருவதும், சமரசங்கள் செய்து கொள்வதும் அவசியம் என்பது, அத்தியாவசியம் என்பது இவை யாவற்றிலிருந்தும் பெறப்படுகிறது. இந்தப் போர்த்தந்திரங்களைப் பாட்டாளிகளின் வர்க்க உணர்வின் பொது நிலையையும், புரட்சிகர மனப்பான்மையையும், போராடுவதற்கும் வெற்றியடைவதற்குமான ஆற்றலையும் உயர்த்தும் பொருட்டு—குறைக்கும் பொருட்டல்ல—எப்படி அனுசரிப்பதென்பது தெரிந்திருக்க வேண்டியது இன்றியமையாததாகும். போல்ஷிவிக்குகள் மென்ஷிவிக்குகள்மீது வெற்றி காண்பதற்கு, 1917 அக்டோபர் புரட்சிக்கு முன்பு மட்டுமின்றி, அதற்குப் பிற்பாடுங்கூட வளைந்து கொடுத்து மாற்றமைவு செய்தலும் இணக்கங்களும் சமரசங்களும் செய்து கொள்வதுமாகிய

போர்த்தந்திரங்கள் அவசியமாயிருந்தன என்பதை இங்கு குறிப்பிட வேண்டும். ஆனால் வளைந்து கொடுத்து மாற்றமைவு செய்தலும் சமரசங்களும் மென்ஷிவிக்குகளைப் பலவீனப்படுத்திப் போல்ஷிவிக்குகளுக்குத் துணை புரியத் தக்கனவாகவும், போல்ஷிவிக்குகளை ஆக்கம் பெறச் செய்து உறுதியாக்கத் தக்கனவாகவும் இருந்தன என்பதைக் கூறத் தேவையில்லை. குட்டிமுதலாளித்துவ ஜனநாயக வாதிகள் (மென்ஷிவிக்குகள் அடங்கலாய்) முதலாளித்துவ வர்க்கத்துக்கும் பாட்டாளி வர்க்கத்துக்குமிடையே, முதலாளித்துவ ஜனநாயகத்துக்கும் சோவியத் ஆட்சிய மைப்புக்குமிடையே, சீர்திருத்தவாதத்துக்கும் புரட்சி வாதத்துக்குமிடையே, தொழிலாளர்களிடமுள்ள நேயத் துக்கும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்திடமுள்ள அச்சத் துக்குமிடையே, இன்ன பிறவற்றுக்குமிடையே தவிர்க்க முடியாதவாறு ஊசலாடுகின்றனர். கம்யூனிஸ்டுகளுடைய சரியான போர்த்தந்திரம் இந்த ஊசலாட்டங்களைப் பயன்படுத்திக் கொள்வதிலே அடங்கியிருக்கிறதே அன்றி, அவற்றை உதாசீனப்படுத்துவதில் அல்ல. இவற்றைப் பயன் படுத்திக் கொள்வதெனில், பாட்டாளி வர்க்கத்தின் பக்கம் வரும் பகுதியோருக்கு—அவர்கள் பாட்டாளி வர்க்கத்தின் பக்கம் வரும் போதும், எந்த அளவுக்கு வருகிறார்கள் என் பதற்கு ஏற்பவும்—சலுகைகள் தருவதும், இவற்றுடன் கூடவே, முதலாளித்துவ வர்க்கத்தின் பக்கம் செல்வோரை எதிர்த்துப் போராடுவதும் அவசியமாகி விடுகின்றன. பிழை யற்ற போர்த்தந்திரத்தைச் செயல்படுத்தியதன் விளைவாய் எங்கள் நாட்டில் மென்ஷிவிசம் சிதையத் தொடங்கி, மேலும் மேலும் சிதைந்து வந்திருக்கிறது; பிடிவாதமா யிருந்த சந்தர்ப்பவாதத் தலைவர்கள் தனிமைப்படுத்தப் பட்டு வருகிறார்கள்; சிறந்த தொழிலாளர்களும் குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகளில் சிறந்த பகுதியோரும் எங்களுடைய முகாமுக்குக் கவர்ந்திழுக்கப்படுகிறார்கள். இது நீண்ட நெடிய நிகழ்ச்சிப்போக்கு. ''சமரசங்கள் கூடவே கூடாது, வளைந்து கொடுத்து மாற்றமைவு செய்தல் கூடவே கூடாது'' என்ற அவசர ''முடிவு'' புரட்சி

கரப் பாட்டாளி வர்க்கத்தின் செல்வாக்கு பலம் பெறுவதற்கும், அதன் சக்திகள் வளர்ந்து பெருகுவதற்கும் குந்தகமே விளைவிக்கும்.

கடைசியாக, ஜெர்மன் ''இடதுசாரிகளின்'' சந்தேகத்துக்கு இடமில்லாத தவறுகளில் ஒன்று, வெர்சேய் உடன்படிக்கையை[46] ஏற்க அவர்கள் அடியோடு மறுப்பதில் அடங்கியுள்ளது. இந்தக் கருத்தோட்டம் எவ்வளவுக்கு எவ்வளவு ''பலமாகவும்'', ''தடபுடலாகவும்'', எவ்வளவுக்கு எவ்வளவு ''அழுத்தம் திருத்தமாகவும்'' முடிவாகவும் எடுத்துரைக்கப்படுகிறதோ (உதாரணமாய் கா. ஹோர்னெரால்), அவ்வளவுக்கு அவ்வளவு அது அர்த்தமற்றதாகவே தோன்றுகிறது. ஆன்டான்ட் அரசுகளை எதிர்த்து போர் புரிய ஜெர்மன் முதலாளித்துவ வர்க்கத்துடன் கூட்டு அமைத்துக் கொள்ள வேண்டுமெனக் கூறும் அளவுக்குச் சென்றுவிட்ட ''தேசிய போல்ஷிவிசத்தின்'' (லௌபென்பெர்கும் ஏனையோரும்) படுமோசமான மடத்தனத்தை நிராகரித்தால் மட்டும், சர்வதேசப் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் தற்போதைய நிலைமைகளில் போதாது. சோவியத் ஜெர்மனி (ஜெர்மன் சோவியத் குடியரசு ஒன்று விரைவில் தோன்றுமெனக் கொள்வோமாயின்) வெர்சேய் உடன்படிக்கையைச் சில காலத்துக்கு அங்கீகரிக்க வேண்டியிருக்கும், அதற்குப் பணிய வேண்டியிருக்கும் என்பதை ஒத்துக் கொள்ள மறுப்பது முற்றிலும் தவறான போர்த்தந்திரமாகும் என்பதை உணர்ந்தாக வேண்டும். ஆனால் சுயேச்சையாளர்கள் — அரசாங்கத்தில் ஷெய்டெமன்கள் பங்கு கொண்டு வந்த ஒரு காலத்தில், ஹங்கேரியில் சோவியத் ஆட்சியதிகாரம் இன்னும் கவிழ்க்கப்பட்டுவிடாத போது, வியன்னாவில் சோவியத் புரட்சி ஒன்று ஏற்பட்டு அது சோவியத் ஹங்கேரிக்கு ஆதரவு அளிப்பது இன்னமும் சாத்தியமாகவே இருந்து வந்த போது— வெர்சேய் உடன்படிக்கை கையெழுத்திடப்பட வேண்டுமென்ற கோரிக்கையை முன்வைத்ததானது அப்போதைய சூழ்நிலைமைகளில் சரியானதே என்பதாக இதிலிருந்து பெறப்பட்டுவிடவில்லை. அப்பொழுது ''சுயேச்சையாளர்கள்''

வளைந்து கொடுத்து மாற்றமைவு செய்து கொண்ட முறை படுமோசமாய் இருந்தது. ஏனெனில் அவர்கள் துரோகிகளான ஷெய்டெமன்களுக்கு அனேகமாய்த் தாமே பொறுப்பேற்றுக் கொண்டுவிட்டனர்; ஷெய்டெமன்களை எதிர்த்து உக்கிரமான (சிறிதும் அசங்காமல் நிதானமாய் நடத்தப்பட வேண்டிய) வர்க்கப் போராட்டத்துக்காகப் பாடுபடாமல், ''வர்க்கமற்ற'', அல்லது ''வர்க்கத்துக்கு அப்பாற்பட்ட'' கண்ணோட்டத்துக்குப் பாடுபடும் நிலைக்கு அனேகமாய்ச் சரிந்து சென்று விட்டனர்.

ஆனால் தற்போதைய சூழ்நிலையில் ஜெர்மன் கம்யூனிஸ்டுகள், கம்யூனிசம் வெற்றிவாகை சூடுமாயின் வெர்சேய் உடன்படிக்கையை நிராகரித்து விடுவோமென்ற நேரடியான, திட்டவட்டமான வாக்குறுதி அளிப்பதன் மூலம் தமக்குச் செயல் சுதந்திரம் இல்லாதபடிச் செய்து கொண்டு விடக் கூடாதென்பது தெளிவு. அவ்வாறு செய்வது மடமையாகும். அவர்கள் இவ்வாறே சொல்ல வேண்டும்: ஷெய்டெமன்களும் காவுத்ஸ்கிவாதிகளும் பல துரோகச் செயல்கள் புரிந்து, சோவியத் ருஷ்யாவுடனும் சோவியத் ஹங்கேரியுடனும் கூட்டணி ஏற்படும் சந்தர்ப்பங்களை தடுத்து வந்தனர் (ஓரளவுக்கு அவற்றைப் பாழ்படுத்தியும் விட்டனர்). கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் இத்தகைய கூட்டணி ஏற்படுவதற்கு **உதவியாகவும்,** அதற்கு **வழி வகுக்கவும்** எங்களால் இயன்றது அனைத்தையும் செய்வோம். ஆயினும் என்ன நேர்ந்தாலும் வெர்சேய் உடன்படிக்கையை நிராகரிப்போமென்றோ, உடனடியாகவே அவ்வாறு செய்வோமென்றோ, எவ்வகையிலும் நாங்கள் பொறுப்பேற்கவில்லை. அது வெற்றிகரமாய் நிராகரிக்கப்படுவதற்கான சாத்தியப்பாடு சோவியத் இயக்கம் ஜெர்மனியில் மட்டுமின்றி சர்வதேச அளவிலும் காணும் வெற்றிகளையே பொறுத்திருக்கும். ஷெய்டெமன்களும் காவுத்ஸ்கிவாதிகளும் இந்த இயக்கத்துக்குக் குந்தகம் புரிந்து வந்துள்ளனர்; நாங்கள் இதற்குத் துணை புரிந்து வருகிறோம். இதுவே இவ்விவகாரத்தின் சாரப்பொருள்; அடிப்படையான வேறுபாடு இதில்தான் அடங்கியுள்ளது. எங்களுடைய வர்க்கப்

பகைவர்களான சுரண்டலாளர்களும் அவர்களது ஷெய்டெமன், காவுத்ஸ்கிவாத அடிவருடிகளும் ஜெர்மன் சோவியத் இயக்கத்தையும் சர்வதேச சோவியத் இயக்கத்தையும் ஜெர்மன் சோவியத் புரட்சியையும் சர்வதேச சோவியத் புரட்சியையும் பலப்படுத்துவதற்கான பல வாய்ப்புகளை நழுவவிட்டுவிட்ட குற்றம் அவர்களையே சாரும். ஜெர்மனியில் நடைபெறும் சோவியத் புரட்சி சர்வதேச சோவியத் இயக்கத்தை வலுப்பெறச் செய்யும். இவ்வியக்கம் வெர்சேய் உடன்படிக்கைக்கும் பொதுவில் சர்வதேச ஏகாதிபத்தியத்துக்கும் எதிரான வலிமை மிக்க அரணும் (நம்பகமான, தகர்க்க இயலாத, உலகு தழுவிய ஒரே அரணும்). வெர்சேய் உடன்படிக்கையிலிருந்து விடுதலை பெறுவதற்கு முழுமையான, திட்டவட்டமான, உடனடியான முதல் முக்கியத்துவம் அளிப்பதானது, அதுவும் ஏகாதிபத்தியத்தால் ஒடுக்கப்பட்டுள்ள பிற நாடுகளை ஏகாதிபத்தியத் தளைகளிலிருந்து விடுவிக்கும் பிரச்சினைக்கும் முன்னதான முதல் முக்கியத்துவம் அளிப்பதானது அற்பத்தனமான குட்டிமுதலாளித்துவத் தேசியவாதமாகும்; இது புரட்சிகர சர்வதேசியத்துக்குப் பொருந்தாது (காவுத்ஸ்கிகளுக்கும் ஹில்ஃபர்டிங்குகளுக்கும் ஓட்டோ பௌவர்களுக்கும் இவர்களைச் சேர்ந்த கும்பல்களுக்கும் தான் பொருந்தும்). ஜெர்மனி அடங்கலான பெரிய ஐரோப்பிய நாடுகளில் எதிலும் முதலாளித்துவ வர்க்கம் வீழ்த்தப்படுவதானது சர்வதேசப் புரட்சிக்கு மிகப் பெரியதோர் ஆதாயமாய் இருக்குமாதலால், இதன் பொருட்டு வெர்சேய் உடன்படிக்கை மேலும் அதிக காலத்துக்கு நீடிக்க ஒத்துக் கொள்ளலாம் என்பதுடன், அவசியமாய் இருக்குமானால் ஒத்துக் கொள்ளவும் வேண்டும். தனித்து நிற்கும் ருஷ்யாவால் புரட்சியின் அனுகூலத்துக்காக வேண்டி பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் உடன்படிக்கையைப் பல மாதங்களாய்ச் சகித்துக் கொள்ள முடியும் போது, சோவியத் ருஷ்யாவுடன் கூட்டணி கொண்டுள்ள ஒரு சோவியத் ஜெர்மனியால் வெர்சேய் உடன்படிக்கை இருப்பதை புரட்சியின் அனுகூலத்துக்காக வேண்டி, மேலும் அதிக காலத்துக்குச் சகித்துக் கொள்வது அசாத்தியமானதல்ல.

பிரான்ஸ், பிரிட்டன் முதலானவற்றின் ஏகாதிபத்திய வாதிகள் ஜெர்மன் கம்யூனிஸ்டுகளைக் கிளர்த்திவிட்டுத் தமது கண்ணியில் சிக்க வைக்க எத்தனிக்கின்றனர்; ''வெர் சேய் உடன்படிக்கையில் கையெழுத்திட மாட்டோமெனச் சொல்லுங்கள்!'' என்று அவர்கள் தூண்டிவிடுகின்றனர். இடதுசாரி கம்யூனிஸ்டுகள், சூழ்ச்சிமிக்க, தற்போது அதிக பலம் படைத்த பகைவனுக்கு எதிராய்ச் சாமர்த்தியமாய்த் தந்திரம் புரிந்து, ''இப்பொழுது வெர்சேய் உடன்படிக்கை யில் கையெழுத்திடுகிறோம்'' என்று அப்பகைவனிடம் சொல்வதற்குப் பதிலாய், அவர்களுக்காக வைக்கப் பட்டிருக்கும் கண்ணிக்குள் குழந்தைகளைப் போல் சென்று சிக்கிக் கொள்கிறார்கள். நமக்குச் செயல் சுதந்திரம் இல் லாதபடி முன்கூட்டியே செய்து கொள்வதும், தற்போது நம்மைக் காட்டிலும் அதிக ஆயுத பலங் கொண்ட பகை வனுக்கு, நாம் அவனை எதிர்த்துப் போராடப் போகிறோமா, எப்பொழுது போராடுவோம் என்பதை எல்லாம் பகிரங்க மாக அறிவிப்பதும் புரட்சிவாதமாகாது; அசட்டுத்தனமே ஆகும். நமக்கல்லாமல் பகைவனுக்கே நிலைமை அனு கூலமாயிருக்கிறதென்பது நன்றாய்த் தெரியும் ஒரு நேரத் தில் போரை ஏற்றுக் களம் புகுவது பெரும் குற்றமாகும். புரட்சிகர வர்க்கத்தின் அரசியல் தலைவர்கள், தெளி வாகவே பிரதிகூலமாயுள்ள ஒரு போரில் தட்டிக் கழிக்கும் படியான செயலில் இறங்கும் பொருட்டு ''வளைந்து கொடுத்து மாற்றமைவு செய்யவோ, இணக்கமும் சமரச மும் காணவோ'' முற்படும் ஆற்றலில்லாதவர்களாய் இருப்பார்களாயின், அவர்கள் முற்றிலும் உதவாக்கரைத் தலைவர்களே ஆவர்.

## 9

## பிரிட்டனில் ''இடதுசாரி'' கம்யூனிசம்

பிரிட்டனில் இன்னமும் கம்யூனிஸ்டுக் கட்சி இல்லை. ஆனால் அங்கு தொழிலாளர்களிடையே சக்தி வாய்ந்த, புத்தம் புதிய, விரிவான, விரைவாய் வளர்ந்து வரும் கம்யூ

னிஸ்டு இயக்கம் இருந்து வருகிறது. இவ்வியக்கம் ஆர்வமிக்க நன்னம்பிக்கை ஊட்டுவதாயுள்ளது. கம்யூனிஸ்டுக் கட்சியை அமைத்துக் கொள்ள விரும்பும்—இந்நோக்கத்துடன் ஏற்கெனவே தம்மிடையே பேச்சுவார்த்தைகள் நடத்திவரும்—சில அரசியல் கட்சிகளும் நிறுவனங்களும் (பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சி,[47] சோஷலிஸ்டுத் தொழிற் கட்சி, தெற்கு வேல்ஸ் சோஷலிஸ்டுக் கழகம், தொழிலாளர் சோஷலிஸ்டுச் சம்மேளனம்[48]) அங்கு இருக்கின்றன. இவற்றில் கடைசியில் குறிக்கப்பட்ட நிறுவனத்தின் வார வெளியீடான தி ஒர்க்கர்ஸ் டிரட்னுட்டில்[49] (மலர் 6, இதழ் 48, 1920 பிப்ரவரி 21) ''கம்யூனிஸ்டுக் கட்சியை நோக்கி'' என்னும் தலைப்பில் அதன் ஆசிரியரான தோழர் சில்வியா பான்க்ஹர்ஸ்டின் கட்டுரை ஒன்று வெளியாகியிருந்தது. மூன்றாவது அகிலத்துடன் இணைப்பு பெறுதல், நாடாளுமன்ற முறைக்குப் பதிலாய் சோவியத் முறையை ஏற்றுக் கொள்ளுதல், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை ஏற்றுக் கொள்ளுதல் ஆகியவற்றின் அடிப்படையில் ஒன்றுபட்ட ஒரு கம்யூனிஸ்டுக் கட்சியை அமைப்பதற்காக மேற்கூறிய நான்கு நிறுவனங்களிடையே நடைபெறும் பேச்சுவார்த்தைகளைப் பற்றி இக்கட்டுரை எடுத்துரைக்கிறது. நாடாளுமன்றத்தில் பங்கெடுத்துக் கொள்வதா, புதிய கம்யூனிஸ்டுக் கட்சியானது பெருமளவுக்குத் தொழிற் சங்கங்களாலான பழைய, தொழிற்சங்கவாத, சந்தர்ப்பவாத, சமூக-தேசியவெறிவாதத் தொழிற் கட்சியுடன் இணைய வேண்டுமா என்னும் பிரச்சினைகள் குறித்து ஏற்பட்ட கருத்து வேறுபாடு, ஒன்றுபட்ட கம்யூனிஸ்டுக் கட்சி உடனடியாக அமைக்கப்படுவதற்கு மிகப் பெரிய தடை மதில்களில் ஒன்றாய் இருப்பதாகத் தெரிய வருகிறது. தொழிலாளர் சோஷலிஸ்டுச் சம்மேளனமும் சோஷலிஸ்டுத் தொழிற் கட்சியும்* நாடாளுமன்றத் தேர்தல்

* இக்கட்சி தொழிற் கட்சியுடன் இணைவதை எதிர்க்கிறது; ஆனால் நாடாளுமன்றத்தில் பங்கு கொள்வதை இதன் உறுப்பினர்கள் எல்லோரும் எதிர்க்கவில்லை என்று நினைக்கிறேன்.

களிலும் நாடாளுமன்றத்திலும் பங்கு கொள்வதை எதிர்க்கின்றன; தொழிற் கட்சியுடன் இணைவு பெறுவதையும் அவை எதிர்க்கின்றன. இக்கட்சிகளைச் சேர்ந்தோர் இதில் பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சி உறுப்பினர்கள் அனைவருடனும், அல்லது மிகப் பெருவாரியோருடனும் கருத்து வேறுபாடு கொண்டிருக்கிறார்கள். பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியை அவர்கள் பிரிட்டனிலுள்ள ''கம்யூனிஸ்டுக் கட்சிகளின் வலதுசாரிப் பிரிவாகக்'' கருதுகிறார்கள் (சில்வியா பான்க்ஹர்ஸ்டின் கட்டுரை, பக்கம் 5).

இங்கும் ஜெர்மனியிலும் கருத்து வேறுபாடுகள் வெளியிடப்படும் வடிவங்களிலும் (ஜெர்மனியில் இவ்வடிவம் பிரிட்டனில் இருப்பதைக் காட்டிலும் ''ருஷ்ய'' வடிவத்துக்கு மிகமிக ஒத்ததாய் உள்ளது) வேறு பல விவகாரங்களிலும் மிகுந்த வித்தியாசம் இருப்பினும், பிரதான பிரிவினை இங்கும் ஜெர்மனியில் உள்ளது போலவேதான் இருக்கிறது. ''இடதுசாரிகளின்'' வாதங்களைப் பரிசீலிப்போம்.

நாடாளுமன்றத்தில் பங்கு கொள்ளும் பிரச்சினை குறித்து தோழர் சில்வியா பான்க்ஹர்ஸ்ட் இதே இதழிலுள்ள தோழர் வி. கலாஹரின் [W. Gallacher] கட்டுரை ஒன்றைக் குறிப்பிடுகிறார். தோழர் கலாஹர் கிளாஸ்கோவிலுள்ள ஸ்காட்லாந்து தொழிலாளர் கவுன்சிலின் சார்பில் இக்கட்டுரையை எழுதுகிறார்.

''மேற்கண்ட கவுன்சில் திட்டவட்டமாய் நாடாளுமன்ற-எதிர்ப்பாளராகும்'' என்று அவர் எழுதுகிறார். ''பல்வேறு அரசியல் நிறுவனங்களின் இடதுசாரிப் பிரிவுகள் இதனை ஆதரித்து நிற்கின்றன. நாங்கள் ஸ்காட்லாந்தின் புரட்சிகர இயக்கத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறோம்; தொழில்களில் (பொருளுற்பத்தியின் பல்வேறு கிளைகளிலும்) புரட்சிகர நிறுவனம் ஒன்றை அமைத்திட, சமூக கமிட்டிகளை அடிப்படையாகக் கொண்டு, நாடெங்கிலும் கம்யூனிஸ்டுக் கட்சி ஒன்றை அமைத்திட இடையறாது பாடுபடுகிறோம். நீண்ட காலமாய் நாங்கள் அதிகாரபூர்வமான நாடாளுமன்றவாதிகளுடன் மோதி வந்துள்ளோம். அவர்களை எதிர்த்துப் பகிரங்கப் போர் தொடுப்பது அவசிய

மெனக் கருதாமலே இருந்து வந்துள்ளோம்; அவர்களும் எங்கள் மீது தாக்குதலை ஆரம்பிக்க அஞ்சுகிறுர்கள்.

''ஆனுல் இந்த நிலைமை அதிக காலத்துக்கு நீடிக்க முடியாது. எல்லா முனைகளிலும் நாங்கள் வெற்றி பெற்று வருகிறேம்.

''ஸ்காட்லாந்தில் சுயேச்சைத் தொழிற் கட்சியின் சாதாரண உறுப்பினர்களுக்கு நாடாளுமன்றம் என்னும் கருத்தே மேலும் மேலும் அருவருக்கத் தக்கதாகி வருகிறது. சோவியத்துகள் [ருஷ்யச் சொல் அப்படியே ஆங்கில எழுத்துக்களில் உபயோகிக்கப்படுகிறது] அல்லது தொழிலாளர் கவுன்சில்களை அனேகமாய் ஒவ்வொரு கிளையும் ஆதரிக்கிறது. அரசியலை ஓர் உத்தியோகத் துறையாகக் கொண்டுள்ள கனவான்களுக்கு இது ஆபத்தானதுதான். அவர்கள் தமது உறுப்பினர்களை நாடாளுமன்ற முறைக்குத் திரும்பிவிடும்படி வற்புறுத்த எல்லா வித வழிகளையும் கையாளுகின்றனர். புரட்சிகரத் தோழர்கள் இந்தக் கும்பலுக்கு எவ்வித ஆதரவும் தரக்கூடாது [அழுத்தங்கள் யாவும் கட்டுரை ஆசிரியருடையவை]. இங்கு எங்களது போராட்டம் கடுமையானதாகவே இருக்கும். புரட்சியின்பால் தமக்குள்ள நாட்டத்தைக் காட்டிலும் சொந்தத்தில் தாம் உயர்வடைய வேண்டுமென்ற ஆவலாலேயே அதிகமாய் உந்திவிடப்படுவோரது துரோகம், இதன் மிக மோசமான கூறுகளில் ஒன்ருய் இருக்கும். நாடாளுமன்ற முறைக்கு எவ்விதத்திலும் ஆதரவளிப்பதானது, நமது பிரிட்டிஷ் ஷெய்டெமன்களையும் நோஸ்கேகளையும் அதிகாரத்தில் அமர்த்துவதற்குத்தான் உதவியாக இருக்கும். ஹெண்டர்சன், கிளைனஸ் [Clynes] முதலானேர் பழுத்த பிற்போக்காளர்கள். சுயேச்சைத் தொழிற் கட்சியின் தலைமை மேலும் மேலும் முதலாளித்துவ வர்க்க மிதவாதிகளின் பிடிக்குள் வந்து கொண்டிருக்கிறது. இவர்கள் திருவாளர்கள் மாக்டொனல்ட், ஸ்னேடன் முதலானேரின் முகாமினுள் தமக்கு 'ஆன்மீக இருப்பிடம்' தேடிக் கொண்டுவிட்டனர். சுயேச்சைத் தொழிற் கட்சியின் தலைமை மூன்ருவது அகிலத்தின் மீது தீராப் பகை கொண்டுள்ளது; ஆனுல் கட்சியின் சாதாரண உறுப்பினர்கள் அதனை ஆதரிக்கின்றனர். நாடாளுமன்ற சந்தர்ப்பவாதிகளுக்கு எவ்வகையிலும் ஆதரவு அளிப்பதானது அவர்களுடைய கண்ணியில் சிக்குவதாகவே இருக்கும். பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சி இங்கு எவ்விதத்திலும் பொருட்படுத்தக் கூடியதாய் இல்லை.... இங்கு எமக்கு வேண்டியது நம்பகமான புரட்சி

கரத் தொழிலாளர் நிறுவனமும் தெளிவான, நிர்ணய மான, விஞ்ஞான வழிகளில் இயங்கும் ஒரு கம்யூனிஸ்டுக் கட்சியும்தான். இவற்றை அமைப்பதற்கு எமது தோழர் களால் எங்களுக்கு உதவு முடிந்தால், அவர்களுடைய உதவியை நாங்கள் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்வோம்; அவர்களால் உதவ முடியவில்லையானல், கடவுள் புண்ணி யத்தில் அவர்கள் முற்றிலும் வெளியிலேயே இருக்கட்டும்; உள்ளே வந்து பிற்போக்காளர்களுக்குத் தமது ஆதரவை அளிப்பதன் மூலம் புரட்சிக்குத் துரோகம் இழைக்க வேண்டாம். இந்தப் பிற்போக்காளர்கள் நாடாளுமன்றச் 'சிறப்புகள்' (?) [கேள்விக் குறி கட்டுரை ஆசிரியருடையது] பெற வேண்டுமென்று துடித்துக் கொண்டிருக்கிறார்கள்; 'எஜமானர்' வர்க்க அரசியல்வாதிகளைப் போலவே தம் மாலும் திறமையாக ஆட்சி நடத்த முடியும் என்று நிரூபிக்க அடங்காத ஆவல் கொண்டுள்ளனர்.''

ஆசிரியருக்கு எழுதப்பட்ட இந்தக் கடிதம், என் னுடைய அபிப்பிராயத்தில், இளங் கம்யூனிஸ்டுகள் அல்லது இப்பொழுதுதான் கம்யூனிசத்தை ஏற்கத் தொடங்கியுள்ள சாதாரணத் தொழிலாளர்களின் மனப்பாங்கையும் கண் ணோட்டத்தையும் நன்கு வெளியிடுகிறது. இந்த மனப் பாங்கு மிகுந்த மனநிறைவு தருவதும் மதிப்பிடற்கரியதும் ஆகும். இதனைப் பாராட்டவும் இதற்கு ஆதரவளிக்கவும் நாம் தெரிந்து கொண்டாக வேண்டும். ஏனெனில் இது இல்லையேல், பிரிட்டனிலோ, ஏன் வேறு எந்த நாட்டிலுமோ, பாட்டாளி வர்க்கப் புரட்சி வெற்றி பெறுமென எதிர் பார்க்க வழியில்லாமற் போய்விடும். வெகுஜனங்களது இந்த மனப்பான்மையை வெளியிட்டுக் காட்டக் கூடியவர் களுக்கு, இத்தகைய மனப்பான்மையை வெகுஜனங் களிடையே உசுப்பிவிடக் கூடியவர்களுக்கு (அடிக்கடி இது உறங்கிய நிலையிலும் உள்மனத்துக்குரியதாகவும் உள்ள டங்கியதாகவும் இருந்து விடுகிறது) பாராட்டு தெரிவித்து எல்லா வித உதவியும் அளித்திட வேண்டும். அதேபோ தில், மாபெரும் புரட்சிப் போராட்டத்தில் வெகுஜனங் களுக்குத் தலைமை தாங்குவதற்கு மனப்பாங்கு மட்டும் இருந்தால் போதாது என்பதையும், புரட்சி இலட்சியத்

தில் அளவிலா ஈடுபாடு கொண்டவர்கள் புரியப் போகும் அல்லது புரிந்து வரும் சில தவறுகளால் புரட்சி இலட்சியத்துக்குத் தீங்கு ஏற்படக்கூடும் என்பதையும் ஒளிவு மறைவின்றி பகிரங்கமாக அவர்களுக்கு நாம் கூற வேண்டும். ஜெர்மன் ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள் புரிந்து வரும், 1908லும் 1918லும் ருஷ்ய ''இடதுசாரி'' போல்ஷிவிக்குகள் புரிந்த எல்லாத் தவறுகளுக்குமான கருக்களும் தோழர் கலாஹரின் கடிதத்தில் காணக்கிடக்கின்றன.

இந்தக் கடிதத்தின் ஆசிரியரிடம் முதலாளித்துவ ''வர்க்க அரசியல்வாதிகள்'' பால் புனிதமான, பாட்டாளி வர்க்க வெறுப்புணர்ச்சி நிரம்ப இருக்கிறது (ஆனால் பாட்டாளி வர்க்கத்தினர் மட்டுமின்றி எல்லா உழைப்பாளி மக்களுமே, ஜெர்மன் தொடரை உபயோகிப்பதானால் ''சிறு மனிதர்கள்'' யாவருமே இந்த வெறுப்புணர்ச்சியைப் புரிந்து கொள்கிறார்கள், இதனால் ஈர்க்கப்படுகிறார்கள்). ஒடுக்கப்படும், சுரண்டப்படும் வெகுஜனங்களின் பிரதிநிதி ஒருவரிடத்து இந்த வெறுப்புணர்ச்சி உண்மையில் ''அனைத்து அறிவின் ஆரம்பம்'' ஆகும்; எந்த ஒரு சோஷலிச, கம்யூனிச இயக்கத்திற்கும் அதன் வெற்றிக்குமான அடிப்படை ஆகும். ஆனால் அரசியல் என்பது ஒரு விஞ்ஞானமும் கலையுமாகும், அது அப்படியே ஆகாயத்திலிருந்து வந்து குதித்துவிடுவதோ, வரப்பிரசாதமாய்க் கிடைப்பதோ அல்லவென்பதையும், பாட்டாளி வர்க்கமானது முதலாளித்துவ வர்க்கத்தின்மீது வெற்றி பெற விரும்பினால் அது முதலாளித்துவ அரசியல்வாதிகளுக்கு எவ்விதத்திலும் சப்பையில்லாத தனது சொந்தப் பாட்டாளி ''வர்க்க அரசியல்வாதிகளை'' உருவாக்க வேண்டுமென்பதையும் இக்கடிதத்தின் ஆசிரியர் பார்க்கத் தவறிவிடுகிறார் என்பது தெரிகிறது.

பாட்டாளி வர்க்கம் அதன் குறிக்கோள்களை வந்தடையவகை செய்யும் சாதனம் தொழிலாளர்களது சோவியத்துகளே அன்றி நாடாளுமன்றமல்ல என்பதை இக்கடிதத்தின் ஆசிரியர் நன்கு உணருகிறார். இதுவரை இதனை உணரத் தவறியோர், அவர்கள் மெத்தப் படித்தவர்களாகவும்

மிகுந்த அனுபவமுடைய அரசியல்வாதிகளாகவும் மனப் பூர்வமான சோஷலிஸ்டுகளாகவும் நன்கு கற்றுத் தேர்ந்த மார்க்சியவாதிகளாகவும் நேர்மையான குடிமக்களாகவும் நல்ல தந்தையராகவும் இருந்த போதிலும், கடைந் தெடுத்த பிற்போக்குவாதிகளே ஆவர். ஆனுல் சோவியத்து களுக்கு ஆதரவான அரசியல்வாதிகளை நாடாளுமன்றத்தின் உள்ளே வரச் செய்யாமல், உள்ளிருந்தே நாடாளுமன்ற முறையைச் சிதைவுறச் செய்யாமல், நாடாளுமன்றத் தைக் கலைத்திடுவதற்காக சோவியத்துகள் மேற்கொள்ளப் போகும் பணியில் சோவியத்துகளின் வெற்றிக்காக நாடாளுமன்றத்தினுள்ளிருந்து வேலை செய்யாமல், நாடாளு மன்றத்தின் மீது சோவியத்துகள் வெற்றி பெறுவது சாத்தியம்தானு என்று இக்கடிதத்தின் ஆசிரியர் கேட்கவே இல்லை—இவ்வாறு கேட்க வேண்டும் என்ற எண்ணமே அவருக்கு ஏற்படவில்லை. ஆயினும் பிரிட்டனில் கம்யூ னிஸ்டுக் கட்சியானது **விஞ்ஞானக்** கோட்பாடுகளையே ஆதாரமாகக் கொண்டு செயல்பட வேண்டுமென்ற முற்றிலும் சரியான கருத்தை இந்தக் கடிதத்தின் ஆசிரியர் எடுத்துரைக்கிருர். விஞ்ஞானம் முதலாவதாகப் பிற நாடுகளின் அனுபவத்தை—முக்கியமாய் முதலாளித்துவ நாடுகளேயான இந்தப் பிற நாடுகள் இதே மாதிரியான அனுபவத்தைக் கண்டு வருமாயின், அல்லது அண்மையில் கண்டிருக்குமாயின்—கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டு மென்று கோருகிறது; இரண்டாவதாக, அது அந்தந்த நாட் டிலும் செயல்படும் எல்லாச் சக்திகளையும் கோஷ்டிகளை யும் கட்சிகளையும் வர்க்கங்களையும் வெகுஜனங்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், மற்றும் ஒரேவொரு கோஷ்டி அல்லது கட்சியின் விருப்பங்களையும் அபிப்பிராயங்களையும் வர்க்க உணர்வின், போர்க்குணத்தின் நிலையையும் மட்டும் கொண்டு கொள்கையை நிர்ணயித் துவிடக் கூடாதென்றும் கோருகிறது.

ஹெண்டர்சன்களும் கிளைனஸ்களும் மாக்டொனுல்டு களும் ஸ்னேடன்களும் படுமோசமான பிற்போக்காளர் களாய் இருப்பது மெய்தான். அவர்கள் ஆட்சியதிகாரம்

பெற விரும்புகிருர்கள் என்பதும் (முதலாளித்துவ வர்க்கத்துடன் சேர்ந்து கூட்டணி அரசாங்கம் அமைத்துக் கொள்வதில்தான் அதிக நாட்டம் கொண்டுள்ளனர் எனலாம்), பழைய முதலாளித்துவ வழிகளிலேதான் ''ஆட்சி நடத்த'' விரும்புகிருர்கள் என்பதும், ஆட்சியில் அமர்ந்ததும் நிச்சயமாய் ஷெய்டெமன்களையும் நோஸ்கேகளையும் போலவேதான் நடந்து கொள்வார்கள் என்பதும் மெய்தான். இவை யாவும் உண்மையே. ஆயினும் அவர்களுக்கு ஆதரவு அளிப்பதானது புரட்சிக்குத் துரோகம் இழைப்பதாகிவிடுமென்று இவற்றிலிருந்து பெறப்படவே இல்லை. புரட்சியின் நலன்களை உத்தேசித்து, தொழிலாளி வர்க்கப் புரட்சியாளர்கள் இந்தக் கனவான்களுக்கு நாடாளுமன்ற ஆதரவு ஓரளவு அளிக்க வேண்டுமென்பதே இவற்றிலிருந்து பெறப்படும் முடிவு. இந்தக் கருத்தை விளக்கும் பொருட்டு, இன்றைய பிரிட்டிஷ் அரசியல் ஆவணங்கள் இரண்டை எடுத்துரைக்க விரும்புகிறேன்: 1) தலைமை அமைச்சர் லாயிட் ஜார்ஜ் 1920 மார்ச் 18ல் நிகழ்த்திய சொற்பொழிவு (*The Manchester Guardian*,[50] 1920 மார்ச் 19ஆம் தேதி இதழில் தரப்பட்டிருப்பதை எடுத்துக் கொள்கிறேன்), 2)''இடதுசாரி'' கம்யூனிஸ்டான தோழர் சில்வியா பான்க்ஹர்ஸ்ட் மேலே குறிக்கப்பட்ட கட்டுரையில் முன்வைக்கும் வாதங்கள்.

லாயிட் ஜார்ஜ் தமது சொற்பொழிவில், அஸ்குவித்துடனும் (இக்கூட்டத்துக்கு வருமாறு விசேஷ முறையில் அழைக்கப்பட்டிருந்த இவர் வர மறுத்துவிட்டார்), மற்றும் கான்சர்வேட்டிவ்களுடன் கூட்டு சேர்வதற்குப் பதிலாய்த் தொழிற் கட்சியுடன் மேலும் நெருங்கிய உறவுகள் கொள்ளவே விரும்பும் ஏனைய மிதவாதிகளுடனும் வாக்குவாதத்தில் இறங்கினுர். (சுயேச்சைத் தொழிற் கட்சியில் மிதவாதிகள் சேர்ந்து வருகிருர்கள் என்பதை மேலே குறிக்கப்பட்ட கடிதத்தில் தோழர் கலாஹரும் சுட்டிக் காட்டுகிருர்.) மிதவாதிகளுக்கும் கான்சர்வேட்டிவ்களுக்குமிடையே கூட்டணி — அதுவும் நெருங்கிய கூட்டணி — அவசியம் என்று லாயிட் ஜார்ஜ் வாதாடினுர். இல்லா

விட்டால், தொழிற் கட்சி வெற்றியடைய நேர்ந்துவிடும் என்ருர். தொழிற் கட்சியை லாயிட் ஜார்ஜ் ''சோஷலிஸ்டு'' என்பதாக அழைக்க விரும்புகிருர்; உற்பத்திச் சாதனங்களின் ''பொது உடைமைக்காக'' அது பாடுபடுகிறது என்கிருர். ''பிரான்சில் அது கம்யூனிசம் என்பதாகப் பெயர் பெற்றிருக்கிறது'' என்று தன் எதிரே கூடியிருந்த மிதவாத நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு—இது பற்றி அவர்கள் இதற்குமுன் அறியாதவர்கள் போலும் — புரியும்படி ரஞ்சகமான முறையில் பிரிட்டிஷ் முதலாளித்துவ வர்க்கத் தலைவர் எடுத்துரைத்தார். ''ஜெர்மனியில் அது சோஷலிசம் என்று அழைக்கப்பட்டது; ருஷ்யாவில் போல்ஷிவிசம் என்று அழைக்கப்படுகிறது'' என்று மேலும் தொடர்ந்து விளக்கினுர். மிதவாதிகளுக்கு அது கோட்பாட்டு அடிப்படையிலே ஏற்க முடியாத ஒன்று, ஏனெனில் அவர்கள் தனியார் சொத்துடைமைக் கோட்பாட்டினர் என்று லாயிட் ஜார்ஜ் அறிவுறுத்தினுர். ''நாகரிகத்துக்கு ஆபத்து ஏற்பட்டுவிட்டது'' என்று பறைசாற்றினுர்; ஆகவே மிதவாதிகளும் கான்சர்வேட்டிவ்களும் ஒன்றுபட்டாக வேண்டும்....

''...விவசாயப் பிரதேசங்களுக்குச் சென்ருல், பழைய கட்சிப் பிரிவினைகள் எப்பொழுதும் போல வலிமையுடன் இருப்பதைக் காணலாம் என்பதை ஒத்துக் கொள்கிறேன். அவை அபாயத்திலிருந்து தொலைவில் உள்ளன. அங்கு அபாயம் இன்னும் தலைகாட்டவில்லை'' என்று லாயிட் ஜார்ஜ் கூறினுர். ''ஆனுல் விவகாரம் கிராம வட்டாரங்களுக்குப் போய்ச் சேரும் போது இப்பொழுது தொழிற் பகுதிகள் சிலவற்றில் இருப்பது போலவே இந்த அபாயம் அங்கும் பெரிதாகி விடும். இந்நாட்டில் ஐந்தில் நான்கு பகுதி தொழில், வாணிபத் துறைகளைச் சேர்ந்தது; ஐந்தில் ஒரு பகுதிக்கும் குறைவானதே விவசாயத்தைச் சேர்ந்தது. வருங்காலத்தில் இங்கு ஏற்படக் கூடிய அபாயங்களைப் பற்றிச் சிந்திக்கையில் எந்நேரமும் என் மனத்துள் எழுகின்றவற்றில் ஒன்ருகும் இது. பிரான்சில் மக்கள் திரள் விவசாயத் துறையினர் ஆவர்; அதிவேகமாய் மாறிவிடாத, புரட்சி இயக்கங்களால் மிகச் சுலபமாய் ஆவேசமூட்டப் படாத திடமான அபிப்பிராயத் தொகுதி அங்கு இருந்து

வருகிறது. இங்கு அவ்வாறு இல்லை. இந்நாடு உலகில் வேறு எந்த நாட்டையும்விட எளிதில் கவிழ்க்கப்படக் கூடியது; ஆடத் தொடங்கியதும் இங்கு ஏற்படும் முறிவும் அதிர்ச்சியும், இக்காரணத்தினால், எந்த நாட்டிலும் காணக் கூடியதைக் காட்டிலும் மிகக் கடுமையாய் இருக்கும்.''

திரு லாயிட் ஜார்ஜ் மிகவும் கெட்டிக்காரர் என்பதுடன், மார்க்சியவாதிகளிடமிருந்து பலவும் கற்றுக் கொண்டவர் என்பதையும் வாசகர்கள் இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். நாமும் சிலவற்றை லாயிட் ஜார்ஜிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும்.

லாயிட் ஜார்ஜின் சொற்பொழிவுக்குப் பிறகு எழுந்த விவாதத்தின்போது நடைபெற்ற பின்வரும் நிகழ்ச்சி கருத்தூன்றிக் கவனிக்கத்தக்கது:

''திரு வாலஸ் [Wallace], நாடாளுமன்ற உறுப்பினர்: தொழில் துறைத் தொகுதிகளில் ஆலைத் தொழிலாளர்களிடம் இந்தக் கொள்கையால் என்ன விளைவு ஏற்படுமென தலைமை அமைச்சர் கருதுகிறார் என்று கேட்க விரும்புகிறேன். இத்தொழிலாளர்களில் பலரும் தற்போது மிதவாதிகளாவர்; இவர்களிடமிருந்து நமக்கு மிகுதியான ஆதரவு கிடைக்கிறது. தற்போது முழுமனதான நமது ஆதரவாளர்களாய் இருக்கும் இவர்களிடமிருந்து இதன் விளைவாய்த் தொழிற் கட்சி உடனடியாகப் பெரும் பலம் பெற்றுவிடாதா?

''தலைமை அமைச்சர்: நான் முற்றிலும் வேறு விதமான அபிப்பிராயம் கொண்டிருக்கிறேன். மிதவாதிகள் தம்மிடையே சண்டையிட்டுக் கொள்வதானது கணிச எண்ணிக்கையிலான மிதவாதிகளை நம்பிக்கை இழக்கச் செய்து அவர்களைத் தொழிற் கட்சிக்கு ஓடச் செய்கிறது என்பதில் ஐயமில்லை. தொழிற் கட்சியில் மிதவாதிகள் கணிச எண்ணிக்கையில் இருக்கிறார்கள்; இவர்கள் தகுதியும் ஆற்றலும் மிக்கவர்கள்; அரசாங்கத்தை இழிவுபடுத்துவதே இவர்களுடைய வேலையாகிவிட்டது. இதன் விளைவாய்ப் பொதுஜன உணர்ச்சி குறிப்பிடத்தக்க அளவில் தொழிற் கட்சியின் பக்கம் போய்விடுகிறது. வெளியிலுள்ள மிதவாதிகளுக்கு அது போவதில்லை; தொழிற் கட்சிக்குத்தான் போகிறது — துணைத் தேர்தல்கள் இதனைப் புலப்படுத்துகின்றன.''

முதலாளித்துவ வர்க்கத்தின் கூர் அறிவு படைத்த உறுப்பினர்களுங்கூட எவ்வளவு குழப்பமுற்றுவிடுகிருர்கள், தவிர்க்க இயலாதபடி சரி செய்ய முடியாத அசட்டுப் பிழைகள் புரிகின்றனர் என்பதை இந்த வாக்குவாதம் தெளிவாகக் காட்டுவதைப் போகிறபோக்கில் இங்கு குறிப்பிடலாம். உண்மையில் இதுவே முதலாளித்துவ வர்க்கத்தின் வீழ்ச்சிக்கு வழி செய்யப் போகிறது. ஆனுல் நம்மைச் சேர்ந்தவர்களும் அசட்டுப் பிழைகள் புரியக் கூடும்; ஆயினும் (இவை மிகப் பெரியனவாய் இல்லாமலிருந்து, காலத்திலேயே திருத்தப்படும் பட்சத்தில்) இறுதி வெற்றி நம்மவர்களுக்கே உரியதாகும்.

இரண்டாவது ஆவணம் ''இடதுசாரி'' கம்யூனிஸ்டான தோழர் சில்வியா பான்க்ஹர்ஸ்ட் முன்வைக்கும் வாதமாகும்:

''...தோழர் இன்க்பின் (பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியின் பொதுச் செயலாளர்) தொழிற் கட்சியைத் 'தொழிலாளி வர்க்க இயக்கத்தின் பிரதான நிறுவனமாகக்' குறிப்பிடுகிருர். பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியின் மற்ருெரு தோழர் மூன்ரும் அகிலத்தில் பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியின் நிலையை மேலும் எடுப்பான முறையில் குறிப்பிட்டார். 'தொழிற் கட்சியை நாங்கள் நிறுவன ஒழுங்கமைப்பு கொண்ட தொழிலாளி வர்க்கமாய்க் கருதுகிருேம்' என்ருர் அவர்.

''தொழிற் கட்சியைப் பற்றிய இந்த அபிப்பிராயத்தை நாங்கள் ஆதரிக்கவில்லே. தொழிற் கட்சி எண்ணிக்கை அளவில் மிகப் பெரியதே. ஆனுல் அதன் உறுப்பினர்கள் பெருமளவுக்குச் செயலற்ற மந்த நிலையில் இருப்பவர்கள், உணர்ச்சித் துடிப்பற்றவர்கள். தமது சகாக்கள் தொழிற் சங்கங்களில் இருப்பதால், தாமும் தொழிற் சங்கங்களில் சேர்ந்து கொண்டுவிட்ட ஆடவரும் பெண்டிருமாவர். தொழிற் சங்கத்தின் அனுகூலங்களில் பங்கு பெறுவதற்காகச் சேர்ந்து கொண்டவர்கள்.

''தொழிற் கட்சி பெரியதாய் இருப்பதற்கு, அது பிரிட்டிஷ் தொழிலாளி வர்க்கத்தின் பெரும்பான்மையினர் இன்னமும் வெளிப்பட்டு வராத ஒரு சிந்தனே வழியால் தோன்றியதென்பதும் காரணம் என்பதை நாங்கள் ஏற்றுக்கொள்கிருேம். ஆயினும் மக்கள் மனதில் பெரிய

மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. சீக்கிரத்தில் இவை தற்போதுள்ள நிலவரத்தை மாற்றிவிடும்....''

''...பிற நாடுகளிலுள்ள சமூக-தேசபக்த நிறுவனங்களைப் போலவே பிரிட்டிஷ் தொழிற் கட்சியும் சமுதாயத்தின் இயல்பான வளர்ச்சிப் போக்கில் தவிர்க்க முடியாதபடி ஆட்சியதிகாரத்துக்கு வரவே செய்யும். சமூகத்-தேசபக்தர்களை வீழ்த்தப் போகும் சக்திகளை ஒன்றுதிரட்டி வளர்த்திடுவது கம்யூனிஸ்டுகளுக்குரிய பணியாகும். இந்நாட்டில் நாம் இப்பணியைச் செய்வதில் தாமதமோ தயக்கமோ காட்டலாகாது.

''தொழிற் கட்சியின் பலத்தைக் கூடுதலாக்குவதில் நாம் நமது ஆற்றலை விரயம் செய்யக் கூடாது. ஏனெனில் தொழிற் கட்சி ஆட்சியதிகாரத்துக்கு வருவது தவிர்க்க முடியாததாகும். அதனைத் தோற்கடிக்கக் கூடிய கம்யூனிஸ்டு இயக்கத்தை உருவாக்குவதில் நமது கவனத்தை ஒன்று குவிக்க வேண்டும். தொழிற் கட்சி விரைவில் அரசாங்கத்தை அமைத்து விடும்; அதனைத் தாக்குவதற்காகப் புரட்சிகர எதிர்ப்பாளர்கள் தம்மைத் தயார் செய்து கொண்டாக வேண்டும்....''

இவ்வாறு, மிதவாத முதலாளித்துவ வர்க்கத்தார் நூற்றுக் கணக்கான ஆண்டுகளின் அனுபவத்தால் புனிதமாக்கப்பட்டு, சுரண்டலாளர்களுக்கு மிகவும் அனுகூலமாய் இருந்து வந்துள்ள ''இரு கட்சிகளாலான'' (இரண்டும் சுரண்டலாளர் கட்சிகளே) வரலாற்று வழி வந்த அமைப்பினைக் கைவிட்டு வருகின்றனர்; தொழிற் கட்சிக்கு எதிராய் இவ்விரு கட்சிகளும் தமது சக்திகளை ஒன்றிணைத்துக் கொள்ள வேண்டுமென இவர்கள் கருதுகின்றனர். மூழ்கும் கப்பலை விட்டோடும் எலிகளைப் போல மிதவாதிகளில் ஒரு பகுதியோர் இக்கட்சியைத் துறந்து தொழிற் கட்சிக்கு ஓடிக் கொண்டிருக்கிறார்கள். இடதுசாரி கம்யூனிஸ்டுகள் ஆட்சியதிகாரம் தொழிற் கட்சிக்கு மாறுவது தவிர்க்க முடியாததாகுமென நம்புகிறார்கள்; தற்போது தொழிற் கட்சிக்குப் பெருவாரியான தொழிலாளர்களின் ஆதரவு கிடைத்து வருகிறது என்பதை அவர்கள் ஒத்துக் கொள்கிறார்கள். ஆனால் இதிலிருந்து ஒரு விபரீதமான முடிவுக்கு வருகிறார்கள். தோழர் சில்வியா பான்க்ஹர்ஸ்ட் இதனை இவ்வாறு எடுத்துரைக்கிறார்:

''கம்யூனிஸ்டுக் கட்சி சமரசம் செய்து கொள்ளக் கூடாது.... கம்யூனிஸ்டுக் கட்சி அதன் கோட்பாடுகளைப் பரிசுத்தமாய் வைத்துக் கொள்ள வேண்டும்; சீர்திருத்த வாதத்துக்கு இடந்தராமல் அதன் சுயேச்சை நிலையைப் பழுதின்றிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். கம்யூனிஸ்டுப் புரட்சிக்காக நேர் பாதையில், இடையில் நிற்காமலும் திரும்பாமலும் முன்னேறிச் செல்வதே அதன் கடன்.''

ஆனால், மிகப் பெருவாரியான பிரிட்டிஷ் தொழிலாளர்கள் இன்னமும் பிரிட்டிஷ் கேரென்ஸ்கிகள் அல்லது ஷெய்டெமன்களின் தலைமையையே பின்பற்றி வருகிறார்கள்; இவர்களாலான அரசாங்கம் குறித்து இன்னமும் அவர்களுக்கு அனுபவம் ஏற்பட்டாகவில்லை — தொழிலாளர்கள் வெகுஜன அளவில் கம்யூனிசத்துக்கு மாறி வருவதற்கு ருஷ்யாவிலும் ஜெர்மனியிலும் இந்த அனுபவம் அவசியமாயிருந்தது—என்னும் இவ்வுண்மை, இதற்கு நேர் மாறாக, பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுகள் நாடாளுமன்றச் செயற்பாட்டில் பங்கு கொண்டு ஆக வேண்டும், நாடாளுமன்றத்தின் உள்ளிருந்து கொண்டு ஹெண்டர்சன், ஸ்னோடென் அரசாங்கத்தின் விளைவுகளைத் தொழிலாளி வெகுஜனங்கள் நடைமுறையில் கண்டுணருவதற்குத் துணை புரிய வேண்டும், லாயிட் ஜார்ஜ், சர்ச்சில் இவர்களது ஒன்றுபட்ட சக்திகளைத் தோற்கடிக்க ஹெண்டர்சன்களுக்கும் ஸ்னோடென்களுக்கும் உதவ வேண்டும் என்பதையே சந்தேகத்துக்கு இடமின்றி தெளிவுபடுத்துகிறது. வேறுவிதமாய்ச் செயல்படுவதானது,புரட்சி இலட்சியத்துக்கு ஊறு செய்வதாகவே இருக்கும். ஏனெனில் தொழிலாளி வர்க்கத்தில் பெரும்பாலோரது அபிப்பிராயங்களில் மாற்றம் உண்டாக்காமல் புரட்சி சாத்தியமன்று. இந்த மாற்றத்தை வெகுஜனங்களுடைய அரசியல் அனுபவத்தால் உண்டாக்க முடியுமேயன்றி, பிரசாரத்தினால் மட்டும் ஒரு நாளும் உண்டாக்கிவிட முடியாது. ''சமரசங்களின்றி, திருப்பமின்றி முன்னேறிச் செல்ல வேண்டும்''—கண்கூடாகவே சக்தியற்ற சிறுபான்மைத் தொழிலாளர்களிடமிருந்து வரும் இக்கோஷம் தவறானது என்பது தெளிவு. லாயிட் ஜார்ஜ், சர்ச்சில்

இவர்கள்மீது ஹெண்டர்சனுக்கும் ஸ்னேடனுக்கும் வெற்றி கிட்டியதும் பெரும்பான்மைத் தொழிலாளர்கள் விரைவில் அவர்களது தலைவர்களிடத்து ஏமாற்றமடைந்துவிடுவார்கள், கம்யூனிசத்தை ஆதரிக்க முற்படுவார்கள் (எப்படியும் கம்யூனிஸ்டுகள் குறித்து நடுநிலைமைப் போக்கையே, பிரதானமாய் அனுதாபமுடைய நடுநிலைமைப் போக்கையே அனுசரிப்பார்கள்) என்பது இந்தச் சிறுபான்மைத் தொழிலாளர்களுக்குத் தெரிந்ததே (அல்லது எப்படியும் தெரிந்தே இருக்க வேண்டும்). 10,000 படைவீரர்கள், தமக்கு ஆதரவாக உடனடியாகச் செயலில் இறங்க முடியா விட்டாலும் தம்மை நோக்கி விரைந்து கொண்டிருக்கும் 1,00,000 படைவீரர்கள் வந்து சேருவதற்கு வேண்டிய அவகாசத்தைப் பெறும் பொருட்டு ''காத்து நிற்பது'', அல்லது ''நேரடி மோதலைத் தவிர்த்துக் கொள்வது'', அல்லது ''சமரசம்'' செய்து கொள்வதுகூட தக்க முறையாக இருக்கும் ஒரு நேரத்தில், 50,000 துருப்புகளைக் கொண்ட பகைப்படையை எதிர்த்துப் போரில் குதிப்பதைப் போன்றதே ஆகும் இது. அறிவுத்துறைவாதச் சிறுபிள்ளைத்தனமாகுமே அன்றி, புரட்சிகர வர்க்கத்துக்குரிய முதிர்ச்சியுற்ற போர்த்தந்திரமாகாது இது.

இருபதாம் நூற்றுண்டில் நடைபெற்ற மூன்று ருஷ்யப் புரட்சிகளும்[51] அடங்கலாய் எல்லாப் புரட்சிகளாலும் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கும் அடிப்படைப் புரட்சி விதி வருமாறு: புரட்சி நடைபெற வேண்டுமானால், சுரண்டப்படும், ஒடுக்கப்படும் வெகுஜனங்கள் பழைய வழியில் தாம் வாழ்வது சாத்தியமல்ல என்பதை உணர்ந்து மாற்றங்கள் வேண்டுமெனக் கோரினால் மட்டும் போதாது. புரட்சி நடைபெற வேண்டுமானால், சுரண்டலாளர்கள் பழைய வழியில் வாழவும் ஆட்சி நடத்தவும் முடியாமற்போவது அவசியமாகும். பழைய வழியில் வாழ ''அடிமட்டத்து வர்க்கங்கள்'' விரும்பவில்லை, ''மேல் வர்க்கங்களால்'' பழைய வழியில் நடத்திச் செல்ல முடியவில்லை என்கிற நிலை ஏற்படும்போது மட்டும்தான் புரட்சி வெற்றி பெற முடியும். இந்த உண்மையை வேறுவிதமாகவும் கூறலாம்:

தேசம் தழுவிய நெருக்கடி (சுரண்டப்படுவோர், சுரண்டுவோர் ஆகிய இரு சாராரையும் பாதிக்கும் நெருக்கடி) இல்லாமல் புரட்சி சாத்தியமன்று. இதிலிருந்து தெளிவாவது என்னவெனில், புரட்சி நடைபெறுவதற்கு, முதலாவதாக, பெரும்பான்மையான தொழிலாளர்கள் (அல்லது குறைந்தது, வர்க்க உணர்வு கொண்ட, சிந்தனை ஆற்றலுடைய, அரசியல் செயலாற்றல் வாய்ந்த தொழிலாளர்களில் பெரும்பாலோர்) புரட்சி இன்றியமையாததென்பதை நன்கு உணர்ந்திருப்பதும், புரட்சிக்காக உயிர் விடத் தயாராயிருப்பதும் அவசியமாகும்; இரண்டாவதாக, ஆளும் வர்க்கங்கள் அரசாங்க நெருக்கடிக்கு—மிகவும் பிற்பட்ட நிலையிலுள்ள வெகுஜனங்களையும் அரசியல் அரங்குக்குக் கவர்ந்திழுக்கும் (இதுவரை செயலின்றி உறக்கத்தில் இருந்த உழைப்பாளர்களும் ஒடுக்கப்பட்டோருமான வெகுஜனங்களில் அரசியல் போராட்டம் நடத்தக் கூடியவர்களது தொகை விரைவில் பத்து மடங்கும், ஏன் நூறு மடங்கும் கூட பெருகிவிடுவது மெய்யான எந்தப் புரட்சிக்குமுரிய அறிகுறியாகும்), அரசாங்கத்தைப் பலவீனமாக்கும், புரட்சியாளர்கள் விரைவில் அரசாங்கத்தை வீழ்த்துவதற்கு வகை செய்யும் அரசாங்க நெருக்கடிக்கு—இலக்காகிவிடுவது அவசியமாகும்.

வெற்றிகரமான பாட்டாளி வர்க்கப் புரட்சிக்குரிய இரு நிலைமைகளும் பிரிட்டனில் தெளிவாக முதிர்ச்சியடைந்து வருகின்றன. லாயிட் ஜார்ஜின் சொற்பொழிவிலிருந்தும் இதனைத் தெரிந்து கொள்ளலாம். இடதுசாரி கம்யூனிஸ்டுகள் புரியும் தவறுகள் தற்போது மிகவும் அபாயகரமானவை. ஏனெனில் புரட்சியாளர்களில் சிலர் மேற்கூறிய இரு நிலைமைகளில் ஒவ்வொன்றும் குறித்து போதுமான அளவுக்குச் சிந்தனையோடு கூடிய, போதுமான அளவுக்குக் கவனமான, போதுமான அளவுக்கு உணர்வு பூர்வமான, போதுமான அளவுக்குக் கருத்துக் கொண்ட போக்கை அனுசரிக்கவில்லை. நாம் புரட்சிகரமான ஒரு கோஷ்டியாக மட்டுமல்லாமல், புரட்சிகர வர்க்கத்தின் கட்சியாகவும் இருக்க வேண்டுமாயின், வெகுஜனங்கள் நம்மைப்

பின்தொடர வேண்டுமென விரும்புவோமாயின் (இவ் விருப்பம் சாதனையாகாத வரை வெறும் வாய்ச் சவடால் காரர்களாகிவிடும் அபாயம் நம்மை எதிர்நோக்குகிறது), முதலில் நாம் ஹெண்டர்சனோ ஸ்னோடனோ லாயிட் ஜார் ஜையும் சர்ச்சிலையும் தோற்கடிக்க உதவி செய்ய வேண்டும் (அல்லது முன்னவர்கள் பின்னவர்களைத் தோற்கடிக்கும் படிக் கட்டாயப்படுத்தியாக வேண்டுமெனக் கூறுவதே பொருத்தமாயிருக்கும், ஏனெனில் முன்னவர்கள் தமக்கு வெற்றி கிடைத்துவிடுமோ என்று அஞ்சுகிறார்கள்!); இரண் டாவதாக, நாம் சொல்வதுதான் சரியென்பதை, அதாவது ஹெண்டர்சன்களும் ஸ்னோடன்களும் முற்றிலும் உதவாக் கரைகள், இயல்பாகவே குட்டிமுதலாளித்துவத் தன் மையும் துரோகத்தனமும் வாய்ந்தவர்கள், அவர்கள் கை யாலாகாதவர்களாவது தவிர்க்க முடியாததென்பதைத் தொழிலாளி வர்க்கத்தாரில் பெரும்பாலோர் தமது சொந்த அனுபவத்தின் வாயிலாகவே ஐயமற உணர நாம் உதவ வேண்டும்; மூன்றாவதாக, பெரும்பாலான தொழி லாளர்கள் ஹெண்டர்சன்களிடத்து ஏமாற்றமடைவதன் அடிப்படையில், ஹெண்டர்சன்களுடைய அரசாங்கத்தை உடனே வீழ்த்துவது சாத்தியமாகி, வெற்றி பெறுவதற்கான வாய்ப்புகளும் மிகுதியாகிவிடும் தருணத்தை நாம் அரு காமையில் வரச் செய்ய வேண்டும். மிகவும் சாதுர்யமான —குட்டிமுதலாளித்துவ அல்ல—பெரு முதலாளித்துவ பலம் படைத்த லாயிட்ஜார்ஜே கதி கலங்கி, நேற்று சர்ச்சிலுடனும் இன்று அஸ்குவித்துடனும் தனக்குள்ள ''பிணக்கின்'' மூலம் தன்னையும் (மொத்தத்தில் முதலாளித் துவ வர்க்கத்தையும்) மேலும் மேலும் பலவீனப்படுத்திச் செல்கிறாரெனில், ஹெண்டர்சன் அரசாங்கத்துக்கு ஏற் படப் போகும் கதி கலக்கம் இன்னும் எவ்வளவு பெரியதா யிருக்கும் என்பதைக் கூறத் தேவையில்லை.

மேலும் ஸ்தூலமாய் எடுத்துரைக்கிறேன். என்னுடைய அபிப்பிரயத்தில் பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுகள் தமது நான்கு கட்சிகளையும் கோஷ்டிகளையும் (எல்லாமே பலவீனமான வை, சில மிகமிக பலவீனமானவை) மூன்றுவது அகிலத்தின்

கோட்பாடுகளின் அடிப்படையிலும், நாடாளுமன்றத்தில் பங்கு கொள்வதைக் கடமையாக ஏற்பதன் அடிப் படையிலும் ஒரே கம்யூனிஸ்டுக் கட்சியாகத் தம்மை ஐக் கியப்படுத்திக் கொள்ள வேண்டும். இந்தக் கம்யூனிஸ்டுக் கட்சி ஹெண்டர்சன்களுக்கும் ஸ்னேடன்களுக்கும் பின் வரும் ''சமரசத்'' தேர்தல் உடன்பாட்டைப் பிரேரணை செய்ய வேண்டும்: நாம் கூட்டாகச் சேர்ந்து லாயிட் ஜார் ஜுக்கும் கான்சர்வேட்டிவ்களுக்கும் இடையிலான கூட் டணியை எதிர்த்துப் போராடுவோம்; தொழிற் கட்சிக்கும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் கிடைக்கும் வாக்குகளின் வீதா சாரத்தில் (தேர்தல்களில் அல்ல, விசேஷமானதொரு வாக்கெடுப்பில்) நாடாளுமன்ற இடங்களை நாம் பகிர்ந்து கொள்ளலாம்; கிளர்ச்சி, பிரசாரம், அரசியல் செயற்பாடு இவற்றில் எப்பொழுதும் போல முழுநிறை சுதந்திரம் பெற்றவர்களாகவே இருக்கலாம். இக்கடைசி நிபந்தனை இல்லாமல் நாம் ஒரு கூட்டணிக்கு உடன்பட முடியாது, ஏனெனில் அவ்வாறு செய்வது துரோகச் செயலாகி விடும். பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுகள் ஹெண்டர்சன்களையும் ஸ்னேடன் களையும் அம்பலம் செய்வதற்குப் பூரண சுதந்திரம் கோரிப் பெற்றுக் கொள்ள வேண்டும், எப்படி ருஷ்ய போல்ஷிவிக்குகள் (பதினைந்து ஆண்டுகளுக்கு—1903-17) ருஷ்ய ஹெண்டர்சன்களும் ஸ்னேடன்களும், அதாவது மென்ஷிவிக்குகள், சம்பந்தமாய்க் கோரிப் பெற்றுக் கொண்டார்களோ அதே போல.

இந்த நிபந்தனைகளின் பேரில் ஹெண்டர்சன்களும் ஸ்னேடன்களும் கூட்டு அமைத்துக் கொள்ள சம்மதித் தார்களாயின், நாமே ஆதாயமடைவோராய் இருப்போம். ஏனெனில் நாடாளுமன்ற இடங்களின் எண்ணிக்கை நமக்கு முக்கியமல்ல; இடங்களைப் பிடிப்பதல்ல நமது நோக்கம். இந்த விவகாரத்தில் நாம் விட்டுக்கொடுத்து விடுவோம் (ஹெண்டர்சன்களும் இன்னும் முக்கியமாய் அவர்களுடைய புதிய நண்பர்களான — அல்லது புதிய எஜமானர் களான — சுயேச்சைத் தொழிற் கட்சியில் சேர்ந்துள்ள மிதவாதிகளும் இடங்கள் பெறத் துடித்துக் கொண்டிருக்

கிருர்கள்). நாம்தான் ஆதாயமடைவோராய் இருப்போம், ஏனெனில், லாயிட் ஜார்ஜே வெகுஜனங்களைக் கொதிப்புறச் செய்திருக்கும் ஒரு நேரத்தில், நாம் நமது கிளர்ச்சியை அவர்களிடம் எடுத்துச் செல்வோம்; தொழிற் கட்சி அதன் அரசாங்கத்தை மேலும் சீக்கிரமாய் நிறுவிக் கொள்ள அதற்கு உதவுவதோடு, ஹெண்டர்சன்களை எதிர்த்துக் சிறிதும் தயங்காமலும் தவருமலும் நாம் நடத்திச் செல்லும் கம்யூனிஸ்டுப் பிரசாரத்தை மேலும் சீக்கிரமாய்ப் புரிந்து கொள்வதற்கும் வெகுஜனங்களுக்கு நாம் உதவுவோம்.

இந்த நிபந்தனைகளின் பேரில் நம்முடன் கூட்டுசேர ஹெண்டர்சன்களும் ஸ்னேடன்களும் மறுப்பாராயின், நாம் மேலும் அதிக அளவில் ஆதாயமடைவோம். எப்படியெனில், ஹெண்டர்சன்கள் எல்லாத் தொழிலாளர்களின் ஒற்றுமையைக் காட்டிலும் முதலாளிகளுடனுன தமது நெருங்கிய உறவுகளையே மேலானதாகக் கொண்டுள்ளனர் என்பதை நாம் வெகுஜனங்களுக்கு (முற்றிலும் மென்ஷிவிக் தன்மையும் முழுக்க முழுக்க சந்தர்ப்பவாதத் தன்மையும் கொண்ட சுயேச்சைத் தொழிற் கட்சியிலுங்கூட சாதாரண உறுப்பினர்கள் சோவியத்துகளையே ஆதரிப்பது கவனிக்கத் தக்கது) உடனே காட்டியவர்களாகி விடுவோம். வெகுஜனங்களின் கண்களில் நாம் உடனடியாகச் சிறப்புப் பெறுவோம். முக்கியமாய், லாயிட் ஜார்ஜ் அளித்த சிறந்த, முற்றிலும் சரியான, மிகவும் பயனுள்ள (கம்யூனிசத்துக்கு) விளக்கங்களைத் தொடர்ந்து, வெகுஜனங்கள் லாயிட் ஜார்ஜ்-கான்சர்வேட்டிவ் கூட்டணிக்கு எதிராய் எல்லாத் தொழிலாளர்களையும் ஒன்றுபடச் செய்வதென்னும் கருத்தில் அனுதாபமிக்கவர்களாக இருப்பார்கள். நாம் உடனடியாக ஆதாயமடைவோம், ஏனெனில் ஹெண்டர்சன்களும் ஸ்னேடன்களும் லாயிட் ஜார்ஜ் தோற்கடிக்கப்பட்டு விடுவார் என்று அஞ்சுகிருர்கள், தனியே ஆட்சியதிகாரத்தில் அமர்வதற்கு அஞ்சுகிருர்கள் என்பதையும், தொழிற் கட்சிக்கு எதிராய் கான்சர்வேட்டிவ்களுக்குப் பகிரங்கமாகவே நேசக் கரம் நீட்டும் லாயிட் ஜார்ஜிடம் இரகசியமாய் ஆதரவு பெற முயற்சி செய்கிருர்கள் என்பதையும்

நாம் வெகுஜனங்களுக்குத் தெளிவுபடக் காட்டியவர்களாகி விடுவோம். ருஷ்யாவில் 1917 பிப்ரவரி 27 (பழைய முறைப்படி) புரட்சிக்குப் பிற்பாடு மென்ஷிவிக்குகளுக்கும் சோஷலிஸ்டு—புரட்சியாளர்களுக்கும் (அதாவது ருஷ்ய ஹெண்டர்சன்களுக்கும் ஸ்னேடன்களுக்கும்) எதிரான போல்ஷிவிக் பிரசாரம் இதே வகையான ஒரு சூழ்நிலையால்தான் ஆதாயம் பெறலாயிற்று. மென்ஷிவிக்குகளிடமும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களிடமும் நாங்கள் கூறினோம்: முதலாளித்துவ வர்க்கத்தார் இல்லாமல் நீங்களே முழு ஆட்சியதிகாரத்தையும் ஏற்றுக் கொள்ளுங்கள், ஏனெனில் சோவியத்துகளில் உங்களுக்குப் பெரும்பான்மை நிலை இருக்கிறது (1917 ஜூனில் சோவியத்துகளின் முதலாவது அனைத்துருஷ்யக் காங்கிரசில் போல்ஷிவிக்குகளுக்கு 13 சதவீத வாக்குகளே கிடைத்திருந்தன). ஆனால் ருஷ்ய ஹெண்டர்சன்களும் ஸ்னேடன்களும் முதலாளித்துவ வர்க்கத்தினர் இல்லாமல் ஆட்சியதிகாரம் ஏற்க அஞ்சினர். தேர்தல்களில் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுக்கும் மென்ஷிவிக்குகளுக்கும் (இருகட்சிகளும் நெருங்கிய அரசியல் கூட்டு கொண்டிருந்தன; இரண்டும் உண்மையில் அதே குட்டிமுதலாளித்துவ ஜனநாயகத்தையே பிரதிநிதித்துவப்படுத்தின) பெரும்பான்மை கிடைத்து விடுமென்பதை* நன்கு அறிந்திருந்த முதலாளித்துவ வர்க்கத்தினர் அரசியல் நிர்ணயச் சபைத் தேர்தல்களைத் தள்ளிப் போட்ட போது, சோஷலிஸ்டு - புரட்சியாளர்களா

---

* ருஷ்யாவில் அரசியல் நிர்ணயச் சபைக்கு 1917 நவம்பரில் நடை பெற்ற தேர்தல்களில் 3,60,00,000க்கு அதிகமான வாக்காளர்கள் பதிவு செய்த வாக்குகளின் அடிப்படையிலான முடிவுகள் பின்வருமாறு: போல்ஷிவிக்குகளுக்கு 25 சதவீதமான வாக்குகள் கிடைத்தன; நிலப்பிரபுக்கள், முதலாளித்துவ வர்க்கத்தினர் இவர்களது பல்வேறு கட்சிகளுக்கும் 13 சதவீத வாக்குகளும், குட்டிமுதலாளித்துவக் கட்சிகளுக்கும், அதாவது சோஷலிஸ்டு-புரட்சியாளர்களுக்கும் மென்ஷிவிக்குகளுக்கும்' இவற்றையொத்த பல சிறு கோஷ்டிகளுக்கும் 62 சதவீத வாக்குகளும் கிடைத்தன.

லும் மென்ஷிவிக்குகளாலும் இந்தத் தாமதங்களை முழு மூச்சுடனும் முரணின்றியும் எதிர்க்க முடியவில்லை.

ஹெண்டர்சன்களும் ஸ்னேடன்களும் கம்யூனிஸ்டுகளுடன் கூட்டு சேர மறுத்தால், கம்யூனிஸ்டுகள் வெகுஜனங்களின் அனுதாபத்தைப் பெற்றும், ஹெண்டர்சன்களையும் ஸ்னேடன்களையும் செல்வாக்கிழக்கச் செய்தும் உடனே அனுகூலமடைவார்கள். இதன் விளைவாய் நாம் சில நாடாளுமன்ற இடங்களை இழக்க நேர்ந்தால், அது நமக்கு முக்கியமானதல்ல. முற்றிலும் நம்பகமான ஒரு சில தொகுதிகளில், அதாவது நாம் போட்டியிடுவதால் தொழிற் கட்சி வேட்பாளர்களுக்குப் பாதகமாய் மிதவாதிகள் இடங்கள் பெற முடியாத தொகுதிகளில், நாம் நமது வேட்பாளர்களை நிறுத்துவோம். தேர்தல் இயக்கத்தில் நாம் பங்கெடுத்துக் கொள்வோம்; கம்யூனிசத்துக்காகக் கிளர்ச்சி செய்யும் துண்டுப் பிரசுரங்களை வினியோகிப்போம். நமது வேட்பாளர்கள் போட்டியிடாத எல்லாத் தொகுதிகளிலும் முதலாளித்துவ வேட்பாளரை எதிர்த்தும் தொழிற் கட்சி வேட்பாளரை ஆதரித்தும் வாக்களிக்கும்படி நாம் வாக்காளர்களை வற்புறுத்துவோம். இது கம்யூனிசத்துக்குத் துரோகமிழைப்பதாகும் என்றோ, சமூக-துரோகிகளுக்கு எதிரான போராட்டத்தைக் கைவிடுவதாகும் என்றோ தோழர்கள் சில்வியா பான்க்ஹர்ஸ்டும் கலாஹரும் நினைப்பது தவறாகும். இதற்கு மாறாக, கம்யூனிசப் புரட்சிப் பணி இதனால் சந்தேகத்துக்கு இடமின்றி ஆதாயமே அடையும்.

வெகுஜனங்களை அணுகுவதுங்கூட, தாம் கூறுவதைச் செவி கொடுத்து அவர்களைக் கேட்கச் செய்வதுங்கூட தற்போது பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுகளுக்கு மிகவும் கடினமாயுள்ளது. நான் கம்யூனிஸ்டாக அவர்கள் முன்னே நின்று, ஹெண்டர்சனை ஆதரித்தும், லாயிட் ஜார்ஜை எதிர்த்தும் வாக்களிக்கும்படி அவர்களுக்கு வேண்டுகோள் விடுத்தேனாகில், கட்டாயம் அவர்கள் நான் கூறுவதைச் செவி கொடுத்துக் கேட்பார்கள். மக்களுக்குப் புரியும்படியான முறையில் விளக்கிக் கூறுவதற்கு எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். சோவியத்துகள் நாடாளுமன்றத்தைக் காட்

டிலும் எப்படிச் சிறந்தவை, பாட்டாளி வர்க்கச் சர்வாதி காரம் சர்ச்சிலின் சர்வாதிகாரத்தை (முதலாளித்துவ ''ஜனநாயகம்'' என்னும் பெயரில் மூடிமறைக்கப் பட்டிருப் பது இது) காட்டிலும் எப்படிச் சிறந்தது என்பதை மட்டு மின்றி, என்னுடைய வாக்கைக் கொண்டு நான் ஹெண் டர்சனுக்கு ஆதரவாக இருக்க விரும்புவது தூக்குக் கயிறு தூக்கிலிடப்பட்ட மனிதனுக்கு ஆதரவாக இருப்பது போன்றதாகும் என்பதையும் நான் விளக்கிக் கூறச் சந் தர்ப்பம் கிடைக்கும்;—அரசாங்கத்தை நிறுவும் நிலையை ஹெண்டர்சன்கள் நெருங்க நெருங்க நான் சொல்வது சரி என்பது மேலும் மேலும் தெளிவாக நிரூபிக்கப்படும்; வெகுஜனங்களை என் பக்கத்துக்கு வரச் செய்யும்; ஹெண் டர்சன்கள், ஸ்னோடென்கள் இவர்களது அரசியல் அழிவைத் துரிதப்படுத்தும், ருஷ்யாவிலும் ஜெர்மனியிலும் இவர்களை ஒத்தவர்களது விவகாரத்தில் எப்படி நேர்ந்ததோ அதே போல.

இந்தப் போர்த்தந்திரம் மிகவும் ''நுட்பமானது'', அல்லது மிகவும் சிக்கலானது, வெகுஜனங்களால் இதனைப் புரிந்து கொள்ள முடியாது என்றும், இந்தப் போர்த்தந் திரம் நமது சக்திகளைப் பிளவுபடுத்திச் சிதறடித்துவிடும், சோவியத் புரட்சியிலே அவற்றை நாம் ஒருசேரத் திரட்டி ஈடுபடுத்த முடியாதபடிச் செய்துவிடும் என்றும், இன்ன பலவாறாகவும் ஆட்சேபம் எழுப்பப்படுமானால், இந்த ''இடதுசாரி'' ஆட்சேபக்காரர்களைப் பார்த்து, உங் களுடைய வறட்டுச் சூத்திரவாதத்தை வெகுஜனங்களுக் குரியதாகக் கூறுகிறீர்கள் என்றுதான் நான் பதிலளிப்பேன்! ருஷ்யாவிலுள்ள வெகுஜனங்கள் பிரிட்டனிலுள்ள வெகு ஜனங்களைக் காட்டிலும் கல்வி கேள்வியில் சிறந்தவர்களல்ல என்பது தெளிவு; உண்மையில் அவர்களைக் காட்டிலும் பிற்பட்டவர்களே. ஆயினும் வெகுஜனங்கள் போல்ஷிவிக்கு களைப் புரிந்து கொள்ளவே செய்தனர். சோவியத் புரட் சிக்குச் சிறிது காலமே முன்னதாய், 1917 செப்டம்பரில், போல்ஷிவிக்குகள் முதலாளித்துவ நாடாளுமன்றத்துக்கு (அரசியல் நிர்ணயச் சபைக்கு) தமது வேட்பாளர்களை

நிறுத்தினர், 1917 நவம்பரில் சோவியத் புரட்சிக்கு மறு தினம் இந்த அரசியல் நிர்ணய சபையின் தேர்தல்களில் பங்கு கொண்டனர்—1918 ஜனவரி 5ல் இந்த அரசியல் நிர்ணய சபையைக் கலைத்தனர்—என்பது போல்ஷிவிக்குகளுக்குத் தடங்கலாகிவிடவில்லை, மாறாக அவர்களுக்கு உதவியே செய்தது.

பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுகளிடையே கருத்து வேறுபாட்டுக் குரிய இரண்டாவது விவரம் குறித்து—அதாவது தொழிற் கட்சியுடன் இணைப்பு பெறுவதா, கூடாதா என்பது குறித்து—இங்கு என்னால் பரிசீலிப்பதற்கில்லை. இப்பிரச்சினை குறித்து எனக்கு மிகச் சொற்பத் தகவல்களே கிடைத்திருக்கின்றன. இப்பிரச்சினை மிகவும் சிக்கலானது. காரணம் என்னவெனில் பிரிட்டிஷ் தொழிற் கட்சி நூதனமான தன்மை கொண்டது; அதன் அமைப்பே ஐரோப்பியக் கண்டத்தில் சாதாரணமாய்க் காணப்படும் அரசியல் கட்சிகளைச் சிறிதும் ஒத்ததாயில்லை. ஆயினும், முதலாவதாக, இந்தப் பிரச்சினையிலும், ''அதன் கோட்பாடுகளைக் கம்யூனிஸ்டுக் கட்சி பரிசுத்தமாய் வைத்துக் கொள்ள வேண்டும்; சீர்திருத்தவாதத்துக்கு இடந்தராமல் அதன் சுயேச்சை நிலையைப் பழுதின்றிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். கம்யூனிஸ்டுப் புரட்சிக்கான நேர் பாதையில், இடையில் நிற்காமலும் திரும்பாமலும் முன்னேறிச் செல்வதே அதன் கடன்'' என்பன போன்ற கோட்பாடுகளிலிருந்து புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் போர்த்தந்திரத்தை அனுமானிக்க முயலுவோர் தவிர்க்க முடியாதவாறு தவறிழைக்கவே நேரும் என்பது தெளிவு. இவை போன்ற கோட்பாடுகள், 1874ல் எல்லா சமரசங்களையும் எல்லா இடைநிலைக் கட்டங்களையும் ''நிராகரித்த'' பிரெஞ்சுப் பிளான்கிஸ்டு கம்யூனர்டுகள் புரிந்த தவறை அப்படியே திரும்பவும் செய்வதாகவே அமைந்திருக்கின்றன. இரண்டாவதாக, இந்தப் பிரச்சினையிலும், எப்பொழுதும் போல, கம்யூனிசத்தின் பொதுவான, அடிப்படையான கோட்பாடுகளை வர்க்கங்களுக்கிடையிலான, கட்சிகளுக்கிடையிலான பிரத்தியேக உறவுகளுக்கு, கம்யூனிசத்தை நோக்கி அமைந்த

எதார்த்த வளர்ச்சியின் பிரத்தியேகக் கூறுகளுக்குப் பொருத்தமாய் அனுசரிக்கத் தெரிந்து கொள்வதே நம் முன்னுள்ள பணி. இந்தப் பிரத்தியேக உறவுகளும் கூறுகளும் ஒவ்வொரு நாட்டிலும் வெவ்வேறாய் இருக்கின்றன; இவற்றைக் கண்டறிந்து கொள்ளவும், பரிசீலிக்கவும், வருவது அறிந்து முன்கூட்டியே கூறவும் நாம் ஆற்றலுடையோராய் இருத்தல் வேண்டும்.

ஆயினும் இதனை பிரிட்டிஷ் கம்யூனிசம் சம்பந்தமாய் மட்டுமின்றி, எல்லா முதலாளித்துவ நாடுகளிலும் உள்ள கம்யூனிசத்தின் வளர்ச்சி குறித்த பொது முடிவுகள் சம்பந்தமாகவும் விவாதித்தாக வேண்டும். இந்தப் பொருள் குறித்து இனிப் பரிசீலிக்கத் தொடங்குவோம்.

## 10

## சில முடிவுகள்

ருஷ்யாவின் 1905ஆம் ஆண்டு முதலாளித்துவப் புரட்சி உலக வரலாற்றிலே முற்றிலும் தனிவகையானதொரு திருப்பத்தை வெளிப்படுத்திற்று: மிகவும் பிற்பட்ட முதலாளித்துவ நாடு ஒன்றில் வேலைநிறுத்த இயக்கம் உலகில் வேறு எங்கும் காணப்பட்டிராத வீச்சும் சக்தியுமுடையதாகி விட்டது. 1905ஆம் ஆண்டின் முதல் மாதத்தில் மட்டும் வேலைநிறுத்தம் செய்தவர்களது எண்ணிக்கை இதற்கு முந்திய பத்து ஆண்டுகளில் (1895-1904) இருந்த வருடாந்தரச் சராசரியைப் போல் பத்து மடங்காயிருந்தது. 1905 ஜனவரியிலிருந்து அக்டோபர் வரை வேலைநிறுத்தங்கள் நாளுக்கு நாள் அதிகரித்துப் பிரம்மாண்ட அளவுகளை எட்டின. தனிச் சிறப்பான வரலாற்று நிலைமைகள் பலவற்றின் காரணமாய், பிற்பட்ட ருஷ்யா முதன்முதலாய், ஒடுக்கப்பட்ட வெகுஜனங்களின் சுயேச்சையான செயற்பாடு புரட்சிக் காலத்தில் தாவிக் குதித்துப் பிரமாதமாய் வளர்ந்துவிடுவதை மட்டுமின்றி (எல்லா மாபெரும் புரட்சிகளிலும் இது நடந்திருக்கிறது), பாட்டாளி வர்க்கத்தின்

முக்கியத்துவம் மொத்த மக்கள் தொகையில் அதற்குள்ள வீதாசாரத்தைக் காட்டிலும் அளவு கடந்ததாகிவிடுகிறது என்பதையும் உலகுக்குக் காட்டிற்று. பொருளாதார வேலை நிறுத்தம், அரசியல் வேலைநிறுத்தம் இவை இரண்டின் இணைப்பையும், பின்னது ஆயுதமேந்திய எழுச்சியாகிவிடும் வளர்ச்சியையும், முதலாளித்துவத்தால் ஒடுக்கப்படும் வர்க்கங்களது வெகுஜனப் போராட்டத்துக்கும் வெகு ஜன நிறுவன ஒழுங்கமைப்புக்குமான புதிய வடிவமாகிய சோவியத்துகளின் உதயத்தையும் அது காட்டிற்று.

1917 பிப்ரவரி, அக்டோபர் புரட்சிகள் சோவியத்து களின் நாடு தழுவிய அளவிலான முழுநிறை வளர்ச்சிக் கும், பிற்பாடு பாட்டாளி வர்க்க சோஷலிசப் புரட்சியில் அவற்றின் வெற்றிக்கும் இட்டுச் சென்றன. இரண்டு ஆண்டுகளுக்கும் குறைவான காலத்தில், சோவியத்துகளின் சர்வதேசியத் தன்மையும், போராட்டத்துக்கும் நிறுவன ஒழுங்கமைப்புக்குமான இந்த வடிவம் உலகத் தொழிலாளி வர்க்க இயக்கம் பூராவிலும் பரவக் கூடியதென்பதும், முதலாளித்துவ நாடாளுமன்ற முறையின், பொதுவில் முதலாளித்துவ ஜனநாயகத்தின் சவக்குழி தோண்டு வோனுகவும் வாரிசாகவும் மரபுரிமையாளனுகவும் செயல் படுவதே சோவியத்துகளுக்குள்ள வரலாற்று வழிப்பட்ட பணியென்பதும் கண்கூடாயின.

அது மட்டுமல்ல. வெளித்தோன்றி மேலும் மேலும் பலமடைந்து வெற்றியை நோக்கி முன்னேறும் கம்யூ னிசம் முக்கியமாய்த் தனது ''மென்ஷிவிசத்தை'' எதிர்த் தும், அதாவது சந்தர்ப்பவாதத்தையும் சமூக-தேசியவெறி யையும் (அந்தந்த நாட்டிலுமுள்ள உள்நாட்டு வகையைச் சேர்ந்தவை) எதிர்த்தும், பிறகு—அனுபந்தமாய் என லாம்—''இடதுசாரி'' கம்யூனிசத்தை எதிர்த்தும் நடத்தும் போராட்டத்தை எல்லா நாடுகளும் காணப் போகிறது (ஏற்கெனவே கண்டும் வருகிறது) என்பதைத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் வரலாறு இன்று தெளிவுபடுத்துகிறது. முந்திய போராட்டம் அனேகமாய் விதிவிலக்கின்றி எல்லா நாடுகளிலும் இரண்டாவது அகிலத்துக்கும் (இது ஏற்

கெனவே உண்மையில் மடிந்து விட்டது) மூன்றுவது அகிலத்துக்கும் இடையிலான போராட்டமாக வளர்ந்திருக்கிறது. பிந்திய போராட்டத்தை ஜெர்மனியிலும், பிரிட்டனிலும், இத்தாலியிலும், அமெரிக்காவிலும் (எப்படியும் உலக ஆலைத் தொழிலாளர் நிறுவனத்தின் ஒரு பிரிவும், அராஜக -சிண்டிக்கலிஸ்டுப் போக்குகளைச் சேர்ந்த ஒரு பிரிவும் சோவியத் அமைப்பை அனேகமாய் முழுமனதாய் ஏற்கும் அதே நேரத்தில், இடதுசாரி கம்யூனிசத்தின் தவறுகளையும் ஆதரித்து நிற்கின்றன), மற்றும் பிரான்சிலும் (முன்னுள் சிண்டிக்கலிஸ்டுகளில் ஒரு பிரிவினர் இதேபோல சோவியத் அமைப்பை ஏற்றுக் கொள்வதுடன் கூடவே அரசியல் கட்சி குறித்தும் நாடாளுமன்ற முறை குறித்தும் அனுசரிக்கும் போக்கிலும்) காணலாம். அதாவது இந்தப் போராட்டம் சர்வதேச அளவில் மட்டுமின்றி, உலகு தழுவிய அளவிலும் கூட நடைபெற்று வருகிறது.

தொழிலாளி வர்க்க இயக்கம் எல்லா நாடுகளிலும் முதலாளித்துவ வர்க்கத்தை வெற்றி கொள்வதற்காக ஒரே வகையான தயாரிப்புப் பள்ளியில் பயிற்சி பெற்று வருகிறதென்றுலும், இந்த வளர்ச்சியை ஒவ்வொரு நாட்டிலும் அதற்குரிய தனி முறையில் கண்டு வருகிறது. முன்னேறிய பெரிய முதலாளித்துவ நாடுகள் போல்ஷிவிசத்தைக் காட்டிலும் இந்தப் பாதையை மிக வேகமாய்க் கடந்து வருகின்றன. போல்ஷிவிசம் நிறுவன வழியில் ஒழுங்கமைந்த அரசியல் போக்காகி வெற்றிக்குத் தன்னைத் தயாரித்துக் கொள்வதற்காக வரலாறு அதற்குப் பதினைந்து ஆண்டுக் கால அவகாசம் அளித்தது. ஆனுல் மூன்றுவது அகிலம் மிகக் குறுகிய காலமான ஓராண்டுக்குள் தீர்மானகரமான வெற்றி பெற்றுவிட்டது; கீழ்த்தரமான சமூக-தேசியவெறி கொண்ட இரண்டாவது அகிலத்தை அது தோற்கடித்துவிட்டது. சில மாதங்களுக்கு முன்புகூட ஒப்பிட முடியாத அளவுக்கு இரண்டாவது அகிலம் மூன்றுவதைக் காட்டிலும் பலம் படைத்திருந்தது; நிலையானதாகவும் சக்தி மிக்கதாகவும் தோன்றியது; உலக முதலாளித்துவ வர்க்கத்திடமிருந்து சாத்தியமான எல்லா ஆதரவும்

— நேரடி ஆதரவும் மறைமுக ஆதரவும், பொருள்வகை ஆதரவும் (அமைச்சர் பதவிகள், பாஸ்போர்ட்டுகள், பத்திரிகைகள்) சித்தாந்த ஆதரவும்—பெற்று வந்தது.

சந்தர்ப்பவாதத்துக்கும் ''இடதுசாரி'' வறட்டுச் சூத்திரவாதத்துக்கும் எதிரான போராட்டத்தின் அடிப்படைக் கடமைகளையும், மற்றும் இந்தப் போராட்டம் ஒவ்வொரு நாட்டிலும் அதன் பொருளாதாரம், அரசியல், பண்பாடு, தேசிய இயைபு, (அயர்லாந்து போன்ற நாடுகள்), அதன் காலனிகள், மதப் பிரிவினைகள் முதலான பலவற்றுக்கும் ஏற்பப் பெறும், தவிர்க்க இயலாத முறையில் பெற்றாக வேண்டிய, ஸ்தூல இயல்புகளையும் அந்தந்த நாட்டின் கம்யூனிஸ்டுகளும் உணர்வு பூர்வமாய்க் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டியது இப்பொழுது இன்றியமையாததாகும். இரண்டாவது அகிலம் குறித்து எங்கும் அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது; இந்த அதிருப்தி பரவியும் வளர்ந்தும் வருகிறது. இரண்டாவது அகிலத்தின் சந்தர்ப்பவாதமும், உலக சோவியத் குடியரசுக்காகப் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் நடத்தும் போராட்டத்தில் அதன் சர்வதேசப் போர்த்தந்திரத்தை வழி நடத்தவல்ல, மெய்யாகவே மத்தியத்துவமடைந்த, மெய்யாகவே தலைமை தாங்கும் கேந்திரத்தைத் தோற்றுவிக்க அதற்குத் திறனும் தகுதியும் இல்லாமற் போனதும்தான் இதற்குக் காரணம். மாறா உரு வகைப்பட்ட, யாந்திரிகமாய்ச் சமனமாக்கப்பட்ட, முழுதொத்தப் போர்த்தந்திர விதிகளை ஆதாரமாகக் கொண்டு இத்தகைய தலைமைக் கேந்திரத்தை அமைத்து விட முடியாது. தேசிய சமுதாயங்களிடையிலும் நாடுகளிடையிலும் தேசிய, அரசு வேற்றுமைகள் இருக்கும் வரை—இவை நீண்ட நெடுங் காலத்துக்கு, அனைத்துலக அளவில் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் நிலைநாட்டப் பெற்ற பிறகுங்கூட தொடர்ந்து இருக்கவே செய்யும்—எல்லா நாடுகளின் கம்யூனிஸ்டுத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் சர்வதேசப் போர்த்தந்திரத்தின் ஒற்றுமைக்குத் தேவைப்படுவது வகை வேறுபாட்டை நீக்குவதோ, தேசிய வேறுபாடுகளை ஒழிப்பதோ அல்ல (தற்போது இது ஒரு

பகற் கனவே ஆகும்), கம்யூனிசத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை (சோவியத் ஆட்சியதிகாரம், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்) செயல்படுத்தப்படுவதேதான் — தேசிய வேறுபாடுகளுக்கும், தேசிய அரசு வேறுபாடுகளுக்கும் ஏற்ப சிற்சில விவரங்களில் இந்த அடிப்படைக் கோட்பாடுகள் பிழையின்றி உருமாற்றப்பட்டுச் சரிவரப் பொருத்தமாக்கப் பட்டுச் செயல்படுத்தப்பட வேண்டும். தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் சந்தர்ப்பவாதத்தையும் இடது சாரி வறட்டுச் சூத்திரவாதத்தையும் வெற்றி கொள்ளுதல், முதலாளித்துவ வர்க்கத்தைக் கவிழ்த்தல், சோவியத் குடியரசையும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தையும் நிறுவுதல் என்னும் ஒருமித்த சர்வதேசப் பணியை அந்தந்த நாடும் நிறைவேற்றிட வேண்டிய ஸ்தூலமான முறையில் தேசிய வழியில் பிரத்தியேகமானவற்றையும் தேசிய வழியில் தனிச்சிறப்பானவற்றையும் அலசி ஆராய வேண்டும், தேடிப் பிடித்தாக வேண்டும், வருவது அறிந்து கூற வேண்டும், உணர்ந்து கொண்டாக வேண்டும்—இதுவே வளர்ச்சி பெற்ற எல்லா நாடுகளும் (அவை மட்டுமல்ல) கடந்து சென்று கொண்டிருக்கும் இந்த வரலாற்றுக் கட்டத்தின் அடிப்படையான பணியாகும். ஆக வேண்டியவை நிறைய இருப்பினும், பிரதானமானது ஏற்கெனவே நிறைவேற்றப்பட்டுவிட்டது: தொழிலாளி வர்க்கத்தின் முன்னணிப் படை வயப்படுத்தப்பட்டுவிட்டது; நாடாளுமன்ற முறைக்கு எதிராக சோவியத் ஆட்சியதிகாரத்துக்கு ஆதரவாகவும், முதலாளித்துவ ஜனநாயகத்துக்கு எதிராகப் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்துக்கு ஆதரவாகவும் அது அணி திரண்டு விட்டது. இனி முயற்சிகள் யாவற்றையும், கவனம் அனைத்தையும் வளர்ச்சியின் அடுத்த படியை அடைவதில் ஒன்றுகுவித்தாக வேண்டும். இந்தப் படி முந்தியதைப் போல அவ்வளவு அடிப்படையானதல்ல என்பதாகத் தோன்றலாம் — ஒரு விதத்தில் அது உண்மையுங்கூட. ஆனால் நடைமுறையில் இப்பணியைச் செய்து முடிப்பதற்கு இந்தப் படிதான் உண்மையில் மிகவும் அருகாமையில் அமைந்தது, உடனடியானது. பாட்டாளி வர்க்கப்

புரட்சிக்கு வளர்ந்து செல்வதற்கான அல்லது அதனை அணுகு வதற்கான முறைகளைத் தேடிப்பிடிப்பதே இந்தப் படி.

பாட்டாளி வர்க்க முன்னணிப் படை சித்தாந்த வழியில் வயப்படுத்தப்பட்டுவிட்டது. இதுவே பிரதான காரியம். இது செய்யப்படவில்லையானால், வெற்றியை நோக்கி ஓர் அடி கூட முன்னேற முடியாது. ஆயினும் வெற்றிக்கு இன்னும் நெடுந் தொலைவு இருக்கிறது. முன்னணிப் படையை மட்டும் கொண்டு வெற்றியைச் சாதித்துவிட முடியாது. வர்க்கம் அனைத்தும், விரிவான வெகுஜனங்கள் எல்லோரும், முன்னணிப் படைக்கு நேரடி ஆதரவு அளிக்கும் நிலையை அடையுமுன், அல்லது குறைந்தது அது குறித்துப் பரிவு டன் கூடிய நடுநிலையையும் பகைவனுக்கு ஆதரவளிக்காத நிலையையும் அடையுமுன், முன்னணிப் படையை மட்டும் முடிவுகட்டும் போரில் இறங்கச் செய்வதானது முட்டாள் தனம் மட்டுமின்றி கொடுங் குற்றமுமாகும். ஒரு வர்க்கம் முழுவதும், உழைப்பாளி மக்களின் விரிவான பகுதிகள் யாவும், மூலதனத்தால் ஒடுக்கப்படுவோர் எல்லோரும் இத் தகைய ஒரு நிலையை அடைவதற்கு, வெறும் பிரசாரமும் கிளர்ச்சியும் மட்டும் போதாது. இதற்கு வெகுஜனங்கள் தாமே அரசியல் அனுபவம் பெற வேண்டியது அவசிய மாகும். மாபெரும் புரட்சிகள் யாவற்றுக்குமான அடிப்படை விதி இது. ருஷ்யாவில் மட்டுமின்றி, ஜெர்மனியிலுங்கூட இது மிகுந்த வலிமையுடனும் தெட்டத் தெளிவாகவும் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. வைராக்கியமாய்க் கம்யூனிசத்தின் பக்கம் வருவதற்கு, அறியாமை இருளில் மூழ்கிய, பெருமளவுக்கு எழுத்தறிவற்ற ருஷ்ய வெகுஜனங் களுக்கு மட்டுமின்றி, எழுத்தறிவும் கல்வியறிவும் படைத்த ஜெர்மன் வெகுஜனங்களுக்குங்கூட இரண்டாவது அகிலத் தின் காவலர்களது அரசாங்கம் அறவே கையாலாகாதது, உறுதியில்லாதது, அறவே வக்கற்றது, முதலாளித்துவ வர்க்கத்துக்குக் கும்பிடு போடும் அடிமைப் புத்தி கொண் டது, கேடுகெட்ட இழிநிலை வாய்ந்தது என்பதைச் சொந்த மாய்த் தமது கொடிய அனுபவத்தின் வாயிலாக உணர வேண்டியது அவசியமாயிருந்தது. பாட்டாளி வர்க்கச்

சர்வாதிகாரம் இல்லையேல் கடைந்தெடுத்த பிற்போக்கு வாதிகளின் (ருஷ்யாவில் கர்னீலவ், ஜெர்மனியில் காப் கும்பல்[52]) சர்வாதிகாரம் தவிர்க்க முடியாதபடி ஏற்பட்டு விடும் என்பதை அவர்கள் உணரவேண்டியது அவசியமா யிருந்தது.

சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின் வர்க்க உணர்வு கொண்ட முன்னணிப் படையின், அதாவது கம்யூனிஸ்டுக் கட்சிகள், கோஷ்டிகள், போக்குகளின் உடனடியான பணி, விரிவான வெகுஜனங்களுக்கு (பெருமளவுக்கு இவர்கள் இன்னமும் உறக்க நிலையிலும் மந்த நிலையிலும் செய லற்றும், மரபால் கட்டுண்டும்தான் இருக்கிறார்கள்) தலைமை தாங்கி அவர்களுடைய புதிய நிலைக்கு அழைத்துச் செல்லும் ஆற்றல் பெற வேண்டுமென்பதுதான்; அல்லது இன்னும் துல்லியமாய்ச் சொல்வதெனில் தமது சொந்தக் கட்சி மட்டுமின்றி இந்த வெகுஜனங்களும் புதிய நிலையை வந்தடைவதற்கான அவர்களது முன்னேற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் தலைமை தாங்கும் ஆற்றல் பெற வேண்டு மென்பதுதான். வரலாறு வழிப்பட்ட முதலாவது பணியை (பாட்டாளிகளின் வர்க்க உணர்வு படைத்த முன்னணிப் படையை சோவியத் ஆட்சியதிகாரத்தின், தொழிலாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் பக்கம் வரும்படி வயப்படுத் தும் பணியை) சந்தர்ப்பவாதத்தின் மீதும் சமூக-தேசிய வெறியின் மீதும் முழுநிறைவான சித்தாந்த, அரசியல் வெற்றி பெறாமல் ஈடேறச் செய்திருக்க முடியாது; அதே போல வெகுஜனங்களுக்குத் தலைமை தாங்கி, புரட்சியில் முன்னணிப் படையின் வெற்றியை உறுதி செய்யக் கூடிய புதிய நிலைக்கு அவர்களை அழைத்துச் செல்வதென்ற இரண்டாவதும் உடனடியானதுமான பணியை இடதுசாரி வறட்டுச் சூத்திரவாதத்தை ஒழித்திடாது, அதன் தவறுகளை முழுமையாகக் களைந்தெறியாது ஈடேறச் செய்ய முடியாது.

பாட்டாளி வர்க்கத்தின் முன்னணிப் படையைக் கம்யூ னிசத்தின் பக்கத்துக்கு ஈர்த்திடுவதே பிரச்சினையாக இருந்த வரை (இன்னும் இருக்கும்வரை) பிரசாரப் பணிக்கே முதலிடம் உரியதாயிருந்தது, இன்னமும் உரியதாயிருக்

கிறது. சிறு பிரசாரங்கூட, அவற்றின் குறுகிய நோக்கங்கள் காரணமாய்ப் பல குறைபாடுகளுக்கு உள்ளாகியுங்கூட, இந்நிலைமைகளில் பயனுள்ளனவாகி, சிறந்த பலன்களை அளிக்கின்றன. ஆனால் வெகுஜனங்கள் ஆற்ற வேண்டிய நடைமுறைச் செயலாற்றல், இறுதியான, முடிவு கட்ட வல்ல போருக்கான கோடிக் கணக்கானோரின் படை வரிசைகளின் — இவ்வாறு கூறலாமெனில்—அணிவகுப்பு, ஒரு சமுதாயத்தின் வர்க்க சக்திகள் யாவற்றின் பரஸ்பர பலம் ஆகியவை பிரச்சினையாகிவிடுமாயின், அப்பொழுது பிரசார முறைகள் மட்டும் போதா; "தூய்மையான" கம்யூனிசத்தின் உண்மைகளைத் திரும்பத் திரும்பக் கூறி வந்தால் மட்டும் போதாது. இந்நிலைமைகளில், வெகுஜனங்களுக்குத் தலைமை தாங்கும் பணியை இன்னமும் மேற்கொள்ளாத சிறு குழுவை சேர்ந்த பிரசாரகரைப் போல ஆயிரக் கணக்கில் எண்ணிக் கணக்கிட்டால் போதாது; பத்துலட்சக் கணக்கிலும் கோடிக் கணக்கிலும் எண்ணிக் கணக்கிட்டாக வேண்டும். இந்நிலைமைகளில், புரட்சிகர வர்க்கத்தின் முன்னணிப் படைக்குத் திடநம்பிக்கை ஏற்படச் செய்துவிட்டோமா என்பதாய்க் கேட்பதுடன் கூட, எல்லா வர்க்கங்களையும் — ஆம், விதிவிலக்கின்றி சமுதாயத்தின் எல்லா வர்க்கங்களையும்—சேர்ந்த வரலாற்று வழியில் செயலாற்றலுள்ள சக்திகள், முடிவு கட்டப் போகும் போர் வந்துவிட்டதென்பதற்கு ஏற்ற வகையில் அணி வகுத்து நிற்கின்றனவா என்பதாகவும் கேட்க வேண்டும்; அதாவது (1) நமக்குப் பகையான எல்லா வர்க்க சக்திகளும் போதிய அளவு சிக்குண்டுவிட்டனவா, போதிய அளவு ஒன்றோடொன்று முட்டி மோதிக் கொள்கின்றனவா, தமது பலத்துக்கு அப்பாற்பட்ட போராட்டத்தில் சிக்கிப் போதிய அளவு தம்மை பலவீனப்படுத்திக் கொண்டு விட்டனவா; (2) நிலையின்றி ஊசலாடும் இடைநிலை நபர்கள் யாவரும் — முதலாளித்துவ வர்க்கத்திலிருந்து வேறுபடுத்தப்பட வேண்டிய குட்டிமுதலாளித்துவப் பகுதியோரும் குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகளும்—மக்களின் கண்களில் போதிய அளவு தம்மை அம்பலப்

படுத்திக் கொண்டு, நடைமுறையில் தமது கையாலாகாத் தனத்தால் தம்மைப் போதிய அளவு இழிவுபடுத்திக்கொண்டு விட்டனரா; (3) முதலாளித்துவ வர்க்கத்தை எதிர்த்து மிகவும் வைராக்கியமான, துணிச்சலான, பற்றுறுதி மிக்க புரட்சிகரச் செயலில் இறங்குவதற்கு ஆதரவான வெகு ஜன உணர்ச்சி பாட்டாளி வர்க்கத்தினிடையே தோன்றி சக்தி வாய்ந்த முறையில் வளரத் தொடங்கிவிட்டது என்பதற்கு ஏற்ற வகையில் அவை அணிவகுத்து நிற்கின்றனவா என்று கேட்கவேண்டும். அப்படியானல், புரட்சி மெய்யாகவே முற்றிப் பக்குவ நிலை அடைந்துவிட்டது; மேலே சுட்டிக் காட்டப் பெற்று சுருக்கமாய்க் கூறப்பட்ட எல்லா நிலைமைகளையும் நாம் பிழையின்றி மதிப்பீடு செய்து விட்டோமாயின், தக்க தருணத்தையும் தெரிந்தெடுத்துக் கொண்டுவிட்டோமாயின், நாம் வெற்றி பெறுவது உறுதி.

ஒரு புறத்தில் சர்ச்சில்களுக்கும் லாயிட் ஜார்ஜ்களுக்கும் இடையிலான வேற்றுமைகளும்—அற்பசொற்பத் தேசிய வேறுபாடுகளுடன் எல்லா நாடுகளிலும் இந்த அரசியல் ரகத்தினர் இருக்கின்றனர்—மறுபுறத்தில் ஹெண்டர்சன்களுக்கும் லாயிட் ஜார்ஜ்களுக்கும் இடையிலான வேற்றுமைகளும் தூய தனிநிலை (அதாவது, கருத்தியலான) கம்யூனிசத்தின் கண்ணோட்டத்தில், அதாவது, வெகுஜனங்களால் நடைமுறை அரசியல் செயல் மேற்கொள்ளப்படும் கட்டத்துக்கு இன்னும் முதிர்ச்சியுறுத கம்யூனிசத்தின் கண்ணோட்டத்தில் முக்கியத்துவமற்றவையும் அற்பமானவையுமே ஆகும். ஆனல் வெகுஜனங்களது இந்த நடைமுறைச் செயலின் கண்ணோட்டத்தில் இந்த வேற்றுமைகள் மிகவும் முக்கியமானவை. இந்த வேற்றுமைகளைத் தக்கபடி கணக்கில் எடுத்து கொள்வதும், இந்த ''நண்பர்களிடையே'' தவிர்க்க முடியாதபடி எழுந்து ஒட்டுமொத்தமாய் இந்த எல்லா ''நண்பர்களையும்'' பலவீனப் படுத்தி நலிவுறச் செய்யும் இம்மோதல்கள் உச்சநிலையை அடையும் தருணத்தை நிர்ணயிப்பதும்தான் வர்க்க உணர்வும் திடநம்பிக்கையும் சித்தாந்தத்தின்பால் விசுவாசமுமுள்ள பிரசாரகராய் மட்டுமின்றி, புரட்சியில் வெகு

ஜனங்களது நடைமுறைத் தலைவராகவும் இருக்க விரும்பும் கம்யூனிஸ்டின் கடனும் பணியுமாகும். கம்யூனிசத்தின் கருத்துக்களிடம் மாறாத விசுவாசம் கொண்டிருப்பதுடன் கூட, தேவையான எல்லா நடைமுறை சமரசங்களையும், வளைந்து கொடுத்து மாற்றமைவு செய்தலையும் இணக்கங்களையும், நெகிழ்வுத் திறனையும் பின்வாங்குதலையும், இன்ன பிற முறைகளையும் கைக்கொள்வதற்கான ஆற்றலையும் இணைத்துக் கொள்வது அவசியமாகும். அப்பொழுதுதான் ஹெண்டர்சன்கள் (தம்மை சோஷலிஸ்டுகள் என அழைத்துக் கொள்ளும் குட்டிமுதலாளித்துவ ஜனநாயகத்தின் தனிப்பட்ட பிரதிநிதிகளது பெயர்களைக் குறிப்பிடாமல் சொல்வதென்றால், இரண்டாவது அகிலத்தின் தீரர்கள்) அரசியல் ஆட்சியதிகாரம் பெறுவதையும், பிற்பாடு அதனை இழப்பதையும் துரிதமாக நடந்தேறச் செய்ய முடியும்; தவிர்க்க முடியாத வகையில் அவர்கள் நடைமுறையில் கையாலாகாதவர்களாவதையும், அதனால் வெகுஜனங்கள் நமது கருத்துக்களின் உணர்வில், கம்யூனிசத் திசையிலே, அறிவொளி பெறுவதையும் துரிதப்படுத்த முடியும்; ஹெண்டர்சன்கள், லாயிட் ஜார்ஜ்கள், சர்ச்சில்கள் ஆகியோரிடையே (மென்ஷிவிக்குகள், சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள், காடேட்டுகள், முடியாட்சி ஆதரவாளர்கள்; மற்றும் ஷெய்டெமன்கள், முதலாளித்துவ வர்க்கத்தினர், காப்பிஸ்டுகள் முதலான பலரிடையிலே) தவிர்க்க முடியாதபடி கசப்பும் பூசல்களும் மோதல்களும் பூரணச் சிதைவு உண்டாவதைத் துரிதமாய் நடைபெறச் செய்ய முடியும்; தீர்மானகரமான தாக்குதலின் மூலம் பாட்டாளி வர்க்கம் இவர்கள் எல்லோரையும் தோற்கடித்து அரசியல் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றும் பொருட்டு, ''தனியார் சொத்துடைமையின் புனிதத்தன்மையினுடைய காவலர்களான'' இவர்களிடையே பிணக்கு உச்சநிலைக்கு உயர்ந்து விடும் தக்க தருணத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியும்.

பொதுவாக வரலாறும், குறிப்பாகப் புரட்சிகளின் வரலாறும், மிகச் சிறந்த கட்சிகளும் மிகவும் முன்னேறிய

வர்க்கங்களுடைய மிகுந்த வர்க்க உணர்வு படைத்த முன்னணிப் படைகளும் கற்பனை செய்யக்கூடியதையும்விட எப்பொழுதும் உள்ளடக்கத்தில் கூடுதலான செழுமையும், கூடுதலான வகை வளமும், கூடுதலான வடிவ வளமும், கூடுதலான உயிர்த்துடிப்பும் ''சாமர்த்தியமுமுடையனவாய்'' விளங்குகின்றன. இது எளிதில் புரிந்து கொள்ளக் கூடியதே. ஏனெனில் மிகச் சிறந்த முன்னணிப் படைகளாலுங்கூட பத்தாயிரக் கணக்கானோரின் வர்க்க உணர்வையும் சித்தத்தையும் உணர்ச்சிப் பெருக்கினையும் கற்பனைத் திறனையும் தான் வெளியிட முடிகிறது; ஆனால் மாபெரும் எழுச்சிக்கும் மனித ஆற்றல்கள் யாவற்றின் மும்முரச் செயற்பாட்டுக்குமுரிய தருணங்களில் வர்க்கங்களிடையிலான மிகக் கடுமையான போராட்டத்தால் உந்தப்படும் கோடானுகோடியானோரின் வர்க்க உணர்வாலும் சித்தத்தாலும் உணர்ச்சிப் பெருக்காலும் கற்பனைத் திறனாலும் புரட்சிகள் நடத்தப்படுகின்றன. இதிலிருந்து நடைமுறைத் துறையில் இரு மிக முக்கிய முடிவுகள் கிடைக்கின்றன: முதலாவதாக, புரட்சிகர வர்க்கம் தனது பணியை நிறைவேற்ற வேண்டுமாயின் அது சமுதாயச் செயற்பாட்டின் எல்லா வடிவங்களையும் அல்லது கூறுகளையும் விதி விலக்கின்றிக் கற்றுப் பாண்டித்தியம் பெறும் ஆற்றலுடையதாய் இருத்தல் வேண்டும் (அரசியல் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு முன்னால் பூர்த்தி செய்யாது விட்டு வைத்தவற்றை, ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிய பிறகு — சில நேரங்களில் மிகுந்த ஆபத்துக்கும் மிகப் பெரிய அபாயத்துக்கும் உட்பட்டு—அது பூர்த்தி செய்ய வேண்டிவரும்); இரண்டாவதாக, அந்தப் புரட்சிகர வர்க்கம் ஒரு வடிவம் பிறிதொன்றாக மிகவும் விரைவாகவும் திடுதிப்பென்றும் மாற்றப்படுவதற்குத் தயாராய் இருக்க வேண்டும்.

பகைவன் வசமுள்ள அல்லது அவனிடம் இருக்கக்கூடிய எல்லா ஆயுதங்களையும், போருக்கான எல்லாச் சாதனங்களையும் முறைகளையும் பயன்படுத்துவதற்குத் தன்னைப் பயிற்றுவித்துக் கொள்ளாத எந்தச் சேனையும் விவேகமற்ற முறையில், ஏன் கொடுங் குற்றத்துக்குரிய முறையிலுங்கூட

நடந்து கொள்கிறதென்பதை எவரும் தயக்கமின்றி உடனே ஒத்துக் கொள்வர். போர்க் கலையைக் காட்டிலும் அரசியலுக்கு இது இன்னும் அதிகமாய்ப் பொருந்துவதாகும். அரசியலில் குறிப்பிட்ட எதிர்கால நிலைமைகளில் எந்தப் போராட்ட முறைகள் ஏற்றவையாகவும் நமக்கு அனுகூலமளிப்பவையாகவும் இருக்குமென்று முன்கூட்டியே அறிந்து கொள்வது இன்னுங்கூட கடினமாகும். எல்லாப் போராட்ட முறைகளையும் நாம் கையாளத் தெரிந்து கொள்ளாவிடில், நமது விருப்பங்களுக்கு அப்பாற்பட்ட வழியில் பிற வர்க்கங்களது நிலையில் மாற்றங்கள் ஏற்பட்டு நாம் மிகவும் பலவீனமாயிருக்கும் ஒரு செயல்முறை முன்னணிக்கு வரும்போது, நாம் கடுமையான, சில நேரங்களில் தீர்மானகரமான தோல்விக்கு உள்ளாக நேரலாம். ஆனால் எல்லாப் போராட்ட முறைகளையும் கையாள நாம் கற்றுக் கொண்டு விடுவோமாயின், வெற்றி நிச்சயமாய் நமதே; ஏனெனில், பகைவனுக்கு மிகவும் அபாயகரமான ஆயுதங்களை, மிகத் துரிதமாய் மரண அடி கொடுக்கக் கூடிய ஆயுதங்களை நாம் பிரயோகிப்பதற்கு நிலைமைகள் நம்மை அனுமதிக்கா விட்டாலுங்கூட, நாம் மெய்யாகவே முன்னிலையிலுள்ள, மெய்யாகவே புரட்சிகரமான வர்க்கத்தினுடைய நலன்களைப் பிரதிபலிப்பவர்களாவோம். அனுபவமில்லாத புரட்சியாளர்கள் சட்டபூர்வமான போராட்ட முறைகள் சந்தர்ப்பவாத முறைகளாகுமென்றும், ஏனெனில் முதலாளித்துவ வர்க்கம் இத்துறையில் தொழிலாளர்களை எண்ணற்ற முறை (முக்கியமாய்ப் புரட்சிகரமல்லாத ''அமைதியான'' காலங்களில்) ஏய்த்தும் ஏமாற்றியும் விட்டதென்றும், சட்டவிரோதமான போராட்ட முறைகளே புரட்சிகரமானவையென்றும் அடிக்கடி நினைக்கிறார்கள். ஆனால் இது சரியல்ல. உண்மை என்னவெனில், உதாரணமாய், 1914-18ஆம் ஆண்டுகளின் ஏகாதிபத்தியப் போரின் போது மிகவும் சுதந்திரமான ஜனநாயக நாடுகளின் முதலாளித்துவ வர்க்கமும் தொழிலாளர்களை அப்பட்டமாகவும் கொடுமையாகவும் ஏமாற்றியும் யுத்தத்தின் கொள்ளைக்காரத் தன்மையைப் பற்றிய உண்மையை

இருட்டடிப்பு செய்தும் வந்த காலத்துக்கு ஒப்பான நிலைமைகளில் சட்டவிரோதமான போராட்ட முறைகளைக் கையாளத் திராணியில்லாத அல்லது விருப்பமில்லாத (''முடியவில்லை'' என்பது சரியல்ல, ''விருப்பமில்லை'' என்பதே சரி) கட்சிகளும் தலைவர்களும்தான் சந்தர்ப்பவாதிகள், தொழிலாளி வர்க்கத்துக்குத் துரோகிகள். ஆனால் சட்டவிரோதமான போராட்ட வடிவங்களைச் சட்டபூர்வமான போராட்டத்துக்குரிய எல்லா வடிவங்களுடனும் இணைத்துக் கொள்ளும் திறனில்லாத புரட்சியாளர்கள் மட்டரகமான புரட்சியாளர்களே ஆவர். புரட்சி ஏற்கெனவே வெடித்துப் பொங்கி வழிந்தோடும்போது, எல்லா ரகத்தினரும் கூட்டத்தோடு கூட்டமாய்ப் புரட்சிக்கு இழுத்துச் செல்லப் படும்போது—புரட்சியில் ஈடுபடுவதே நடப்பு நிலை என்பதாலும்,சில நேரங்களில் பதவி மோகத்தால் உந்தப்பட்டுங் கூட எல்லா ரகத்தினரும் புரட்சியில் சேர்ந்து கொண்டு விடும்போது — புரட்சியாளராக இருப்பது கடினமல்ல. பாட்டாளி வர்க்கம் வெற்றி பெற்ற பிறகு இத்தகையப் போலிப் புரட்சியாளர்களிடமிருந்து தன்னை ''விடுவித்துக் கொள்ள'' அது மிகக் கடுமையான முயற்சிகளை, பெருந் துயரத்துக்குரிய முயற்சிகளையுங்கூட மேற்கொள்ள வேண்டியதாகிவிடும். நேரடியான, பகிரங்கமான, மெய்யாகவே வெகுஜனத்தன்மை வாய்ந்த, மெய்யாகவே புரட்சிகரமான போராட்டத்துக்குரிய நிலைமைகள் இன்னமும் இல்லாத போது புரட்சியாளராக இருப்பதானது, புரட்சிகரமல்லாத நிறுவனங்களில், பல சந்தர்ப்பங்களில் முழுக்க முழுக்க பிற்போக்கான நிறுவனங்களில் இருந்து, புரட்சிகரமல்லாத ஒரு சூழ்நிலையில், புரட்சிகரச் செயல் முறைகளின் அவசியத்தை உடனடியாக உணர முடியாத வெகுஜனங்களிடையே புரட்சியின் நலன்களுக்காக (பிரசாரம், கிளர்ச்சி, நிறுவன அமைப்பு இவற்றின் மூலம்) முன்னின்று போராடுவதானது மிகமிகக் கடினம்—ஆனால் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. மெய்யான, தீர்மானகரமான, இறுதியான புரட்சிப் போராட்டத்துக்கு வெகுஜனங்களை அழைத்துச் செல்லக் கூடிய பிரத்தியேகப் பாதையை அல்லது நிகழ்ச்சி

களின் குறிப்பிட்ட திருப்பத்தைத் தேடி, கண்டறிந்து, பிழையின்றி நிர்ணயம் செய்யும் ஆற்றல் பெறுவதே— மேற்கு ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இன்று கம்யூனிசத்தின் தலையாய குறிக்கோள்.

பிரிட்டன் ஓர் உதாரணமாகும். அங்கு மெய்யான பாட்டாளி வர்க்கப் புரட்சி எவ்வளவு சீக்கிரத்தில் மூண் டெழுமென்றும், இன்னமும் உறக்க நிலையிலே இருக்கும் மிக விரிவான வெகுஜனங்களைத் தட்டியெழுப்பி ஆர்த் தெழச் செய்து போராட்டத்தில் இறங்க வைப்பதற்கு எந்த உடனடிக் காரணம் மிகுதியாகச் செயல்படப் போகிற தென்றும் சொல்வதற்கில்லை—முன்கூட்டியே யாராலும் சொல்ல முடியாது. ஆகவே நமது தயாரிப்பு வேலைகள் யாவற்றையும் (காலஞ் சென்ற பிளெஹானவ் அவர் ஒரு மார்க்சியவாதியாகவும் புரட்சியாளராகவும் இருந்த காலத்தில் கூறி வந்தது போல) ''நான்கு கால்களிலும் லாடம் பழுதின்றி நன்கு அமைந்திருக்கும்'' வகையில் செய்வது நமது கடமையாகும். நாடாளுமன்ற நெருக்கடி யாலோ, கடுஞ் சிக்கலாகி மேலும் மேலும் வேதனையளிப் பதாகித் தீவிரமடைந்து வரும் காலனித் துறை, ஏகாதி பத்திய முரண்பாடுகளிலிருந்து எழும் நெருக்கடியாலோ, அன்றி மூன்றுவதொரு காரணத்தாலோ ''உடைப்பு'' ஏற் பட்டு, ''வெள்ளம் பெருக்கெடுக்கத்'' தொடங்கலாம். பிரிட்டனில் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் கதியை நிர்ணயிக்கப் போகும் போராட்டம் என்னவாக இருக்கும் என் பதை நாம் விவாதிக்கவில்லை (இது குறித்து எந்தக் கம்யூ னிஸ்டுக்கும் எவ்வித சந்தேகமும் இல்லை; நாம் எல்லோ ருக்கும் இது ஏற்கெனவே நிலைநாட்டப் பெற்று விட்ட முடிவாகும்); நாம் விவாதிப்பதெல்லாம் தற்போது உறக்க நிலையிலுள்ள பாட்டாளி வர்க்க வெகுஜனங்களைச் செயலில் இறங்கச் செய்து நேரே அவர்களைப் புரட்சிக்கு இட்டுச் செல்லும் உடனடிக் காரணம் என்னவாக இருக்கும் என் பதே. உதாரணமாய் பிரெஞ்சு முதலாளித்துவக் குடியர சில், சர்வதேசக் கண்ணோட்டத்திலும் தேசியக் கண்ணோட் டத்திலும் இன்று இருப்பதைவிட நூறு மடங்கு குறைவான

அளவுக்குப் புரட்சிகரமாய் இருந்த ஓர் சூழ்நிலையில், பிற்போக்குவாத இராணுவவாதிகளது ஆயிரக்கணக்கான மோசடிகளில் ஒன்றைப் போன்ற ''எதிர்பாராத'', ''அற்பக்'' காரணம் (டிரைஃபஸ் வழக்கு) மக்களை உள் நாட்டுப் போரின் விளிம்புக்கு இட்டுச் செல்லப் போது மானதாகிவிட்டது என்பதை மறக்கலாகாது!

பிரிட்டனில் கம்யூனிஸ்டுகள் நாடாளுமன்றத் தேர்தல் களையும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அயர்லாந்துக் கொள் கை, காலனிக் கொள்கை, உலக-ஏகாதிபத்தியக் கொள்கை ஆகியவற்றின் எல்லா இன்னல்களையும், மற்றும் பொது வாழ்வின் ஏனைய எல்லா அரங்கங்கள், துறைகள், கூறு களையும் இடையறுதும் சிறிதும் அயராமலும் இம்மியும் பிறழாமலும் பயன்படுத்திக் கொண்டாக வேண்டும். இவை யாவற்றிலும் அவர்கள் ஒரு புதிய வழியில், கம்யூ னிஸ்டு வழியில், இரண்டாவதல்ல, மூன்றாவது அகிலத்தின் உணர்வோடு செயலாற்றியாக வேண்டும். நாடாளுமன்றத் தேர்தல்களிலும் நாடாளுமன்றப் போராட்டத்திலும் பங்கெடுத்துக் கொள்வதற்கான ''ருஷ்ய'', ''போல்ஷிவிக்'' முறைகளை விவரிப்பதற்கு இங்கு எனக்கு அவகாசமோ இடமோ இல்லை. ஆயினும், அவை வழக்கமான மேற்கு ஐரோப்பிய நாடாளுமன்றத் தேர்தல் இயக்கங்களி லிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தன என்று வெளிநாட்டுக் கம்யூனிஸ்டுகளுக்கு நான் உறுதியாகக் கூற முடியும். இதி லிருந்து அடிக்கடி பின்வருமாறு முடிவு செய்யப்படுகிறது: ''ஆனால் அது நடந்தது ருஷ்யாவில்; நம்முடைய நாட்டில் நாடாளுமன்ற முறை வேறு விதமானது''. இது தவறான முடிவு. பழைய சோஷலிச, தொழிற்சங்கவாத, சிண்டிக் கலிஸ்டு, நாடாளுமன்றப் பணி முறையை, ஒரு புதிய முறையாக, கம்யூனிஸ்டுப் பணி முறையாக வழி நெடுகி லும், வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் மாற்றிடும் பொருட்டே மூன்றாவது அகிலத்தைப் பின்பற்றுவோரான கம்யூனிஸ்டுகள் எல்லா நாடுகளிலும் உள்ளனர். ருஷ்யா விலுங்கூட தேர்தல்களில் சந்தர்ப்பவாதமும், முற்றிலும் முதலாளித்துவத் தில்லுமுல்லுகளும் கள்ளத்தனமும்

சூதுவாதும் எப்பொழுதும் மலிந்தே இருந்தன. மேற்கு ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் கம்யூனிஸ்டுகள் வழக்கத்துக்கு மாறுன, சந்தர்ப்பவாதமல்லாத, பதவி வேட்டையாக அமையாத ஒரு புதிய ரக நாடாளுமன்ற முறையைத் தோற்றுவிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்; கம்யூனிஸ்டுக் கட்சிகள் தமக்குரிய கோஷங்களை வெளியிட வேண்டும்; மெய்யான பாட்டாளி வர்க்கத்தினர் நிறுவன ஒழுங்கமைப்பு பெருத, ஒடுக்கி வதைக்கப்படும் ஏழைகளுடைய உதவியுடன் துண்டுப் பிரசுரங்கள் வினியோகிக்க வேண்டும், தொழிலாளர்களுடைய வீடுகளுக்கும் கிராமப் பாட்டாளிகளின், இருள் மண்டிய கிராமங்களிலுள்ள விவசாயிகளின் குடில்களுக்கும் சென்று அவர்களுடைய ஆதரவைத் திரட்ட வேண்டும் (ருஷ்யாவைக் காட்டிலும் அதிருஷ்டவசமாய் ஐரோப்பாவில் பல மடங்கு குறைவான இருள் மண்டிய கிராமங்களே உள்ளன; பிரிட்டனில் இவற்றின் எண்ணிக்கை இன்னும் குறைவு); அவர்கள் சாராயக் கடைகளுக்குச் சென்றும், பாமர மக்களின் சங்கங்களுக்குள்ளும் கழகங்களுக்குள்ளும் தற்செயலான கூட்டங்களினுள்ளும் ஊடுருவியும் இம்மக்களுடன் பேச வேண்டும்—மெத்தப் படித்தவர்களது (அல்லது நாடாளுமன்றத்துக்குரிய) மொழியிலல்ல; அவர்கள் நாடாளுமன்ற ''இடங்களைப் பிடிக்க'' முயற்சி செய்யலாகாது, அதற்குப் பதில் மக்களைச் சிந்திக்க வைப்பதற்கே எங்கும் முயற்சி செய்ய வேண்டும், வெகுஜனங்களைப் போராட்டத்தில் இறங்கும் படிக் கவர்ந்திழுக்க வேண்டும், முதலாளித்துவ வர்க்கத்தை அதன் சொற்களைக் கொண்டே மடக்க வேண்டும், அது அமைத்துள்ள ஏற்பாட்டையும் நடத்தி வரும் தேர்தல்களையும் மக்களுக்கு அது விடுத்துள்ள வேண்டுகோள்களையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்; போல்ஷிவிசம் என்ருல் என்னவென்பதை மக்களுக்கு விளக்க முயல வேண்டும்—இவ்வாறு விளக்குவது (முதலாளித்துவ ஆதிக்கத்தில்) தேர்தல் காலங்கள் அல்லாத பிற காலங்களில் சாத்தியமாய் இருந்ததில்லை (பெரிய வேலைநிறுத்தங்கள் நடைபெற்ற காலங்கள் மட்டும் இதற்கு விதிவிலக்கு;

ருஷ்யாவில் இக்காலங்களில் மக்களிடையே விரிந்த அளவில் கிளர்ச்சி நடத்துவதற்காக, தேர்தல் காலத்தில் இயங்கியதை ஒத்த அமைப்பு ஒன்று இன்னுங்கூட தீவிர மாய் இயங்கிற்று). மேற்கு ஐரோப்பாவிலும் அமெரிக்கா விலும் இதைச் செய்வது மிகக் கடினம், மிகமிகக் கடினம்; என்றாலும் இதனைச் செய்ய முடியும், செய்தே ஆகவும் வேண்டும்; அருமுயற்சி இல்லாமல் கம்யூனிசத்தின் குறிக் கோள்களைச் சாதிக்க முடியாது. மேலும் மேலும் நானாவித மான, சமுதாய வாழ்வின் எல்லாக் கிளைகளுடனும் மேலும் மேலும் நெருங்கிய இணைப்புக் கொண்ட நடைமுறைப் பணிகளை நிறைவேற்றி, முதலாளித்துவ வர்க்கத்திடமிருந்து ஒவ்வொரு கிளையாக, ஒவ்வொரு துறையாக கைப்பற்ற நாம் பாடுபட்டாக வேண்டும்.

மேலும் பிரிட்டனில் பிரசார, கிளர்ச்சி, நிறுவன ஒழுங்கமைப்புப் பணிகள் இராணுவப் படையினரிடை யிலும், தமது ''சொந்த'' அரசின் ஒடுக்கப்பட்ட, உரிமைகள் பறிக்கப்பட்ட தேசிய இனங்களிடையிலும் (அயர்லாந்து, காலனிகள்) ஒரு புதிய பாணியில் (சோஷலிஸ்டுப் பாணியில் அல்லாமல் கம்யூனிஸ்டுப் பாணியில், சீர்திருத்தவாதப் பாணியில் அல்லாமல் புரட்சிகரப் பாணியில்) மேற் கொள்ளப்பட்டுச் செய்யப்பட்டாக வேண்டும். இதற்குக் காரணம் என்னவெனில், பொதுவாக ஏகாதிபத்தியச் சகாப் தத்தில், இன்னும் முக்கியமாய் இன்று பல்வேறு நாடு களின் மக்களுக்கும் ஒரு கொடுஞ் சோதனையாகி, வேகமாய் அவர்களுடைய கண்களைத் திறந்துவிட்டு உண்மையைப் பார்க்கச் செய்த (அதாவது மிகவும் கூடுதலான நாடுகளைச் சூறையாடப் போவது பிரிட்டிஷ் கொள்ளைக்காரர்களா அல்லது ஜெர்மன் கொள்ளைக்காரர்களா என்பதை முடிவு செய்ய வேண்டுமென்பதற்காகக் கோடிக் கணக்கானோர் கொல்லப்பட்டனர், முடமாக்கப்பட்டனர் என்கிற இந்த உண்மையைப் பார்க்கச் செய்த) ஒரு யுத்தத்துக்குப் பிற் பாடு, சமுதாய வாழ்வின் இந்த எல்லாத் துறைகளிலும் வெடிமருந்து மிகுதியாகக் குவிந்துவிட்டது; மோதல்களுக் கும் நெருக்கடிகளுக்கும் வர்க்கப் போராட்டம் கடுமையா

வதற்குமான எண்ணற்ற காரணங்கள் தோற்றுவிக்கப்படு கின்றன. உலகப் பொருளாதார, அரசியல் நெருக்கடியின் விளைவாய் எல்லா நாடுகளிலும் சிதறிப் பறக்கும் எண்ணி லடங்காத தீப்பொறிகளில் எது பெருந்தீயை மூட்டிவிட போகிறதென்பது — வெகுஜனங்களைக் கிளர்ந்தெழச் செய்யப் போகிறது என்ற அர்த்தத்தில்—நமக்குத் தெரி யாது, தெரியவும் முடியாது. ஆகவே நாம் நமது புதிய, கம்யூ னிஸ்டுக் கோட்பாடுகளின் அடிப்படையில் யாவற்றையும், மிகவும் பழமையான, இருள் மண்டிய, நம்பிக்கைக்குச் சிறிதும் இடமில்லாததாய்த் தோன்றும் துறைகளையும்கூட கிளர்த்திவிட வேலை செய்தாக வேண்டும். இல்லையேல் நாம் நமது கடமைகளை நிறைவேற்ற முடியாமற் போய்விடும்; விரிவான அளவில் தயார் செய்து ஆயத்த நிலையில் இருக்க முடியாமற் போய்விடும்; எல்லா ஆயுதங்களையும் பெற்ற வர்களாய் இருக்க முடியாமற் போய்விடும்; முதலாளித் துவ வர்க்கத்தை (அதற்குரிய முதலாளித்துவ பாணியில் சமுதாய வாழ்வின் எல்லாக் கூறுகளையும் ஒழுங்கமைத்த, இப்பொழுது அவை யாவற்றையும் அலங்கோலமாகிவிட்ட முதலாளித்துவ வர்க்கத்தை) வெற்றி கொள்ளவும், அந்த வெற்றியைத் தொடர்ந்து வாழ்க்கையின் ஒவ்வொரு துறை யிலும் செய்யப்பட வேண்டிய கம்யூனிசப் புனரமைப்பைச் செய்ய முடியாமலும் போய்விடும்.

ருஷ்யாவில் ஏற்பட்ட பாட்டாளி வர்க்கப் புரட்சி யையும், முதலாளித்துவ வர்க்கத்தினரும் அற்பர்களும் சிறிதும் எதிர்பாரா வண்ணம் சர்வதேச அளவில் அது கண்ட வெற்றிகளையும் தொடர்ந்து அகில உலகும் மாறிவிட்டது; முதலாளித்துவ வர்க்கமும் மாறிவிட்டது. ''போல்ஷி விசம்'' என்றதுமே அதற்குக் குலைநடுக்கம் உண்டாகிறது; வெறி பிடித்தாடும் அளவுக்கு அதற்குக் கொடுஞ் சீற்றம் ஏற்படுகிறது. இதன் நேரடி விளைவாய் அது ஒரு புறத்தில் நிகழ்ச்சிகளின் வளர்ச்சிப் போக்கை மேலும் மும்முர மடையச் செய்கிறது; மறு புறத்தில் வன்முறையால் போல் ஷிவிசத்தை நசுக்குவதில் முழுக் கவனத்தையும் செலுத்தி வருகிறது. இதன் மூலம் அது வேறு பல துறைகளிலும்

தனது நிலைகளைப் பலவீனப்படுத்திக் கொண்டுவிடுகிறது; முன்னேறிய எல்லா நாடுகளிலும் கம்யூனிஸ்டுகள் தமது போர்த்தந்திரத்தில் இவ்விரு நிலைமைகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

ருஷ்யக் காடேட்டுகளும் கேரென்ஸ்கியும் அடங்காத ஆத்திரங் கொண்டு, போல்ஷிவிக்குகளை வேட்டையாட முற்பட்ட போது—முக்கியமாய் 1917 ஏப்ரலுக்குப் பிற்பாடு, இன்னும் முக்கியமாய் 1917 ஜூன்-ஜூலையில்[53]—அவர்கள் அளவுமீறிச் சென்று விட்டனர். போல்ஷிவிக்குகளை எதிர்த்து எல்லா ஸ்தாயிகளிலும் பெருங் கூச்சல் எழுப்பிய முதலாளித்துவப் பத்திரிகைகளின் லட்சக் கணக்கான பிரதிகள், வெகுஜனங்கள் போல்ஷிவிசத்தை மதிப்பீடு செய்வதற்கு உதவியாக இருந்தன. பத்திரிகைகளைத் தவிர முதலாளித்துவ வர்க்கத்தின் ''உற்சாகம்'' காரணமாகவும் பொது வாழ்வு அனைத்திலும் போல்ஷிவிசத்தைப் பற்றிய விவாதங்கள் மிகுதியாகிவிட்டன. இன்று சர்வதேச அளவில் எல்லா நாடுகளின் கோடீஸ்வரர்களும் நமது உள்ளம் நிறைந்து நன்றிக்கு உரித்தானவர்களாகும் முறையில் நடந்து கொள்கிறார்கள்; கேரென்ஸ்கி கூட்டத்தார் காட்டிய அதே உற்சாகத்தோடு போல்ஷிவிக்குகளை வேட்டையாடி வருகிறார்கள்; கேரென்ஸ்கி செய்தது போலவே இவர்களும் அளவு மீறிச் சென்று விடுகிறார்கள்; அதன் மூலம் நமக்கு உதவி செய்து வருகிறார்கள். பிரெஞ்சு முதலாளித்துவ வர்க்கம், ஒப்பளவில் மிதவாத சோஷலிஸ்டுகள் அல்லது ஊசலாடும் சோஷலிஸ்டுகளானோரை போல்ஷிவிக்குகள் என்பதாகக் கூறிக் குற்றம் சாட்டித் தேர்தல்களில் போல்ஷிவிசத்தை மையப் பிரச்சினையாக்கும் போதும், அமெரிக்க முதலாளித்துவ வர்க்கம் போல்ஷிவிக் சதித்திட்டங்கள் என்று கூறி பல கதைகளைப் பரப்பி முற்றிலும் கதிகலங்கிப்போய் ஆயிரமாயிரமானோரை போல்ஷிவிசத்தைச் சேர்ந்தவர்கள் என்னும் சந்தேகத்தின் பேரில் பிடித்துச் சென்று பீதி நிலைமையை உண்டாக்கும் போதும், உலகிலேயே மிகவும் ''திடமான'' பிரிட்டிஷ் முதலாளித்துவ வர்க்கம்——அது எவ்வளவோ விவேகமும் அனுபவமும் பெற்று

இருந்துங்கூட—பெரும் பணம் ஒதுக்கிப் ''போல்ஷிவிசத்தை எதிர்த்துப் போராடும் கழகங்கள்'' நிறுவியும், போல்ஷிவிசம் குறித்து தனிவகை வெளியீடுகளைத் தோற்றுவித்தும், அதனை எதிர்த்துப் போராடுவதற்காக அதிகப்படியான அளவில் விஞ்ஞானிகளையும் கிளர்ச்சியாளர்களையும் மதகுருமார்களையும் திரட்டியும் நம்ப முடியாத அசட்டுத் தவறுகள் புரியும் போதும், நாம் முதலாளிகளுக்குக் கும்பிடு போட்டு நன்றி தெரிவித்தே ஆகவேண்டும். அவர்கள் நமக்காகத்தான் வேலை செய்கிறார்கள். போல்ஷிவிசத்தின் சாரப்பொருள் என்ன, அதன் முக்கியத்துவம் என்ன என்பதில் வெகுஜனங்களை அக்கறை கொள்ளச் செய்வதற்கு நமக்கு உதவி செய்கிறார்கள். இவ்வாறன்றி அவர்களால் வேறு எவ்வகையிலும் நடந்துகொள்ள முடியாது; ஏனெனில் போல்ஷிவிசத்தை உதாசீனம் செய்து அதனை நசுக்கிவிடலாமென்னும் முயற்சியில் ஏற்கெனவே அவர்கள் தோல்வியுற்று விட்டனர்.

ஆனால், அதேபோதில் முதலாளித்துவ வர்க்கம் அனேகமாய் போல்ஷிவிசத்தின் ஒரேயொரு அம்சத்தை மட்டும்தான்—புரட்சியெழுச்சி, வன்முறை, பயங்கரம் இவற்றை மட்டும்தான்—காண்கிறது; எனவே அது இந்தத் துறையில் எதிர்முயற்சிக்கும் எதிர்ப்புக்கும் தன்னைத் தயார் செய்து கொள்ள முற்படுகிறது. சிற்சில சந்தர்ப்பங்களில், சிற்சில நாடுகளில், குறிப்பிட்ட சில காலத்துக்கு இதில் அது வெற்றி பெறுவது சாத்தியமே. இம்மாதிரியான சாத்தியப்பட்டை நாம் கருத்தில் கொண்டிருக்க வேண்டும். இதில் அது வெற்றியே பெற்றாலுங்கூட, நாம் அஞ்சுவதற்குக் காரணம் இல்லை. பொது வாழ்வின் எல்லாத் துறைகளிலும் கம்யூனிசம் திட்டவட்டமாய்த் ''தலைதூக்கி'' வருகிறது. அதன் தொடக்க நிலைகளை, ஒன்றுகூட பாக்கி இல்லாமல் எல்லாப் பக்கங்களிலும் காண முடிகிறது. இந்தத் ''தொத்து'' (முதலாளித்துவ வர்க்கத்தாலும் முதலாளித்துவப் போலீசாலும் வெகுவாகக் கையாளப்படும், அவர்களுக்கு மிகவும் பிடித்தமான உருவகச் சொல்லை உபயோகிப்பதெனில்) உடல் பூராவிலுமே முழுக்க முழுக்க

ஊடுருவி முழு அளவுக்குப் பரவிவிட்டது. விசேஷ முயற்சிகள் எடுத்து ஒரு வழியை மூடியடைத்தால், இந்தத் ''தொத்து'' வேறொரு வழியை, சில நேரங்களில் சிறிதும் எதிர்பாராத ஒரு வழியை, உடனே கண்டுபிடித்துக் கொள்ளும். வாழ்க்கையானது தன்னைத் தானே நிலைநாட்டிக் கொள்ளவே செய்யும். முதலாளித்துவ வர்க்கம் கொடுஞ் சீற்றங் கொண்டு வெறி தலைக்கேறி கோர நர்த்தனம் புரியட்டும்; அளவு மீறிச் சென்று கடைகோடி நிலைகளை மேற்கொள்ளட்டும்; அசட்டுத் தவறுகள் செய்யட்டும்; முன்கூட்டியே போல்ஷிவிக்குகள் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளட்டும்; மேலும் கூடுதலாய் நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் லட்சக் கணக்கிலும் நேற்றைய கம்யூனிஸ்டுகளையும் நாளைய கம்யூனிஸ்டுகளையும் கொன்று குவிக்க (இந்தியாவிலும் ஹங்கேரியிலும் ஜெர்மனியிலும் மற்றும் பல நாடுகளிலும் செய்வதைப் போல) முயன்று பார்க்கட்டும். இவ்வாறு செயல்படுவதன் மூலம் முதலாளித்துவ வர்க்கம் வரலாற்று வழியில் சபிக்கப்பட்டு அழிவை நோக்கி விரையும் எல்லா வர்க்கங்களையும் போலவேதான் நடந்து கொள்கிறது. எது எப்படி ஆயினும் வருங்காலம் நமதே என்பது கம்யூனிஸ்டுகளுக்குத் தெரிந்திருக்க வேண்டும்; ஆகவே நம்மால் மாபெரும் புரட்சிப் போராட்டத்தின்பால் அடங்காத உணர்ச்சிப் பரவசத்தை முதலாளித்துவ வர்க்கத்தின் தலைவிரி கோலமான வெறியாட்டத்தைப் பற்றிய மிகமிக அமைதியான, மிகமிக நிதானமான மதிப்பீட்டுடன் இணைத்துக் கொள்ள முடியும் (அவ்வாறே இணைத்துக் கொள்ளவும் வேண்டும்). ருஷ்யப் புரட்சி கொடிய முறையில் 1905ல் தோற்கடிக்கப்பட்டது; ருஷ்ய போல்ஷிவிக்குகள் 1917 ஜூலையில் தோற்கடிக்கப்பட்டனர்; முதலாளித்துவ வர்க்கத்துடனும் முடியாட்சிவாத ஜெனரல்களுடனும் கை கோத்துச் செயல்பட்ட ஷெய்டெமனும் நோஸ்கேயும் செய்த ஈனத்தனமான ஆத்திரமூட்டலின் விளைவாகவும் தந்திரச் சூழ்ச்சிகளின் விளைவாகவும் 15,000க்கு அதிகமான ஜெர்மன் கம்யூனிஸ்டுகள் கொலையுண்டனர்; பின்லாந்திலும் ஹங்கேரியிலும் படு

பயங்கர அடக்குமுறை தாண்டவமாடுகிறது. ஆனால் எல்லாச் சந்தர்ப்பங்களிலும், எல்லா நாடுகளிலும் கம்யூனிசம் உருக்கு உறுதி பெற்று ஓங்கி வளர்ந்தே வருகிறது; அதன் வேர்கள் அவ்வளவு ஆழமாகச் செல்வதால் அடக்குமுறை அதனைப் பலவீனமாக்கவோ சிதைக்கவோ இல்லை, மேலும் மேலும் பலம் பெறவே செய்கிறது. மேலும் திடநம்பிக்கையோடும் உறுதியோடும் நாம் வெற்றியை நோக்கி முன்னேறி நடைபோடுவதற்கு ஒன்றே ஒன்றுதான் தேவைப்படுகிறது: அது என்னவெனில் எல்லா நாடுகளிலும் எல்லாக் கம்யூனிஸ்டுகளிடையிலும் தமது போர்த்தந்திரத்தில் அதிகபட்ச **நெகிழ்வுத்தன்மையை** வெளிப்படுத்துவது அவசியமென்ற உணர்வு அனைத்துலக அளவிலும் முழுமையாகவும் ஏற்பட வேண்டுமென்பதே. சிறப்பாய் வளர்ச்சியுற்று வரும் கம்யூனிஸ்டு இயக்கத்தில் இன்று, முக்கியமாய் வளர்ச்சி பெற்ற நாடுகளில், இந்த உணர்வும் நடைமுறையில் இதனைச் செயல்படுத்தும் ஆற்றலும் இருக்கவில்லை.

சோஷலிசத்தில் பற்றுறுதி கொண்ட அரும்பெரும் புலமை வாய்ந்த மார்க்சியவாதிகளான காவுத்ஸ்கியையும் ஓட்டோ பௌவரையும் ஏனையோரையும் போன்ற இரண்டாம் அகிலத் தலைவர்களுக்கு நேர்ந்த கதி நல்லதொரு படிப்பினையாக அமையக் கூடும் (அமையவும் வேண்டும்). நெகிழ்வுடைய போர்த்தந்திரத்தின் அவசியத்தை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்; அவர்கள் மார்க்சிய இயக்கவியலைத் தாமும் கற்று ஏனையோருக்கும் கற்பித்தனர் (இத்துறையில் அவர்கள் செய்த பணியின் பெரும் பகுதி சோஷலிச இலக்கியத்துக்கு ஆற்றிய மதிப்பிடற்கரிய பங்காய் என்றென்றும் நிலைத்திருக்கும்); ஆயினும் இந்த இயக்கவியலைப் **பிரயோகிப்பதில்** அவர்கள் அவ்வளவு பெருந் தவறிழைத்ததால், அல்லது நடைமுறையில் அந்த அளவுக்கு இயக்கவியலுக்கு முரணாகச் சென்றதால், வடிவங்களில் ஏற்பட்ட அதிவிரைவான மாறுதலையும் பழைய வடிவங்கள் அதிவிரைவாய்ப் புதிய உள்ளடக்கம் பெற்றதையும் கணக்கில் எடுத்துக் கொள்ளும் திறனற்றோராகிய

தால், அவர்களுக்கு நேர்ந்த கதி ஹைண்ட்மன், கெட்டு, பிளெஹானவ் ஆகியோருக்கு ஏற்பட்டதைவிட அதிகம் சிறப்பானதாயில்லை. அவர்கள் கையாலாகாதவர்களாகியதற்குப் பிரதான காரணம் என்னவெனில், தொழிலாளி வர்க்க இயக்கத்தின், சோஷலிசத்தின் வளர்ச்சிக்குரிய ஒரு குறிப்பிட்ட வடிவத்தால் மதி மயங்கிக் கட்டுண்டு, அந்த வடிவத்தின் ஒருசார்பான தன்மையை அறவே மறந்து விட்டனர், எதார்த்த நிலைமைகளால் தவிர்க்க முடியாததாக்கப் பட்டுவிடும் திடீர் மாற்றங்களைக் காண்பதற்கு அஞ்சினர், மேம்போக்காய்ப் பார்க்கையில் மறுக்க இயலாதவையாகத் தோன்றிய ''இரண்டைவிட மூன்றே அதிகம்'' என்பதையொத்த எளிய சூத்திரங்களை மனப்பாடம் செய்து வைத்துக் கொண்டு கிளிப்பிள்ளை போல் திரும்பத் திரும்ப அதையே சொல்லி வந்தனர். ஆனால் அரசியலானது எண் கணிதத்தைவிட குறிக் கணிதத்தையே அதிகம் ஒத்தது; இன்னும் ஆரம்பக் கணிதத்தைவிட உயர் கணிதத்தையே அதிகம் ஒத்தது. எதார்த்தத்தில் சோஷலிச இயக்கத்தின் பழைய வடிவங்கள் யாவும் ஒரு புதிய உள்ளடக்கத்தைப் பெற்றுவிட்டன; ஆகவே எல்லா இலக்கங்களின் முன்பும் ஒரு புதிய குறி, 'மைனஸ்' குறி தோன்றிவிட்டது. ஆனால் நமது மேதாவிகள் ''மைனஸ் இரண்டை'' விட ''மைனஸ் மூன்றே'' அதிகம் என்று பிடிவாதமாய்த் தொடர்ந்து தமக்கும் பிறருக்கும் எடுத்துரைத்து வந்தனர் (இன்னமும் எடுத்துரைத்து வருகின்றனர்).

கம்யூனிஸ்டுகள் இதைப் போன்ற பிழையை இதற்கு எதிரிடைப் பொருளில் செய்யாதிருக்கும்படி நாம் பார்த்துக் கொண்டாக வேண்டும்; அல்லது இன்னும் திருத்தமாய்க் கூறுவதெனில், இதைப் போன்ற ஒரு பிழை இதற்கு எதிரிடையான பொருளில் ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகளால் செய்யப்படுவதானது கூடுமான சீக்கிரத்தில் திருத்தப்படும் படியும், கூடுமான அளவு விரைவாகவும் வேதனையின்றியும் நீக்கப்படும்படியும் செய்தாக வேண்டும். தவறாயிருப்பது வலதுசாரி வறட்டுச் சூத்திரவாதம்

மட்டுமல்ல; இடதுசாரி வறட்டுச் சூத்திரவாதமும் தவறனதே. கம்யூனிசத்தில் தற்போது இடதுசாரி வறட்டுச் சூத்திரவாதம் வலதுசாரி வறட்டுச் சூத்திரவாதத்தைக் காட்டிலும்(அதாவது சமூக-தேசியவெறியையும் காவுத்ஸ்கி வாதத்தையும் காட்டிலும்) ஆயிரம் மடங்கு குறைவான அபாயத்தை விளைவிக்கக் கூடியதென்பதும், ஆயிரம் மடங்கு குறைவான முக்கியத்துவமே வாய்ந்ததென்பதும் மெய்தான். ஆனல் இடதுசாரி கம்யூனிசம் இளம் பருவத் திலுள்ள ஒரு போக்கு, இப்பொழுதுதான் தோன்றிவருகிற போக்கு என்பதால் ஏற்படும் நிலைமையே ஆகும் இது. இக்காரணத்திஞல் இந்த வியாதி சில நிலைமைகளில் சுல பமாய் அகற்றப்படக் கூடியதாகி விடுகிறது; இதனை அகற்ற நாம் முழு சக்தியையும் கொண்டு செயல்பட வேண்டும்.

பழைய வடிவங்கள் வெடித்துப் பிளக்கின்றன; ஏனெ னில் அவற்றின் புதிய உள்ளடக்கம்—பாட்டாளி வர்க்க-எதிர்ப்பும் பிற்போக்குமான இந்தப் புதிய உள்ளடக்கம் —அளவுமீறி வளர்ந்துவிட்டது. சர்வதேசக் கம்யூனிச வளர்ச்சியின் கண்ணேட்டத்தில் இன்று நமது பணி (சோவியத் ஆட்சியதிகாரத்துக்கும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்குமான நமது பணி) மிகவும் நிலையான, சக்தி வாய்ந்த உள்ளடக்கமுடைய தாகையால், அது எந்த வடிவத்திலும்—புதியது, பழையது ஆகிய இரு வடிவங் களிலுமே—வெளிப்பட முடியும், வெளிப்படவும் வேண்டும்; அது எல்லா வடிவங்களையும்—புதியவற்றை மட்டுமின்றி பழையவற்றையும் கூட—புத்துயிர் பெறச் செய்யவும் வெற்றி கொள்ளவும் ஆட்கொள்ளவும் முடியும், அவ்வாறே செய்யவும் வேண்டும்; பழையவற்றுடன் தனக்கு இணக் கம் ஏற்படும் பொருட்டு அல்ல, புதியவை, பழையவை ஆகிய எல்லா வடிவங்களையுமே கம்யூனிசத்தின் முழு நிறையான, தடுக்க இயலாத வெற்றிக்கான ஆயுதமாக்கிக் கொள்ளும் பொருட்டு அது இதனைச் செய்ய வேண்டும்.

உலகு தழுவிய அளவில் சோவியத் ஆட்சியதிகாரமும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமும் வெற்றி பெறுவதற் கான மிகக் குறைந்த தொலைவுள்ள நேரான பாதையில்

தொழிலாளி வர்க்க இயக்கத்தையும் பொதுவாக சமுதாய வளர்ச்சியையும் வழிநடத்திச் செல்வதற்குக் கம்யூனிஸ்டு கள் எல்லா முயற்சிகளேயும் மேற்கொள்ள வேண்டும். இது மறுக்க முடியாத உண்மை. ஆனால் இதே திசையில் அமைந்ததாகத் தோன்றும் மேலும் ஒரு சிறு அடி எடுத்து வைத்தால் போதும், உண்மை பிழையாக மாறிவிடுகிறது. ஜெர்மன், பிரிட்டிஷ் இடதுசாரி கம்யூனிஸ்டுகள் சொல்வது போல், ஒரே பாதையை மட்டுமே, நேர் பாதையை மட்டுமே நாம் அங்கீகரிப்போம், வளைந்து கொடுத்து மாற்றமைவு செய்தலேயோ, இணக்கம் காணுதலேயோ, சமரசத்தையோ அனுமதியோம் என்று சொன்னால் போதும், கம்யூனிசத்துக்குப் பெருங் கேடு விளைவிக்கக் கூடிய, ஓரளவுக்கு ஏற்கெனவே விளைவித்துவிட்ட, விளைவித்தும் வருகிற, தவறிழைப்போராய்விடுவோம். வலதுசாரி வறட்டுச் சூத்திரவாதம் பழைய வடிவங்களே மட்டுமே அங்கீகரிப் பேன் என்று விடாப்பிடியாக நின்று, முற்றிலும் கை யாலாகாததாகி விட்டது; புதிய உள்ளடக்கத்தை அது காணத் தவறியதே இதற்குக் காரணம். இடதுசாரி வறட்டுச் சூத்திர வாதம் கண்ணே மூடிக் கொண்டு சில பழைய வடிவங் களேப் பிடிவாதமாய் நிராகரிக்கிறது; புதிய உள்ளடக்கம் எல்லா வகையான வடிவங்கள் மூலமாகவும் வலுக் கட்டாயமாக வெளிப்படுகிறது என்பதையும், கம்யூனிஸ்டு களாகிய நாம் எல்லா வடிவங்களிலும் பாண்டித்தியம் பெறு வதும், மிகவும் கூடுதலான வேகத்தில் ஒரு வடிவத்துக்குத் துணையாக மற்றொன்றை இணைத்துக் கொள்வதும், ஒன்றுக்குப் பதிலாய் இன்னொன்றை பயன்படுத்திக் கொள் வதும், நம்முடைய வர்க்கத்திடமிருந்தோ, நம்முடைய முயற்சிகளின் வாயிலாகவோ ஏற்படாத எந்த மாறுத லுக்கும் பொருத்தமாய் நம்முடைய போர்த்தந்திரத்தை மாற்றியமைத்துக் கொள்வதும் நமது கடமையாகும் என் பதையும் அது பார்க்கத் தவறிவிடுகிறது.

உலக ஏகாதிபத்தியப் போரின் பயங்கரக் கொடுமை களாலும் இழிநிலேகளாலும் அநீதிகளாலும் மற்றும் இந்தப் போரால் ஏற்பட்ட படுமோசமான சூழ்நிலேயாலும் உலகப்

புரட்சி சக்தி வாய்ந்த முறையில் தூண்டப் பெற்று துரிதப் படுத்தப்பட்டு விட்டது. மகத்தான வேகத்தில் முன் னேறி, மாறிச் செல்லும் வடிவங்களது அற்புத வளத்தை வெளிப்படுத்தி, எல்லா விதமான வறட்டுச் சூத்திர வாதத்தையும் நடைமுறையில் பொய்ப்பித்துக் காட்டி, புத்தி புகட்டி இந்தப் புரட்சி வீச்சிலும் ஆழத்திலும் ஓங்கி வளர்ந்து வருகிறது. இந்நிலைமைகளில் சர்வதேசக் கம்யூனிஸ்டு இயக்கம் துரிதமாகவும் முழுமையாகவும் ''இடதுசாரி'' கம்யூனிசம் என்னும் இந்த இளம் பருவக் கோளாறிலிருந்து விடுபட்டுவிடுமென முழு நம்பிக்கை யுடன் கூறலாம்.

*1920, ஏப்ரல் 27*

## அனுபந்தம்

எங்கள் நாட்டின் பதிப்பகங்கள் என்னுடைய பிரசுரத்தை வெளிக் கொண்டுவருவதற்குள்—பாட்டாளி வர்க்கப் புரட்சிக்காக வஞ்சம் தீர்க்க வேண்டுமென்று அனைத்துலக ஏகாதிபத்தியவாதிகளாலும் எங்கள் நாடு சூறையாடப் பட்டிருக்கிறது; தமது தொழிலாளர்களுக்கு அவர்கள் அளித்த எல்லா வாக்குறுதிகளும் மீறப்பட்டு தொடர்ந்து இன்னமும் சூறையாடப்பட்டும் முற்றுகையிடப் பட்டும் வருகிறது—மேலும் பல தகவல்கள் வெளி நாடுகளிலிருந்து வந்து சேர்ந்தன. நடப்பு விவகாரங்களைப் பற்றி எழுதுபவரின் அவசரமான குறிப்புகளைக் காட்டிலும் அதிகமாய் எதனையும் என்னுடைய பிரசுரத்தில் அளிப்பதாய்க் கூறிக்கொள்ளாமல், ஒரு சில விவரங்களை இங்கு சுருக்கமாய் எடுத்துரைக்கிறேன்.

## 1

## ஜெர்மன் கம்யூனிஸ்டுகளிடையே பிளவு

*ஜெர்மனியில், கம்யூனிஸ்டுகளிடையே பிளவு உண்மை நிலவரமாகி விட்டது. "இடதுசாரிகள்" அல்லது "கோட்பாடு வழியிலான எதிர்த்தரப்பாளர்கள்" கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்து விலகி வேறுனதொரு தனிக் கம்யூனிஸ்டுத் தொழிலாளர் கட்சியை*[54] *அமைத்துக் கொண்டு விட்டனர். இத்தாலியிலும் பிளவு ஏற்பட்டுவிடுமெனத் தோன்றுகிறது—ஏன் நான் "தோன்றுகிறது" எனக் கூறுகிறேன் என்ருல்,* **சோவியத்** [*Il Soviet*] *இடதுசாரிச் செய்தியேட்டில் மேற்கொண்டு இரு இதழ்கள் மட்டுமே (இதழ்கள் 7, 8) எனக்குக் கிடைத்திருக்கின்றன; இவ்விதழ்களில் பிளவின் சாத்தியப்பாடு குறித்தும், அவசியம் குறித்தும் பகிரங்கமாகவே விவாதிக்கப்படுகிறது; தவிரவும் இன்னமும் இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் ஒரு பகுதியாகவே இருந்து வரும் "விலகி நிற்போர்" கோஷ்டியின் (அல்லது பகிஷ்கரிப்பாளர்கள், அதாவது நாடாளுமன்றத்தில் பங்கு கொள்வதை எதிர்ப்பவர்கள் கோஷ்டியின்) காங்கிரசைப் பற்றியும் குறிக்கப்படுகிறது.*

*நாடாளுமன்ற - எதிர்ப்பாளர்களாகிய "இடதுசாரிகளுடனை" (இவர்கள் எந்த அரசியல் கட்சியையும் தொழிற் சங்கங்களில் பணியாற்றுவதையும் எதிர்ப்பதால் ஓரளவுக்கு அரசியலையே எதிர்ப்பவர்களுமாவர்) இந்தப் பிளவு, "மையவாதிகளுடனை" (அதாவது, காவுத்ஸ்கிவாதிகள், லொங்கேவாதிகள், சுயேச்சையாளர்கள் முதலானேர்) பிளவைப் போலவே சர்வதேச நிகழ்ச்சிப் போக்காகி*

விடுமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. அப்படியேதான் நடைபெறட்டுமே. எப்படியும் குழப்பத்தைவிட பிளவு மேலானதே. குழப்பத்தால் கட்சியின் சித்தாந்த, தத்துவார்த்த, புரட்சிகர வளர்ச்சிக்கும் முதிர்ச்சிக்கும் தடை ஏற்படுகிறது; கட்சியின் இசைவான, மெய்யாகவே ஒழுங்கமைக்கப்பட்ட நடைமுறைப் பணிக்கு—இந்தப் பணிதான் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்குப் பாதையைச் செப்பனிடுகிறது—குந்தகம் உண்டாகிறது.

''இடதுசாரிகள்'' தேச அளவிலும் சர்வதேச அளவிலும் தம்மை நடைமுறைச் சோதனைக்கு உட்படுத்திப் பார்க்கட்டும். கண்டிப்பான முறையில் மத்தியத்துவப்படுத்தப்பட்டு, உருக்கு உறுதி கொண்ட கட்டுப்பாடுடைய கட்சி இல்லாமல், அரசியல், கலாசாரப் பணியின் ஒவ்வொரு துறையிலும் கிளையிலும் அதன் ஒவ்வொரு வகையிலும் தலைமையாளர்களாகிவிடும் ஆற்றலின்றி, அவர்கள் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்குத் தயார் செய்தும், பிறகு அதனைச் செயல்படுத்தியும் பார்க்கட்டும். நடைமுறை அனுபவம் விரைவில் அவர்களுக்குப் புத்தி புகட்டும்.

ஆனால் ஒன்று: தொழிலாளி வர்க்க இயக்கத்தில் பங்கு கொள்வோரில் உளப் பூர்வமாகவும் நேர்மையாகவும் சோவியத் ஆட்சியதிகாரத்துக்காகவும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்காகவும் பாடுபடுவோர் யாவரும் ஒரே கட்சியாக ஒன்றிணைவதற்கு—இந்த அவசியமான ஒன்றிணைப்பு அண்மையான வருங்காலத்தில் தவிர்க்க முடியாதபடி ஏற்படும்—''இடதுசாரிகளுடனான'' பிளவு தடங்கலாகி விடாதபடி, அல்லது கூடுமான அளவுக்கு இத்தடங்கல் குறைவாகி விடும்படி, செய்ய நாம் எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும். ருஷ்யாவில் வெகுஜனங்கள் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்காக நேரடிச் செயலில் இறங்குவதற்குப் பல காலம் முன்னதாகவே, மேன்ஷிவிக்குகளை (அதாவது, சந்தர்ப்பவாதிகளையும் ''மையவாதிகளையும்'') மட்டுமின்றி, ''இடதுசாரிகளையும்'' எதிர்த்து முறையாய்ப் போராடவும் இப்போராட்டத்தை அதன் முடிவுவரை நடத்திச் செல்லவும் பதினைந்து ஆண்டு அவகாசம்

கிடைத்ததானது போல்ஷிவிக்குகளின் அதிருஷ்டமாகும். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இதே பணியை இன்று அவசரகோலமாய்ச் செய்தாக வேண்டியுள்ளது. தனிநபர்கள் சிலர், முக்கியமாய்த் தலைவர்களாவதற்கு முயன்று தோல்வியுற்றோரைச் சேர்ந்தவர்கள், (அவர்கள் பாட்டாளி வர்க்கக் கட்டுப்பாட்டு உணர்ச்சி போதிய அளவு இல்லாமலும் தமக்குத் தாமே நேர்மையில்லாமலும் இருப்போராயின்) தமது தவறுகளிலிருந்து வெளிவர நீண்ட காலம் மறுத்து வரலாம். ஆனால் காலம் பக்குவ நிலை அடைந்ததும் தொழிலாளி வெகுஜனங்கள் எளிதிலும் விரைவிலும் தாமே ஒன்றுபட்டு, நேர்மையுள்ள எல்லாக் கம்யூனிஸ்டுகளையும் சோவியத் அமைப்பையும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தையும் நிறுவ வல்ல ஒரே கட்சியாக ஒன்றுபடச் செய்துவிடுவார்கள்.*

---

* நாடாளுமன்ற - எதிர்ப்பாளர்களான ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகள் பொதுவாகக் கம்யூனிஸ்டுகளுடன் வருங்காலத்தில் ஒன்றிணையும் பிரச்சினை குறித்து மேலே கூறியதுடன்கூட பின்வருவனவற்றையும் குறிப்பிட விரும்புகிறேன். ஜெர்மனியின் ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகளுடைய செய்தியேடுகளையும் பொதுவாகக் கம்யூனிஸ்டுகளுடைய செய்தியேடுகளையும் நான் படித்துத் தெரிந்து கொண்ட வரை, வெகுஜனங்களிடையே கிளர்ச்சி நடத்துவதில் முன்னவர்கள் பின்னவர்களைக் காட்டிலும் திறனுடையோராய் இருக்கும் அனுகூலத்தைப் பெற்றிருக்கக் காண்கிறேன். போல்ஷிவிக் கட்சியின் வரலாற்றிலும் இதைவிடச் சிறு அளவிலேதான் என்றாலும், தனிப்பட்ட வட்டார நிறுவனங்களில் மட்டுமேயன்றி தேச அளவில் இல்லை என்றாலும், இதையொத்த ஒரு நிலைமையை அடிக்கடி நான் கண்டு வந்திருக்கிறேன். உதாரணமாய் 1907-08ல் ''இடதுசாரி'' போல்ஷிவிக்குகள் சில சந்தர்ப்பங்களிலும் சில இடங்களிலும் வெகுஜனங்களிடையே எங்களைக் காட்டிலும் வெற்றிகரமாய்க் கிளர்ச்சி நடத்தினர். புரட்சிகரமான ஒரு தருணத்தில் அல்லது புரட்சிகர நினைவுகள் இன்னமும் பசுமையாக இருக்கும் ஒரு நேரத்தில், யாவற்றையும் மறுக்கும் போக்குடைய போர்த்தந்திரத்துடன் வெகுஜனங்களை அணுகுவது சுலபமாகும் என்பது ஓரளவுக்கு இதற்குக்

2

## ஜெர்மனியில் கம்யூனிஸ்டுகளும் சுயேச்சையாளர்களும்

கம்யூனிஸ்டுகளுக்கும் சுயேச்சையாளர்களைச் சேர்ந்த இடதுசாரியினருக்கும் இடையே சமரசம் ஏற்படுவது கம்யூனிசத்துக்கு அவசியமும் பயனுள்ளதும் ஆகும், ஆனால் இதைச் செய்வது எளிதல்ல என்ற கருத்தை இந்தப் பிரசுரத்தில் நான் வெளியிட்டிருக்கிறேன். இதன்பின் எனக்குக் கிடைத்திருக்கும் செய்தியேடுகள் இந்தக் கருத்தின் இவ்விரு அம்சங்களையும் ஊர்ஜிதம் செய்கின்றன. ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டி ஏடான செங்கொடி இதழ் 32 *Die Rote Fahne*[55], Zentralorgan der Kommunistichen Partei Deutschlands, Spartakusbund,* 1920 மார்ச் 26 ஆம் தேதி இதழ்) காப்—லுட்விட்ஸ் இராணுவத்தினர் நடத்த முயன்ற ஆட்சிக் கவிழ்ப்பையும் ''சோஷலிஸ்டு அரசாங்கத்தையும்'' பற்றிய இந்த மத்தியக் கமிட்டியின்

---

காரணமாய் இருக்கலாம். ஆனால் இத்தகைய போர்த்தந்திரமே சரியானதென நிரூபிக்க இது தக்க வாதமாகிவிட முடியாது. எப்படியும், புரட்சிகர வர்க்கத்தின், பாட்டாளி வர்க்கத்தின் மெய்யான முன்னணிப் படையாக, முன்னேறிய படைப்பிரிவாக விரும்பும் ஒரு கம்யூனிஸ்டுக் கட்சி, மற்றும் வெகுஜனங்களுக்கு—பாட்டாளி வர்க்கத்தினருக்கு மட்டுமின்றி, சுரண்டப்படும் உழைப்பாளி மக்களைச் சேர்ந்த பாட்டாளி வர்க்கத்தினரல்லாத பிற வெகுஜனங்களுக்கும் — தலைமை தாங்கி அவர்களை வழிநடத்திச் செல்லக் கற்றுக் கொள்ள விரும்பும் ஒரு கம்யூனிஸ்டுக் கட்சி, நகரப்புறத்து ஆலை வெகுஜனங்களுக்கு மட்டுமின்றி கிராமப்புற வெகுஜனங்களுக்கும் மிகவும் எளியதாகவும் புரிந்து கொள்ளக் கூடியதாகவும் தெளிவாகவும் கண்கூடாகவும் இருக்கும் முறையில் பிரசாரம் நடத்துவது எப்படி, நிறுவன ஒழுங்கமைப்பு செய்வது எப்படி, கிளர்ச்சி நடத்துவது எப்படி என்பது தெரிந்திருக்க வேண்டுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

* ஸ்பார்த்தகஸ் கழகம்.—ப-ர்.

''அறிக்கை'' ஒன்றை வெளியிட்டிருக்கிறது. இந்த அறிக்கை அதன் அடிப்படை முதற்கோளிலும் அதன் நடைமுறை முடிவுகளிலும் முற்றிலும் சரியானதே. அடிப்படை முதற் கோள் என்னவெனில், ''நகரப்புறத் தொழிலாளர்களில் பெரும்பாலோர்'' சுயேச்சையாளர்களை ஆதரிப்பதால், தற் போது பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்கு ''எதார்த்த அடித்தளம்'' இருக்கவில்லை. முடிவு இதுவே: ''சோஷலிஸ்டு அரசாங்கம் பூர்ஷுவா-முதலாளித்துவக் கட்சிகளைச் சேர்த்துக் கொள்ளாமல் ஒதுக்குமானால்'' அதற்கு ''விசுவாச மான எதிர்க்கட்சியாக'' இருப்பதாக (அதாவது ''வன்முறை மூலம் கவிழ்ப்பதற்கான'' தயாரிப்புகளில் இறங்குவதில்லை என்பதாக) வாக்களிப்பது.

பிரதானமாய் இந்தப் போர்த்தந்திரம் சரியானதே என் பதில் ஐயமில்லை. ஆயினும், வரையறுப்புகளில் சிறு பிழை களை எடுத்துரைக்க வேண்டியதில்லை என்று விட்டாலுங்கூட, சமூக-துரோகிகளாலான ஓர் அரசாங்கத்தை (கம்யூ னிஸ்டுக் கட்சியின் அதிகாரபூர்வமான ஓர் அறிக்கையில்) ''சோஷலிஸ்டு'' என அழைக்கலாகாது என்பதையும், ஷெய்டெமன்களின் கட்சி, காவுத்ஸ்கிகள், கிரிஸ்பின்கள் இவர்களது கட்சி ஆகிய இரு கட்சிகளும் குட்டிமுதலாளித் துவ-ஜனநாயகக் கட்சிகளாய் இருக்கையில் ''பூர்ஷுவா- முதலாளித்துவக் கட்சிகளைச் சேர்த்துக் கொள்ளாமல் ஒதுக்குவது'' பற்றிப் பேசக்கூடாது என்பதையும், அறிக்கையில் §4ல் அடங்கியுள்ளவை ஒருபோதும் எழுதப் படக் கூடாதவை என்பதையும் குறிப்பிடாமல் மௌனமா யிருப்பதற்கில்லை. அறிக்கையின் இப்பகுதி வருமாறு:

''...அரசியல் சுதந்திரம் முழுமையாக அனுபவித்துக் கொள்ளக் கூடியதாகவும் முதலாளித்துவ ஜனநாயகம் மூலதனத்தின் சர்வாதிகாரமாய்ச் செயல்பட முடியாததாக வும் ஆகிவிட்ட ஒரு நிலைமையானது, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் வளர்ச்சியினுடைய கண்ணோட்டத்தில் பார்க்கையில், பாட்டாளி வர்க்க வெகுஜனங்களை மேலும் அதிகமாய்க் கம்யூனிசத்தின் பக்கத்துக்கு ஈர்த்திடுவதற்குத் தலையாய முக்கியத்துவம் வாய்ந்ததாகும்....''

இது போன்ற ஒரு நிலைமை சாத்தியமற்றதாகும். ஜெர்மன் ஹெண்டர்சன்களும் (ஷெய்டெமன்கள்), ஸ்னேடன்களும் (கிரிஸ்பின்கள்) ஆன குட்டிமுதலாளித்துவத் தலைவர்கள் முதலாளித்துவ ஜனநாயகத்தின் வரம்புகளுக்கு அப்பால் செல்வதுமில்லை, அவர்களால் செல்லவும் முடியாது. முதலாளித்துவ ஜனநாயகம் மூலதனத்தின் சர்வாதிகாரமாகவேயன்றி வேறு எதுவாகவும் இருக்க முடியாது. கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டி முற்றிலும் சரியானபடி எதற்காகப் பாடுபட்டு வந்ததோ அந்த நடைமுறை விளைவுகளைச் சாதிப்பதற்கு, கோட்பாட்டில் தவறானவையும் அரசியல் வழியில் தீங்கானவையுமான இவை போன்றவற்றை எழுதத் தேவை இல்லை. பின்வருமாறு கூறினால் (நாடாளுமன்ற ஆசாரங்களை அனுசரிக்க விரும்பினால்) போதுமானதாய் இருந்திருக்கும்: ''கம்யூனிஸ்டுகளாகிய நாம், பெரும்பாலான நகரப்புறத் தொழிலாளர்கள் சுயேச்சையாளர்களைப் பின்தொடரும் வரை, இத்தொழிலாளர்கள் தம்மிடையே எஞ்சியிருக்கும் அற்பத்தனமான குட்டிமுதலாளித்துவ, போலி ஜனநாயக (அதாவது, 'பூர்ஷுவா-முதலாளித்துவ') பிரமைகளைத் தமது 'சொந்த' அரசாங்கத்தைக் கொண்டிருக்கும் அனுபவத்தைப் பெறுவதன் வாயிலாக விட்டொழிப்பதற்குத் தடையாக எதுவும் செய்யக்கூடாது'' சமரசத்துக்கு இது போதுமான அடிப்படையாகும். சமரசம் மெய்யாகவே தேவை தான்; நகரப்புறத் தொழிலாளர்களில் பெரும்பாலோரது நம்பிக்கைக்கு உரித்தாயுள்ள ஒரு அரசாங்கத்தைப் பலவந்தமாய்க் கவிழ்ப்பதற்கான எந்த முயற்சியிலும் குறிப்பிட்ட ஒரு காலத்துக்கு ஈடுபடாதிருப்பதுதான் இந்தச் சமரசமாய் அமைய வேண்டும். ஆனால் அன்றாட வெகுஜனக் கிளர்ச்சியில் நாடாளுமன்றத்துக்குரிய முறையான ஆசாரங்களால் கட்டுப்பட்டிருக்க வேண்டியதில்லை என்பதால், மேற்கூறியதோடு நில்லாது பின்வருவதையும் கூறலாம்: ''ஷெய்டெமன்களைப் போன்ற கயவர்களும், காவுத்ஸ்கிகளையும் கிரிஸ்பின்களையும் போன்ற அற்பர்களும் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்டதுடன்,

தொழிலாளர்களையும் எப்படி ஏமாற்றி வருகிறார்கள் என்பதையும் தமது செயல்கள் மூலமே அம்பலம் செய்து கொள்ளட்டும்; அவர்களுடைய 'சுத்தமான' அரசாங்கமே ஏனைய எல்லோரையும்விட 'சுத்தமான' முறையில் சோஷலிசம், சமூக-ஜனநாயகம், மற்றும் ஏனைய வகையான சமூக-துரோகம் ஆகிய குப்பைக் குழிகளைச் 'சுத்தம்' செய்துவிடும்.''

ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சியினது இன்றைய தலைவர்களின் உண்மை சொரூபம் (இத்தலைவர்கள் ஏற்கெனவே அறவே செல்வாக்கிழந்துவிட்டதாகத் தவறாகக் கூறப்பட்டு வந்தது; உண்மையில் இவர்கள், தம்மைக் கம்யூனிஸ்டுகள் என்றழைத்துக் கொண்டு, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை ''ஆதரிப்பதாக'' வாக்களித்த ஹங்கேரிய சமூக-ஜனநாயகவாதிகளைக் காட்டிலும் பாட்டாளி வர்க்கத்துக்கு இன்னுங்கூட அபாயகரமானவர்கள்) கர்னீலவ் கலகத்தின் ஜெர்மன் வடிவாக அமைந்த சம்பவத்தின் போது, அதாவது காப்-லுட்விட்ஸ் ஆட்சிக் கவிழ்ப்பு முயற்சியின் போது, திரும்பவும் தெளிவாக வெளிப்படலாயிற்று.* சுருக்கமான இரு கட்டுரைகள் இதற்குச் சிறிதேயாயினும் எடுப்பானதோர் உதாரணமாகும்: ஒரு கட்டுரை ''தீர்மானகரமான சில மணி நேரம்'' (''Entscheidende Stunden'') என்னும் தலைப்பில் சுயேச்சையாளர்களின் ஏடான *Die Freiheit* (சுதந்திரம்)[57] 1920 மார்ச் 30 இதழில் கார்ல் காவுத்ஸ்கி எழுதியது; மற்றொன்று ''அரசியல் சூழ்நிலை குறித்து'' என்னும் தலைப்பில் (அதே செய்தியேட்டில் 1920 ஏப்ரல்

---

* இது தனிச்சிறப்பு மிக்க தெளிவுடனும் சுருக்கமாகவும் துல்லியமாகவும் மார்க்சிய வழியிலும் ஆஸ்திரியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் சிறந்த ஏடான செங் கொடியில் 1920 மார்ச் 28, 30 இதழ்களில் (*Die Rote Fahne*[58], Wien, 1920, №№ 266 u. 267; L.L.: ''*Ein neuer Abschnitt der deutschen Revolution*'' [வியென்னா, 1920, இதழ்கள் 266, 267; எல். எல்.: ''ஜெர்மன் புரட்சியின் புதிய கட்டம்'' —ப-ர்.]) பரிசீலிக்கப்பட்டிருப்பதை இங்கு குறிப்பிடலாம்.

14 இதழில்) அர்த்தூர் கிரிஸ்பின் எழுதியது. இந்தக் கனவான்கள் புரட்சியாளர்களைப் போலச் சிந்திக்கவும் பகுத்தாராயவும் சிறிதும் ஆற்றலில்லாதவர்கள். இவர்கள் கெஞ்சிப் பிழைக்கும் அற்பர்களான ஜனநாயகவாதிகள். சோவியத் ஆட்சியதிகாரத்தையும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தையும் ஆதரிப்பதாகக் கூறிக் கொள்ளும் போது இவர்கள் பாட்டாளி வர்க்கத்துக்கு மேலும் ஆயிரம் மடங்கு ஆபத்தானவர்களாகி விடுகிறுர்கள். ஏனெனில் உண்மையில் இவர்கள், கடினமான, அபாயகரமான நிலைமை தோன்றியதும் நிச்சயமாய்த் துரோகம் செய்கிறவர்கள்... பாட்டாளி வர்க்கத்துக்குத் துணை புரிவதாக ''மனப் பூர்வமாய்'' நம்பிய படியே துரோகம் இழைப்பவர்கள்! ஹங்கேரிய சமூக-ஜனநாயகவாதிகள் கம்யூனிஸ்டுகள் என்பதாகத் தமது பெயரை மாற்றிக் கொண்டு, பாட்டாளி வர்க்கத்துக்குத் ''துணை'' புரிய விரும்பவில்லையா? தமது கோழைத்தனம் காரணமாகவும், உறுதியின்மை காரணமாகவும், ஹங்கேரியில் சோவியத் ஆட்சியதிகாரத்தின் நிலை நம்பிக்கைக்குச் சிறிதும் இடந்தருவதாயில்லை என்று கருதி, ஆன்டான்ட் முதலாளிகள், ஆன்டான்ட் கொலைகாரர்கள் இவர்களுடைய கையாட்களிடம் பல்லைக் காட்டிக் கொண்டு ஓடவில்லையா?

## 3

### இத்தாலியில் டிராட்டி கோஷ்டியார்

இத்தாலியச் செய்தியேடான சோவியத்தின் மேலே குறிப்பிட்ட இதழ்கள், இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சி தனது அணிகளில் இத்தகைய உறுப்பினர்களையும் இத்தகைய நாடாளுமன்றக் குழு ஒன்றையுங்கூட இருக்கும் படி விட்டு வைத்தது தவருகும் என்பது குறித்து நான் இந்தப் பிரசுரத்தில் சொல்லியிருப்பதைப் பூரணமாக ஊர்ஜிதம் செய்கின்றன. இத்துடன், பிரிட்டிஷ் மிதவாத

முதலாளித்துவ ஏடான The Manchester Guardianஇன் ரோம் நிருபரைப் போன்ற ஒரு வெளியிடத்துப் பார்வையாளரா லும் இது ஊர்ஜிதம் செய்யப்படுகிறது. டுராட்டியுடனை இவரது பேட்டி இந்த ஏட்டின் 1920 மார்ச் 12 இதழில் வெளிவந்திருக்கிறது. இந்நிருபர் எழுதுவதாவது:

''...திரு டுராட்டியின் அபிப்பிராயத்தில் அதிகம் அச்சப்பட வேண்டிய அளவுக்கு இத்தாலியில் புரட்சி அபாயம் இருக்கவில்லை. வெகுஜனங்களை விழிப்புடன் பரபரப்பான நிலையிலே வைத்திருக்கும் பொருட்டுதான் மாக்சிமலிஸ்டுகள் சோவியத் தத்துவங்கள் எனும் நெருப்பைத் தூண்டி விட்டு வருகிறார்கள். ஆனால் இத்தத்துவங்கள் வெறுங் கற்பனைகளும் பக்குவமில்லாத வேலைத்திட்டங்களுமே ஆகும்; நடைமுறையில் இவை பயன்படுத்த முடியாதவை. உழைப்பாளி வர்க்கங்களை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் நிலையில் வைத்திருப்பதற்கே இவை பயன்படுகின்றன. பாட்டாளி வர்க்கத்தாரைக் கவர்ந்திழுப்பதற்கான மயக்குப் பொருளாக இவற்றை உபயோகித்து வருவோருங் கூட, அற்பசொற்பமான சில பொருளாதார ஆதாயங்களைப் பெறுவதற்காகத் தினசரி போராடும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடுகிறது. உழைப்பாளி வர்க்கங்கள் தமது பிரமைகளையும் தம்மை ஊக்குவிக்கும் இந்தக் கட்டுக்கதைகளில் நம்பிக்கையையும் இழக்கும் தருணம் விரைவில் வந்துவிடாதபடி தடுப்பதற்காக அவர்கள் இவ்வாறு போராட வேண்டிவருகிறது. அண்மையில் தபால், ரயில்வே துறைகளில் நடைபெற்ற வேலைநிறுத்தங்கள் அடங்கலாய் எல்லா அளவுகளிலும் எல்லா விதமான சாக்குகளின் பேரிலும் சங்கிலித் தொடர் போல அமைந்த வேலைநிறுத்தங்களுக்கு எல்லாம் இதுவேதான் காரணம். ஏற்கெனவே மிகக் கடுமையாகிவிட்ட நாட்டு நிலவரங்களை இந்த வேலைநிறுத்தங்கள் மேலும் மோசமடையச் செய்கின்றன. நாடு அதன் அட்ரியாட்டிக் பிரச்சினை காரணமாய் எழும் இன்னல்களால் துன்புறுத்தப் படுகிறது; அதன் வெளிநாட்டுக் கடனாலும் விரிந்து பெருகிவிட்ட காகிதப் பணப் புழக்கத்தாலும் அலைக்கழிக்கப் படுகிறது. கட்டுப்பாட்டுடன் வேலை செய்வதால் மட்டுமே ஒழுங்கையும் சுபிட்சத்தையும் திரும்பவும் உண்டாக்க முடியும். ஆனால் நாடு இந்தக் கட்டுப்பாட்டு உணர்ச்சியின் அவசியத்தை இன்னும் உணர்ந்தாக வில்லை....''

டுராட்டியாலும் இத்தாலியிலுள்ள அவரது முதலாளித்துவ ஆதரவாளர்களாலும் உடந்தையாளர்களாலும் ஆதர்ச புருஷர்களாலும் மூடிமறைக்கப் பட்டும் பூசி மெழுகப் பட்டும் வரும்படியான ஓர் உண்மையை இந்த பிரிட்டிஷ் நிருபர் அவசரகோலமாய்ப் போட்டு உடைத்துவிடுகிருர் என்பது தெட்டத்தெளிவாக விளங்குகிறது. டுராட்டி, திரெவெஸ், மொடிலியானி, துகோனி முதலாஞேரது கருத்துக்களும் அரசியல் நடவடிக்கைகளும் மெய்யாகவே இந்த பிரிட்டிஷ் நிருபர் விவரிக்கும் வகைப்பட்டவையே என்பதுதான் இந்த உண்மை. இது அப்பட்டமான சமூக-துரோகமே அன்றி வேறில்லே. முதலாளிகளுடைய பணப் பெட்டியை நிரப்புவதற்காக உழைத்திடும் கொத்தடிமைகளான தொழிலாளர்களிடையே இவர்கள் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் ஆதரித்து நிற்பதைப் பாருங்கள்! ருஷ்யர்களான நாங்கள் கேட்டுக் கேட்டுக் காது புளித்துப் போன மென்ஷிவிக் சொற்பொழிவுகளாயிற்றே இவை யாவும்! வெகுஜனங்கள் சோவியத் ஆட்சியதிகாரத்தை ஆதரிக்கிருர்கள் என்பது அரியதோர் ஒப்புதல் வாக்குமூல மாயிற்றே! தன்முனைப்புடன் பரவிவரும் இந்த வேலே நிறுத்தங்கள் ஆற்றும் புரட்சிகரப் பணியைப் புரிந்து கொள்ளத் தவறுவது அசட்டுத்தனத்தையும் முதலாளித்துவ ஈனத்தனத்தையும் தான் குறிக்கிறது! இந்த பிரிட்டிஷ் முதலாளித்துவ - மிதவாதச் செய்தியேட்டின் நிருபர் டுராட்டி கோஷ்டியாருக்கு உண்மையில் தீங்கே இழைத்துள்ளார். இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சி உண்மையில் மூன்ருவது அகிலத்துக்கு ஆதரவாக இருக்க விரும்பிஞல் அது டுராட்டி கோஷ்டியாரைத் தனது அணிகளிலிருந்து விரட்டி, பெயரளவில் மட்டுமின்றி செயலிலும் கம்யூனிஸ்டுக் கட்சியாகிவிட வேண்டுமென வற்புறுத்தும் தோழர் பொர்டீகாவும் சோவியத்தில் பணியாற்றும் அவரது நண்பர்களும் கோருவது முற்றிலும் சரியே என்பதை அவர் சிறந்த முறையில் ஊர்ஜிதம் செய்கிருர்.

## 4

### சரியான முதற்கோள்களிலிருந்து பெறப்படும் தவறான முடிவுகள்

ஆனால் தோழர் பொர்டீகாவும் அவருடைய "இடது சாரி" நண்பர்களும் டுராட்டி கோஷ்டியைப் பற்றிய அவர்களுடைய சரியான குற்றவிமர்சனத்திலிருந்து, நாடாளுமன்றத்தில் பங்கு கொள்வதே கோட்பாட்டு வழியில் தீங்கானதென்ற தவறான முடிவை வந்தடைகிறார்கள். இந்தக் கருத்துக்கு ஆதரவாய் ஆழமுள்ள எந்தவொரு வாதத்தையும் இம்மியளவுங்கூட இத்தாலிய "இடதுசாரிகளால்" முன்வைக்க முடியவில்லை. முதலாளித்துவ நாடாளுமன்றங்களை மெய்யாகவே புரட்சிகரமாய்க் கம்யூனிஸ்டு வழியில் பயன்படுத்திக் கொள்வதற்குரிய சர்வதேச உதாரணங்கள் அவர்களுக்குத் தெரியவேயில்லை (அல்லது அவற்றை மறந்துவிட முயலுகின்றனர்). முதலாளித்துவ நாடாளுமன்றங்களை இவ்வழியில் பயன்படுத்தியதானது பாட்டாளி வர்க்கப் புரட்சிக்குத் தயார் செய்வதற்கு உதவியாக இருந்தது மறுக்க முடியாததாகும். இவற்றைப் பயன்படுத்திக் கொள்வதற்கான "புதிய" வழி எதனையும் அவர்களால் சிந்தித்துப் பார்க்கக்கூட முடியவில்லை; ஆகவே போல்ஷிவிக் வழியல்லாத "பழைய" வழியைப் பற்றி முடிவின்றித் திரும்பத் திரும்பக் கூச்சல் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அவர்களுடைய அடிப்படையான தவறு இதில்தான் அடங்கியுள்ளது. நாடாளுமன்றத் துறையில் மட்டுமல்லாது, எல்லாச் செயல் துறைகளிலுமே, கம்யூனிசமானது இரண்டாவது அகிலத்தின் பாரம்பரியங்களிலிருந்து (நல்லதை இருத்திக் கொண்டு வளர்த்துச் செல்லும் போதே) முற்றிலும் துண்டித்துக் கொள்வதாக அமையும்படி கோட்பாட்டு வழியில் புதுமையானதொன்றைப் புகுத்தியாக வேண்டும் (நீண்ட நெடிய, விடாப்பிடியான முயற்சி இல்லாமல் இவ்வாறு அதனால் புகுத்த முடியாது).

பத்திரிகைத் துறைப் பணியை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். செய்தியேடுகளும் வெளியீடுகளும் துண்டுப் பிரசுரங்களும் பிரசாரம், கிளர்ச்சி, நிறுவன ஒழுங்கமைப்பு ஆகிய அத்தியாவசியப் பணிகளைச் செய்கின்றன. ஓரளவேனும் நாகரிகமடைந்த எந்த நாட்டிலும் வெகுஜன இயக்கம் எதுவும் பத்திரிகைத் துறை இல்லாமல் நடந்தேற முடியாது. ''தலைவர்களுக்கு'' எதிரான எந்தக் கூப்பாட்டினாலும், தலைவர்களது செல்வாக்கிற்கு உட்பட்டு களங்கமுற்று விடாதபடி வெகுஜனங்களைக் காப்போமென ஏற்கப்படும் எந்தப் புனிதச் சபதத்தாலும், இப்பணிக்காக முதலாளித்துவ அறிவுத்துறைச் சுற்றுச்சார்பிலிருந்து வந்தவர்களைப் பயன்படுத்திக் கொள்ளும் அவசியத்திலிருந்து நம்மை விடுவிக்கவோ, முதலாளித்துவத்தில் இப்பணி நடந்தேறும் முதலாளித்துவ - ஜனநாயக, ''தனியார் சொத்துக்குரிய'' சூழ்நிலையையும் சுற்றுச்சார்பையும் நம்மிடமிருந்து ஒழித்திடவோ போவதில்லை. முதலாளித்துவ வர்க்கம் கவிழ்க்கப்பட்ட பிற்பாடு, பாட்டாளி வர்க்கம் அரசியல் அதிகாரம் வென்ற பிற்பாடு, இரண்டரை ஆண்டுகள் ஆகியுங்கூட இன்னமும் எங்களைச் சுற்றிலும் இந்தச் சூழ்நிலை, வெகுஜன (விவசாயி, கைத்தொழிலாளர்) முதலாளித்துவ - ஜனநாயகத் தனியார் சொத்து உறவுகளின் சுற்றுச்சார்பு இருந்தே வருகிறது.

நாடாளுமன்றப் பணி ஒரு வகை செயற்பாடாகும்; பத்திரிகைத் துறை மற்றொரு வகையாகும். இவ்விரு துறைகளிலும் ஈடுபட்டுள்ளோர் மெய்யான கம்யூனிஸ்டுகளாய் இருப்பின், மெய்யாகவே பாட்டாளி வர்க்க வெகுஜனக் கட்சியின் உறுப்பினர்களாய் இருப்பின், இவை இரண்டின் உள்ளடக்கமும் கம்யூனிஸ்டு இயல்புடையதாய் இருக்க முடியும், இருக்கவும் வேண்டும். பாட்டாளி வர்க்கம் தனது சொந்த நோக்கங்களுக்காக முதலாளித்துவ வர்க்கத்தைச் சேர்ந்தவர்களின் சேவைகளைப் பயன்படுத்திக் கொள்ளும் பொருட்டும், முதலாளித்துவ-அறிவுத்துறை வாதத் தப்பெண்ணங்களையும் அதனுடைய செல்வாக்கின் விளைவுகளையும் அகற்றிடும் பொருட்டும், குட்டிமுதலாளித்

துவச் சுற்றுச்சார்பின் எதிர்ப்பினைப் பலவீனப்படுத்தும் பொருட்டும் (இறுதியில், அறவே அந்தச் சுற்றுச்சார் பினை உருமாற்றிவிடும் பொருட்டும்), பாட்டாளி வர்க்கம் சமாளித்தாக வேண்டிய இன்னல்களையும் அது தீர்வு காண வேண்டிய தனிவகையான பிரச்சினைகளையும் தவிர்ப்பது இவ்விரு துறைகளில் எதனிலும்—முதலாளித்துவத்திலும், முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்கு மாறிச் செல்லும் காலத்திலும் வேறு எந்தச் செயல் துறையிலும் —சாத்தியமல்ல.

கடைகோடியான "இடதுசாரி" அராஜகவாதிகளும் சிண்டிக்கலிஸ்டுகளும் பிறரும் நாடாளுமன்ற முறையை எதிர்த்து அனல் பறக்கப் பேசியும், முதலாளித்துவ வழியில் சீரழிந்துவிட்ட நாடாளுமன்ற உறுப்பினர்களான சோஷலிஸ்டுகளை எள்ளி நகையாடியும், இவர்களுடைய பதவி மோகத்தைச் சாடியும், இன்ன பலவாறுக எதிர்த்த போதிலும், பத்திரிகைத் துறை வாயிலாகவும், சிண்டிக் கேட்டுகளின் (தொழிற் சங்கங்கள்) வேலைகள் வாயிலாக வும் தாமும் இதே வகையான முதலாளித்துவப் பிழைப்பு நடத்தியதற்கு 1914-18 யுத்தத்துக்கு முன்பு எல்லா நாடுகளிலும் நாம் எண்ணற்ற உதாரணங்களைப் பார்க்க வில்லையா? பிரான்சை மட்டும் எடுத்துக் கொள்வதாயின், ழுவோ, மெர்ஹெயிம் இவர்களது உதாரணம் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு அல்லவா?

நாடாளுமன்றத்தில் பங்கு கொள்வதை "நிராகரிப் பவர்கள்", தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள்ளே முத லாளித்துவ ஜனநாயகத்தின் செல்வாக்குகள் செயல்படு வதை எதிர்த்திடும் கடினமான பிரச்சினைக்கு இது போன்ற "சிக்கலற்ற", "சுலபமான", புரட்சிகரமானதென்று கூறிக் கொள்ளப்படும் முறையில் "தீர்வு கண்டு விடலாம்" என நினைப்பதில் அவர்களுடைய சிறுபிள்ளைத்தனம் தான் காணக்கிடக்கிறது. உண்மையில் அவர்கள் தமது சொந்த நிழல்களிடமிருந்து ஓடிவிட முயலுகிருர்கள்; இன்னல் களைக் காண விரும்பாது கண்களை மூடிக் கொள்கிருர்கள்; வெறும் சொற்களைக் கொண்டு இவற்றை ஓட்டிவிட

எத்தனிக்கிறார்கள். மான வெட்கமற்ற படுமோசமான பதவி மோகம், நாடாளுமன்ற இடங்களை முதலாளித்துவ வழியில் பயன்படுத்திக் கொள்ளுதல், நாடாளுமன்றச் செயற்பாட்டை அப்பட்டமான சீர்திருத்தவாத இழி செயலாய் மாற்றுதல், மட்டரகமான குட்டிமுதலாளித் துவப் பழமைவாதம் ஆகிய இவை யாவும் எங்கும்—தொழி லாளி வர்க்க இயக்கத்துக்கு வெளியே மட்டுமின்றி அதனுள்ளும் — முதலாளித்துவத்தால் தோற்றுவிக்கப்படும் சகஜமான, பெருவழக்கான இயல்புகள் என்பது மறுக்க முடியாததாகும். இதே முதலாளித்துவமும் அது தோற்று விக்கும் முதலாளித்துவச் சுற்றுச்சார்பும் (முதலாளித்துவ வர்க்கம் கவிழ்க்கப்பட்ட பிறகுங்கூட இது மிகமிக மெதுவாகவே மறைகிறது; ஏனெனில் விவசாயிகள் இடை யறாது முதலாளித்துவ வர்க்கத்தை உயிர் பெறச் செய் கிறார்கள்) செயற்பாடு, வாழ்க்கை இவற்றின் எல்லாத் துறைகளிலும் சாராம்சத்தில் இதே போன்ற முதலாளித் துவப் பதவி மோகத்தையும் தேசியவெறிப் போக்கையும் குட்டிமுதலாளித்துவ கொச்சைத்தனத்தையும் இன்ன பிறவற்றையும் உண்டாக்குகின்றன.

எனதருமை பகிஷ்காரவாதிகளே, நாடாளுமன்ற-எதிர்ப் பாளர்களே, நீங்கள் உங்களை ''உக்கிரமான புரட்சி யாளர்களாக'' நினைத்துக் கொள்கிறீர்கள்; ஆனால் உண் மையில் தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் தலைதூக்கும் முதலாளித்துவச் செல்வாக்குகளுக்கு எதிரான போராட் டத்தில் ஒப்பளவில் அற்பமான இன்னல்களைக் கண்டு நீங்கள் நடுங்கிவிடுகிறீர்கள். ஆனால் உங்களுடைய வெற்றி— அதாவது முதலாளித்துவ வர்க்கத்தைக் கவிழ்த்துப் பாட் டாளி வர்க்கம் அரசியல் ஆட்சியதிகாரத்தை வென்று கொள்வதானது—மேலும் பெரிய அளவில், எல்லையின்றிப் பெரிய அளவில் இதே இன்னல்களையே தோற்றுவிக்கும். இன்று உங்களை எதிர்நோக்கும் சிறிய இன்னலைக் கண்டு, சிறு பிள்ளைகளைப் போல நடுக்கமுறுகிறீர்கள்; ஆனால் நாளைக்கும் அதற்கு மறு நாளும் இதே இன்னல்களை எல்லை யின்றிக் கூடுதலான அளவில் சமாளிப்பதற்குக் கற்றுக்

கொள்ளத்தான் வேண்டியிருக்கும், முழுமையாகவும் தீர்க்கமாகவும் கற்றுக் கொள்ளத்தான் வேண்டியிருக்கும். என்பதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லை.

சோவியத் ஆட்சியதிகாரத்தில் உங்களுடையதும் எங்களுடையதுமான பாட்டாளி வர்க்கக் கட்சிக்குள், மேலும் பெரிய எண்ணிக்கையில் முதலாளித்துவ அறிவுத்துறையினர் நுழைந்து கொண்டு விடுவார்கள். அவர்கள் சோவியத்துகளுக்குள்ளும் நீதிமன்றங்களினுள்ளும் நிர்வாகத்தினுள்ளும் துளைத்துக் கொண்டு வந்து விடுவார்கள்; ஏனெனில், முதலாளித்துவத்தால் தோற்றுவிக்கப்பட்ட மானுடத்தின் துணை கொண்டல்லாது வேறு எவ்வழியிலும் கம்யூனிசத்தைக் கட்டியெழுப்பிவிட முடியாது; முதலாளித்துவ அறிவுத்துறையினரை நம் பக்கத்துக்கு வென்று உருமாறும்படியும் நம்முடன் ஒன்று கலக்கும் படியும் புனர் போதம் அளிக்க வேண்டுமேயல்லாது, அவர்களை விலக்கித் தள்ளிவிடவோ ஒழித்துக் கட்டிவிடவோ முடியாது. எப்படிப் பாட்டாளி வர்க்கத்தினருக்குங்கூட, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் அடிப்படையில் நீண்ட நெடிய போராட்டம் நடத்தி, புனர் போதம் அளிக்க வேண்டுமோ, அவ்வாறே அறிவுத்துறையினருக்கும் அளிக்க வேண்டும். பாட்டாளி வர்க்கத்தினர் அவர்களுடைய குட்டிமுதலாளித்துவத் தப்பெண்ணங்களை நினைத்த மாத்திரத்தில் ஒரு நொடியில், மந்திர ஜாலத்தால், தெய்வ கடாட்சத்தால் விட்டொழித்து விடுவதில்லை; ஒரு கோஷம் அல்லது தீர்மானம் அல்லது சட்டத்தை வெளியிட்டு இதனைச் செய்து விட முடியாது; வெகுஜனக் குட்டிமுதலாளித்துவச் செல்வாக்குகளை எதிர்த்துக் கடினமான நீண்டதொரு வெகுஜனப் போராட்டம் நடைபெறும் போதுதான் அவர்கள் இவற்றை விட்டொழிக்கிறார்கள். சோவியத் ஆட்சியில் இதே பிரச்சினைகள் — நாடாளுமன்ற-எதிர்ப்பாளர்கள் இன்று இவ்வளவு டாம்பீகமாகவும் அகம்பாவத்துடனும் அலட்சியமாகவும் சிறுபிள்ளைத்தனமாகவும் நினைத்த மாத்திரத்திலே ஒதுக்கித் தள்ளிவிடலாமென நினைக்கும் இதே பிரச்சினைகள்—சோவியத்துகளின் உள்ளும், சோவியத்

நிர்வாகத்தின் உள்ளும், சோவியத் ''வழக்குரைஞர்கள்'' இடையிலும் (ருஷ்யாவில் நாங்கள் முதலாளித்துவ வழக்கறிஞர் அமைப்பை ஒழித்துவிட்டோம், இது முற்றிலும் சரியே; ஆனால் ''சோவியத்'' ''வழக்குரைஞர்கள்''[58] என்ற பெயரில் இவ்வமைப்பு திரும்பவும் உயிர் பெற்று வருகிறது) எழுந்து வருகின்றன. சோவியத் பொறியாளர்களிடையிலும், சோவியத் பள்ளி ஆசிரியர்களிடையிலும், சலுகைகள் பெற்றுள்ள—அதாவது மிக உயர்ந்த தேர்ச்சி பெற்று மிகச் சிறந்த நிலையிலுள்ளவர்களான—சோவியத் ஆலைத் தொழிலாளர்களிடையிலும் முதலாளித்துவ நாடாளுமன்ற முறைக்குரிய தீய இயல்புகள் யாவும் இடையறாது அப்படியே புத்துயிர் பெற்றெழுவதை நாம் காண்கிறோம். இந்தத் தீமையைப் படிப்படியாகத்தான்—பாட்டாளி வர்க்க நிறுவன ஒழுங்கமைப்பு, கட்டுப்பாடு இவற்றின் அடிப்படையில் நடைபெறும் அயராத, இடைவிடாத, நீண்ட போராட்டத்தைத் திரும்பவும் நடத்துவதன் மூலமே — வெற்றி கொண்டு வருகிறோம்.

முதலாளித்துவ வர்க்கத்தின் ஆதிக்கத்தில் நம்முடைய, அதாவது தொழிலாளர்களுடைய கட்சியிலிருந்து, முதலாளித்துவப் பழக்க வழக்கங்களைக் களைந்திடுவது மிகவும் ''கடினமானதே''. முதலாளித்துவத் தப்பெண்ணங்களால் படுமோசமாய் ஊழல்படுத்தப்பட்ட வழக்கமான நாடாளுமன்றத் தலைவர்களைக் கட்சியிலிருந்து விலக்குவதும் ''கடினமானதுதான்''. முதலாளித்துவ வர்க்கத்திலிருந்து வரும் (சொற்பமே ஆயினும்)அத்தியாவசிய எண்ணிக்கையோரைப் பாட்டாளி வர்க்கக் கட்டுப்பாட்டுக்குக் கீழ்ப்படியச் செய்வதும் ''கடினமானதே''. தொழிலாளி வர்க்கத்துக்குரிய முழுத் தகுதியும் சிறப்பும் வாய்ந்த கம்யூனிஸ்டுக் குழு ஒன்றை முதலாளித்துவ நாடாளுமன்றத்தில் நிறுவுவதும் ''கடினமானதுதான்''. கம்யூனிஸ்டு நாடாளுமன்றத்தினர் முதலாளித்துவ நாடாளுமன்ற வெற்றுப் பணிகளில் ஈடுபடாது வெகுஜனங்களுக்கிடையிலான பிரசாரம், கிளர்ச்சி, நிறுவன ஒழுங்கமைப்பு ஆகிய அவசர அவசியப் பணிகளில் கவனம் செலுத்தும்படி உறுதி செய்து கொள்வதும்

''கடினமானதுதான்''. இவை யாவும் ''கடினமானவை'' என்பதில் ஐயமில்லைதான். ருஷ்யாவில் இவை கடினமானவையாகத்தான் இருந்தன. முதலாளித்துவ வர்க்கம் மேலும் பன்மடங்கு பலம் படைத்ததாகவும், முதலாளித்துவ-ஜனநாயகப் பாரம்பரியங்கள் மேலும் வலிமை மிக்கனவாகவும், இன்ன பிற நிலைமைகளுக்குமுரிய மேலைய ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இவை மிகமிகக் கடினமானவையாகவே இருக்கும்.

ஆயினும் இந்தக் ''கடினமான பணிகள்'' யாவும், பாட்டாளி வர்க்கப் புரட்சியின் போதும் பாட்டாளி வர்க்கம் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்ட பிறகும் வெற்றி பெறும் பொருட்டு எப்படியும் பாட்டாளி வர்க்கம் கட்டாயமாய்த் தீர்வு காண வேண்டியிருக்கும் இதே வகையான பிரச்சினைகளுடன் ஒப்பிடுகையில் குழந்தைப் பிள்ளையின் விளையாட்டே ஆகும். பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தில் கோடானு கோடியான விவசாயிகளுக்கும் சிறு உடைமையாளர்களுக்கும் லட்சக் கணக்கான அலுவலகச் சிப்பந்திகளுக்கும் அதிகாரிகளுக்கும் முதலாளித்துவ அறிவுத்துறையினருக்கும் புனர் போதம் அளிப்பது, அவர்கள் எல்லோரையும் பாட்டாளி வர்க்க அரசுக்கும் பாட்டாளி வர்க்கத் தலைமைக்கும் கீழ்ப்படியச் செய்வது, அவர்களுடைய முதலாளித்துவப் பழக்க வழக்கங்களையும் பாரம்பரியங்களையும் இல்லாதொழியச் செய்வது — மெய்யாகவே பிரம்மாண்டமான இந்தப் பணிகளுடன் ஒப்பிடுகையில், முதலாளித்துவ வர்க்கத்தின் ஆதிக்கத்தில் முதலாளித்துவ நாடாளுமன்றத்தில் மெய்யான பாட்டாளி வர்க்கக் கட்சியின் மெய்யான கம்யூனிஸ்டுக் குழு ஒன்றை உருவாக்குவது குழந்தைப் பிள்ளைக்குரியதெனச் சொல்லத்தக்க அளவுக்கு எளியதே ஆகும்.

நாடாளுமன்ற-எதிர்ப்பாளர்களும் ''இடதுசாரித்'' தோழர்களும் இது போன்ற ஒரு சிறிய இன்னலை இப்பொழுது சமாளிக்கத் தெரிந்து கொள்ளவில்லை என்றால், அவர்கள் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தைச் சாதிக்கும் திறனற்றவர்களாகவும் முதலாளித்துவ அறிவுத்துறை

யினரையும் முதலாளித்துவ ஏற்பாடுகளையும் விரிவான அளவில் கீழ்ப்படச் செய்யவும் புனரமைக்கவும் முடியாதோராயுமே இருக்க வேண்டும், அல்லது அவர்கள் அவசர அவசரமாய்த் தமது பயிற்சியை நிறைவுறச் செய்ய வேண்டியதாகி, இந்த அவசரத்தின் விளைவாய்ப் பாட்டாளி வர்க்க இலட்சியத்துக்குப் பெருமளவில் தீங்கிழைப்போரும், வழக்கமானதைவிட அதிகமான தவறுகள் இழைப்போரும், சராசரி அளவைக் காட்டிலும் கூடுதலான பலவீனத்தையும் திறனின்மையையும் வெளிப்படுத்துவோருமாகவே இருக்க வேண்டுமென்று துணிந்து கூறலாம்.

முதலாளித்துவ வர்க்கம் கவிழ்க்கப்பட்டு, அதற்குப் பிற்பாடு சிறுவீதப் பொருளாதாரமும் சிறுவீதப் பண்ட உற்பத்தியும் பூரணமாக மறைந்தொழியும் வரை, முதலாளித்துவச் சூழ்நிலையும் சொத்துடைமைப் பழக்கவழக்கங்களும் குட்டிமுதலாளித்துவ மரபுகளும் தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள்ளும் வெளியிலும்—செயற்பாட்டுத் துறைகளில் ஒன்றே ஒன்றான நாடாளுமன்றத் துறையில் மட்டுமின்றித் தவிர்க்க முடியாதபடி சமூகச் செயற்பாட்டின் ஒவ்வொரு துறையிலும், எல்லாக் கலாசார, அரசியல் துறைகளிலும் விதிவிலக்கின்றி—பாட்டாளி வர்க்கப் பணிக்குத் தீங்கிழைத்தே வரும். செயற்பாட்டின் ஏதேனும் ஒரு துறையில் எழும் ''விரும்பத்தகாத'' பிரச்சினைகள் அல்லது சங்கடங்களில் ஒன்றைப் புறக்கணிக்கவோ, அதிலிருந்து வேலியிட்டுப் பிரித்துக் கொண்டுவிடவோ முயலுவது மிகப் பெரும் தவறாகும்; பிற்பாடு இதற்காகக் கட்டாயம் வருந்த வேண்டியே வரும். விதிவிலக்கின்றி ஒவ்வொரு வேலைத் துறையிலும் செயற்பாட்டு அரங்கிலும் பாண்டித்தியம் பெறவும், எல்லா இன்னல்களையும் சமாளிக்கவும், முதலாளித்துவப் பழக்கவழக்கங்கள், பாரம்பரியங்கள் யாவற்றையும் ஒழித்திடவும் நாம் கற்றுக் கொண்டாக வேண்டும். பிரச்சினையை வேறு எந்த விதமாய் எடுத்துரைப்பதாயினும், அது வெறும் விளையாட்டாகவே, சிறு பிள்ளைத்தனமாகவே இருக்கும்.

***1920, மே 12***

5

*இப்புத்தகத்தின் ருஷ்யப் பதிப்பில் நான் சர்வதேசப் புரட்சிக் கொள்கைத் துறையில் ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியை ஒட்டுமொத்தமாய்க் குறிப்பிட்டு அதன் நடத்தையை ஓரளவு பிழைபட விவரித்து விட்டேன். ஆகவே தற்போது எனக்குக் கிடைத்திருக்கும் இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, இப்பிரச்சினை குறித்து நமது டச்சுத் தோழர்களின் கடிதம் ஒன்றை வெளியிட்டு, ருஷ்ய மூலத்தில் நான் உபயோகித்த ''டச்சு டிரிபியூனிஸ்டுகள்'' என்னும் தொடரைத் திருத்திக் கொள்கிறேன்; அதனை இப்பொழுது ''ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர்கள் சிலர்'' என்பதாய் மாற்றிக் கொள்கிறேன்.*[59]

நி. லெனின்

**வைன்காப்பின் கடிதம்**

*மாஸ்கோ, 1920 ஜூன் 30*

*அருமை தோழர் லெனின்,*

*கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசுக்கான டச்சுப் பிரதிநிதிக் குழுவின் உறுப்பினர்களான நாங்கள், உங்கள் அன்பின் காரணமாய், உங்களுடைய* ''இடதுசாரி'' கம்யூனிசம்—இளம் பருவக் கோளாறு *என்னும் நூலை, அது ஐரோப்பிய மொழிகளில் வெளிவருவதற்கு முன்பே படிக்கும் வாய்ப்புப் பெற்றோம். சர்வதேச அரசியலில் ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியின் உறுப்பினர்கள் சிலர் ஆற்றும் பங்கு குறித்து உங்களுடைய ஆட்சேபத்தை இப்புத்தகத்தில் சில இடங்களில் நீங்கள் வலியுறுத்துகிறீர்கள்.*

*ஆனால் அவர்களுடைய செயல்களுக்கான பொறுப்பை நீங்கள் கம்யூனிஸ்டுக் கட்சியின்மீது சுமத்துவது குறித்து நாங்கள் ஆட்சேபிக்க வேண்டுமெனக் கருதுகிறோம். இது மிகவும் பிழையானது. தவிரவும் இது நியாயமுமல்ல.*

ஏனெனில் ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியின் இந்த உறுப்பினர்கள் கட்சியின் நடப்புச் செயல்களில் அற்ப சொற்ப பங்கே எடுத்துக்கொள்கிறவர்கள், அல்லது சிறிதும் பங்கெடுத்துக் கொள்ளாதவர்கள். ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியில் நேரடியாகவோ மறைமுகமாகவோ எதிர்த்தரப்புக் கோஷங்களைப் புகுத்துவதற்கே இவர்கள் முயன்றுவருகிறார்கள். இந்த எதிர்த்தரப்புக் கோஷங்களை எதிர்த்துக் கட்சியும் அதன் எல்லாப் பத்திரிகைகளும் முழு முனைப்பானதொரு போராட்டம் நடத்தியுள்ளது, தொடர்ந்து நடத்தியும் வருகிறது.

தோழமை மிக்க தங்கள்,
டே. இ. வைன்காப்
(டச்சுப் பிரதிநிதிக் குழுவின் சார்பில்)

*1920 ஏப்ரல்-மேயில்*
*எழுதப்பட்டது*

நூல் திரட்டு,
தொகுதி 41,
பக்கங்கள் 1-104

*1920 ஜூனில்*
*தனிப் பிரசுரமாய்*
*பெத்ரொகிராதில்*
*வெளிவந்தது*

## நிலப் பிரச்சினை பற்றிய ஆய்வுரைகளின் பூர்வாங்க நகல்[60]

### (கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசுக்காக)

*நிலப் பிரச்சினை சம்பந்தமாய்ப் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் போர்த்தந்திரத்தை இரண்டாவது அகிலம்— இப்பொழுது இது மஞ்சள் அகிலமாகி விட்டது—வரையறுப்பதற்கு மட்டுமின்றி, ஒழுங்காய் இந்தப் பிரச்சினையை எடுத்துரைப்பதற்குங்கூட ஏன் தவறிற்று என்பதற்குத் தோழர் மார்ஹ்லேவ்ஸ்கி தமது கட்டுரையில்[61] சிறந்த விளக்கம் தருகிறார். இதன்பின், மூன்றுவது அகிலத்தினுடைய கம்யூனிஸ்டு நிலத் துறை வேலைத்திட்டத்துக்குரிய தத்துவார்த்த அடிப்படைகளைத் தோழர் மார்ஹ்லேவ்ஸ்கி எடுத்துரைக்க முற்படுகிறார்.*

*இந்த அடிப்படைகள் 1920 ஜூலை 15ல் கூடப் போகும் கம்யூனிஸ்டு அகிலத்தின் காங்கிரசில் நிலப் பிரச்சினை பற்றிய பொதுத் தீர்மானத்துக்குத் தக்க அடிநிலையாய் அமைய முடியும் (என் அபிப்பிராயத்தில், அமையவும் வேண்டும்).*

*இப்படிப்பட்ட ஒரு தீர்மானத்துக்கான பூர்வாங்க நகல் வருமாறு:*

*1. கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைமையிலுள்ள நகரத்துத் தொழில் துறைப் பாட்டாளி வர்க்கத்தால் மட்டும் தான் கிராமப்புறத்து உழைப்பாளி மக்கள் பெருந்திரளினரை மூலதனம், நிலப்பிரபுக்களினது பெரிய நிலவுடைமை இவற்றின் ஒடுக்குமுறையிலிருந்தும், முதலாளித்துவ அமைப்பு நீடித்து இருக்கும் வரையில் தவிர்க்க முடியாதபடி மீண்டும் மீண்டும் மூளவே செய்யும்படியான*

நாசத்திலிருந்தும் ஏகாதிபத்தியப் போர்களிலிருந்தும் விடுவிக்க முடியும். கிராமப்புறத்து உழைப்பாளி மக்கள் திரளினர் கம்யூனிசப் பாட்டாளி வர்க்கத்துடன் கூட்டணி கொண்டாலொழிய, நிலப்பிரபுக்களின் (பெரு நிலச்சுவான்தார்கள்), முதலாளி வர்க்கத்தாரின் ஒடுக்குமுறையை வீழ்த்துவதற்கான புரட்சிப் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கத்துக்குப் பற்றுறுதி மிக்க ஆதரவு அளித்தாலன்றி, அவர்கள் கடைத்தேற வழியில்லை.

மறுபுறத்தில் தொழில் துறைத் தொழிலாளர்கள் தமது குறுகிய தொழில் துறைகளுக்கு உரிய நலன்களில் மட்டுமே கருத்துச் செலுத்தியும், தமது சொந்த நிலைமைகளை, சில நேரங்களில் குட்டி முதலாளித்துவக் கோணத்திலிருந்து பார்க்கும் பொழுது சகிக்கக் கூடிய நிலைமைகளாய் இருக்கும் இவற்றை, மேம்படுத்திக் கொள்வதுடன் திருப்தியுற்றும் வருவார்களாயின், மூலதனத்தின் ஒடுக்கு முறையிலிருந்தும் போர்களிலிருந்தும் மனிதகுலத்தை விடுவிப்பதென்னும் சகாப்தகர முக்கியத்துவம் வாய்ந்த தமது பணியை அவர்களால் நிறைவேற்ற முடியாது. முன்னேறிய நாடுகள் பலவற்றிலும் ''தொழிலாளர் பிரபுக்குலத்தோருக்கு'', சோஷலிஸ்டுக்கட்சிகள் என்பதாய்க் கூறிக் கொள்ளும் இரண்டாவது அகிலத்தின் கட்சிகளது உட்கருவாய் இருந்து வரும் இவர்களுக்கு, இதே நிலைமைதான் ஏற்படுகிறது— உண்மையில் இவர்கள் சோஷலிசத்தின் கடும் பகைவர்களாகவும் துரோகிகளாகவும் குட்டி முதலாளித்துவப் போக்குள்ள தேசியவெறியர்களாகவும் தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் செயல்படும் முதலாளித்துவ வர்க்கக் கையாட்களாகவும் இருந்து வருகிறார்கள். பாட்டாளி வர்க்கமானது உழைப்போரும் ஒடுக்கப்படுவோருமான மக்களது முன்னணிப் படையாய், சுரண்டலாளர்களை வீழ்த்துவதற்கான போராட்டத்தில் இம்மக்களது தலைவனாய் முன்வந்து செயலாற்றும் போதுதான், மெய்யாகவே புரட்சிகர வர்க்கமாய் விளங்கி, மெய்யாகவே சோஷலிச முறையில் செயல்படுவதாகிறது. ஆனால் வர்க்கப் போராட்டம் கிராமப்புறத்தினுள் எடுத்துச் செல்லப்பட்டாலன்றி,

கிராமப்புற உழைப்பாளி மக்கள் திரளினர் நகரத்துப் பாட்டாளி வர்க்கத்தின் கம்யூனிஸ்டுக் கட்சியை மையமாய்க் கொண்டு ஒன்றுபடுத்தப்பட்டாலன்றி, மற்றும் இவர்கள் பாட்டாளி வர்க்கத்தால் பயிற்றுவிக்கப்பட்டாலன்றி, பாட்டாளி வர்க்கம் இவ்வாறு செயலாற்ற முடியாது.

2. கிராமப்புறத்து உழைப்பாளரும் ஒடுக்கப்பட்டோருமான மக்கள்—நகரத்துப் பாட்டாளி வர்க்கத்தால் தலைமை தாங்கப்பட்டு போராட்டத்துக்கு அழைத்து வரப்பட வேண்டியவர்களாகிய, அல்லது எப்படியும் தம் பக்கத்துக்கு வரும்படி ஈர்க்கப்பட வேண்டியவர்களாகிய இம்மக்கள்—எல்லா முதலாளித்துவ நாடுகளிலும் பின்வரும் வர்க்கங்களால் பிரதிநிதித்துவம் செய்யப்படுகிறார்கள்:

முதலாவதாக, விவசாயத் துறைப் பாட்டாளி வர்க்கத்தவர்களான கூலியுழைப்பாளர்கள் (ஆண்டு, அல்லது பருவ, அல்லது நாள் அளவில்); முதலாளித்துவ விவசாயத் தொழிலகங்களில் கூலிக்கு வேலை செய்து இவர்கள் பிழைப்பு தேடிக் கொள்கிறவர்கள். இந்த வர்க்கத்தைக் கிராம மக்களின் ஏனைய பிரிவினரிடமிருந்து சுயேச்சையாகவும் தனியாகவும் (அரசியல், இராணுவ, தொழிற் சங்க, கூட்டுறவு, கலாசார, கல்வித் துறை முதலான நிறுவனங்களில்) ஒழுங்கமையச் செய்வதும், இந்த வர்க்கத்தினிடையே கடுமையான பிரசார, கிளர்ச்சி வேலைகள் நடைபெற ஏற்பாடு செய்வதும், சோவியத் ஆட்சியதிகாரத்துக்கும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்துக்கும் இவ்வர்க்கத்தின் ஆதரவைப் பெறுவதும் எல்லா நாடுகளிலும் கம்யூனிஸ்டுக் கட்சிகளுக்குரிய அடிப்படைப் பணிகளாகும்.

இரண்டாவதாக, அரைப் பாட்டாளி வர்க்கத்தவர்கள் அல்லது சின்னஞ்சிறு விவசாயிகள், அதாவது பகுதியளவுக்கு விவசாயத் துறை, தொழில் துறை முதலாளித்துவ நிலையங்களில் கூலியுழைப்பாளர்களாகவும், பகுதியளவுக்குத் தமது சொந்த நிலத்திலோ, குத்தகைக்கு எடுக்கப்பட்ட நிலத்திலோ வேலை செய்வதன் மூலமும் பிழைப்புக்கு வகை செய்து கொள்கிறவர்கள்; சொந்த அல்லது குத்தகை நிலம் இவர்களுடைய குடும்பங்களுக்குப் பகுதி

யளவுக்கே ஜீவனோபாயம் அளிக்கிறது. கிராம உழைப்பாளி மக்களின் இப்பகுதியினர் முதலாளித்துவ நாடுகள் யாவற்றிலுமே எண்ணிக்கையில் மிகுதியாகவே இருக்கின்றனர். இவர்கள் இருந்து வருவதையும், இவர்களுடைய தனிப்பட்ட நிலையையும் முதலாளித்துவ வர்க்கத்தின் பிரதிநிதிகளும் இரண்டாவது அகிலத்தைச் சேர்ந்த மஞ்சள் ''சோஷலிஸ்டுகளும்'' புலப்படாதபடி குழப்படி செய்து விடுகின்றனர்; ஓரளவுக்குத் தொழிலாளர்களை வேண்டுமென்றே ஏமாற்றுவதன் மூலமும், ஓரளவுக்குக் குட்டி முதலாளித்துவ மாமூல் கருத்தோட்டங்களுக்குக் கண்ணை மூடிக் கொண்டு கீழ்ப்படிந்து, ''விவசாயிகள்'' எனப்படும் பொதுப் படையான மக்கள் திரளுடன் இப்பகுதியினரைக் குழப்பிக் கொள்வதன் மூலமும் இவர்கள் இவ்வாறு செய்கின்றனர். தொழிலாளர்களை ஏமாற்றுவதற்கான இந்த முதலாளித்துவ முறை பெரும்பாலும் ஜெர்மனியிலும் பிரான்சிலும் கையாளப்படுகிறது, அமெரிக்காவிலும் இதர நாடுகளிலுங்கூட அனுசரிக்கப்படுகிறது. கம்யூனிஸ்டுக் கட்சியின் வேலைகள் சரிவர ஒழுங்கமைக்கப்படுமானால், இப்பகுதியினர் கம்யூனிஸ்டுக் கட்சியின் உறுதியான ஆதரவாளர்களாகி விடுவார்கள். ஏனெனில் இந்த அரைப் பாட்டாளி வர்க்கத்தினரின் நிலை மிகவும் கடினமானது, சோவியத் ஆட்சியதிகாரத்தாலும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தாலும் பிரம்மாண்டமான அளவிலும் உடனடியாகவும் ஆதாயமடைகிறவர்கள் இவர்கள்.

மூன்றாவதாக, சிறு விவசாயிகள், அதாவது உடைமையாளர்களாகவோ, குத்தகைச் சாகுபடியாளர்களாகவோ சிறு நிலங்களை வைத்துக் கொண்டு, வெளியிலிருந்து கூலிக்கு ஆட்களை அமர்த்தாமலே இவற்றைச் சாகுபடி செய்து, தமது குடும்பங்களின் தேவைகளையும் தமது பயிர்த் தொழிலின் தேவைகளையும் நிறைவு செய்து கொள்ளும்படியான சிறு உழவர்கள். இந்தப் பகுதியினர் பாட்டாளி வர்க்கத்தின் வெற்றியால் சந்தேகத்துக்கு இடமின்றி ஆதாயமடைகிறவர்கள். பாட்டாளி வர்க்கத்தின் வெற்றியானது இவர்களுக்கு உடனடியாகவும் முழு அளவிலும் (அ) பெரிய

நிலச்சுவான்தார்களுக்கு வாரம் அல்லது விளைச்சலில் பங்கு(உதாரணமாய் பிரான்சிலும், மற்றும் இத்தாலியிலும் இதர நாடுகளிலும் métayers, பங்கு சாகுபடியாளர்கள்) தர வேண்டிய அவசியத்திலிருந்து நிவாரணம் பெறுவர்; (ஆ) அடமானங்களிலிருந்து விடுதலையடைவர்; (இ) பெரிய நிலச்சுவான்தார்களது ஒடுக்குமுறை, சார்பு நிலை ஆகியவற்றின் மிகப் பல வடிவங்களிலிருந்து (காடுகள், அவற்றைப் பயன்படுத்தல் முதலானவை) நிவாரணம் பெறுவர்; (ஈ) பாட்டாளி வர்க்க அரசிடமிருந்து தமது பயிர்த் தொழிலுக்கு உடனடி உதவி பெறுவர் (பாட்டாளி வர்க்கத்தால் பறிமுதல் செய்யப்பட்ட பெரிய முதலாளித்துவப் பண்ணைகளின் உழுவடைக் கருவிகளையும் ஓரளவு கட்டிடங்களையும் உபயோகித்துக் கொள்ளுதல், கிராமக் கூட்டுறவுச் சங்கங்களும் விவசாயக் கழகங்களும் முதலாளித்துவத்தில் யாவருக்கும் முதலாய்ப் பணக்கார விவசாயிகளுக்கும் நடுத்தர விவசாயிகளுக்குமே சேவை புரிந்து வந்த நிறுவனங்களாய் இருந்தவை, பாட்டாளி வர்க்க அரசால் பிரதானமாய் ஏழைகளுக்கே, அதாவது பாட்டாளி வர்க்கத்தினர், அரைப் பாட்டாளி வர்க்கத்தினர், சிறு விவசாயிகள் ஆகியோருக்கே உதவி செய்யும் நிறுவனங்களாய் மாற்றப்படுதல் முதலானவை); இப்படி இன்னும் பல.

அதேபோதில், முதலாளித்துவத்திலிருந்து கம்யூனிசத்துக்கு மாறிச் செல்லும் கால கட்டத்தில், அதாவது பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் கால கட்டத்தில், இப்பகுதியினர், அல்லது எப்படியும் இவர்களில் ஒரு பிரிவினர், தவிர்க்க முடியாதவாறு கட்டற்ற வர்த்தகச் சுதந்திரத்தையும் கட்டற்ற தனியார் சொத்துரிமை அனுபோகத்தையும் நாடிச் செல்வர்; ஏனெனில் ஏற்கெனவே நுகர்வுப் பண்டங்களை விற்போராய் (சிறு அளவில்தான் என்றாலும்) இருந்து வரும் இப்பகுதியினர் கொள்ளைலாப, சொத்துரிமைப் பழக்கங்களால் சீரழிக்கப்பட்டிருக்கின்றனர் என்பதைக் கம்யூனிஸ்டுக் கட்சி தெளிவாய் உணர வேண்டும். இருப்பினும், உறுதியான பாட்டாளி வர்க்கக் கொள்கை பின்பற்றப்படுமாயின், வெற்றி பெற்றுள்ள

பாட்டாளி வர்க்கம் பெரிய நிலச்சுவான்தார்கள் மீதும் பெரிய விவசாயிகள் மீதும் வன்முறை நடவடிக்கைகள் மேற்கொள்ளுமாயின், இப்பகுதியினரின் ஊசலாட்டம் அதிகமாய் இருக்க முடியாது; மொத்தத்தில் இவர்கள் பாட்டாளி வர்க்கப் புரட்சிக்கு ஆதரவானவர்கள் என்னும் உண்மையை இந்த ஊசலாட்டம் மாற்றிவிட முடியாது.

3. இங்கு குறிக்கப்பட்ட இந்த மூன்று பகுதியோரும் சேர்ந்து எல்லா முதலாளித்துவ நாடுகளிலும் கிராம மக்களில் பெரும்பான்மையோராய் இருக்கின்றனர். ஆகவே பாட்டாளி வர்க்கப் புரட்சியின் வெற்றி நகரங்களில் மட்டுமின்றி கிராமங்களிலும் முழு அளவுக்கு உறுதி செய்யப்படுகிறது. ஆயினும் இதற்கு நேர்மாறான கருத்து பரவலாய் நிலவி வருகிறது. விடாப்பிடியாய் இக்கருத்து நிலவக் காரணம் என்னவெனில், முதலாவதாக, முதலாளித்துவ விஞ்ஞானமும் புள்ளி விவரங்களும் ஓயாமல் சூழ்ச்சிகளால் ஏமாற்றி, கிராமப்புறத்திலுள்ள மேற்கூறிய வர்க்கங்களை நிலப்பிரபுக்களும் முதலாளிகளுமாகிய சுரண்டுவோர்களிடமிருந்து தனியே பிரிக்கும் பெரும் பிளவையும், மற்றும் அரைப் பாட்டாளி வர்க்கத்தாரையும் சிறு விவசாயிகளையும் பெரிய விவசாயிகளிடமிருந்து தனியே பிரிக்கும் பெரும் பிளவையும் மூடிமறைப்பதற்காக எல்லா வழிகளிலும் பிரயத்தனம் செய்கின்றன. இரண்டாவதாக, கிராமத்து ஏழைகளிடையே பிரசாரமும் கிளர்ச்சியும் நிறுவன ஒழுங்கமைப்பு வேலைகளுமான மெய்யான பாட்டாளி வர்க்கப் புரட்சிகரப் பணியை நடத்த மஞ்சள் அகிலமான இரண்டாவது அகிலத்தின் வீரர்களும், முன்னேறிய நாடுகளில் ஏகாதிபத்தியத் தனிச் சலுகைகளால் சீரழிக்கப்பட்டிருக்கும் ''தொழிலாளர் பிரபுக்குலத்தவரும்'' முடியாதோராயும் விரும்பாதோராயும் இருக்கின்றனர்; சந்தர்ப்பவாதிகளின் கவனமெல்லாம் முழு அளவுக்கும் ஒன்றுகுவிக்கப்பட்டு வந்துள்ளதும் இனியும் வருவதும் பெரிய விவசாயிகளும் நடுத்தர விவசாயிகளும் அடங்கலான முதலாளித்துவ வர்க்கத்தாருடன் தத்துவத்திலும் நடைமுறையிலும் சமரசங்கள் காண்பதிலேயே அன்றி

*(நடுத்தர விவசாயிகள் கீழே பரிசீலிக்கப்படுகின்றனர்), புரட்சிகர வழியில் பாட்டாளி வர்க்கத்தால் முதலாளித் துவ அரசாங்கமும் முதலாளித்துவ வர்க்கமும் வீழ்த்தப் படுவதில் அல்ல. மூன்ருவதாக, மார்க்சியத் தத்துவத்தால் முற்றிலும் நிரூபிக்கப்பட்டும், ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் அனுபவத்தால் பூரணமாய் மெய்ப் பித்துக் காட்டப்பட்டுமுள்ள ஒரு உண்மையைப் புரிந்து கொள்ளப் பிடிவாதமாய் மறுக்கிருர்கள் — மூட நம்பிக் கைக்கு ஒப்பானதாகி விடும்படி (ஏனைய எல்லா முதலாளித் துவ-ஜனநாயக, நாடாளுமன்ற மூட நம்பிக்கைகளுடன் இணைந்த ஒன்ருகிவிடும்படி) அந்த அளவுக்குப் பிடிவாத மாய் மறுக்கிருர்கள். இந்த உண்மை என்னவெனில், கிரா மத்து மக்களின் மேற்குறிப்பிட்ட மூன்று வகையினரும்— மிகவும் முன்னேறிய நாடுகளும் அடங்கலாய் எல்லா நாடு களிலும் நம்புதற்கரிய ஒடுக்கு முறைக்கு உட்படுத்தப் பட்டு, பிரித்துப் பிளவுபடுத்தப்பட்டு, நசுக்கப்பட்டு, பாதியளவு காட்டுமிராண்டி வாழ்க்கைக்குரிய நிலைமை களில் வைக்கப்பட்டிருக்கும் இம்மூன்று வகையினரும்— சோஷலிசத்தின் வெற்றியில் பொருளாதார, சமுதாய, கலாசார வழிகளில் அக்கறை கொண்டவர்களாய் இருப்பினும், புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் அரசியல் ஆட்சியதிகாரத்தை வென்று பெற்ற* **பின்னர்தான்,** *பெரிய நிலச்சுவான்தார்கள், முதலாளிகள் மீது அது வன்முறை நடவடிக்கைகள் எடுத்த* **பின்னர்தான்,** *ஒடுக்கி மிதிக்கப் பட்ட இம்மக்கள் தமக்கு ஆதரவளிக்கவும் தலைமை தாங்க வும் சரியான பாதையைக் காட்டவும் போதிய வலிமையும் உறுதியும் வாய்ந்த, நிறுவன முறையில் ஒழுங்கமைந்த தலைவனும் காவலனும் கிடைத்திருப்பதை* **நடைமுறையின் வாயிலாய்க்** *கண்டு கொண்ட* **பிற்பாடுதான்** *இந்தப் புரட்சி கரப் பாட்டாளி வர்க்கத்துக்கு உறுதியுடன் ஆதரவளிக்கக் கூடியவர்களாகின்றனர்.*

4. ''நடுத்தர விவசாயிகள்'' என்போர் பொருளாதார அர்த்தத்தில் உடைமையாளர்களாகவோ அல்லது குத் தகையாளர்களாகவோ சிறிதளவு நிலம் வைத்திருக்கும்

சிறு சாகுபடியாளர்கள்; இந்நிலம் சிறிதே ஆயினும், முதலாவதாக, முதலாளித்துவத்தில் பொதுவாய்ப் பேசுமிடத்து இவர்களது குடும்பத்தின் பிழைப்புக்கும் பண்ணை வேலை செய்வதற்குமான மிகவும் குறைவான தேவைகளை நிறைவு செய்வதோடு, சிறிதளவு உபரியையும் அளிக்கின்றது—இந்த உபரி சாதகமான ஆண்டுகளிலேனும் மூலதனமாய் மாற்றப்படலாம்; இரண்டாவதாக, இவர்கள் பல சந்தர்ப்பங்களில் (உதாரணமாய், இரண்டு அல்லது மூன்றில் ஒருவர்) கூலிக்கு ஆட்களை அமர்த்திக் கொள்கின்றனர். முன்னேறிய முதலாளித்துவ நாட்டில் நடுத்தர விவசாயிகளுக்கு திட்டவட்டமான உதாரணமாய் ஜெர்மனியில் ஐந்திலிருந்து பத்து ஹெக்டர் வரை நிலத்தைக் கொண்டுள்ள விவசாயப் பண்ணைகளின் தொகுதியைக் குறிப்பிடலாம்; 1907ஆம் ஆண்டு மக்கட் தொகைக் கணிப்பின் படி இத்தொகுதியைச் சேர்ந்த விவசாயப் பண்ணைகளில் கூலியாட்களை அமர்த்திக் கொண்டவற்றின் எண்ணிக்கை சுமார் மூன்றில் ஒரு பகுதியாகும்.* பிரான்சில் தனிவகைப் பயிர்களின் சாகுபடி அதிக வளர்ச்சி பெற்றிருக்கிறது—உதாரணமாய், முந்திரிச் சாகுபடியைக் குறிப்பிடலாம்; இதற்கு மிக அதிக அளவில் உழைப்பு தேவைப்

* கறாரான புள்ளிவிவரங்கள் வருமாறு: ஐந்திலிருந்து பத்து ஹெக்டர் வரை நிலம் கொண்ட விவசாயப் பண்ணைகளின் எண்ணிக்கை—6,52,798 (பண்ணைகளின் மொத்த எண்ணிக்கை—57,36,082); இந்த விவசாயப் பண்ணைகள் பல்வேறு வகையிலும் 4,87,704 கூலியாட்களை அமர்த்திக் கொண்டன. எல்லாப் பண்ணைகளிலும் வேலை செய்த விவசாயிக் குடும்ப உறுப்பினர்களின் (Familienangehörige) எண்ணிக்கை—20,03,633. ஆஸ்திரியாவில் 1902ஆம் ஆண்டு மக்கட் தொகைக் கணிப்பின்படி இத்தொகுதியைச் சேர்ந்த விவசாயப் பண்ணைகள் 3,83,331; இவற்றில் 1,26,136 பண்ணைகள் கூலியாட்களை அமர்த்திக் கொண்டன. இப்பண்ணைகளில் வேலை செய்த கூலியாட்களின் எண்ணிக்கை—1,46,044; விவசாயிக் குடும்ப உறுப்பினர்களில் வேலை செய்தோரின் எண்ணிக்கை—12,65,969. ஆஸ்திரியாவில் பண்ணைகளின் மொத்த எண்ணிக்கை—28,56,349.

படுகிறது. ஆகவே பிரான்சில் இத்தொகுதியைச் சேர்ந்த விவசாயப் பண்ணைகள் சற்று அதிக அளவில் குடும்பத்துக்கு வெளியிலிருந்து கூலியாட்களை அமர்த்திக் கொள்ளக் கூடும்.

விவசாயிகளைச் சேர்ந்த இப்பகுதியோரைத் தன் பக்கத்துக்கு வென்று இழுக்கும் பணியைப் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் தனக்கு வகுத்துக் கொள்ள முடியாது—எப்படியும் உடனடியான எதிர்காலத்திலும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் தொடக்க காலத்திலும் வகுத்துக் கொள்ள முடியாது. இப்பகுதியோரை நடுநிலைப்படுத்துவதுடன், அதாவது பாட்டாளி வர்க்கத்துக்கும் முதலாளித்துவ வர்க்கத்துக்கும் நடைபெறும் போராட்டத்தில் அவர்களை நடுநிலை வகிக்கச் செய்வதுடன் பாட்டாளி வர்க்கம் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். இப்பகுதியோர் இவ்விரு சக்திகளிடையே ஊசலாடுவது தவிர்க்க முடியாதது. புதிய சகாப்தத்தின் தொடக்கத்தில், முன்னேறிய முதலாளித்துவ நாடுகளில்,முதலாளித்துவ வர்க்கத்தாரின் பக்கம் சாய்வதே இப்பகுதியோரது பிரதான போக்காய் இருக்கும். ஏனெனில் இப்பகுதியோரிடத்தே சொத்துடைமையாளர்களுடைய கண்ணோட்டமும் மனப்பாங்குமே மேலோங்கி இருக்கின்றன; கொள்ளை லாபத்திலும், வர்த்தகச் ''சுதந்திரத்திலும்'', சொத்துடைமைச் ''சுதந்திரத்திலும்'' இப்பகுதியோர் உடனடியான அக்கறை கொண்டவர்களாய் இருக்கிறார்கள்; கூலித் தொழிலாளர்களுடன் நேரடியான பகைமை கொண்டிருக்கிறார்கள். வெற்றி பெற்றுள்ள பாட்டாளி வர்க்கம் உடனடியாய் நிலவாரத்தையும் அடமானங்களையும் ஒழித்து இப்பகுதியோரின் நிலையை மேம்படச் செய்யும். பெரும்பாலான முதலாளித்துவ நாடுகளில் பாட்டாளி வர்க்க அரசு உடனடியாகவே தனியார் சொத்துடைமையை அறவே ஒழிக்கலாகாது; எப்படியும் அது சிறு விவசாயிகள், நடுத்தர விவசாயிகள் ஆகிய இரு பகுதியோருக்கும் அவர்களுடைய நிலவுடைமைகள் தொடர்ந்து நீடிக்கும்படி உத்தரவாதம் செய்வதோடு, வழக்கமாய் இவர்கள் வாரக் குத்தகைக்கு

எடுத்துக் கொண்ட மொத்த நிலப் பரப்பைச் சேர்ப்ப தன் மூலம் (வாரம் ஒழிக்கப்படுதல்) இவர்களுடைய நிலவுடைமைகள் பெருகும்படியும் செய்யும்.

முதலாளித்துவ வர்க்கத்துக்கு எதிராய் நடத்தப்படும் தயவுதாட்சண்யமில்லாத போராட்டத்துடன் இவ்வகை நடவடிக்கைகளையும் சேர்த்து இணைத்துக் கொள்வதானது, நடுநிலைப்படுத்துவதென்னும் கொள்கை வெற்றி பெறு வதற்கு முழு அளவில் உத்திரவாதம் செய்கிறது. கூட்டு முறையிலான சாகுபடிக்குரிய மாற்றத்தைப் பாட்டாளி வர்க்க அரசு மிகுந்த எச்சரிக்கையுடன், படிப்படியாய் மெதுவாகவுமே, நடுத்தர விவசாயியை எவ்விதத்திலும் பலவந்தம் செய்யாமல், முன்னுதாரணத்தின் கவர்ச்சி சக்தியைக் கொண்டே செய்தாக வேண்டும்.

5. பெரிய விவசாயிகள் (Grossbauern) விவசாயத் துறை யில் முதலாளித்துவப் பொருளுற்பத்தியாளர்களாய் இருப் பவர்கள்; பொதுவாய் இவர்கள் கூலித் தொழிலாளர்களை அமர்த்திக் கொள்கிறவர்கள்.இவர்கள் தமது தாழ்ந்த கலா சாரத் தரத்தாலும், அன்றாட வாழ்க்கை நிலைமையாலும், தமது பண்ணைகளில் நேரில் தாமே புரிந்து வரும் உட லுழைப்பாலும்தான் ''விவசாயிகளாய்'' இருக்கின்றனர். புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்கு நேர் எதிரான, உறுதியான பகைவர்களாய் இருக்கும் முதலாளித்துவப் பகுதிகளில் இவர்களே மிகப் பெரிய பகுதியாவர். கம்யூ னிஸ்டுக் கட்சிகள் கிராமப்புறத்தில் தமக்குள்ள எல்லாப் பணிகளிலும் தமது கவனத்தின் மையமாய்ப் பிரதானமாக இந்தப் பகுதிக்கு எதிரான போராட்டத்தையும், கிராம மக்களில் உழைப்போரும் ஒடுக்கப்படுவோருமான பெரும் பான்மையோரை இந்த சுரண்டுவோர்களது சித்தாந்த, அரசியல் செல்வாக்கிலிருந்து விடுவிப்பதையும், இன்ன பிறவற்றையுமே கொண்டிருக்க வேண்டும்.

நகரங்களில் பாட்டாளி வர்க்கம் வெற்றி பெற்றதும், இந்தப் பகுதி எல்லா விதமான எதிர்ப்பிலும் சீர்குலைவு வேலைகளிலும் இறங்கும், மற்றும் எதிர்ப்புரட்சித் தன்மை கொண்ட நேரடியான ஆயுதமேந்திய நடவடிக்கைகளை

மேற்கொள்ளும்—இது சிறிதும் தவிர்க்க முடியாதது. ஆகவே, புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் இப்பகுதியோரை அறவே நிராயுதபாணிகளாக்குவதற்கு அவசியமான சக்திகளைச் சித்தாந்த வழியிலும் நிறுவன வழியிலும் தயாரிப்பதற்காகவும், தொழில் துறையில் முதலாளிகள் வீழ்த்தப்படும் அதே காலத்தில் இந்த பகுதிக்கு, அது எதிர்ப்பில் இறங்குகிறது என்பதற்கான முதலாவது அறிகுறிகள் தென்பட்டதுமே, சிறிதும் தயங்காமல் உறுதியாகவும் ஈவிரக்கமின்றியும் தகர்த்து வீழ்த்தும்படியான முறையிலும் எதிரடி கொடுப்பதற்கும் உடனடியாய் முற்பட்டாக வேண்டும். இதன் பொருட்டு கிராமப்புறத்துப் பாட்டாளி வர்க்கம் ஆயுதபாணியாக்கப்பட வேண்டும்; கிராம சோவியத்துகளை அமைத்தாக வேண்டும்—இவற்றில் சுரண்டுவோர்களுக்கு இடமளிக்காமல், பாட்டாளி வர்க்கத்தினரும் அரைப் பாட்டாளி வர்க்கத்தினரும் முதன்மை நிலை பெற்றிருக்கும்படி உறுதி செய்து கொள்ள வேண்டும்.

ஆனால் வெற்றி பெற்ற பாட்டாளி வர்க்கம், உடனே தனது முதல் வேலையாய் பெரிய விவசாயிகளிடமிருந்து கூட, உடைமைகளைப் பறிமுதல் செய்ய முற்படக் கூடாது. ஏனெனில் இத்தகையோரது பண்ணைகளைச் சமூகவுடைமையாக்குவதற்குரிய பொருளாயத நிலைமைகளும், குறிப்பாய்த் தொழில்நுட்ப நிலைமைகளும், மற்றும் சமூக நிலைமைகளும் இன்னும் ஏற்பட்டாகவில்லை. தனிப்பட்ட, அனேகமாய் விதிவிலக்கான சந்தர்ப்பங்களில், இவர்களுடைய நிலங்களில் துண்டு வயல்களாய் இவர்கள் குத்தகைச் சாகுபடிக்கு விடும் பகுதிகள், அல்லது சுற்றுப்புற சிறு விவசாயக் குடிகளுக்கு அவசியமாய்த் தேவைப்படும் பகுதிகள் பறிமுதல் செய்யப்படலாம். இதோடு, பெரிய விவசாயிகளுக்குச் சொந்தமான விவசாய இயந்திரங்களிலும் பிறவற்றிலும் ஒரு பகுதியைச் சிறு விவசாயிகள் குறிப்பிட்ட நிபந்தனைகளின் பேரில் இலவசமாய் உபயோகித்துக் கொள்வதற்கும் உத்தரவாத உரிமையளிக்கப்பட வேண்டும். ஆனால் பொது விதியாய், பெரிய விவசாயிகள் தமது நிலங்களைத் தொடர்ந்து தாமே வைத்துக்

கொள்ள பாட்டாளி வர்க்க அரசு அனுமதிக்க வேண்டும்; உழைப்போரும் ஒடுக்கப்பட்டோருமான மக்கள் ஆட்சியதிகாரத்தை இந்தப் பெரிய விவசாயிகள் எதிர்த்துப் போரிடும் போது மட்டுமே அவர்களது நிலங்களைப் பறிமுதல் செய்ய வேண்டும். ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் போது பெரிய விவசாயிகளுக்கு எதிரான போராட்டம் பல தனி நிலைமைகளின் காரணமாய் சிக்கலாக்கப்பட்டு நீடித்து நடைபெற வேண்டியதாகிவிட்டது. இருந்தபோதிலும் ருஷ்யப் புரட்சியின் அனுபவம் காட்டுவது என்னவெனில், இப்பகுதியோர் எதிர்ப்புக் காட்டச் சிறிதளவு முயற்சி எடுத்ததுமே கடுமையான பாடம் கற்பிக்கப்படுமாயின், இவர்கள் பாட்டாளி வர்க்க அரசு வகுத்தளிக்கும் பணிகளை விசுவாசமாய் நிறைவேற்றக் கூடியோரே ஆவர்; உழைப்போர் அனைவரின் காவலனாய் இருந்து பணக்கார சோம்பேறிகளிடத்து தயவுதாட்சண்யமின்றி நடந்து கொள்ளும் அரசாங்கத்தை இவர்கள் (மிகவும் மெதுவாகவேதான் என்றாலும்) மதிக்க முற்படுகின்றனர்.

ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவ வர்க்கத்தைத் தோற்கடித்த பிறகு, பெரிய விவசாயிகளுக்கு எதிரான போராட்டம் சிக்கலாகித் தடைப்பட்டு தாமதப்பட்டதற்குக் காரணமாயிருந்த தனி நிலைமைகள் பிரதானமாய்ப் பின்வருவனவாகும்: 1917 அக்டோபர் 25க்கு (நவம்பர் 7க்கு) பிற்பாடு ருஷ்யப் புரட்சியானது நிலப்பிரபுக்களுக்கு எதிராக ஒட்டுமொத்தமாய் விவசாயிகள் அனைவரின் போராட்டத்துக்குரிய ''பொதுவான ஜனநாயகக்'' கட்டத்தை, அதாவது அடிப்படையில் முதலாளித்துவ-ஜனநாயகக் கட்டத்தைக் கடந்து சென்றது; நகரப் பாட்டாளி வர்க்கம் கலாசாரத்திலும் எண்ணிக்கையிலும் பலவீனமாய் இருந்தது; முடிவில், தொலைவுகள் பிரம்மாண்டமாகவும் போக்குவரத்துச் சாதனங்கள் மிகமிக மோசமாகவும் இருந்தன. தடையெழுப்பித் தாமதப்படுத்தக் கூடிய இந்த நிலைமைகள் முன்னேறிய நாடுகளில் இருக்கவில்லை என்பதனால், ஐரோப்பாவையும் அமெரிக்கா

வையும் சேர்ந்த புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் பன்மடங்கு மும்முரமாய்த் தயார் செய்து, பெரிய விவசாயிகளது எதிர்ப்பினை பன்மடங்கு விரைவாகவும் உறுதியாகவும் வெற்றிகரமாகவும் முறியடித்து ஜெயக் கொடி நாட்ட வேண்டும்; எதிர்த்துப் போர் புரிவதற்கான துளியளவு சாத்தியப்பாடும் அவர்களுக்குக் கிடைக்காதபடிச் செய்ய வேண்டும். இது அவசர அவசியமானதாகும், ஏனெனில் இப்படிப்பட்ட முழுமையான வெற்றி சாதிக்கப் பெறுத வரை, பாட்டாளி வர்க்க ஆட்சியதிகாரம் நிலையானது தான் என்பதை கிராமப்புறத்துப் பாட்டாளி வர்க்க, அரைப் பாட்டாளி வர்க்க, சிறு விவசாய மக்கள் திரளினர் முழு அளவுக்கு ஏற்றுக் கொள்ளும்படியான நிலைமை ஏற்படாது.

6. புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் உடனடியாகவும் எந்த நிபந்தனையும் இல்லாமல் நிலப்பிரபுக்களின், பெரிய நிலச்சுவான்தார்களின் நிலங்கள் யாவற்றையும் பறிமுதல் செய்ய வேண்டும். இந்த நிலச்சுவான்தார்கள் முதலாளித்துவ நாடுகளில் நேரடியாகவோ, தமது குத்தகைச் சாகுபடியாளர்கள் மூலமோ இடையறுது முறையாய்க் கூலியுழைப்பையும் சுற்றிலுமுள்ள சிறிய விவசாயிகளையும் (மற்றும் அடிக்கடி நடுத்தர விவசாயிகளிலும் ஒரு பகுதியோரை) சுரண்டுகிறவர்கள்; எந்த உடலுழைப்பிலும் ஈடுபடாதவர்கள்; பெரும்பாலும் பிரபுத்துவக் கோமான்களின் (ருஷ்யாவிலும் ஜெர்மனியிலும் ஹங்கேரியிலும் பிரபுக்கள், பிரான்சில் மீட்சிபெற்ற சிக்ஞேர்கள், இங்கிலாந்தில் லார்டுகள், அமெரிக்காவில் முன்னுள் அடிமையுடைமையாளர்கள்) வழிவந்தவர்கள், அல்லது பணக்கார நிதித்துறை பெரு முதலாளிகள், அல்லது சுரண்டலாளர்களும் புல்லுருவிகளுமாகிய இவ்விரு வகையோரின் கலப்பாய் இருப்பவர்கள்.

பெரிய நிலச்சுவான்தார்களுக்கு அவர்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களுக்காக நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்பதை எந்த நிலைமையிலும் கம்யூனிஸ்டுக் கட்சிகள் ஆதரிக்கவோ, செயல்படுத்தவோ கூடாது;

ஏனெனில் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் தற்போதுள்ள நிலைமைகளில் இப்படிச் செய்வது சோஷலிசத்துக்குத் துரோகம் புரிவதாகி விடும்; போரினால் மிகப் பெரும் துன்பத்துக்கு ஆளாகிய உழைப்போரும் சுரண்டப்படுவோருமாகிய மக்கள் பெருந் திரளினரைப் புதிய கொள்ளைக்கு உட்படுத்துவதாகி விடும்; மக்கள் திரளினரைக் கொடுமைப் படுத்திய இதே போர், லட்சாதிபதிகளின் எண்ணிக்கையை அதிகரிக்கச் செய்து அவர்களை மேலும் பெரிய செல்வந்தர்கள் ஆக்கிற்று.

வெற்றி வாகை சூடும் பாட்டாளி வர்க்கம் பெரிய நிலச்சுவான்தார்களிடமிருந்து பறிமுதல் செய்யும் நிலங்களை எந்த முறையில் சாகுபடி செய்வது என்பதைப் பொருத்தவரை, ருஷ்யாவில், அதன் பொருளாதார பிற்பட்ட நிலைமை காரணமாய், இந்நிலங்களை விவசாயிகளுடைய உபயோகத்துக்காக அவர்களிடையே வினியோகிப்பதுதான் மிகப் பெருவழக்காய்க் கையாளப்பட்ட முறையாய் இருந்தது, ஒப்புநோக்கில் அரிதான, விதிவிலக்கான சந்தர்ப்பங்களில்தான் இந்த நிலங்கள்''அரசுப் பண்ணைகள்'' எனப்படுவனவாய் நிறுவப் பட்டன. இந்த அரசுப் பண்ணைகள் பாட்டாளி வர்க்க அரசு தனக்கு உரியனவாய் நடத்தும் பண்ணைகளாகும், இவற்றில் பழைய கூலியுழைப்பாளர்கள் அரசின் தொழிலாளர்களாகவும் அரசை நிர்வகிக்கும் சோவியத்துகளின் உறுப்பினர்களாகவும் மாற்றப்படுகின்றனர். முன்னேறிய முதலாளித்துவ நாடுகளாய் இருப்பனவற்றில் பெரிய விவசாய நிலையங்களில் **மிகப் பெருவாரியானவற்றைக்** கலைக்காமல் அவற்றை ருஷ்யாவிலுள்ள ''அரசுப் பண்ணைகள்'' ஒத்த வழியில் நடத்திச் செல்வதுதான் சரியானதெனக் கம்யூனிஸ்டு அகிலம் கருதுகிறது.

ஆனால் இந்த விதியை மிதமிஞ்சிய முக்கியத்துவமுடையதாய் மிகைப்படுத்தியோ, அப்படியே வறட்டுத்தனமாய்க் காப்பியடித்தோ, பறிமுதலுக்கு ஆளாகும் பறிமுதல் செய்தவர்களினுடைய நிலங்களில் ஒரு **பகுதியைச்** சுற்றிலுமுள்ள சிறிய, சில நேரங்களில், நடுத்தர விவசாயி

களுக்கு இலவசமாய் வழங்குவதற்கு ஒருபோதும் அனுமதிக்காமல் இருப்பது மிகப் பெரும் தவறாகும்.

முதலாவதாக, இப்படிச் செய்வதை எதிர்த்துப் பெருமளவு சாகுபடியின் தொழில்நுட்ப மேம்பாட்டு நிலையைக் குறிப்பிட்டு வழக்கமாய் எழுப்பப்படும் ஆட்சேபணையானது, மறுக்க முடியாத தத்துவார்த்த உண்மையைக் கூறிப் படுமோசமான சந்தர்ப்பவாதத்தையும் புரட்சிக்கு இழைக்கப்படும் துரோகத்தையும் கள்ளத்தனமாய் ஏற்புடையதாக்குவதாகவே பல சந்தர்ப்பங்களிலும் அமைந்து விடுகிறது. வட அமெரிக்காவில் அடிமை முறையின் முதலாளித்துவப் பகைவர்கள் எப்படி 1863-65ஆம் ஆண்டுகளின் உள்நாட்டுப் போரின் விளைவாய்ப் பருத்தி உற்பத்தியின் தற்காலிகக் குறைவுக்காகப் பயந்து பின்வாங்கவில்லையோ, அதே போல பாட்டாளி வர்க்கம் இந்தப் புரட்சியின் வெற்றியை முன்னிட்டு பொருளுற்பத்தியின் தற்காலிகக் குறைவுக்காகப் பயந்து பின்வாங்காதிருக்கக் கடமைப்பட்டிருக்கிறது. முதலாளித்துவ வர்க்கத்தாருக்குப் பொருளுற்பத்தியை முன்னிட்டே பொருளுற்பத்தி முக்கியமானதாய் இருக்கிறது. ஆனல் உழைப்போரும் சுரண்டப்படுவோருமான மக்கள் பெருந்திரளினருக்கு, சுரண்டலாளர்களை வீழ்த்துவதும், உழைப்பாளி மக்கள் முதலாளிகளுக்காக அல்லாமல் தமக்காகவே பாடுபடுவதற்குரிய நிலைமைகளைத் தோற்றுவிப்பதும்தான் யாவற்றிலும் மிகவும் முக்கியமானது. பாட்டாளி வர்க்கத்தின் வெற்றியையும் இந்த வெற்றியின் நிலைப்பாட்டையும் உறுதி செய்து கொள்வதுதான், பாட்டாளி வர்க்கத்தின் முன்னுள்ள அடிப்படையான முதற்பெரும் பணி. நடுத்தர விவசாயிகளை நடுநிலைப்படுத்தி, சிறு விவசாயிகளில் முழுமையாய் இல்லாவிடினும், மிகக் கணிசமான பகுதியோரின் ஆதரவைப் பெருவிடில், பாட்டாளி வர்க்க ஆட்சியை உறுதி பெறச் செய்து கொள்ள முடியாது.

இரண்டாவதாக, விவசாயத்தில் பெருமளவு பொருளுற்பத்தி அதிகரிப்பதற்கு மட்டுமின்றி, இது குறையாது நிலைநாட்டப்படுவதற்குங்கூட, முழு அளவுக்கு வளர்ச்சி

பெற்றதும் புரட்சி உணர்வுடையதுமான கிராமப்புறத்துப் பாட்டாளி வர்க்கம் இருப்பதும், இது தொழிற் சங்க, அரசியல், நிறுவன ஒழுங்கமைப்பில் கணிசமான அனுபவ முடையதாய் இருப்பதும் அவசிய முன்னிபந்தனைகளாகும். இந்த நிலைமை இன்னும் இல்லாத போது, அல்லது இந்த வேலையை, வர்க்க உணர்வும் திறமையும் வாய்ந்த தொழில் துறைத் தொழிலாளர்களிடம் ஒப்படைப்பது சாத்தியமாய் இராத போது, அரசு நிர்வகிக்கும்படியான பெரிய பண்ணைகளைத் தோற்றுவிப்பதற்காக மேற்கொள்ளப் படும் அவசர முயற்சிகளால் பாட்டாளி வர்க்க ஆட்சி மதிப்பிழக்கும்படியே நேரிடும். இப்படிப்பட்ட நிலைமை களில் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண் டும்; ''அரசுப் பண்ணை'' அமைக்கப்படுமுன் தீர்க்கமான தயாரிப்பு நடந்தேறி இருக்க வேண்டும்.

மூன்றுவதாக, எல்லா முதலாளித்துவ நாடுகளிலும், மிகவும் முன்னேறியவற்றிலுங்கூட, பெரிய நிலச்சு வான்தார்கள் சுற்றிலுமுள்ள சிறு விவசாயிகளை மத்திய காலத்திய, அரைப் பிரபுத்துவ முறையில் சுரண்டுவதன் மீதமிச்சங்கள் இன்னமும் இருந்து வருகின்றன. ஜெர்மனி யில்Instleute உம்* பிரான்சில் métayers உம், அமெரிக்க ஐக்கிய நாட்டில் பங்குச் சாகுபடியாளர்களும் (தெற்கு மாநிலங் களில் வெகுவாய் இவ்விதம் சுரண்டப்படும் நீக்ரோக்கள் மட்டுமல்ல, சில சமயம் வெள்ளையருங்கூட) இவ்வாறு தான் சுரண்டப்பட்டு வருகிறுர்கள். இது போன்ற சந்தர்ப் பங்களில், வேறு பொருளாதார, அல்லது தொழில்நுட்ப அடித்தளம் எதுவும் இல்லை என்பதாலும், எடுத்த எடுப் பில் இதைத் தோற்றுவித்து விட முடியாது என்பதாலும், இந்தச் சிறு விவசாயிகளின் இலவச உபயோகத்துக்காக முன்பு இவர்கள் குத்தகைக்கு எடுத்துச் சாகுபடி செய்து வந்த நிலங்களை வழங்குவது பாட்டாளி வர்க்க அரசுக் குரிய கடமையாகும்.

---

* குத்தகைச் சாகுபடியாளர்கள்.—ப-ர்.

பெரும் பண்ணைகளின் உழவுக் கருவிகளும் கால்நடைகளும் தவறாமல் பறிமுதல் செய்யப்பட்டு அரசாங்கச் சொத்தாக்கப்படவேண்டும், அதோடு பெரிய அரசுப் பண்ணைகளின் தேவைகள் பூர்த்தி செய்யப்பட்ட பிறகு, சுற்றிலுமுள்ள சிறு விவசாயிகள் பாட்டாளி வர்க்க அரசு விதிக்கும் நிபந்தனைகளுக்கு ஏற்ப இவற்றை இலவசமாய் உபயோகித்துக் கொள்வது இன்றியமையாததாய் இருக்கும்.

பாட்டாளி வர்க்கப் புரட்சியை உடனடியாய் அடுத்து வரும் காலத்தில் பெரிய நிலச்சுவான்தார்களுடைய நிலங்களை உடனே பறிமுதல் செய்வதோடுகூட, எதிர்ப்புரட்சியின் தலைவர்களும் கிராம மக்கள் அனைவரையும் ஈவிரக்கமின்றி அடக்குவோருமான இவர்கள் எல்லோரையும் வெளியிடங்களுக்குக் கடத்துவது, அல்லது தடை வரம்புகளிட்டுக் கட்டுப்படுத்துவது அத்தியாவசியமாகும். ஆனால் பாட்டாளி வர்க்க ஆட்சியதிகாரம் நகரங்களில் மட்டுமல்லாமல் கிராமப்புறத்திலுங்கூட உறுதி பெற முற்பட்டதும் இவ்வர்க்கத்தினரில் மதிப்பு மிக்க அனுபவமும் அறிவும் ஒழுங்கமைப்புத் திறனும் கொண்டோராய் இருக்கும் பகுதியோரை (மிகவும் நம்பகமான கம்யூனிஸ்டுத் தொழிலாளர்களுடைய தனிக் கண்காணிப்பின் கீழ்) பெருமளவான சோஷலிச விவசாயத் தொழிலை நிறுவுவதற்காகப் பயன்படுத்திக் கொள்ள முழு முனைப்புடன் முறையாக முயற்சிகள் செய்தாக வேண்டும்.

7) பாட்டாளி வர்க்க அரசாட்சி சுரண்டலாளர்களுடைய எல்லா விதமான எதிர்ப்பையும் அறவே அடக்கி, அவர்களைத் தனக்குக் கீழ்ப்படிய வைத்து, தன் நிலையை உறுதிப்படுத்திக் கொண்டபின், தொழில்துறை முழுவதையும் பெருமளவான கூட்டு உற்பத்திக்குரிய வழிகளிலும், நவீன தொழில்நுட்ப அடித்தளத்தின் மீதும் (பொருளாதாரம் அனைத்தும் மின்சாரத்தின் அடிப்படையில் அமைந்தது) திருத்தியமைத்துக் கொண்ட பிறகே, முதலாளித்துவத்தின் மீதான சோஷலிசத்தின் வெற்றியும் சோஷலிசத்தின் உறுதியும் உத்தரவாதமானதாய்க் கருதப்பட முடியும். இந்த நிலைமையில் மட்டும்தான் நகரங்கள் பிற்பட்ட நிலை

யிலுள்ள, சிதறுண்ட கிராம மக்களுக்குப் போதிய அளவில் ஆதாரத் தொழில்நுட்ப, சமுதாய உதவி அளித்து, சாகுபடியிலும் பொதுவாய் விவசாயத்திலும் உழைப்பினுடைய உற்பத்தித் திறனை வெகுவாய் அதிகரிக்கச் செய்வதற்கும், இவ்வழியில் முன்னுதாரணத்தின் கவர்ச்சி சக்தியைக் கொண்டு சிறு உழவர்களுக்கு ஊக்கமளித்து, அவர்களைத் தமது சொந்த நலன்களை முன்னிட்டே இயந்திரமயமான பெருமளவு கூட்டு விவசாயத்தை மேற்கொள்ளுமாறு தூண்டுவதற்கும் அவசியமான பொருளாயத அடித்தளத்தைத் தோற்றுவிக்க முடியும். மறுக்க முடியாத இந்தத் தத்துவார்த்த உண்மையைப் பெயரளவில் எல்லா சோஷலிஸ்டுகளும் ஏற்றுக் கொள்கிறார்கள் என்ற போதிலும், மஞ்சள் அகிலமான இரண்டாவது அகிலத்திலும், ஜெர்மன், பிரிட்டிஷ் ''சுயேச்சையாளர்களது'' தலைவர்களிடத்தும், பிரெஞ்சு லொங்கேயிஸ்டுகளிடத்தும், இன்ன பிறரிடத்தும் மலிந்திருக்கும் சந்தர்ப்பவாதத்தால் இவ்வுண்மை திரித்துப் புரட்டப்படுகிறது. ஒப்புநோக்கில் தொலைவிலுள்ள எழிலார்ந்த இன்னரும் எதிர்காலத்தில் கவனம் செலுத்தப்படுவதிலும், இந்த எதிர்காலத்தை அணுகுவதிலும் சென்றடைவதிலுமுள்ள கடினமான நடைமுறை குறித்த உடனடிப் பணிகளிலிருந்து கவனம் திசை திருப்பி விடப்படுவதிலும் இந்தப் புரட்டைக் காணலாம். நடைமுறையில் இப்புரட்டு, முதலாளித்துவ வர்க்கத்துடன் சமரசம் வேண்டுமென்றும், ''சமூக அமைதி'' வேண்டுமென்றும் உபதேசிப்பதில் அடங்கியிருக்கிறது; அதாவது, போரினால் எங்கும் உண்டாக்கப்பட்டிருக்கும் என்றும் கண்டிராத நாசத்துக்கும் ஏழ்மைக்கும் மத்தியில், போரின் விளைவாய் ஒரு சில கோடீஸ்வரர்கள் என்றும் கண்டிராதபடி பெற்றிருக்கும் செல்வக் கொள்ளைக்கும் செருக்குக்கும் மத்தியில் தற்போது தனது போராட்டத்தை நடத்தி வரும் பாட்டாளி வர்க்கத்துக்கு இழைக்கப்படும் கடுந்துரோகத்தில் அடங்கி இருக்கிறது.

கிராமப்புறத்தில் சோஷலிசத்துக்காக வெற்றிகரமாய்ப் போராடுவதற்கு மெய்யான வாய்ப்புகள் தோற்று

விக்கப்பட வேண்டுமாயின், அதற்கு, முதலாவதாக, எல்லாக் கம்யூனிஸ்டுக் கட்சிகளும் தொழில் துறைப் பாட்டாளி வர்க்கத்துக்குப் போதமளித்து முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்துவதற்காகவும் பாட்டாளி வர்க்க ஆட்சியதிகாரத்தை உறுதியாக்குவதற்காகவும் தான் தியாகங்கள் புரிந்தாக வேண்டுமென உணர்த்துவதும் தியாகங்கள் புரியத் தயாராயிருக்கும்படியான உணர்வை அதற்கு ஊட்டுவதும் அவசியமாகும்; ஏனென்றால், பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்துக்குப் பொருள் என்னவெனில், பாட்டாளி வர்க்கமானது உழைப்போரும் சுரண்டப்படுவோருமாகிய பெருந்திரள் மக்கள் அனைவரையும் ஒழுங்கமையச் செய்வதற்கும் அவர்களுக்குத் தலைமை தாங்கிச் செல்வதற்கும் திறன் பெறுவதாகும், இக்குறிக்கோள் ஈடேறும் பொருட்டு முன்னணிப் படை மிகுதியாய்த் தியாகம் புரியவும், மிகுதியாய் வீரம் வெளிப்படுத்தவும் திறன் பெறுவதாகும். இரண்டாவதாக, கிராமப்புறத்திலுள்ள உழைப்போரும் மிகவும் கடுமையாய்ச் சுரண்டப்படுவோருமான வெகுஜனங்கள் தொழிலாளர்கள் பெறும் வெற்றியின் விளைவாய், சுரண்டலாளர்களின் செலவில் தமது நிலைமை உடனடியாகவும் கணிச அளவிலும் மேம்படுத்திக் கொள்வது இந்த வெற்றிக்கு அவசியமாகும். அவர்கள் தம் நிலைமைகளை இவ்விதம் மேம்படுத்திக் கொள்ள முடியவில்லையானால், தொழில் துறைப் பாட்டாளி வர்க்கம் கிராமப்புறத்தின் ஆதரவு தனக்கு உண்டென்றும், குறிப்பாய் நகரங்களுக்கு உணவு தடையின்றி வழங்கப்படுமென்றும் உறுதியாய் இருக்க முடியாது.

8. கிராமப்புறத்து உழைப்பாளிப் பெருந்திரள் மக்களை முதலாளித்துவம் கேடுகெட்ட படுமோசமான நிலையில் வைத்திருக்கிறது, சிதறுண்ட நிலைக்கு, அடிக்கடி மத்திய காலத்தைப் போன்றதான சார்பு நிலைக்குத் தாழ்வுறச் செய்திருக்கிறது. இம்மக்கள் திரளினரை நிறுவன ஒழுங்கமைவு பெறச் செய்வதிலும் புரட்சிப் போராட்டத்துக்காக இவர்களைப் பயிற்றுவிப்பதிலும் இருக்கும் பிரம்மாண்டமான சிரமத்தின் காரணமாய், கம்யூனிஸ்டுக் கட்சிகள் கிராமப்புறத்தில்

வேலைநிறுத்தப் போராட்டத்தில் தனிக் கவனம் செலுத்துவதும், விவசாயத் துறைப் பாட்டாளி வர்க்கத்தினர், அரைப் பாட்டாளி வர்க்கத்தினர் ஆகியோரது வெகுஜன வேலைநிறுத்தங்களுக்குக் கூடுதலான ஆதரவு அளித்து எல்லா வழிகளிலும் இவற்றை ஓங்கச் செய்வதும் இன்றியமையாதவையாகின்றன. வளர்ச்சி பெறும் வெகுஜன வேலைநிறுத்தப் போராட்டம் ஒன்றுல் மட்டும்தான் (சில நிலைமைகளில் சிறு விவசாயிகளும் இந்தப் போராட்டத்தில் ஈடுபடும்படி ஈர்க்கப்பட முடியும், ஈர்க்கப்படவும் வேண்டும்), கிராமப்புறத்தை அதன் உறக்கத்திலிருந்து தட்டியெழுப்பவும், கிராமப்புறத்திலுள்ள சுரண்டப்படும் வெகுஜனங்களுடைய வர்க்க உணர்வை உசுப்பி விடவும், வர்க்க நிறுவன ஒழுங்கமைப்பின் அவசியத்தை அவர்கள் உணரும்படிச் செய்யவும், நகரத்துத் தொழிலாளர்களுடன் அவர்கள் கூட்டணி கொள்வதன் முக்கியத்துவத்தைக் கண்கூடான, நடைமுறை வழியில் அவர்களுக்குப் புலப்படுத்தவும் முடியும் என்பதை 1905ஆம் ஆண்டு, 1917ஆம் ஆண்டு ருஷ்யப் புரட்சிகளின் அனுபவம் தெளிவுபடுத்துகிறது; ஜெர்மனி, ஏனைய முன்னேறிய நாடுகளின் அனுபவம் ருஷ்யாவின் இவ்வனுபவத்தை இப்பொழுது உறுதிப்படுத்தி, மேலும் விரிவாக்கியுள்ளது.

கிராமப்புறத்து வேலைநிறுத்தப் போராட்டம் குறித்து பராமுகமாய் இருப்பதோடு மட்டுமின்றி, இந்தப் போராட்டம் நுகர்வுப் பண்டங்களின் உற்பத்தியைக் குறையச் செய்கிறது என்று காரணம் கூறி இதைக் (காவுத்ஸ்கியைப் போல) எதிர்ப்போராய் இருக்கும் சோஷலிஸ்டுகளை— துரதிருஷ்டவசமாய் இவர்கள் மஞ்சள் அகிலமான இரண்டாவது அகிலத்தில் மட்டுமின்றி இந்த அகிலத்திலிருந்து விலகிக் கொண்டு விட்ட மூன்று மிக முக்கியமான ஐரோப்பிய கட்சிகளிலுங்கூட காணப்படுகிறுர்கள் — கம்யூனிஸ்டு அகிலத்தின் இக்காங்கிரஸ் துரோகிகளெனவும் ஓடுகாலிகள் எனவும் நிந்தனை செய்கிறது. கம்யூனிஸ்டுகளும் தொழிலாளர் தலைவர்களும் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் வளர்ச்சியே, அதன் வெற்றியே உலகில் ஏனைய யாவற்றுக்கும் முதன்மை

யானவையெனக் கொள்வோர் என்பதையும், இதற்காக எவ்வளவு பெரிய தியாகங்கள் வேண்டுமாயினும் புரியத் தயாராய் இருப்பவர்கள் என்பதையும் நடைமுறையில், செயல்கள் மூலம் நிரூபிக்கவில்லையானல், வேலைத்திட்டங் களுக்கும் புனிதப் பிரகடனங்களுக்கும் எந்த மதிப்பும் இல்லை. ஏனெனில் கரையேறுவதற்கு வேறு வழி ஏதும் இல்லை, பட்டினியிலிருந்தும் நாசத்திலிருந்தும் புதிய ஏகாதிபத்தியப் போர்களிலிருந்தும் தப்புவதற்கு வேறு வழி ஏதும் இல்லை.

பழைய சோஷலிஸ்டு இயக்கத்தின் தலைவர்களும், ''தொழிலாளர் பிரபுக்குலத்தோரின்'' பிரதிநிதிகளும்—இப்பொழுது இவர்கள் வாயளவில் அடிக்கடி கம்யூனிசத் துக்குச் சலுகைகள் காட்டுகின்றனர், இன்று வேகமாய்ப் புரட்சி மனேபாவம் கொண்டோராகி வரும் தொழி லாளர் வெகுஜனங்களிடையே தமது செல்வாக்கைப் பாது காத்துக் கொள்வதற்காகப் பெயரளவில் கம்யூனிசத்தின் பக்கத்தில் சேர்ந்து கொள்ளவுங்கூட செய்கின்றனர்—புரட்சிகர உணர்வின் வளர்ச்சியும் புரட்சிப் போராட்டத் தின் வளர்ச்சியும் மிக முனைப்பாகவும், நிலச்சுவான்தார் கள், முதலாளித்துவ வர்க்கத்தினர் (பெரிய விவசாயிகள், குலாக்குகள்) ஆகியோரின் எதிர்ப்பு மிகக் கடூரமாகவும், சோஷலிஸ்டுச் சமரசவாதிக்கும் கம்யூனிஸ்டுப் புரட்சி யாளருக்கும் இடையிலான வேறுபாடு மிக எடுப்பாகவும் இருக்கும்படியான துறைகளில் பாட்டாளி வர்க்கத்தின் இலட்சியத்தில் பற்றுறுதி கொண்டிருப்பவர்களா, பொறுப் புள்ள பதவிகள் வகிப்பதற்கு இலாயக்கானவர்களா இவர்கள் என்று சோதித்துப் பார்ப்பது அவசியமென்பதை வலியுறுத்திக் கூறியாக வேண்டும்.

9. கிராமப்புறத்தில் பிரதிநிதிகளது சோவியத்துகளை, முதலாவதாகக் கூலித்தொழிலாளர்கள், அரைப் பாட் டாளி வர்க்கத்தினர் ஆகியோரது சோவியத்துகளை அமைப் பதற்காக எவ்வளவு சீக்கிரமாய் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாய் முற்படக் கம்யூனிஸ்டுகள் எல்லா முயற்சிகளை யும் செய்தாக வேண்டும். சோவியத்துகள் வெகுஜன

வேலைநிறுத்தப் போராட்டத்துடனும் மிகவும் அதிகமாய் ஒடுக்கப்பட்டிருக்கும் வர்க்கத்துடனும் இணைந்திருந்தால் தான், அவை சிறு விவசாயிகளை வயப்படுத்தி (பிற்பாடு அவர்களைத் தம்முடன் சேர்த்துக் கொண்டு) தமது கடமைகளை நிறைவேற்ற முடியும் போதிய அளவுக்கு வன்மையும் திண்மையும் பெற முடியும். ஆனால் நிலச்சுவான்தார்கள், பெரிய விவசாயிகளது கடுமையான ஒடுக்குமுறையின் காரணமாகவும் தொழில் துறைத் தொழிலாளர்களிடமிருந்தும் அவர்களது சங்கங்களிடமிருந்தும் ஆதரவு இல்லாததன் காரணமாகவும் வேலைநிறுத்தப் போராட்டம் இன்னமும் வளர்ச்சி பெறவில்லையானால், விவசாயத் துறைப் பாட்டாளி வர்க்கம் வலிமை வாய்ந்த நிறுவன ஒழுங்கமைப்பு பெற முடியாததாகவே இருக்குமானால், கிராமப்புறத்தில் பிரதிநிதிகளது சோவியத்துகளை அமைப்பதற்கு நீண்ட தயாரிப்பு தேவையாயிருக்கும். கம்யூனிஸ்டு மூலக் குழுக்களை—சிறியவையே ஆயினும்—அமைப்பது; கிளர்ச்சி தீவிரமாக்கப்படுதல்—இந்தக் கிளர்ச்சியில் கம்யூனிசத்தின் கோரிக்கைகள் மிக எளிய முறையில் எடுத்துரைக்கப்பட்டு, சுரண்டலின், ஒடுக்குமுறையின் மிகவும் அப்பட்டமான உதாரணங்களைக் கொண்டு விளக்கப்பட வேண்டும்; தொழில் துறைத் தொழிலாளர்கள் முறையாய்க் கிராமப்புறங்களுக்குப் போய் வருவதற்கு ஏற்பாடு செய்தல் முதலான பல வழிகளிலும் இந்தத் தயாரிப்பு செய்யப்பட வேண்டும்.

*1920 ஜூன்—ஜூலையில்*
*எழுதப் பெற்றது*

*1920 ஜூலை 20,*
**கம்யூனிஸ்திச்செஸ்கி இன்டெர்னசியனல்,**
*என்னும் சஞ்சிகையின் இதழ் 12ல்*
*வெளியிடப்பட்டது*

**நூல் திரட்டு,**
*தொகுதி 41,*
*பக்கங்கள் 169-182*

## கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரஸ் 1920 ஜூலை 19—ஆகஸ்டு 7[62]

### தேசிய இன, காலனிப் பிரச்சினைகள் பற்றிய கமிஷனின் உரை ஜூலை 26

தோழர்களே, சுருக்கமான முன்னுரையுடன் நான் நிறுத்திக் கொள்கிறேன். எங்கள் கமிஷனின் முன்னாள் செயலாளரான தோழர் மாரிங், விரிவுரைகளில் நாங்கள் செய்திருக்கும் திருத்தங்கள் குறித்து இதன்பின் உங்களுக்கு விவரமாய்க் கூறுவார். கூடுதல் விரிவுரைகளை வகுத்திடும் தோழர் ராய் அவருக்குப் பிற்பாடு பேசுவார். பூர்வாங்க விரிவுரைகளையும் (திருத்தப்பட்டமுறையில்) கூடுதல் விரிவுரைகளையும் எங்கள் கமிஷன் ஒரு மனதாய் ஏற்றுக் கொண்டுள்ளது. இவ்வாறு எல்லாப் பிரதான பிரச்சினைகளிலும் நாங்கள் முழு அளவுக்கு ஒருமனதான நிலையை எய்தியிருக்கிறோம். இப்பொழுது சுருக்கமாய் ஒரு சில கருத்துரைகள் கூறுகிறேன்.

முதலாவதாக, எங்களுடைய விரிவுரைகளுக்கு அடிப்படையாய் அமைந்த தலைமையான கருத்து என்ன? ஒடுக்கப்பட்ட தேசங்களுக்கும் ஒடுக்கும் தேசங்களுக்கும் இடையிலான வேறுபாடுதான் தலைமையான கருத்து. இரண்டாவது அகிலத்தையும் முதலாளித்துவ ஜனநாயகத்தையும் போலல்லாது நாம் இந்த வேறுபாட்டை வலியுறுத்திக் காட்டுகிறோம் இந்த ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் ஸ்தூலமான பொருளாதார உண்மைகளை நிலைநாட்டி எல்லாக் காலனி, தேசிய இனப் பிரச்சினைகளிலும் ஸ்தூலமான எதார்த்த நிலவரங்களிலிருந்து—கருத்தினமான முதற்கோள்களிலிருந்து அல்ல — தொடங்குவது பாட்டாளி வர்க்கத்துக்கும் கம்யூனிஸ்டு அகிலத்துக்கும் குறிப்பான முக்கியத்துவமுடையது.

அனைத்து உலகும்—இப்பொழுது நாம் கண்ணுறுவது போல—மிகப் பல ஒடுக்கப்பட்ட தேசங்களாகவும் மிகச் சொற்பமான ஒடுக்கும் தேசங்களாகவும் பிரிக்கப்பட்டு, பின்னவை பிரம்மாண்ட செல்வங்களும் சக்தி மிகுந்த ஆயுதப் படைகளும் பெற்றிருப்பதில்தான் ஏகாதிபத்தியத்தின் தனித்த இயல்பு அடங்கியுள்ளது. உலக மக்களில் மிகப் பெருவாரியானோர், நூறு கோடிக்கு மேற்பட்டோர்—உலக மக்கள் தொகையை 175 கோடி என்று கொண்டால் 125 கோடிப் பேர் என்றுகூடச் சொல்லலாம், அதாவது உலக மக்கள் தொகையில் சுமார் 70 சதவீதத்தினர் ஒடுக்கப்பட்ட தேசங்களைச் சேர்ந்தவர்கள். இந்த ஒடுக்கப்பட்ட தேசங்கள் காலனிகளாய் நேரடியான சார்புநிலையிலோ, அல்லது பாரசீகத்தையும் துருக்கியையும் சீனுவையும் போல் அரைக் காலனிகளாகவோ, அல்லது ஏதேனும் ஒரு பெரிய ஏகாதிபத்திய அரசால் தோற்கடிக்கப்பட்டு சமாதான ஒப்பந்தங்களின் மூலமாய் அந்த அரசுக்கு வெகுவாய்க் கீழ்ப்பட்டு விட்டவையாகவோ இருந்து வருகின்றன. இப்படி வேறுபடுத்திக் கூறும், ஒடுக்குகிறவை, ஒடுக்கப்பட்டவை என்பதாய்த் தேசங்களைப் பிரித்துக் கூறும் இந்தக் கருத்து விரிவுரைகள் பூராவிலும்—முன்னதாக என்னுடைய கையெழுத்துடன் வெளியிடப்பட்ட முதலாவது விரிவுரைகளில் மட்டுமின்றி தோழர் ராய் சமர்ப்பித்தவற்றிலுங்கூட—இழையோடுவதைக் காணலாம். தோழர் ராயினுடைய விரிவுரைகள், பிரதானமாய் இந்தியாவிலும், பிரிட்டனுல் ஒடுக்கப்பட்டு வரும் ஏனைய பெரிய ஆசிய நாடுகளிலுமுள்ள நிலைமையின் கண்ணேட்டத்திலிருந்து வகுக்கப்பட்டவை. இவற்றின் பெரிய முக்கியத்துவம் இதில்தான் அடங்கியுள்ளது.

எங்களுடைய விரிவுரைகளின் இரண்டாவது அடிப்படைக் கருத்து என்னவெனில், ஏகாதிபத்திய யுத்தத்தைத் தொடர்ந்து நிலவும் தற்போதைய உலக நிலைமையில் பல்வேறு மக்கள் இனங்களுக்கு இடையிலான உறவுகள், உலக அரசியல் அமைப்பு அனைத்தும், ஏகாதிபத்தியத் தேசங்களாகிய ஒரு சிறு கோஷ்டி சோவியத் இயக்கத்தையும்

சோவியத் ருஷ்யாவைத் தலைமையில் கொண்ட சோவியத் அரசுகளையும் எதிர்த்து நடத்தும் போராட்டத்தால் நிர்ணயிக்கப்பட்டு விடுகின்றன. இதை நாம் மனத்திற் கொண்டால் ஒழிய எந்த ஒரு தேசிய இன அல்லது காலனிப் பிரச்சினையையும், உலகின் தொலை தூர ஒதுக்குப் புறப் பகுதியைப் பற்றியதாய் இருப்பதையுங்கூட, நம்மால் சரிவர எடுத்துரைத்து முன்வைக்க முடியாமற் போய்விடும். நாகரிக வளர்ச்சி கண்ட நாடுகளிலும் சரி, பிற்பட்ட நாடுகளிலும் சரி, கம்யூனிஸ்டுக் கட்சிகள் இந்த அடிப்படைக் கருத்தைத் தமது துவக்க நிலையாய்க் கொண்டால்தான் அவற்றால் அரசியல் பிரச்சினைகளைச் சரிவர முன்வைக்கவும் அவற்றுக்குத் தீர்வு காணவும் முடியும்.

மூன்றாவதாக, பிற்பட்ட நாடுகளில் முதலாளித்துவ-ஜனநாயக இயக்கத்தைப் பற்றிய பிரச்சினையைக் குறிப்பாய் வலியுறுத்த விரும்புகிறேன். ஓரளவு வேறுபாடுகளை உண்டாக்கிய ஒரு பிரச்சினை இது. பிற்பட்ட நாடுகளில் முதலாளித்துவ-ஜனநாயக இயக்கத்தைக் கம்யூனிஸ்டு அகிலமும் கம்யூனிஸ்டுக் கட்சிகளும் ஆதரிக்க வேண்டும் என்று கூறுவது கோட்பாட்டிலும் தத்துவத்திலும் சரியா தப்பா என்பது குறித்து நாங்கள் விவாதித்தோம். எங்களுடைய விவாதத்தின் விளைவாய், நாங்கள் "முதலாளித்துவ-ஜனநாயக" இயக்கம் என்பதை விட தேசிய-புரட்சி இயக்கம் என்பதாகவே பேச வேண்டுமென்ற ஒருமனதான முடிவுக்கு வந்தோம். எந்தத் தேசிய இயக்கமும் முதலாளித்துவ-ஜனநாயக இயக்கமாகவேதான் இருக்க முடியுமென்பதில் ஐயமில்லை. ஏனெனில் பிற்பட்ட நாடுகளில் மிகப் பெருவாரியான மக்கள் பூர்ஷுவா-முதலாளித்துவ உறவுகளைப் பிரதிநிதித்துவப்படுத்தும் விவசாயிகளாவர். இந்தப் பிற்பட்ட நாடுகளில் பாட்டாளி வர்க்கக் கட்சிகள்—அவை இந்நாடுகளில் உதித்தெழ முடியுமாயின்—விவசாயி இயக்கத்துடன் திட்டவட்டமான உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளாமலும், அதற்குப் பயனுள்ள முறையில் ஆதரவு அளிக்காமலும், கம்யூனிஸ்டுப் போர்த்தந்திரத்தையும் கம்யூனிஸ்டுக் கொள்கையையும் பின்பற்ற முடியு

மென நினைப்பது கற்பனுவாதமே ஆகும். ஆயினும் நாம் முதலாளித்துவ-ஜனநாயக இயக்கம் என்பதாய்ப் பேசுவோமாயின் சீர்திருத்தவாத இயக்கத்துக்கும் புரட்சிகர இயக்கத்துக்கும் இடையிலான எல்லாப் பாகுபாடுகளையும் விட்டொழிக்க வேண்டியதாகிவிடுமே என்று ஆட்சேபங்கள் எழுப்பப்பட்டன. பிற்பட்ட நாடுகளிலும் காலனி நாடுகளிலும் இந்தப் பாகுபாடுகள் அண்மையில் மிகத் தெளிவாகவே வெளிப்பட்டு வருகின்றன. ஏனெனில் ஏகாதிபத்திய முதலாளித்துவ வர்க்கம் ஒடுக்கப்பட்ட தேசங்களிலுங்கூட சீர்திருத்தவாத இயக்கத்தைத் தோற்றுவிப்பதற்காக தன் சக்திக்கு இயன்றது அனைத்தையும் செய்து வருகிறது. சுரண்டும் நாடுகளுடைய முதலாளித்துவ வர்க்கத்துக்கும் காலனிகளிலுள்ள முதலாளித்துவ வர்க்கத்துக்கும் இடையே ஒரு வித இணக்கம் ஏற்பட்டுள்ளதன் பயனாய், அடிக்கடி—மிகப் பல சந்தர்ப்பங்களிலும் என்றுகூடச் சொல்லலாம்—ஒடுக்கப்பட்ட நாடுகளுடைய முதலாளித்துவ வர்க்கம் தேசிய இயக்கத்துக்கு ஆதரவாய் இருப்பினும், அதே நேரத்தில் எல்லா புரட்சிகர இயக்கங்களுக்கும் புரட்சிகர வர்க்கங்களுக்கும் எதிராக ஏகாதிபத்திய முதலாளித்துவ வர்க்கத்துக்கு முழுமையான ஆதரவு நல்கி, அதாவது அதனுடன் சேர்ந்து போராடி வருகிறது. மறுக்க முடியாதவாறு இது கமிஷனில் நிரூபிக்கப்பட்டது. இந்தப் பாகுபாட்டைக் கணக்கில் எடுத்துக் கொண்டு அனேகமாய் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் ''முதலாளித்துவ-ஜனநாயக'' என்ற தொடருக்குப் பதிலாய் ''தேசிய-புரட்சிகர'' என்னும் தொடரைக் கையாளுவதுதான் சரியான ஒரே வழியாகும் என்று தீர்மானித்தோம். இந்த மாற்றத்தின் தனி முக்கியத்துவம் என்னவெனில், காலனிகளில் முதலாளித்துவ விடுதலை இயக்கங்கள் மெய்யாகவே புரட்சிகரமாகவும், விவசாயிகளையும் ஒடுக்கப்பட்ட வெகுஜனங்களையும் புரட்சிகர மனப்பாங்குடையோர் ஆகும்படிப் போதமளிப்பதற்கும் ஒழுங்கமையச் செய்வதற்குமான நமது பணிக்கு அவை இடையூருய் இல்லாமலும் இருக்கும் போதும் மட்டுமே கம்யூனிஸ்டுகளாகிய நாம் அவற்றை ஆதரிக்க

வேண்டும், ஆதரிக்கவும் செய்வோம். இந்த நிலைமைகள் இல்லையேல், இந்நாடுகளில் கம்யூனிஸ்டுகள் சீர்திருத்த வாத முதலாளித்துவ வர்க்கத்தை எதிர்த்துப் போராட வேண்டும். இரண்டாவது அகிலத்தின் தீரர்கள் இந்தச் சீர்திருத்தவாத முதலாளித்துவ வர்க்கத்தைச் சேர்ந்தவர்களே. காலனி நாடுகளில் சீர்திருத்தவாதக் கட்சிகள் ஏற்கெனவே இருந்து வருகின்றன. இவற்றின் பிரதிநிதிகள் சில சமயம் தம்மை சமூக-ஜனநாயகவாதிகள் என்றும் சோஷலிஸ்டுகள் என்றும் அழைத்துக் கொள்கிறார்கள். நான் குறிப்பிட்டுள்ள இந்தப் பாகுபாடு எல்லா விரிவுரைகளிலும் செய்யப்பட்டிருக்கிறது. இதன் விளைவாய் நமது கருத்தோட்டம் மேலும் துல்லியமாய் வரையறுக்கப் பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன்.

அடுத்து, விவசாயிகளின் சோவியத்துகள் குறித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். பழைய ஜாரிஸ்டுக் காலனிகளாகிய துர்க்கெஸ்தான் முதலான பிற்பட்ட நாடுகளில் ருஷ்யக் கம்யூனிஸ்டுகளின் நடைமுறைச் செயற்பாடுகள், முதலாளித்துவத்துக்கு முற்பட்டதான நிலைமைகளில் கம்யூனிஸ்டுப் போர்த்தந்திரத்தையும் கொள்கையையும் எப்படிச் செயல்படுத்துவது என்னும் கேள்வியை எங்கள் முன்னே எழுப்பின. இந்நாடுகளில் முதலாளித்துவத்துக்கு முற்பட்டதான நிலைமைகள் மலிந்திருப்பதே இன்னமும் பிரதான நிர்ணயக் கூறாய் விளங்குகிறது. ஆகவே இவற்றில் முற்றிலும் பாட்டாளி வர்க்கத் தன்மையதான இயக்கம் குறித்துப் பேசுவதற்கில்லை. இந்நாடுகளில் தொழில் துறைப் பாட்டாளி வர்க்கம் அனேகமாய்க் கிடையாது. இருந்த போதிலும் இங்குங்கூட நாம் தலைமைப் பாத்திரம் ஏற்றுள்ளோம், ஏற்கத்தான் வேண்டும். இந்நாடுகளில் பிரம்மாண்ட இன்னல்களை நாம் சமாளித்தாக வேண்டுமென்பதை அனுபவம் தெளிவுபடுத்தி இருக்கிறது. இருப்பினும் இந்த இன்னல்களையும் மீறி, சுயேச்சையான அரசியல் சிந்தனையிலும் சுயேச்சையான அரசியல் செயலிலும் ஈடுபடுவதற்கான ஊக்கத்தை—பாட்டாளி வர்க்கம் அனேகமாய் இல்லாத இடங்களிலுங்கூட—வெகுஜனங்களுக்கு

உண்டாக்க முடிகிறது என்பதை எங்களுடைய பணியின் நடைமுறை விளைவுகள் புலப்படுத்தியுள்ளன. மேற்கு ஐரோப்பிய நாடுகளில் தோழர்களுக்கு இருக்கக் கூடியதைக் காட்டிலும் இந்தப் பணி எங்களுக்குக் கடினமாய் இருந்துள்ளது. ஏனெனில், ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கம் அரசாங்க நிர்வாக வேலைகளில் மூழ்கியிருக்கிறது. அரைப் பிரபுத்துவச் சார்பு நிலைமைகளில் வாழ்ந்து வரும் விவசாயிகள் சோவியத்துகள் மூலமான ஒழுங்கமைப்பு என்னும் கருத்தினை எளிதில் கிரகித்துச் செயல்படுத்த முடியுமென்பது புரிந்து கொள்ளக் கூடியதே. ஒடுக்கப்பட்ட வெகுஜனங்கள், வர்த்தக மூலதனத்தால் மட்டுமின்றி பிரபுத்துவவாதிகளாலும் மற்றும் பிரபுத்துவத்தை அடிப்படையாய்க் கொண்ட அரசாலும் சுரண்டப்படுவோர், இந்த ஆயுதத்தை, இவ்வகையான ஒழுங்கமைப்பினைத் தமது நிலைமைகளிலுங்கூட கையாள முடியும் என்பதும் தெளிவாய் விளங்குகிறது. சோவியத்துகள் மூலமான ஒழுங்கமைப்பு என்னும் கருத்து எளிமையான ஒன்று; பாட்டாளி வர்க்க உறவுகளில் மட்டுமின்றி, விவசாயிகளின் பிரபுத்துவ, அரைப் பிரபுத்துவத் தன்மையுள்ள உறவுகளிலும் செயல்படுத்தப்படக் கூடியதே. இத்துறையில் எங்கள் அனுபவம் இன்னமும் கணிசமானதாய் இல்லை. ஆனால், காலனி நாடுகளைச் சேர்ந்த பல பிரதிநிதிகளும் கலந்து கொண்ட கமிஷனில் நடைபெற்ற விவாதத்தில் விவசாயிகளின் சோவியத்துகள், சுரண்டப்படுவோரின் சோவியத்துகள் முதலாளித்துவ நாடுகளில் மட்டுமல்லாது முதலாளித்துவத்துக்கு முற்பட்டதான உறவுகளைக் கொண்ட நாடுகளிலும் கையாளப்படக் கூடிய ஆயுதமே என்பதையும், பிற்பட்ட நாடுகளும் காலனி நாடுகளும் அடங்கலாய் எங்கும் விவசாயிகளின் சோவியத்துகளுக்கு அல்லது உழைப்பாளி மக்களின் சோவியத்துகளுக்கு ஆதரவாய்ப் பிரசாரம் நடத்துவது கம்யூனிஸ்டுக் கட்சிகளுக்கும் கம்யூனிஸ்டுக் கட்சிகளை நிறுவத் தயாராயுள்ள கூறுகளுக்கும் உரித்தான முழு முதற் கடமையாகும் என்பதையும், எங்கெல்லாம் நிலைமைகள் அனுமதிக்கின்றனவோ அங்கெல்லாம் அவை

உழைப்பாளி மக்கள் சோவியத்துகளை உடனே நிறுவ முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்பதையும் கம்யூனிஸ்டு அகிலத்தின் விரிவுரைகள் குறிப்பிட வேண்டுமென்று ஐயமறத் தெளிவுபடுத்திற்று.

நமது நடைமுறை வேலைகளுக்கு இது மிகவும் சுவையான, மிகவும் முக்கியமான ஒரு துறையைத் திறந்து விடுகிறது. இந்த விவகாரத்தில் இதுகாறும் நமது கூட்டு அனுபவம் விரிவானதாய் இல்லை. ஆனால் மேலும் மேலும் அதிகமான உண்மை விவரங்கள் சிறிது சிறிதாய்ச் சேகரிக்கப்படும். முன்னேறிய நாடுகளின் பாட்டாளி வர்க்கம் பிற்பட்ட நாடுகளின் உழைப்பாளி வெகுஜனங்களுக்கு உதவ முடியும் உதவ வேண்டும் என்பதும், சோவியத் குடியரசுகளின் வெற்றிகரப் பாட்டாளி வர்க்கம் இந்த வெகுஜனங்களுக்குக் கை கொடுத்து உதவி அவர்களுக்கு ஆதரவளிக்கும்படியான ஒரு நிலையை வந்தடையும் போது பிற்பட்ட நாடுகள் அவற்றின் தற்போதைய வளர்ச்சிக் கட்டத்திலிருந்து வெளிப்பட்டு முன்னேற முடியும் என்பதும் மறுக்க முடியாதவை.

கமிஷனில் இந்தப் பிரச்சினை குறித்து, நான் கையெழுத்திட்ட விரிவுரைகள் சம்பந்தமாய் மட்டுமின்றி, இன்னும் அதிகமாய் தோழர் ராயின் விரிவுரைகள் சம்பந்தமாகவும் விறுவிறுப்பான விவாதம் நடைபெற்றது. தோழர் ராய் தமது விரிவுரைகளை இங்கு சமர்ப்பித்துப் பேசுவார். அவருடைய விரிவுரைகளுக்குச் சில திருத்தங்கள் ஒருமனதாய் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

பிரச்சினை பின்வருமாறு எடுத்துரைக்கப்பட்டது: தற்போது விடுதலைப் பாதையில் நடைபோடுகிறவையும், யுத்தத்துக்குப் பிற்பாடு முன்னேற்றத்தை நோக்கி ஓரளவு வளர்ச்சி அடைந்திருப்பவையும் ஆன பிற்பட்ட தேசங்களுக்கு முதலாளித்துவ வளர்ச்சிக் கட்டம் தவிர்க்க முடியாதது என்னும் கூற்று சரி என்று நாங்கள் ஏற்றுக் கொள்ள முடியுமா? இதற்கு நாங்கள் எதிர்மறையில் பதிலளித்தோம். வெற்றி பெற்ற புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் அவற்றிற்கிடையே இடையறாது பிரசாரம் நடத்துமாயின், சோவியத்

அரசாங்கங்கள் தம் கையிலுள்ள எல்லாச் சாதனங்களை யும் கொண்டு அவர்களுக்கு உதவி புரியுமாயின்—பிற் பட்ட நிலையிலுள்ள தேசங்கள் முதலாளித்துவ வளர்ச்சிக் கட்டத்துள் தவிர்க்க முடியாதபடி போயாக வேண்டு மெனக் கொள்வது அப்பொழுது தவறாகி விடும். எல்லாக் காலனிகளிலும் பிற்பட்ட நாடுகளிலும் நாம் சுயேச்சை யாகச் செயல்படக் கூடிய போராட்ட வீரர்களின் அணி களையும் கட்சி நிறுவனங்களையும் தோற்றுவிக்க வேண்டும் என்பது அன்னியில், விவசாயிகளது சோவியத்துகளை நிறுவி அவற்றை முதலாளித்துவத்துக்கு முற்பட்டதான நிலைமை களுக்குத் தகவமைக்க முயலுவதற்கான பிரசாரத்தை உடனடியாய்த் துவக்க வேண்டும் என்பது அன்னியில், முன் னேறிய நாடுகளது பாட்டாளி வர்க்கத்தின் உதவியுடன் பிற்பட்ட நாடுகள், குறிப்பிட்ட சில வளர்ச்சிக் கட்டங் களைத் தாண்டி—முதலாளித்துவக் கட்டத்தினுள் செல்ல வேண்டிய அவசியமில்லாமலே—சோவியத் அமைப்புக்கும், கம்யூனிசத்துக்கும் மாறிச் செல்ல முடியும் என்ற நிர்ணயிப்பையும் கம்யூனிஸ்டு அகிலம் தக்க தத்துவார்த்த அடிநிலையுடன் முன்வைக்க வேண்டும்.

இப்படி மாறிச் செல்வதற்குத் தேவையான வழிவகை களை முன்கூட்டியே சுட்டிக் காட்டுவது சாத்தியமல்ல. நடைமுறை அனுபவம் இவற்றைப் புலப்படுத்தும். ஆனால் மிகவும் தொலை தூரத் தேசங்களிலுங்கூட உழைப்பாளி வெகுஜன மக்களுக்கு சோவியத்துகள் என்னும் கருத்து உயிரனையதாகி விட்டது என்பதும், முதலாளித்துவத்துக்கு முற்பட்டதான சமுதாய அமைப்புக்குரிய நிலைமைகளுக்கு சோவியத்துகளைத் தகவமைத்திட வேண்டும் என்பதும், உலகின் எல்லாப் பகுதிகளிலும் கம்யூனிஸ்டுக் கட்சிகள் இத்திசையில் உடனே வேலை தொடங்க வேண்டும் என் பதும் திட்டவட்டமாய் நிலைநாட்டப்பட்டிருக்கின்றன.

கம்யூனிஸ்டுக் கட்சிகள் தமது நாடுகளில் மட்டுமின்றி காலனி நாடுகளிலும், மற்றும் முக்கியமாய், சுரண்டும் நாடுகள் காலனி மக்கள் இனங்களை அடிமைப்படுத்தி வைப் பதற்காகப் பயன்படுத்திக் கொள்ளும் துருப்புகளிடை

யிலும் புரட்சிகரப் பணி புரிவதன் முக்கியத்துவத்தையும் நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த தோழர் குவெல்ச் எங்கள் கமிஷனில் இதைப் பற்றி பேசினுர். அடிமைப்படுத்தப்பட்ட தேசங்களில் பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துக் கிளம்பும் எழுச்சிகளுக்கு உதவுவது தேசத் துரோகச் செயலாகுமென சாதாரண ஆங்கிலேயத் தொழிலாளி கருதுவதாய் அவர் கூறினுர். மெய்தான், பிரிட்டனையும் அமெரிக்காவையும் சேர்ந்த ஜிங்கோவெறி[63] கொண்ட தேசியவாதத் தொழிலாளர் உயர்குலத்தோர் சோஷலிசத்துக்கு மிகவும் அபாயகரமானவர்கள்தான். இவர்கள் இரண்டாம் அகிலத்தின் உறுதியான தூண்களாவர். இந்த முதலாளித்துவ அகிலத்தைச் சேர்ந்த தலைவர்களும் தொழிலாளர்களும் புரியும் மிகப் பெரிய துரோகத்தை இங்கே நாம் எதிர்நோக்குகிறேம். இரண்டாவது அகிலத்திலும் காலனிப் பிரச்சினை விவாதிக்கப்பட்டிருக்கிறது. பாசெல் அறிக்கை[64] இது குறித்து தெட்டத் தெளிவானதாகவே இருக்கிறது. இரண்டாவது அகிலத்தின் கட்சிகள் புரட்சிகரச் செயலை மேற்கொள்வோமென சூளுரைத்திருக்கின்றன. ஆனுல் மெய்யான புரட்சிகரப் பணி புரிவதாகவோ, சுரண்டப்பட்டு சார்பு நிலையில் இருத்தப்பட்டுள்ள தேசங்கள் ஒடுக்கும் தேசங்களை எதிர்த்து புரியும் கலகத்துக்கு உதவுவதாகவோ இந்தக் கட்சிகளில் எந்த அறிகுறியையும் காணேம். இரண்டாவது அகிலத்திலிருந்து வெளியேறிய, மூன்றுவது அகிலத்தில் சேர விரும்புகிற கட்சிகளில் மிகப் பலவற்றுக்குங்கூட இது பொருந்துமென நினைக்கிறேன். எல்லோர் காதிலும் விழும்படி இதை நாம் பகிரங்கமாய்ப் பறையறைந்தாக வேண்டும். இது மறுக்க முடியாத உண்மை. இதை மறுக்க எந்த முயற்சியும் செய்யப்படுகிறதா என்று பார்ப்போம்.

இந்த எல்லாக் கருத்துக்களும்தான் நமது தீர்மானங்களுக்கு அடிப்படையாய் அமையலாயின. இத்தீர்மானங்கள் மிகவும் நீளமானவை என்பது மெய்தான். ஆனுல் இவை பயனுடைத்தவை என்பதிலும், தேசிய இன, காலனிப்

*பிரச்சினைகள் சம்பந்தமான மெய்யாகவே புரட்சிகரமான பணி ஓங்கவும் ஒழுங்கமையவும் துணை புரியுமென்பதிலும் ஐயமில்லை. இதுவே நமது தலையாய பணி.*

**வெஸ்த்னிக் வ்தரோக காங்கிரேச கம்யூனிஸ்திச்செஸ்கவொ இன்டெர்னசியனலா,**
*இதழ் 6, ஆகஸ்டு 7, 1920*

**நூல் திரட்டு,**
*தொகுதி 41,*
*பக்கங்கள் 241-247*

# இளைஞர் கழகங்களின் பணிகள்

**ருஷ்யாவின் இளங் கம்யூனிஸ்டுக் கழகத்தின்**
**மூன்றுவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸில்**
**நிகழ்த்திய சொற்பொழிவு**
**1920, அக்டோபர் 2[65]**

*(லெனினை வரவேற்றுக் காங்கிரசில் பேரார்வ முழக்கம் கிளர்ந்தெழுகிறது).* தோழர்களே, இளங் கம்யூனிஸ்டுக் கழகத்தின் அடிப்படைப் பணிகள் குறித்தும், இதையொட்டி சோஷலிசக் குடியரசு ஒன்றில் இளைஞர் நிறுவனங்கள் பொதுவில் எப்படிப்பட்டவையாய் இருக்க வேண்டும் என்பது குறித்தும் இன்று நான் பேச விரும்புகிறேன்.

இப்பிரச்சினை குறித்துப் பேச வேண்டியது மிகவும் அவசியமாகும். ஏனெனில் கம்யூனிச சமுதாயத்தை உண்மையில் தோற்றுவிக்கும் பணியை எதிர்நோக்கப் போகிறவர்கள் இளைஞர்களே என்பதாய் ஒரு வகையில் கூறலாம். எப்படி யெனில், முதலாளித்துவ சமுதாயத்தில் வளர்ந்து ஆளான உழைப்பாளி மக்கள் தலைமுறையினர் அதிகம் செய்யக் கூடியதெல்லாம், சுரண்டலின் அடிப்படையில் நிறுவப்பட்ட பழைய, முதலாளித்துவ வாழ்க்கை முறையின் அடித்தளங்களை அழித்திடும் பணியை நிறைவேற்றுவதுதான் என்பது தெளிவு. இவர்கள் அதிகம் போனுல், பாட்டாளி வர்க்கமும் உழைப்பாளி வர்க்கங்களும் ஆட்சியதிகாரத்தை இழக்காமல் வைத்துக் கொள்ளத் துணை புரியும் ஒரு சமுதாய அமைப்பைத் தோற்றுவித்து உறுதியான அடித்தளத்தை அமைத்திடுவதற்குரிய பணிகளை நிறைவேற்றலாம். புதிய நிலைமைகளில், மனிதனை மனிதன் சுரண்டுவதன் அடிப்படையிலான உறவுகள் இல்லாமற் போய் விடும் சூழ்நிலையில், வேலை செய்யத் தொடங்கும்

ஒரு தலைமுறையினர்தான் இந்த அடித்தளத்தின்மீது கட்டி எழுப்பக் கூடியவர்கள்.

ஆக, இளைஞர்கள் முன்னுள்ள பணிகளை இந்தக் கோணத்திலிருந்து பரிசீலிக்கையில், பொதுவில் இளைஞர்களுக்கும், குறிப்பாய் இளங் கம்யூனிஸ்டுக் கழகங்களுக்கும், ஏனைய எல்லா நிறுவனங்களுக்கும் முன்னுள்ள பணிகளைப் பின்வரும் ஒரே சொல்லில் சுருக்கமாய்த் தொகுத்துரைத்து விடலாம் என்பதை நாம் குறிப்பிட வேண்டும்: கற்றறியுங்கள்.

''ஒரேயொரு சொல்தான்'' அது. எதைக் கற்றறிவது, எப்படிக் கற்றறிவது என்ற தலைமையான, அத்தியாவசியமான கேள்விகளுக்கு இச்சொல் பதில் தரவில்லை. பழைய, முதலாளித்துவ சமுதாயம் மாற்றப்படுகிறபடியால், புதிய தலைமுறைகளை, கம்யூனிச சமுதாயத்தைத் தோற்றுவிக்கப் போகிற இந்தப் புதிய தலைமுறைகளை வளர்த்து ஆளாக்குவதும் பயிற்றுவிப்பதும் அவற்றுக்குக் கல்வி போதமளிப்பதும் பழைய வழிகளில் நடந்தேற முடியாது என்பதே இங்குள்ள பிரதான விவகாரம். இளைஞர்களுக்கான பயிற்சியும் போதனையும் கல்வியும் பழைய சமுதாயம் நமக்கு விட்டுச் சென்றுள்ளவற்றில் இருந்தே தொடங்கியாக வேண்டும். பழைய சமுதாயம் நமக்கு விட்டுச் சென்றுள்ள அறிவு, நிறுவன அமைப்புகள், ஏற்பாடுகள் இவற்றின் முழு மொத்தத்தையும் அடிப்படையாய்க் கொண்டுதான், இந்த மானுட சக்திகள், சாதனங்கள் ஆகியவற்றின் கையிருப்புகளைப் பயன்படுத்திக் கொள்ளவதன் மூலம்தான் நாம் கம்யூனிசத்தைக் கட்டியமைக்க முடியும். இளைஞர்களுக்கான பயிற்சியையும் போதனையையும் ஒழுங்கமைப்பையும் தீவிர முறையில் திருத்தியமைத்தால்தான் இளந் தலைமுறையினரது முயற்சிகளின் பயனாய்ப் பழைய சமுதாயத்தைப் போன்றதல்லாத ஒரு சமுதாயம் தோற்றுவிக்கப்படும்படி, அதாவது ஒரு கம்யூனிச சமுதாயம் தோற்றுவிக்கப்படும்படி நாம் உத்தரவாதம் செய்து கொள்ள முடியும். ஆகவே இளைஞர்களுக்கு நாம் போதிக்க வேண்டியது என்ன, இளைஞர்கள் கம்யூனிச இளைஞர்கள் என்னும் பெயருக்கு

உரித்தவராகும் தகுதி பெற மெய்யாகவே விரும்பினுல், அவர்கள் கற்றறிந்து கொள்ள வேண்டியது என்ன, நாம் துவக்கியிருக்கும் பணியை நிறைவுறச் செய்து சித்தி பெற வைக்கக் கூடியவர்களாகும் பொருட்டு அவர்களுக்குப் பயிற்சி அளிப்பது எப்படி என்கிற பிரச்சினை குறித்து நாம் விவரமாய்ப் பரிசீலிக்க வேண்டும்.

இளைஞர் கழகமும் பொதுவில் கம்யூனிசத்துக்கு முன்னேறிச் செல்ல விரும்பும் இளைஞர்கள் அனைவரும் கம்யூனிசத்தைக் கற்றறிந்தாக வேண்டும் என்பதே முதலாவதும் மிகவும் இயற்கையானதுமான பதிலாய்த் தோன்றுகிறது என்பதை நான் குறிப்பிட்டாக வேண்டும்.

ஆனுல் ''கம்யூனிசத்தைக் கற்றறிவீர்'' என்னும் இந்தப் பதில் மிக மிகப் பொதுப்படையானது. கம்யூனிசத்தைக் கற்றறிந்து கொள்ள நமக்கு வேண்டியது என்ன? கம்யூனிசத்தைப் பற்றிய அறிவைப் பெறப் பொதுவான அறிவின் தொகுப்பிலிருந்து தனியே பிரித்து ஒதுக்கப்பட வேண்டியது எது? இங்கே பல அபாயங்கள் எழுகின்றன. கம்யூனிசத்தைக் கற்றறியும் பணி தவருன முறையில் எடுத்துரைக்கப்படும் போது, அல்லது அளவு மீறி ஒரே மாதிரியான முறையில் அர்த்தப்படுத்தப்படும் போது இந்த அபாயங்கள் அடிக்கடி எழுகின்றன.

கம்யூனிஸ்டுப் பாடப் புத்தகங்களிலும் பிரசுரங்களிலும் நூல்களிலும் அடங்கியுள்ள ஒட்டுமொத்த அறிவை ஏற்றுக் கொள்வதே கம்யூனிசத்தைக் கற்றறிவதாகும் என்பதே இயல்பாய் ஒருவர் மனதில் முதலில் தோன்றும் எண்ணம். ஆனுல் கம்யூனிசத்தைப் பயிலுதல் என்பதற்கு இவ்விதம் இலக்கணம் கூறுவதானது மிதமிஞ்சிக் கொச்சைப் படுத்துவதும் குறைப்படுத்துவதுமாகவே இருக்கும். கம்யூனிஸ்டுப் புத்தகங்களிலும் பிரசுரங்களிலும் இருப்பதை ஏற்றுக் கொள்வதே கம்யூனிசம் பயிலுதலாய் இருப்பின், கம்யூனிஸ்டு வாசகம் பேசி வித்தை காட்டுவோரை, அல்லது வாய்ச் சவடால்காரர்களை எளிதில் நாம் நிறைய பெற்றுக் கொண்டு விடலாம். பல சந்தர்ப்பங்களிலும் இதனுல் நமக்குத் தீங்கே ஏற்படும். ஏனெனில் இத்தகையோர் கம்யூ

னிஸ்டுப் புத்தகங்களிலும் பிரசுரங்களிலும் எடுத்துரைக்கப்படுவதைப் படித்துத் தெரிந்து கொண்டபின் பல்வேறு அறிவுத் துறைகளைச் சேர்த்து இணைத்திடும் திறனற்றோராகவே இருப்பர்; கம்யூனிசத்துக்கு உண்மையில் அவசியமாயுள்ள முறையில் இவர்களால் செயல்பட முடியாது.

புத்தகங்களுக்கும் நடைமுறை வாழ்க்கைக்கும் இடையிலான அதலபாதாள வேறுபாடு பழைய, முதலாளித்துவ சமுதாயம் நமக்கு விட்டுச் சென்றுள்ள பெருங் கேடுகளிலும் இன்னல்களிலும் ஒன்றாகும். யாவற்றையும் சிறந்த முறையில் விளக்கும் புத்தகங்கள் நம்மிடம் இருந்துள்ளன. ஆயினும் பெரும்பாலும் கபடத்தனமான கேடுகெட்ட பொய்யுரைகளும் முதலாளித்துவ சமுதாயத்தைப் பற்றிய பொய்க் கூற்றுகளும்தான் இப்புத்தகங்களின் உள்ளடக்கம்.

எனவே கம்யூனிசத்தைப் பற்றிய ஏட்டு அறிவை ஏற்றுக் கொள்வதுடன் நின்று விடுவது மிகப் பெரும் தவறாகும். கம்யூனிசத்தைப் பற்றி வழக்கமாய்க் கூறப்பட்டு வந்ததைத் திரும்பவும் வலியுறுத்துவதுடன் இப்பொழுதெல்லாம் நமது பேச்சுக்களும் கட்டுரைகளும் நின்று விடுவதில்லை. ஏனென்றால் நமது பேச்சுக்களும் கட்டுரைகளும் எல்லாத் துறைகளிலும் நமது அன்றாட வேலைகளுடன் இணைந்திருக்கின்றன. வேலையில் ஈடுபடாமல், போராட்டம் இல்லாமல் கம்யூனிஸ்டுப் பிரசுரங்களிலிருந்தும் நூல்களிலிருந்தும் கம்யூனிசம் குறித்துப் பெறப்பட்ட ஏட்டு அறிவு சிறிதும் பயனற்றதாகும். ஏனெனில் அது தத்துவத்துக்கும் நடைமுறைக்குமிடையே இருந்த பழைய பிளவையும் பழைய முதலாளித்துவ சமுதாயத்தின் கேடுகெட்ட இயல்பான இந்தப் பழைய வேறுபாட்டையும் தொடர்ந்து நீடிக்கவே செய்யும்.

கம்யூனிஸ்டுக் கோஷங்களை மட்டும் ஏற்றுக் கொள்ள முற்படுவதானது இன்னுங்கூட அபாயம் விளைவிப்பதாய் இருக்கும். இந்த அபாயத்தை நாம் தக்க காலத்தில் உணராமலும், இந்த அபாயத்தைத் தவிர்ப்பதில் நமது முயற்சிகள் அனைத்தையும் ஈடுபடுத்தாமலும் இருந்திருப்போமாயின், இவ்வழியில் கம்யூனிசத்தைக் கற்றறிந்து கொண்டு

தம்மைக் கம்யூனிஸ்டுகளென அழைத்துக் கொண்டிருக்கக் கூடிய ஐந்து அல்லது பத்து லட்சம் இளைஞர்களும் யுவதிகளும் கம்யூனிச இலட்சியத்துக்குப் பெருந் தீங்கே இழைத்திருப்பார்கள்.

கம்யூனிசத்தைக் கற்றறிய இவை யாவற்றையும் இணைத்துப் பொருத்துவது எப்படி? என்ற கேள்வி எழுகிறது. பழைய கல்வி முறையிலிருந்து, பழைய வகை விஞ்ஞானத்திடமிருந்து நாம் எடுத்துக் கொள்ள வேண்டியவை எவை? எல்லாம் தழுவிய கல்வி அறிவுடையோரை உருவாக்குவதே, பொதுவில் விஞ்ஞானங்களைப் போதிப்பதே பழைய கல்வி முறையின் குறிக்கோள் என்பதாய் அறிவிக்கப்பட்டு வந்தது. அது முழுக்க முழுக்கப் பொய் என்பதை நாம் அறிவோம். ஏனெனில் மக்கள் வர்க்கங்களாய், சுரண்டப்படுவோரும் சுரண்டுவோருமாய்ப் பிரிக்கப் பட்டிருப்பதன் அடிப்படையிலே சமுதாயம் அனைத்தும் அமைந்து இந்தப் பிரிவினையால் பராமரிக்கப்பட்டு வந்தது. பழைய கல்வி முறை முழுக்க முழுக்க இந்த வர்க்க மனப்பான்மையில் ஊறியிருந்ததால் இயற்கையாகவே அது முதலாளித்துவ வர்க்கத்தின் குழந்தைகளுக்கு மட்டுமே அறிவு போதித்தது. முதலாளித்துவ வர்க்கத்தின் நலன்களுக்கு ஏற்றபடி ஒவ்வொரு சொல்லும் பொய்யாய்த் திரிக்கப்பட்டது. இந்தக் கல்வி முறையில் தொழிலாளர்கள், விவசாயிகளது இளந் தலைமுறையினர் முதலாளித்துவ வர்க்கத்தின் நலன்களுக்கு ஏற்ப குருட்டுப் பாடப் பயிற்சி அளிக்கப்பட்டனரே, தவிர அவர்களுக்குக் கல்வி அளிக்கப்பட்டதாய்க் கூற முடியாது. முதலாளித்துவ வர்க்கத்தின் சேவகர்களாய்ப் பணிவிடை புரியத் தக்க வழியில், அவ்வர்க்கம் அமைதியாகவும் நிம்மதியாகவும் வாழ்வதற்குக் குந்தகமில்லாமல் அதற்கு லாபங்கள் கிடைக்கச் செய்யக் கூடிய வழியில் அவர்களுக்குப் பயிற்சி தரப்பட்டது. எனவேதான் நாம் பழைய கல்வி முறையை நிராகரித்து விட்டு, மெய்யான கம்யூனிசக் கல்விக்கு நமக்குத் தேவையானவற்றை மட்டும் அதனிடமிருந்து எடுத்துக் கொள்வதையே பணியாய்க் கொண்டிருக்கிறோம்.

பழைய கல்வி முறைமீது தொடுக்கப்படும் கண்டனங்களுக்கும் குற்றச்சாட்டுகளுக்கும் இது என்னை அழைத்து வருகிறது. இவற்றை நாம் ஓயாது கேட்டு வருகிறோம். பெரும்பாலும் இவை முற்றிலும் தவறான முடிவுகளுக்கே இட்டுச் செல்கின்றன. பழைய கல்வி முறை வெறும் ஏட்டு அறிவுக்கும் ஓயாத குருட்டுப் பாடப் பயிற்சிக்கும் நெட்டுருவுக்குமான கல்விக் கூடமாகவே இருந்ததென்று கூறப்படுகிறது. இது மெய்தான். ஆனால் பழைய கல்வி முறையில் காணக் கூடிய மோசமான இயல்புகளையும் நமக்குப் பயன்படத்தக்கனவற்றையும் நாம் வேறுபடுத்திப் பார்க்க வேண்டும். கம்யூனிசத்துக்கு அவசியமானவற்றை அதனிடமிருந்து தெரிந்தெடுத்துக் கொள்ளக் கூடியோராய் இருத்தல் வேண்டும்.

பழைய கல்வி முறை வெறும் ஏட்டு அறிவையே புகட்டியது. பயனற்ற, வேண்டாத, வறட்டுத்தனமான அறிவைப் பெருமளவில் ஏற்றுக் கொள்ளும்படி மாணவர்களைப் பலவந்தம் செய்தது. இந்த அறிவு குப்பையாய் மூளையில் அடைந்து, ஒரே அச்சில் வார்க்கப்பட்ட அதிகாரிகளாய் இளந் தலைமுறையினரை மாற்றியது. ஆனால் மனித குலம் சேகரித்திருக்கும் அறிவுச் செல்வத்தை ஏற்றுக் கொள்ளாமலே ஒருவர் கம்யூனிஸ்டாகி விடலாம் என்பதாய் இதிலிருந்து நீங்கள் முடிவுக்கு வர முயன்றால் அது மிகக் கடும் பிழையே ஆகும். அறிவின் கூட்டுத் தொகையிலிருந்து விளைந்த பயனே கம்யூனிசம். இந்த கூட்டுத் தொகையான அறிவைப் பெறாமலே, கம்யூனிச கோஷங்களையும் கம்யூனிச விஞ்ஞானத்தின் முடிவுகளையும் கற்றறிந்து கொண்டால் போதுமென நினைப்பது தவறாகும். மார்க்சியமானது மனித அறிவின் கூட்டுத் தொகையிலிருந்து எப்படிக் கம்யூனிசம் தோன்றியது என்பதைக் காட்டும் ஓர் உதாரணமாகும்.

பிரதானமாய் மார்க்ஸ் படைத்தளித்த கம்யூனிசத் தத்துவம், கம்யூனிச விஞ்ஞானம், மார்க்சியம் எனும் இந்தப் போதனை பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த தனியொரு சோஷலிஸ்டின்—அவர் ஒரு மாமேதையே என்றாலுங்

கூட—படைப்பாய் இருந்த நிலை முடிவுற்று விட்டது என்பதையும், அது உலகெங்குமுள்ள லட்சோப லட்சக் கணக்கான, கோடானு கோடியான பாட்டாளி வர்க்கத்தாரின் போதனையாகி விட்டது, முதலாளித்துவத்துக்கு எதிரான தமது போராட்டத்தில் அவர்கள் இதைச் செயல்படுத்தி வருகிருர்கள் என்பதையும் நீங்கள் படித்தும் கேட்டும் இருக்கிறீர்கள். மார்க்சின் போதனை மிகவும் புரட்சிகரமான வர்க்கத்தைச் சேர்ந்த லட்சக் கணக்கானேரின், கோடிக் கணக்கானேரின் உள்ளத்தையும் சிந்தனையையும் கவர்ந்திழுக்க முடிந்தது எப்படி என்று நீங்கள் கேட்டீர்களானல், உங்களுக்குக் கிடைக்கக் கூடிய பதில் ஒன்றே ஒன்றுதான்: முதலாளித்துவத்தில் கிடைக்கப் பெற்ற மனிதகுல அறிவெனும் உறுதியான அடித்தளத்தை மார்க்ஸ் தமது படைப்புக்கு ஆதாரமாக்கிக் கொண்டதால்தான் என்பதே அந்தப் பதில். மனித சமுதாயத்தின் வளர்ச்சியை ஆளும் விதிகளை ஆராய்ந்து அறிந்து, முதலாளித்துவமானது கம்யூனிசத்தை நோக்கி வளர்வது தவிர்க்க முடியாததாகும் என்பதை மார்க்ஸ் உணர்ந்து கொண்டார். மிகவும் முக்கியமானது என்னவென்ருல், இந்த முதலாளித்துவ சமுதாயத்தை மிகவும் துல்லியமாகவும் விவரமாகவும் ஆழ்ந்த முறையிலும் ஆராய்வதெனும் ஒரே அடிப்படையில் அவர் இதை நிரூபித்தார், முந்திய விஞ்ஞானம் தோற்றுவித்தது அனைத்தையும் முழுமையாக ஏற்றுக் கொண்டு அவர் இதைச் செய்தார். மனித சமுதாயம் தோற்றுவித்தவை யாவற்றையும், ஒரு சிறு விவரத்தையும் கவனியாது விடாமல், விமர்சனக் கண்கொண்டு பரிசீலித்துத் திருத்தியமைத்தார். மனித சிந்தனை தோற்றுவித்திருந்தவை யாவற்றையும் அவர் மறு பரிசீலனை செய்தார், விமர்சனத்துக்கு உட்படுத்தினர், தொழிலாளி வர்க்க இயக்கத்தைக் கொண்டு சரிபார்த்தார். முதலாளித்துவ வரம்புகளால் கட்டுப்படுத்தப்பட்டோரால், அல்லது முதலாளித்துவத் தப்பெண்ணங்களால் கட்டுண்டோரால் வந்தடைய முடியாத முடிவுகளை இவ்வழியில் வந்தடைந்து அவர் வரையறுத்துக் கொடுத்தார்.

உதாரணமாய், பாட்டாளி வர்க்கக் கலாசாரம் குறித்துப் பேசுகையில் இதை நாம் மனதில் கொண்டிருப்பது அவசியம்[66]. மனித குலத்தின் வளர்ச்சி அனைத்தின் விளைவாகவும் தோற்றுவிக்கப்பட்ட கலாசாரத்தைப் பற்றிய துல்லியமான அறிவைக் கொண்டும் இந்தக் கலாசாரத்தை மாற்றியமைப்பதன் மூலமும்தான் நாம் பாட்டாளி வர்க்கக் கலாசாரத்தைத் தோற்றுவிக்க முடியும் என்பதைத் தெளிவாய் உணர்ந்தால் ஒழிய இப்பிரச்சினைக்கு நம்மால் தீர்வு காண இயலாது. பாட்டாளி வர்க்கக் கலாசாரம் மாயமாய்க் காற்றிலிருந்து தயாரிக்கப்பட்டு விடக் கூடியதல்ல; கம்யூனிசக் கலாசாரத்தில் நிபுணர்கள் என்பதாய்த் தம்மை அழைத்துக் கொள்வோர் கண்டுபிடித்துக் கொடுத்து விடக் கூடியதல்ல. அதெல்லாம் அபத்தப் பேச்சு. பாட்டாளி வர்க்கக் கலாசாரம் முதலாளித்துவ சமுதாயம், நிலப்பிரபுக்களின் சமுதாயம், அதிகார வர்க்க சமுதாயம் ஆகியவற்றின் ஆதிக்கத்தில் மனித குலம் சேமித்து வந்திருக்கும் அறிவுக் கருவூலத்தின் தர்க்கரீதியான வளர்ச்சியாகவே இருக்க முடியும். எப்படி அரசியல் பொருளாதாரம், மார்க்சால் திருத்தியமைக்கப்பட்ட வடிவில், மனித சமுதாயம் எதை வந்தடையப் போகிறதென்பதை நமக்குக் காட்டியுள்ளதோ, எப்படி அது வர்க்கப் போராட்டத்துக்கும் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் தொடக்கத்துக்குமான பாதையை நமக்குக் காட்டியுள்ளதோ, அதே போல மேற்கூறிய பாதைகள் யாவும் பாட்டாளி வர்க்கக் கலாசாரத்துக்கு இட்டு வந்திருக்கின்றன, இனியும் தொடர்ந்து இட்டுச் செல்லும்.

இளைஞர்களின் பிரதிநிதிகளும், மற்றும் ஒரு புதிய கல்வி முறையின் குறிப்பிட்ட சில ஆதரவாளர்களும் பழைய கல்வி முறையைத் தாக்கி, அது நெட்டுருப் போடும் முறையாகுமென அடிக்கடி பேசக் கேட்கிறோம். பழைய கல்வி முறையிலிருந்து நல்லதை எடுத்துக் கொண்டாக வேண்டுமென இவர்களுக்கு நாம் பதிலளிக்கிறோம்: பத்தில் ஒன்பது பங்கு உதவாக்கரையானதும் எஞ்சிய ஒரு பங்கு திரித்துப் புரட்டப்பட்டதுமான அளவிலா அறிவை

இளம் மக்களின் தலையில் அடைத்து நிரப்பும் அந்த முறையை நாம் கடன் வாங்கக் கூடாதுதான். ஆனால் இதற்கு அர்த்தம் கம்யூனிச முடிவுகளுக்குள் நம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டு விடலாம், கம்யூனிசக் கோஷங்களை மட்டும் கற்பதுடன் நின்று விடலாம் என்பதல்ல, இவ்வழியில் உங்களால் கம்யூனிசத்தைத் தோற்றுவிக்க முடியாது. மனிதகுலம் படைத்தளித்திருக்கும் கருவூலங்கள் யாவற்றையும் பற்றிய அறிவைப் பெற்று உங்கள் சிந்தனையை நீங்கள் வளமாக்கிக் கொள்ளும் போது மட்டுமே உங்களால் கம்யூனிஸ்டு ஆக முடியும்.

நெட்டுருப் போட வேண்டிய தேவை நமக்கு இல்லை. ஆனால் அடிப்படை உண்மைகளைப் பற்றிய அறிவை அளித்து ஒவ்வொரு மாணவரின் மனத்தையும் வளர்த்திடுவதும் செம்மையாக்குவதும் நமக்கு அவசியமே. கற்கும் அறிவு அனைத்தும் மனத்துள் செரிமானம் செய்யப்படவில்லையானால், கம்யூனிசம் வெற்றுச் சொல்லாய், வெறும் பெயர்ப் பலகையாய் இழிவுற்று விடும், கம்யூனிஸ்டுகள் வீம்புரை பேசும் வீணராகி விடுவர். இந்த அறிவை நீங்கள் ஏற்றுக் கொண்டால் மட்டும் போதாது, விமர்சனக் கண் கொண்டு ஆய்ந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் வேண்டாத குப்பையை எல்லாம் மூளையில் அடைத்து கொள்ளாமல், கல்வியில் சிறந்த இக்கால மனிதர் எவருக்கும் அத்தியாவசியமான உண்மைகளைக் கொண்டு சிந்தனையை வளமாக்கிக் கொள்ள முடியும். கருத்து மிக்க கடும் முயற்சி இல்லாமலே, விமர்சனக் கண் கொண்டு பரிசீலிக்க வேண்டிய உண்மைகளைப் புரிந்து கொள்ளாமலே ஒரு கம்யூனிஸ்டு, தயாராய் வரையறுத்து வைக்கப்பட்ட முடிவுகளைத் தெரிந்து கொண்டு விட்ட ஒரே காரணத்தால் தனது கம்யூனிசத்தை மெச்சிப் புகழ்ந்து கொள்ள நினைப்பாராயின் உண்மையில் அவர் பரிதாபத்துக்குரிய கம்யூனிஸ்டுதான். இத்தகைய நுனிப் புல் மேயும் போக்கு நிச்சயமாய் ஆபத்தையே உண்டாக்கும். அறிந்தது குறைவே என்பது எனக்குத் தெரிந்தால் மேலும் கற்க முயலுவேன். ஆனால் நான் ஒரு கம்யூனிஸ்டு, எதையும்

நான் தீர்க்கமாய்த் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை என்று கூறும் ஒருவர் எந்நாளும் எவ்விதத்திலும் கம்யூனிஸ்டுக்கு ஒப்பானவராக முடியவே முடியாது.

பழைய கல்வி முறை முதலாளிகளுக்குத் தேவையான சேவகர்களைத் தோற்றுவித்தது. விஞ்ஞான அறிவாளிகளைப் பழைய கல்வி முறை முதலாளிகளுக்குப் பிடித்தது எதுவோ அதை எழுதிக் கொண்டும் கூறிக் கொண்டும் இருப்போராய் மாற்றியது. ஆகவே நாம் அதை அழிக்கவே வேண்டும். அதை நாம் அழிக்க வேண்டும், ஒழிக்க வேண்டும் என்றால், மனித குலம் சேகரித்திருக்கும் மனிதனுக்கு அவசியமானவை யாவற்றையும் அவற்றிடமிருந்து எடுத்துக் கொள்ளக் கூடாது என்று அதற்கு அர்த்தம்? முதலாளித்துவத்துக்கு வேண்டியதாய் இருந்ததையும் கம்யூனிசத்துக்கு வேண்டியதாய் இருப்பதையும் வேறுபடுத்தத் தேவையில்லை என்று அதற்கு அர்த்தம்?

முதலாளித்துவ சமுதாயத்தில், பெரும்பாலோரின் விருப்பத்துக்கு எதிராக அனுசரிக்கப்பட்ட பழைய பட்டாளத்துப் பயிற்சி முறைகளை நீக்கி, அவற்றுக்குப் பதிலாய்த் தொழிலாளர் விவசாயிகளது வர்க்க உணர்வு படைத்த கட்டுப்பாட்டைக் கைக்கொண்டு வருகிறோம். இத்தொழிலாளர்களும் விவசாயிகளும் பழைய சமுதாயத்தை வெறுப்பதோடுகூட, இந்தப் போராட்டத்தில் தமது சக்திகளை ஒன்றுபடுத்தவும், ஒழுங்கமைக்கவும், லட்சம் லட்சமாகவும் கோடி கோடியாகவுமுள்ள மக்களின்—பிளவுபட்டு ஒரு பெரிய நாட்டின் பரப்பு முழுதும் சிதறுண்டிருக்கும் மக்களின்—சித்தங்களை இவ்வாறு ஒருசேர இணைத்து ஒருமித்த ஏக சித்தமாக்கவும் ஆற்றலுடையோராய் வைராக்கியத்துடன் தயாராகவும் இருக்கிறார்கள். இந்த ஒருமித்த ஏக சித்தம் இல்லையேல் தோல்வி தவிர்க்க முடியாததாகி விடும். இந்த ஒருமைப்பாடு இல்லாமல், தொழிலாளர்கள், விவசாயிகளது உணர்வு பூர்வமான இந்தக் கட்டுப்பாடு இல்லாமல், நமது இலட்சியம் வெற்றி பெறுவது சாத்தியமல்ல. இது இல்லாமல் அனைத்து உலகின் முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் நாம் தோற்கடிக்க

முடியாது. அடித்தளத்தின் மீது நாம் ஒரு புதிய, கம்யூனிச சமுதாயத்தைக் கட்டியமைப்பது இருக்கட்டும், அந்த அடித்தளத்தை நாம் உறுதியாக்கி நிலைக்கச் செய்வதுகூட முடியாமற் போய் விடும். இதே போல, பழைய கல்வி முறையை நிராகரிக்கும் அதே போது, பழைய கல்வி முறை மீது முற்றிலும் நியாயமான, தேவையான வெறுப்பு கொண்டிருக்கும் அதே போது, அதை அழித்திடச் சித்தமாயிருப்பதைப் போற்றும் அதே போது, நாம் பழைய கல்வி போதனை முறையை, பழைய நெட்டுரு, பழைய பட்டாளத்துப் பயிற்சி முறையை அழித்து, அதனிடத்தில் ஒட்டுமொத்த மனித அறிவைப் பெறும் ஆற்றலை அடைவதன் அவசியத்தை உணர்ந்தாக வேண்டும். கம்யூனிசமானது குருட்டு மனப்பாடமாய்க் கற்க வேண்டிய ஒன்றாய் அமையாது, நேரடியாய் நீங்களே சிந்தித்துப் பார்த்த ஒன்றாய், தற்காலக் கல்வியின் கண்ணோட்டத்திலிருந்து எழும் தவிர்க்க முடியாத முடிபுகள் உள்ளடங்கிய ஒன்றாய் அமையும்படி இந்த ஒட்டுமொத்த மனித குல அறிவைப் பெற வேண்டும்.

கம்யூனிசத்தைக் கற்றறிதல் என்னும் குறிக்கோள் குறித்துப் பேசுகையில் பிரதான பணிகளை மேற்கூறிய வாறுதான் எடுத்துரைக்க வேண்டும்.

உங்களுக்கு இதைத் தெளிவுபடுத்தும் பொருட்டு, எப்படி நீங்கள் கற்றறிய வேண்டும் என்கிற பிரச்சினையை அணுகுவதற்குரிய முறையைப் புலப்படுத்தும் பொருட்டு, நடை முறை உதாரணம் ஒன்றைக் கூறுகிறேன். குடியரசைப் பாதுகாப்பது குறித்த இராணுவப் பணிகளை அடுத்து, இப்பொழுது நாம் பொருளாதாரப் பணிகளை எதிர்நோக்குவது உங்கள் எல்லோருக்கும் தெரியும். தொழில் துறைக்கும் விவசாயத்துக்கும் உயிர் கொடுத்தாலன்றி கம்யூனிச சமுதாயத்தைக் கட்டியமைக்க முடியாதென்பதை அறிவோம். அதுவும் பழைய வழியிலன்றி, நவீன அடிப்படையில், விஞ்ஞானத்தின் மிக நவீன முறைகளுக்கு ஏற்ப, இவற்றைப் புனரமைத்தாக வேண்டும். மின்விசையே இந்த அடிப்படை என்பதும், நாடு அனைத்தும், தொழில் துறை, விவசாயம் இவற்றின் எல்லாக் கிளைகளும் மின்சாரமய

மாக்கப்பட்ட பிறகுதான், நீங்கள் இந்தக் குறிக்கோளை நிறைவேற்றிய பிறகுதான், பழைய தலைமுறையினரால் கட்டப்பட முடியாத கம்யூனிச சமுதாயத்தை உங்களால் கட்டியமைக்க முடியும் என்பதும் உங்களுக்குத் தெரியும். நாடு முழுவதையும் பொருளாதார வழியில் புத்துயிர் பெறச் செய்யும் பணி—நவீன தொழில்நுட்ப முறைகளின் வாயிலாய், நவீன விஞ்ஞானம், தொழில்நுட்பத்தின் அடிப்படையில், மின்விசையின் அடிப்படையில், தொழில் துறையையும் விவசாயத்தையும் புனரமைத்துப் புத்துயிர் பெறச் செய்யும் பணி—உங்களை எதிர்நோக்குகிறது. எழுத்தறியாத மக்களால் மின்சாரமயமாக்கும் பணியைச் சமாளிக்க முடியாது. ஆரம்ப நிலையிலான எழுத்தறிவுங்கூட இதற்குப் போதாது என்பது நீங்கள் நன்கு அறிந்ததே. மின்விசை என்பது என்னவென்று புரிந்து கொண்டால் மட்டும் போதாது; தொழில் துறையிலும் விவசாயத்திலும், மற்றும் தொழில் துறை, விவசாயம் இவற்றின் தனித் தனிக் கிளைகளிலும், தொழில்நுட்ப வழியில் எப்படி அதைக் கையாளுவது என்பது பற்றிய அறிவு இருப்பது அவசியமாகும். அவரவரும் இதைக் கற்றுத் தெரிந்து கொண்டாக வேண்டும். உழைப்பாளி மக்களின் இளந் தலைமுறை அனைத்துக்கும் இதைக் கற்றுத் தந்தாக வேண்டும். இதுவே வர்க்க உணர்வு படைத்த ஒவ்வொரு கம்யூனிஸ்டுக்கும், தன்னைக் கம்யூனிஸ்டாகக் கருதிக் கொள்ளும் ஒவ்வொரு இளைஞருக்கும் இளம் பெண்ணுக்கும்—இளம் கம்யூனிஸ்டுக் கழகத்தில் சேர்ந்து கொண்டதன் மூலம் கம்யூனிசம் அமைத்திடக் கட்சிக்குத் துணை புரிவதாய், கம்யூனிச சமுதாயத்தைத் தோற்றுவிக்க இளந் தலைமுறை முழுவதுக்குமே துணை புரிவதாய்த் தான் சபதமேற்றிருப்பதைத் தெளிவாய் உணருகிறவர் ஒவ்வொருவருக்கும்—முன்னுள்ள பணி. நவீனக் கல்வியின் அடிப்படையில் மட்டுமே இதைத் தோற்றுவிக்க முடியும் என்பதை அவர் உணர்ந்து கொள்ள வேண்டும். அவர் இந்தக் கல்வியைப் பெறாவிடில் கம்யூனிசம் வெறும் ஆத்மார்த்திக விருப்பமாகவே இருந்து வரும்.

முதலாளித்துவ வர்க்கத்தை வீழ்த்துவது பழைய தலைமுறையின் பணியாய் இருந்தது. முதலாளித்துவ வர்க்கத்தை விமர்சிப்பதும், வெகுஜனங்களிடையே முதலாளித்துவ வர்க்கத்தின்மீது வெறுப்பு எழச் செய்வதும், அவர்களிடையே வர்க்க உணர்வையும் தம் சக்திகளை ஒன்று சேர்த்துக் கொள்வதற்கான ஆற்றலையும் வளரச் செய்வதும் தான் அப்பொழுது பிரதான பணியாய் இருந்தது. இளந் தலைமுறையின் முன்னுள்ள பணி இதனிலும் மிகமிகச் சிக்கலானது. முதலாளிகளால் முடுக்கி விடப்படும் படையெடுப்பை எதிர்த்து நின்று தொழிலாளர்கள், விவசாயிகளது ஆட்சியதிகாரத்தை நிலைநாட்டும் வண்ணம் உங்கள் சக்திகளை இணைத்துச் சேர்ப்பது மட்டுமல்ல உங்களுடைய கடமை. சந்தேகமில்லை, அதை நீங்கள் செய்யவே வேண்டும். அது நீங்கள் தெளிவாய் உணரும் ஒன்று. கம்யூனிஸ்டுக்குத் தெட்டத் தெளிவாய்த் தெரியும் கடமை அது. ஆனால் அது மட்டும் போதாது. கம்யூனிச சமுதாயத்தை நீங்கள் கட்டியமைத்தாக வேண்டும். பல அம்சங்களில் ஒரு பாதி வேலை செய்து முடிக்கப்பட்டு விட்டது. அழிக்கப்பட வேண்டிய பழையது அழிக்கப்பட்டு விட்டது, தகர்க்கப்பட வேண்டியது தகர்த்துத் தரை மட்டமாக்கப்பட்டு விட்டது. தரை சுத்தமாக்கப்பட்டு விட்டது, இந்தத் தரையின் மேல் இளங் கம்யூனிஸ்டுத் தலைமுறை கம்யூனிச சமுதாயத்தைக் கட்டியெழுப்பியாக வேண்டும். உங்களை எதிர்நோக்குவது நிர்மாணப் பணி. நவீன கால அறிவு அனைத்தையும் கற்றுத் தேர்ந்தால்தான் நீங்கள் இந்தப் பணியைச் செய்து முடிக்க முடியும். ஏற்கெனவே வரையறுக்கப்பட்டு மனப்பாடம் செய்யப்பட்ட சூத்திரங்கள், அறிவுரைகள், நியமங்கள், விதிமுறைகள், வேலைத்திட்டங்கள் ஆகியவற்றிலிருந்து கம்யூனிசத்தை உயிருள்ள எதார்த்த உண்மையாய் உங்களால் மாற்ற முடிந்தால்தான், உங்களுடைய உடனடி வேலைகளுக்கு ஐக்கிய உருவளிக்கும் எதார்த்த உண்மையாய் மாற்ற முடிந்தால்தான், உங்களுடைய நடைமுறை வேலைகள் யாவற்றுக்கும் நீங்கள் கம்யூனிசத்தை

ஒரு வழிகாட்டி ஆக்கிக் கொள்ள முடிந்தால்தான், உங்களால் இந்தப் பணியைச் செய்து முடிக்க இயலும்.

இளம், தலைமுறையினர் அனைவருக்கும் கல்வி போதமும் பயிற்சியும் அளித்து அவர்களைத் தட்டியெழுப்புகையில் நீங்கள் நிறைவேற்ற வேண்டிய பணி இதுவே. கம்யூனிச சமுதாயத்தைக் கட்டியமைக்கும் கோடானு கோடியான ஆக்க வீரர்களிடையே நீங்கள் முன்னிலையில் இருக்க வேண்டும். இந்த ஆக்க வீரர்களது அணி வரிசையே ஒவ்வொரு இளைஞருக்கும் இளம் பெண்ணுக்கும் உரிய இடமாகும். இளந் தொழிலாளர்களும் விவசாயிகளுமான பெருந்திரளானவரைக் கம்யூனிச நிர்மாணப் பணியில் அணி திரட்டினாலன்றி உங்களால் கம்யூனிச சமுதாயத்தைக் கட்டியெழுப்ப முடியாது.

கம்யூனிசத்தை எப்படி நாம் போதிப்பது, நமக்குரிய முறைகளின் தனி இயல்புகள் யாவை என்னும் பிரச்சினைக்கு இயற்கையாகவே இது என்னை அழைத்து வருகிறது.

முதலில் இங்கு கம்யூனிச அறநெறிப் பிரச்சினை குறித்துப் பரிசீலிக்கிறேன்.

நீங்கள் உங்களைக் கம்யூனிஸ்டுகளாய்ப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டும். கற்றறிதல், ஒழுங்கமைத்தல், ஒன்றுபடச் செய்தல், போராடுதல் ஆகியவற்றின் மூலம் இளைஞர் கழக உறுப்பினர்கள் தம்மையும் பயிற்றுவித்துக் கொண்டு, இளைஞர் கழகத்தைத் தம் தலைமையாய்க் கருதுவோர் எல்லோரையும் கம்யூனிஸ்டுகளாய்ப் பயிற்றுவிக்கும் படியான முறையில் தனது நடைமுறைச் செயற்பாட்டை ஏற்பாடு செய்து கொள்வதுதான் இளைஞர் கழகத்தின் பணி. இன்றைய இளைஞர்களுக்குத் தரப்படும் பயிற்சி, கல்வி, போதனை ஆகியவற்றின் நோக்கம் எல்லாம் கம்யூனிச அறநெறியை ஊட்டுவதாகவே இருக்க வேண்டும்.

ஆனால் கம்யூனிச அறநெறி என்பதாய் ஒன்று இருக்கிறதா? கம்யூனிச ஒழுக்கம் என்பதாய் ஒன்று இருக்கிறதா? நிச்சயமாய் இருக்கிறது. நமக்கென ஒரு தனி அறநெறி கிடையாது என்பதாய் அடிக்கடி பேசப்படுகிறது; ஒழுக்க

நெறி அனைத்தையுமே நிராகரிப்பவர்கள் என்பதாய்க் கம்யூனிஸ்டுகளாகிய நம்மீது முதலாளித்துவ வர்க்கத்தினர் அடிக்கடி குற்றம் சாட்டுகிறார்கள். பிரச்சினையைக் குழப்புவதற்கான—தொழிலாளர், விவசாயிகளின் கண்களில் மண்ணைத் தூவுவதற்கான—ஓர் உபாயமே இது.

எந்த அர்த்தத்தில் நாம் அறநெறியை, ஒழுக்க நெறியை நிராகரிக்கிறோம்?

முதலாளித்துவ வர்க்கத்தினர் அதற்கு அளித்திடும் அர்த்தத்தில் நிராகரிக்கிறோம். கடவுள் கட்டளைகளை அவர்கள் அறநெறிக்கு அடிப்படையாக்கிக் கொள்கிறார்கள். இவ்விவகாரம் குறித்துப் பேசுகையில், எங்களுக்கு கடவுள் நம்பிக்கை கிடையாது என்று நாம் கூறுகிறோம். மதகுருமார்களும் நிலப்பிரபுக்களும் முதலாளி வர்க்கத்தினரும் சுரண்டலாளர்கள் என்ற முறையில் தமது சொந்த நலன்களைக் கருதிக் கடவுளின் பெயரை இழுக்கிறார்கள், இதை நாங்கள் நன்கு அறிவோம் என்று சொல்கிறோம். அல்லது, ஒழுக்கக் கட்டளைகளுக்குப் பதிலாய்—கடவுள் கட்டளைகளுக்குப் பதிலாய்—அவர்கள் கருத்துமுதல்வாத அல்லது ஓரளவு கருத்துமுதல்வாதத் தொடர்களை அறநெறிக்கு அடிப்படையாக்கிக் கொண்டனர். இந்தத் தொடர்களும் மிகப் பெருமளவுக்குக் கடவுள் கட்டளைகளைப் போன்ற ஒன்றையே குறிப்பவை.

மனிதனுக்குப் புறம்பான, வர்க்கத்துக்குப் புறம்பான கருத்தினங்களை அடிப்படையாய்க் கொண்ட எந்த ஒழுக்க நெறியையும் நாம் நிராகரிக்கின்றோம். அது ஏமாற்று வித்தை, மாய்மாலம், நிலப்பிரபுக்கள், முதலாளிகளது நலன்களை முன்னிட்டு தொழிலாளர்களையும் விவசாயிகளையும் மூடர்களாக்குவதற்கான உபாயம் என்கிறோம்.

எங்களுடைய ஒழுக்கநெறி பாட்டாளி வர்க்கத்தினுடைய வர்க்கப் போராட்டத்தின் நலன்களுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்தது என்று நாம் கூறுகிறோம். எங்கள் ஒழுக்கநெறி பாட்டாளி வர்க்கத்தினுடைய வர்க்கப் போராட்டத்தின் நலன்களிலிருந்துதான் உதிக்கிறது.

பழைய சமுதாயம் எல்லாத் தொழிலாளர்கள், விவ

சாயிகள் மீதும் நிலப்பிரபுக்களும் முதலாளிகளும் புரிந்த ஒடுக்குமுறையின் அடிப்படையில் அமைந்திருந்தது. நாம் அதை அடியோடு அழிக்க வேண்டியிருந்தது, அவர்களை வீழ்த்த வேண்டியிருந்தது. ஆனால் இதைச் செய்யும் பொருட்டு நாம் ஒற்றுமையை உண்டாக்க வேண்டியிருந்தது. அது கடவுளால் உண்டாக்கப்படக் கூடிய ஒன்று அல்ல.

இந்த ஒற்றுமையைத் தொழிற்சாலைகளால் மட்டும்தான் அளித்திட முடியும்; நீண்ட நெடிய உறக்கத்திலிருந்து எழுப்பப்பட்டுப் பயிற்சியளிக்கப்பட்ட பாட்டாளி வர்க்கத்தால்தான் உண்டாக்க முடியும். இந்த வர்க்கம் உருவான பிறகே வெகுஜன இயக்கம் ஒன்று தோன்றி, மிகவும் பலவீனமான ஒரு நாட்டில் பாட்டாளி வர்க்கப் புரட்சி வெற்றியடைந்திருப்பதை இப்பொழுது காண்கிறோமே, இந்த வெற்றிக்கு வழி செய்துள்ளது. இந்தப் பாட்டாளி வர்க்கப் புரட்சி அனைத்து உலகின் முதலாளித்துவ வர்க்கத்தாரின் கடுந்தாக்குதலை மூன்று ஆண்டுகளாய் எதிர்த்து தடுத்துக் கொண்டிருக்கிறது. உலகெங்கும் பாட்டாளி வர்க்கப் புரட்சி வளர்ந்து வருவதைக் காண முடிகிறது. ஒற்றுமையின்றிச் சிதறுண்டுள்ள விவசாயிகளைத் தன்னைப் பின்பற்றி வரச் செய்துள்ளதும், சுரண்டலாளர்களது எல்லாத் தாக்குதல்களையும் சமாளித்து நிற்பதுமான திடமிக்க இச்சக்தியைப் பாட்டாளி வர்க்கத்தை அன்னியில் வேறு எதனாலும் தோற்றுவித்திருக்க முடியாதென இப்பொழுது நாம் அனுபவ வாயிலாய்க் கூறலாம். இந்த ஒரு வர்க்கத்தால் மட்டும்தான் உழைப்பாளி வெகுஜனங்கள் ஒன்றுபடவும், தமது அணிகளை ஒன்றுதிரட்டிக் கொள்ளவும், கம்யூனிச சமுதாயத்தை முடிவாய்ப் பாதுகாத்துக் கொள்ளவும், முடிவாய் உறுதி பெறும்படிச் செய்யவும், முடிவாய்க் கட்டியமைத்திடவும் துணை புரிய முடியும்.

எனவேதான் மனித சமுதாயத்துக்கு மேலான ஒழுக்க நெறி என்பதாய் நமக்கு எதுவும் இல்லை என்று கூறுகிறோம். அது ஏமாற்று சூழ்ச்சியே ஆகும். நமக்கு ஒழுக்கநெறியானது பாட்டாளி வர்க்கத்தின் வர்க்கப் போராட்டத்தினுடைய நலன்களுக்குக் கீழ்ப்பட்டது ஆகும்.

இந்த வர்க்கப் போராட்டம் எதில் அடங்கியுள்ளது? ஜார் மன்னனை வீழ்த்தல், முதலாளிகளை வீழ்த்தல், முதலாளி வர்க்கத்தை ஒழித்தல் ஆகிய இவற்றில் அது அடங்கியுள்ளது.

பொதுவில் வர்க்கங்கள் என்பவை யாவை? சமுதாயத்தின் ஒரு பிரிவு மற்றொரு பிரிவின் உழைப்பை அபகரித்துக் கொள்ள வழி செய்பவையே வர்க்கங்கள். சமுதாயத்தின் ஒரு பிரிவு எல்லா நிலத்தையும் அபகரித்துக் கொள்ளுமாயின், நிலப்பிரபு வர்க்கமும் விவசாயி வர்க்கமும் இருக்கக் காண்கிறோம். சமுதாயத்தின் ஒரு பிரிவு ஆலைகள், பங்குகள், மூலதனம் இவற்றின் உடைமையாளனாய் இருந்து, மற்றொரு பிரிவு இந்த ஆலைகளில் வேலை செய்யும்படி ஏற்படுகையில் முதலாளி வர்க்கமும் பாட்டாளி வர்க்கமும் இருக்கக் காண்கிறோம்.

ஜாரை விரட்டுவது கடினமாய் இருக்கவில்லை—ஒரு சில நாட்களே தேவைப்பட்டன. நிலப்பிரபுக்களை விரட்டுவதும் அதிகக் கடினமாய் இருக்கவில்லை—ஒரு சில மாதங்களில் இது செய்யப்பட்டு விட்டது. முதலாளிகளை விரட்டுவதும் அதிகக் கடினமாய் இருக்கவில்லை. ஆனால் வர்க்கங்களை ஒழித்தல் இவற்றையெல்லாம்விட சொல்லமுடியாத அளவுக்கு மிகவும் கடினமாகும். தொழிலாளர்கள், விவசாயிகள் என்ற பிரிவினை இன்னமும் நம்மிடம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. விவசாயியை அவனுக்குரிய நிலத்தில் அமர்த்தியதும் அவன் உபரி தானியத்தை, அதாவது தனக்கோ தன் கால்நடைகளுக்கோ வேண்டியிராத தானியத்தை, ஏனைய மக்கள் உண்ண உணவின்றி திண்டாடும் போது தனக்கே உரித்தாக்கிக் கொள்வானாகில், அந்த விவசாயி சுரண்டலாளன் ஆகி விடுகிறான். தன் கையில் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகத் தானியத்தை வைத்துக் கொள்கிறானோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிக லாபம் கிடைக்கக் காண்கிறான். ஏனையோரைப் பொருத்த வரை அவர்கள் பட்டினி கிடக்கட்டுமே, ''பட்டினி அதிகமாக ஆகத் தானியத்தை இன்னும் அதிக விலைக்கு விற்க முடியுமே'' என்கிறான். பொதுவான ஒரே திட்டத்தின்படி எல்லோரும் பொது நிலங்களிலும்

பொது ஆலைகளிலும் பொது ஏற்பாட்டிற்கு ஏற்ப வேலை செய்ய வேண்டும். இப்படிப்பட்ட நிலையை அடைவது சுலபமா? ஜாரையும் நிலப்பிரபுக்களையும் முதலாளிகளையும் விரட்டுவது போல இது அவ்வளவு சுலபமல்ல என்பதைக் காண்கிறீர்கள். பாட்டாளி வர்க்கம் விவசாயிகளில் ஒரு பிரிவினருக்கு மறுகல்வியும் மறுபோதமும் அளித்தாக வேண்டியிருக்கிறது. பணக்கார விவசாயிகளாய் இருப் போரின், ஏனையோரது வறுமையையும் இல்லாமையையும் கொண்டு லாபமடிக்கும் இவ்விவசாயிகளின் எதிர்ப்பை நசுக்கும் பொருட்டு, பாட்டாளி வர்க்கம் உழைக்கும் விவசாயிகளைத் தன் பக்கத்துக்கு வரும்படி ஈர்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஜாரை வீழ்த்தி, நிலப்பிரபுக் களையும் முதலாளிகளையும் நாம் விரட்டியடித்ததுடன் பாட்டாளி வர்க்கப் போராட்டத்தின் பணி பூரணமாய் நிறைவு எய்தி விடவில்லை. இதை நிறைவுறச் செய்வதே நாம் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமென அழைக்கும் இந்த ஆட்சியமைப்பின் பணி.

வர்க்கப் போராட்டம் தொடர்ந்து நடைபெறுகிறது, அதன் வடிவங்கள் மட்டுமே மாறியிருக்கின்றன. பழைய சுரண்டலாளர்கள் திரும்பி வந்து விடாதபடி தடுப்பதற் காக, சிதறுண்டு கிடக்கும், அறிவொளியில்லாத விவசாயி வெகுஜனங்களை ஒரே கூட்டணியாய் ஒன்றுபடுத்துவதற் காக நடைபெறும் வர்க்கப் போராட்டம் இது. வர்க்கப் போராட்டம் தொடர்ந்து நடைபெறுகிறது, இந்தப் போ ர்ாட்டத்துக்கு எல்லா நலன்களையும் கீழ்ப்படச் செய்வதே நமது பணி. நமது கம்யூனிச ஒழுக்கநெறியும் இப்பணிக்குக் கீழ்ப்பட்டதுதான். பழைய சுரண்டல் சமுதாயத்தை அழிக்கவும், ஒரு புதிய கம்யூனிச சமுதாயத்தைக் கட்டிய மைக்கும் பாட்டாளி வர்க்கத்தை மையமாய்க் கொண்டு உழைப்பாளி மக்கள் அனைவரையும் ஒன்றுபடச் செய்யவும் உதவுவதே ஒழுக்கநெறி என்று கூறுகிறோம்.

இந்தப் போராட்டத்துக்கு உதவி புரிந்து உழைப்பாளி மக்களை எல்லா விதச் சுரண்டலையும் எதிர்த்து, சிறு சொத்துடைமை யாவற்றையும் எதிர்த்து ஒன்றுபடச்

பயின்று கொண்டாக வேண்டும்; ஏற்கெனவே செய்து முடிக்கப் பெற்றுள்ள பணியை ஒரு முன்னுதாரணமாய்க் கொண்டு தொழிலாளர்கள், விவசாயிகள் போதிக்கப்பட வேண்டும் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். மோசமாய் நடைபெற்றுள்ள வேலையை, வருங்காலத்தில் இதைத் தவிர்த்துக் கொள்ளும் பொருட்டு, நாம் சுட்டிக் காட்டியாக வேண்டும்.

கட்டுமானப் பணியை ஒரு முன்னுதாரணமாய்க் கொள்வதன் மூலமும், மீண்டும் மீண்டும் அதைச் செய்வதன் மூலமும், நாம் திறனில்லாத கம்யூனிஸ்டு நிர்வாகிகளை மெய்யான கட்டுமானிகளாய், முதலாவதாக நமது பொருளாதார வாழ்வின் கட்டுமானிகளாய் மாற்றுவதில் வெற்றி பெறுவோம். நாம் நமது இலக்குகளை ஈடேறச் செய்வோம்; பழைய அமைப்பிலிருந்து மரபுரிமையாய் நாம் பெற்றுக்கொண்டவையும், ஒரே அடியில் அகற்றப்பட முடியாதவையுமான முட்டுக்கட்டைகள் யாவற்றையும் நாம் வென்று முன்னேறிச் செல்வோம். வெகுஜனங்களுக்கு நாம் மறுகல்வி அளித்திடுவோம்; கிளர்ச்சி, பிரசாரம் இவற்றின் மூலமே வெகுஜனங்களுக்கு மறுகல்வி அளித்திட முடியும். முதலாவதாக, பொருளாதார வாழ்வு அனைத்தையும் கட்டியமைத்திடும் பணியில் வெகுஜனங்கள் ஈடுபடும்படி ஈர்க்கப்பட்டாக வேண்டும். இதுதான் ஒவ்வொரு கிளர்ச்சியாளர், பிரசாரகரது பணியின் தலையானதும் அடிப்படையானதுமாகிய நோக்கமாய் இருத்தல் வேண்டும். இதை அவர் உணருவாராயின், அவருடைய பணி வெற்றி பெறுவது உறுதியாகிவிடும். (பலத்த கையொலி முழக்கம்.)

அரசியல் கல்விப் பணித் துறையாளர்களது அனைத்து ருஷ்ய மாநாட்டின் (1920 நவம்பர் 1-8) செய்தியறிக்கை, *மாஸ்கோ*

நூல் திரட்டு, *தொகுதி 41, பக்கங்கள் 398-408*

# ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷிவிக்குகள்) பத்தாவது காங்கிரஸ் 1921 மார்ச் 8-16[69]

## கட்சி ஒற்றுமை குறித்து ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் பத்தாவது காங்கிரஸ் தீர்மானத்தின் ஆரம்ப நகல்

*1. கட்சி அணிகளது ஒற்றுமையும் ஒருமிப்பும்தான், கட்சி உறுப்பினர்களிடையே முழு நிறைப் பரஸ்பர நம்பிக்கைக்கும், பாட்டாளி வர்க்க முன்னணிப் படையினது சித்த ஒற்றுமையின் மெய் உருவாகத் திகழும் மெய்யான கூட்டுப் பணிக்கும் உத்திரவாதம் செய்கின்றன. பல நிலைமைகளின் காரணமாக நாட்டு மக்களது குட்டிமுதலாளித்துவப் பகுதியோரிடம் ஊசலாட்டம் அதிகரித்து வரும் தற்போதைய தருணத்தில் இவை மிகவும் முக்கிய அவசியமாகி விடுவதை இந்தக் காங்கிரஸ் கட்சி உறுப்பினர்கள் எல்லோரது கவனத்துக்கும் கொண்டு வருகிறது.*

*2. இருந்த போதிலும், தொழிற்சங்கங்கள் பற்றிய பொதுவான கட்சி விவாதத்திற்கு முன்பேகூட, கோஷ்டி மனப்பாங்கின் சிற்சில அறிகுறிகள்—அதாவது தனிக் கொள்கைத் திட்டங்களுடன் கூடிய கோஷ்டிகள் அமைக்கப்படுதலும், ஓரளவுக்குத் தனித்து விலகி தமது சொந்தக் கோஷ்டிக் கட்டுப்பாட்டை உருவாக்கிக் கொள்வதற்கான முயற்சிகளும்—புலப்படலாயின. உதாரணமாக, மாஸ்கோவில் கட்சி மாநாடு ஒன்றிலும் (1920 நவம்பர்), கார்கவில் கட்சி மாநாடு ஒன்றிலும் ''தொழிலாளர் எதிர்த்தரப்பு''[70] என்பதான கோஷ்டியாலும், ஓரளவுக்கு ''ஜனநாயக மையவாதம்''[71] என்பதான கோஷ்டியாலும் கோஷ்டி மனப்பாங்குக்கான இம்மாதிரியான அறிகுறிகள் வெளிப்படுத்தப்பட்டன.*

எந்த விதமான கோஷ்டி மனப்பாங்கும் தீமை விளைவிப்பதாகும், அனுமதிக்க முடியாததாகும் என்பதை வர்க்க உணர்வுள்ள எல்லாத் தொழிலாளர்களும் தெளிவாக உணர்ந்து கொண்டாக வேண்டும்; ஏனெனில், தனிப்பட்ட கோஷ்டிகளின் உறுப்பினர்கள் எவ்வளவுதான் கட்சியின் ஒற்றுமையைப் பாதுகாக்க விரும்பினாலும் கூட நடைமுறையில் கோஷ்டி மனப்பாங்கானது கூட்டுப் பணியைப் பலவீனப்படுத்துவதற்கும், ஆளும் கட்சிக்குள் ஊடுருவிக் கொண்டிருக்கும் கட்சி விரோதிகள் விரிசலை விரிவாக்கி அதனை எதிர்ப்புரட்சி நோக்கங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ளும் பொருட்டு மீண்டும் மீண்டும் கடும் பிரயத்தனங்களை மேற்கொள்வதற்கும்தான் தவிர்க்க முடியாதவாறு வழி வகுத்திடுகிறது.

கிஞ்சித்தும் முரணில்லாத கம்யூனிஸ்டுக் கொள்கையிலிருந்தான ஒவ்வொரு திரிபையும் பாட்டாளி வர்க்கத்தின் விரோதிகள் எப்படித் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பது, க்ரோன்ஷ்டாட் கலகத்தில்[72] மிகத் தெளிவாகவே தெரிந்தது. இக்கலகத்தின் போது, உலகின் எல்லா நாடுகளின் முதலாளித்துவ எதிர்ப்புரட்சியாளரும் வெள்ளைப் படையினரும்—ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை இவ்வழியில் தம்மால் வீழ்த்த மட்டும் முடியுமாயின்—சோவியத் அமைப்பின் கோஷங்களை ஏற்றுக் கொள்ளத் தயாரென்று தயக்கமின்றி அறிவித்தனர்; சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் பொதுவாக முதலாளித்துவ எதிர்ப்புரட்சியாளர்களும் சோவியத் ஆட்சியதிகாரத்தின் நலனுக்காகவே என்று பசப்பிக் கொண்டு ருஷ்யாவின் சோவியத் அரசாங்கத்துக்கு எதிராகக் கலகம் புரியுமாறு க்ரோன்ஷ்டாட்டில் கோஷங்கள் எழுப்பினர். ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கப் புரட்சியின் கோட்டையினைப் பலவீனப்படுத்த வேண்டும், அழித்திட வேண்டும் என்கிற ஒரே நோக்கத்துடன் வெள்ளைப் படையினர் கம்யூனிஸ்டுகளாகவும் மிகத் தீவிர இடதுசாரிக் கம்யூனிஸ்டுகளாகவும் கூட வேடம் பூண்டு கொள்ள முனைகிறார்கள், அவ்வாறே அவர்களால் பூண்டு கொள்ளவும் முடிகிறது என்

பதை இந்த உண்மைகள் முழு அளவுக்கு நிரூபிக்கின்றன. இதே போல மென்ஷிவிக்குகளும், கலகத்தை எதிர்ப்பவர்களாகவும், அவர்களது கூற்றுப்படி அற்பமானவையாகிய சில திருத்தங்கள் மட்டும் செய்யப்படுமாயின் சோவியத் ஆட்சியதிகாரத்தின் ஆதரவாளர்களாகவும் தம்மைக் கூறிக் கொண்டனர்; அதே போது மெய்ந்நடப்பில் க்ரோன்ஷ்டாட் கலகக்காரர்களேயும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களே யும் வெள்ளேப் படையினரையும் தூண்டி விட்டு ஆதரிக்கும் பொருட்டு, எப்படி அவர்கள் ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியில் உள்ள கருத்து வேறுபாடுகளேயும் கோஷ்டி மனப்பாங்கின் சிற்சில ஆரம்பக் குருத்துகளேயும் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர் என்பதை க்ரோன்ஷ்டாட் கலகத்தின் தறுவாயில் பெத்ரொகிராதில் வினியோகிக்கப்பட்ட மென்ஷிவிக்குத் துண்டுப் பிரசுரங்கள் தெளிவுபடுத்துகின்றன.

3. இந்தப் பிரச்சினே சம்பந்தமான பிரசாரமானது, ஒரு புறத்தில் கட்சி ஒற்றுமையின் கண்ணோட்டத்திலிருந்தும், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் வெற்றிக்குப் பாட்டாளி வர்க்க முன்னணிப் படையின் சித்த ஒற்றுமையைச் சாதிப்பது அடிப்படை நிபந்தனேயாகும் என்பதன் கண்ணோட்டத்திலிருந்தும், கோஷ்டி மனப்பாங்கு தீமை பயப்பதாகவும் அபாயம் விளேவிப்பதாகவும் இருத்தலே விரிவுபட விளக்குவதாய் அமைய வேண்டும்; மறு புறத்தில் சோவியத் ஆட்சியதிகாரத்தின் பகைவர்களது அண்மைக் காலத்திய செயல் தந்திர உத்திகளின் தனி இயல்புகளே விளக்குவதாய் அமைய வேண்டும். பகிரங்கமான வெள்ளேப் படைக் கொடியின் கீழ் நடைபெறும் எதிர்ப்புரட்சியில் நம்பிக்கைக்கு இடமில்லே என்பதை உணர்ந்து கொண்டு விட்ட இந்தப் பகைவர்கள் இப்பொழுது, ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியினுள் இருக்கும் கருத்து வேற்றுமைகளேப் பயன்படுத்திக் கொள்ளவும், சோவியத் ஆட்சியதிகாரத்தை அங்கீகரிக்கும் நிலேயினே வெகுவாய் நெருங்கி வந்துவிட்டதாய் வெளிப் பார்வைக்குத் தெரியும் ஓர் அரசியல் கோஷ்டியின் கைக்கு ஆட்சியதிகாரத்தை மாறச்

செய்வதன் மூலம் எப்படியாவது ஒரு வழியில் எதிர்ப்புரட்சியை ஓங்கச் செய்யவும் தம்மால் இயன்றது அனைத்தும் செய்கிறார்கள்.

பிரசாரமானது இதற்கு முன்பு நடைபெற்ற புரட்சிகளின் அனுபவங்களையும் விளக்கிக் கூற வேண்டும். அந்தப் புரட்சிகளில் தீவிரப் புரட்சிக் கட்சிக்கு மிக நெருங்கியதாய் அமைந்து எதிர்ப்புக் காட்டிய எதிர்த்தரப்புக்கு எதிர்ப்புரட்சியானது ஆதரவளித்து, புரட்சிகர சர்வாதிகாரத்துக்கு இதன் மூலம் குழி பறித்து அதைக் கவிழ்ப்பதற்கும், இவ்வாறு முடிவில் எதிர்ப்புரட்சியின்—முதலாளிகள், நிலப்பிரபுக்களின்—முழுநிறை வெற்றிக்கு வழி வகுப்பதற்கும் முனைந்து செயல்பட்டது.

4. கோஷ்டி மனப்பான்மைக்கு எதிரான நடைமுறைப் போராட்டத்தில் கட்சி நிறுவனம் ஒவ்வொன்றும் கோஷ்டிவாதச் செயல்கள் யாவற்றையும் தடுப்பதற்காகக் கண்டிப்பான நடவடிக்கைகள் எடுத்தாக வேண்டும். கட்சியின் குறைபாடுகளை விமர்சிப்பது முற்றிலும் அவசியமே; ஆனால் இந்த விமர்சனமானது நடைமுறை ஆலோசனை ஒவ்வொன்றும் கூடுமான அளவுக்கு மிகவும் துல்லியமாய் அமைந்த வடிவில் கட்சியின் வட்டார, மையத் தலைமை உறுப்புகளின் பரிசீலனைக்கும் தீர்மானத்துக்கும் தாமதமின்றி உடனே சமர்ப்பிக்கப்படும் விதத்தில் செய்யப்பட வேண்டும். தவிரவும் விமர்சனம் செய்யும் ஒவ்வொருவரும், கட்சியானது பகைவர்களது வளையத்தால் சூழப்பட்டிருக்கிற நிலையினைக் கணக்கில் எடுத்துக் கொள்ளும்படியான வடிவத்தில் தமது விமர்சனம் இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். மற்றும் கட்சி அல்லது தனிப்பட்ட கட்சி உறுப்பினர்களது தவறுகள் நடைமுறையில் திருத்தப்படுவதை அவர் நேரடியாக சோவியத், கட்சிப் பணியில் பங்கு கொள்வதன் மூலம் சரிபார்க்க முடியும்படியான விதத்தில் தமது விமர்சனத்தின் உள்ளடக்கம் இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். கட்சியின் பொதுக் கொள்கை வழி பற்றிய பகுத்தாய்வுகளும், கட்சியின் நடைமுறை அனுபவத்தின் மதிப்பீடுகளும், கட்சித் தீர்மானங்கள் செயலில் நிறை

வேற்றப்படுவதைச் சரிபார்த்திடலும், தவறுகளைத் திருத்துவதற்கான முறைகள் சம்பந்தமான ஆய்வுகளும், இன்னபிறவும் ''கொள்கைத் திட்டங்கள்'' முதலானவற்றின் அடிப்படையில் அமைந்த கோஷ்டிகளது பூர்வாங்க விவாதத்துக்கு எந்த நிலைமையிலும் சமர்ப்பிக்கப்படலாகாது; எல்லாச் சந்தர்ப்பங்களிலும் இவை கட்சியின் எல்லா உறுப்பினர்களது நேரடியான விவாதத்துக்கே சமர்ப்பிக்கப்பட வேண்டும். இதன் பொருட்டு **திஸ்குஸ்ஸியோன்னி லிஸ்தோக்**[73] சஞ்சிகையும் சிறப்பு வெளியீடுகளும் மேலும் முறையாக வெளியிடப்பட வேண்டுமென்றும், இவ்விதம் விமர்சனமானது அத்தியாவசிய விவகாரங்களில் ஒருமுகப்படும்படியும் பாட்டாளிகளது வர்க்க பகைவர்களுக்கு உதவும்படியான வடிவம் ஏற்காதவாறு அமையும்படியும் உறுதி செய்வதற்கு இடையறுது முயல வேண்டுமென்றும் இந்தக் காங்கிரஸ் ஆணையிடுகிறது.

5. சிண்டிக்கலிசத்தையும் அராஜகவாதத்தையும் நோக்கிச் சரியும் திரிபை (ஒரு தனித் தீர்மானத்தில்[74] இது பரிசீலிக்கப்படுகிறது) கோட்பாட்டு நிலையில் நிராகரித்து, இக்காங்கிரஸ் எல்லா விதமான கோஷ்டி மனப்பாங்கும் அறவே அகற்றப்படும்படி உறுதி செய்து கொள்ளும்படி மத்தியக் கமிட்டியைப் பணிக்கிறது. அதே நேரத்தில், உதாரணமாகத் ''தொழிலாளர் எதிர்த்தரப்பு'' என்பதான கோஷ்டி தனிக் கவனம் செலுத்தியுள்ள பிரச்சினைகள் சம்பந்தமான—பாட்டாளி வர்க்கமல்லாத, நம்பத்தகாத கூறுகளைக் கட்சியிலிருந்து களையெடுத்தல், அதிகாரவர்க்க நடைமுறைகளை எதிர்த்துப் போராடுதல், ஜனநாயகத்தையும் தொழிலாளர்களது முன்முயற்சியையும் வளர்த்திடல் போன்ற பிரச்சினைகள் சம்பந்தமான—நடைமுறை முன்மொழிவு ஒவ்வொன்றும் மிகுந்த கவனத்துடன் பரிசீலனை செய்யப்பட வேண்டுமென்றும் நடைமுறையில் சோதிக்கப்பட வேண்டுமென்றும் இக்காங்கிரஸ் அறிவிக்கிறது. பல்வேறு இடர்களின் காரணமாகவும் இந்தப் பிரச்சினைகள் குறித்து தேவையான எல்லா நடவடிக்கைகளையும் நாம் எடுத்தாகவில்லை என்பது கட்சிக்குத் தெரிந்திருக்க வேண்டும். நடை

முறைக்கு ஒவ்வாத, கோஷ்டி மனப்பாங்கு கொண்ட போலி விமர்சனத்தை இரக்கமின்றி நிராகரித்துவிட்டு, கட்சியானது அதே போதில் அதிகாரவர்க்கக் கேடுகளை எதிர்த்தும், ஜனநாயகத்தையும் முன்முயற்சியையும் விரிவுபடுத்துவதற்காகவும், கட்சி அணிகளுக்குள் ஊடுருவிக் கொண்டுவிட்ட கூறுகளை கண்டறிந்து, அம்பலப்படுத்தி, கட்சியிலிருந்து விலக்குவதற்காகவும், இன்ன பிறவற்றுக்காகவும் தன்னிடமுள்ள எல்லா சாதனங்களையும் கொண்டு இடையறாது தொடர்ந்து போராடும்—புதிய முறைகளைக் கையாண்டு பார்க்கும்.

6. ஆகவே இக்காங்கிரஸ் இந்த அல்லது அந்தக் கொள்கைத் திட்டத்தின் அடிப்படையில் நிறுவப் பெற்ற எல்லா கோஷ்டிகளும் (''தொழிலாளர் எதிர்த்தரப்புக்'' கோஷ்டி, ''ஜனநாயக மையத்துவக்'' கோஷ்டி முதலானவை) கலைக்கப்பட்டுவிட்டதாக அறிவிக்கிறது, விதிவிலக்கின்றி இவை யாவற்றையும் உடனடியாகக் கலையும்படி ஆணையிடுகிறது. காங்கிரசின் இந்தத் தீர்மானத்தைக் கடைப்பிடிக்கத் தவறுவோர் கட்சியிலிருந்து நிபந்தனையின்றி உடனே விலக்கப்பட வேண்டும்.

7. கட்சிக்குள்ளும் சோவியத் பணிகள் யாவற்றிலும் கண்டிப்பான கட்டுப்பாட்டை உறுதி செய்யும் பொருட்டும், எல்லா விதமான கோஷ்டி மனப்பான்மையையும் அகற்றிடுவதில் அதிகபட்ச ஒற்றுமையை உறுதி செய்து கொள்ளும் பொருட்டும், கட்டுப்பாடு மீறப்படும் அல்லது கோஷ்டி மனப்பான்மை புத்துயிர் ஊட்டப்பட்டோ சகித்துக் கொள்ளப்பட்டோ வரப்படும் சந்தர்ப்பங்களில் கட்சியிலிருந்து விலக்கப்படுதலும் அடங்கலாகக் கட்சித் தண்டனைகள் யாவற்றையும் கைக்கொள்வதற்கும், மத்தியக் கமிட்டி உறுப்பினர்களாக இருப்போரை வேட்பு உறுப்பினர்களது நிலைக்குத் தாழ்த்துவதற்கும், மிகவும் கடுமையான நடவடிக்கையாகக் கட்சியிலிருந்து அவர்களை வெளியேற்றுவதற்கும் மத்தியக் கமிட்டிக்கு இக்காங்கிரஸ் அதிகாரம் அளிக்கிறது. இத்தகைய கடுமையான நடவடிக்கையை மத்தியக் கமிட்டி உறுப்பினர்கள், மத்தியக் கமிட்டி

வேட்பு உறுப்பினர்கள், கண்காணிப்புக் கமிஷன் உறுப்பினர்கள் ஆகியோர் சம்பந்தமாய் எடுக்கப்படுவதற்குரிய ஓர் அவசிய நிபந்தனையாக மத்தியக் கமிட்டியின் முழுக் கூட்டம் கூட்டப் பெற்று மத்தியக் கமிட்டியின் வேட்பு உறுப்பினர்களும் கண்காணிப்புக் கமிஷனின் உறுப்பினர்களும் அதற்கு அழைக்கப்பட வேண்டும். கட்சியின் பொறுப்பு மிக்க தலைவர்களது இந்தப் பொது அவை, மத்தியக் கமிட்டியின் உறுப்பினர் ஒருவரை வேட்பு உறுப்பினரது நிலைக்குத் தாழ்த்துவதோ, கட்சியிலிருந்து விலக்குவதோ அவசியமென்று மூன்றில் இரு பங்கு பெரும்பான்மையின் பேரில் கருதுமாயின், இந்த நடவடிக்கை உடனே செயலாக்கப்பட வேண்டும்.[75]

*முதன்முதல் 1923ல்*
**புரொமேஷ்தர்** *சஞ்சிகை,*
*இதழ் 22ல் வெளிவந்தது*

**நூல் திரட்டு,**
*தொகுதி 43,*
*பக்கங்கள் 89-92*

## ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியினது (போல்ஷிவிக்குகள்) பத்தாவது அனைத்து ருஷ்ய மாநாடு 1921 மே 26-28[76]

### மாநாட்டின் முடிவில் நிகழ்த்திய சொற்பொழிவு 1921 மே 28

தோழர்களே, மிகச் சுருக்கமான உரையுடன் நான் முடித்துக் கொள்ளலாமென நினைக்கிறேன். உங்களுக்குத் தெரியும்—பொருளாதாரக் கொள்கை[77] குறித்து, கட்சி மையத்துக்கும் வட்டாரங்களுக்கும் இடையே, மற்றும் கட்சி ஊழியர்களுக்கும் எல்லா சோவியத்துகளின் ஊழியர்களுக்கும் இடையே, முழு அளவுக்குத் தெளிவு ஏற்படச் செய்ய வேண்டுமென்பதே அவசரமாய் நாங்கள் இந்த மாநாட்டைக் கூட்டியதன் பிரதான நோக்கம். இந்தப் பணியை இம்மாநாடு ஐயப்பாட்டுக்கு இடமின்றி நிறைவேற்றி முடித்திருப்பதாக நான் கருதுகிறேன். பத்தாவது கட்சிக் காங்கிரசால் வகுக்கப்பட்டு, பிற்பாடு அரசாணைகள் மூலமும் தீர்மானங்கள் மூலமும் மேலும் உறுதி செய்யப்பட்டுள்ள இந்தக் கொள்கையானது நீண்டதொரு காலத்துக்குரிய கொள்கையாக முழு மனதுடன் கட்சியால் சந்தேகத்துக்கு இடமின்றி ஏற்றுக் கொள்ளப்படுகிறது என்றும், இவ்வுண்மை குறித்து எல்லா ஐயங்களையும் விட்டொழிக்க வேண்டும் என்றும் தோழர் ஒசீன்ஸ்கி கூறினர். அவர் இவ்வாறு கூறியதன் மூலம், வட்டாரங்களைச் சேர்ந்த கட்சி ஊழியர்களில் மிகப் பலரின் உணர்ச்சிகளை—பெரும்பாலோரின் உணர்ச்சிகளை என்றும் சொல்லலாம்—முற்றிலும் சரியானபடி வெளிப்படுத்தினர் என்று, இங்கு பேசிய தோழர்கள் சிலர் குறிப்பிட்டனர். இதையேதான் இந்த மாநாடு மிகவும் எடுப்பான முறையில் வெளிப்படச் செய்தது, பல விவரங்களையும் கொண்டு விரிவுபடுத்திற்று.

தோழர்கள் அவர்களது வட்டாரங்களுக்குத் திரும்பிச் சென்றதும், தவருன விளக்கத்துக்குச் சிறிதும் இடம் இல்லாமற் போகும். பல ஆண்டுக் காலத்துக்குக் கடைப்பிடிப்பதற்குரிய ஒரு கொள்கையை ஏற்றுக் கொள்ளும் போது, சர்வதேசப் புரட்சியாலும் அதன் வளர்ச்சி வேகத்தாலும் அதன் சூழ்நிலைமைகளாலும் யாவும் மாற்றப்பட்டு விடலாம் என்பதை நாம் கணமும் மறந்துவிடாமல்தான் இருக்கிறோம். தற்காலிகமானதே, உறுதியற்றதே எனினும் எப்படியும் சமநிலையே ஆன ஒரு வகைச் சமநிலை நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது—தற்போதுள்ள சர்வதேச நிலைமை இவ்வாருனதாய் இருக்கிறது. ஏகாதிபத்திய அரசுகள் சோவியத் ருஷ்யாவின் மீது எவ்வளவுதான் வெறுப்பு கொண்டிருந்த போதிலும், அதன் மேல் பாய வேண்டுமென்று அவை எவ்வளவுதான் ஆசைப்பட்ட போதிலும், இந்த எண்ணத்தை ஒதுக்கி வைக்கும்படி அவற்றைப் பலவந்தம் செய்யும்படியான ஒரு வகை சமநிலை நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்னவென்ருல், முதலாளித்துவ உலகின் சிதைவு இடையருது மேலும் மேலும் அதிகரித்துச் செல்கிறது, ஒற்றுமை மேலும் மேலும் குறைந்து வருகிறது, அதே போது நூறு கோடிக்கு மேற்பட்ட மக்களைக் கொண்ட ஒடுக்கப்பட்ட காலனி நாடுகளைச் சேர்ந்த சக்திகளது தாக்குதல் ஆண்டுக்கு ஆண்டு, மாதத்துக்கு மாதம், ஏன் வாரத்துக்கு வாரம் கூட மேலும் மேலும் கடுமையாகி வருகிறது. ஆனுல் இங்கே நாம் ஊகங்களில் இறங்கலாகாது. நமது பொருளாதாரக் கொள்கை மூலமாகத்தான் தற்போது சர்வதேசப் புரட்சியின் மீது நமது பிரதான செல்வாக்கு செயல்பட்டு வருகிறது. எல்லா நாடுகளின் உழைப்பாளி மக்களது பார்வையும் விதிவிலக்கின்றி ருஷ்யாவின் சோவியத் குடியரசின் மீதுதான் படிந்திருக்கிறது என்ருல் அது மிகையல்ல. அந்த அளவு சாதனை பெறப்பட்டிருக்கிறது. முதலாளிகளால் எதையும் மூடவோ மறைக்கவோ முடியாது. எனவேதான் அவர்கள் அத்தனை ஆர்வமோடு நமது பொருளாதாரத் தவறு ஒவ்வொன்றையும், நமது ஒவ்வொரு பலவீனத்தையும் வரவேற்கிருர்கள். இந்தத்

துறையிலான போராட்டம் இப்போது உலகு அளாவிய தாகி விட்டது. இந்தப் பணியை நாம் நிறைவேற்றுவோமாயின், சர்வதேச அளவில் நிச்சயமாகவும் இறுதியாகவும் வெற்றி பெற்றவர்களாகி விடுவோம். ஆதலால்தான் பொருளாதார வளர்ச்சி பற்றிய பிரச்சினைகள் நமக்குத் தலையாய முக்கியத்துவம் வாய்ந்தனவாய் இருக்கின்றன. இந்த முனையில் மெதுவாக, படிப்படியாக—வேகமாய் நடைபெறுவது சாத்தியமன்று—ஆனால் பிறழாத வளர்ச்சி கண்டு, முன்னேறிச் செல்வதன் மூலம் நாம் வெற்றியை வந்தடைந்தாக வேண்டும். நமது மாநாடு செய்திருக்கும் வேலைகளின் விளைவாய் நாம் இந்தக் குறிக்கோளை எந்த நிலைமையிலும் நிச்சயம் அடைவோமெனத் தோன்றுகிறது எனக்கு. (கையொலி முழக்கம்.)

*1921 ஜூன் 2ல்*
**பிராவ்தா,** *இதழ் 119ல்*
*வெளிவந்தது*

**நூல் திரட்டு,**
*தொகுதி 43,*
*பக்கங்கள் 340-341*

## கம்யூனிஸ்டு அகிலத்தின் மூன்றுவது காங்கிரஸ்
## 1921 ஜூன் 22—ஜூலை 12[78]

### ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியினது போர்த்தந்திரம் பற்றிய உரைக்கான ஆய்வுரைகள்

#### 1. ரு. சோ. சோ. கூ. குடியரசின் சர்வதேச நிலைமை

ருஷ்யாவின் சோவியத் சோஷலிசக் கூட்டாட்சிக் குடியரசின் சர்வதேச நிலைமையானது தற்போது ஒருவிதச் சமநிலையால் சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சமநிலை மிதமிஞ்சி உறுதியற்றதாக இருப்பினும் உலக அரசியலில் விசேஷமான ஒரு நிலைவரத்தை உண்டாக்கியுள்ளது.

இந்த விசேஷ நிலைவரம் வருமாறு: ஒரு புறத்தில் சர்வதேச முதலாளித்துவ வர்க்கம் சோவியத் ருஷ்யாவிடம் மூர்க்கத்தனமான வெறுப்பும் பகைமையும் கொண்டிருக்கிறது, அதன் மென்னியைப் பிடித்து நெரிப்பதற்காக எத்தருணத்திலும் அதன் மீது பாய்வதற்குத் தயாராய் இருக்கிறது. மறு புறத்தில் இராணுவத் தலையீட்டுக்கான எல்லா முயற்சிகளும், சர்வதேச முதலாளித்துவ வர்க்கம் பத்துக் கோடிக் கணக்கிலான பிராங்குகளைச் செலவிட நேர்ந்திருக்கும் இந்த எல்லா முயற்சிகளும், படுதோல்வி யடைந்தன—சோவியத் ஆட்சியதிகாரம் தற்போது இருப்பதைக் காட்டிலும் அப்போது இன்னும் அதிகமாகப் பலவீன மாகவே இருந்ததென்ற போதிலும், ரு.சோ.சோ.கூ. குடியரசின் பிரதேசத்தில் ருஷ்ய நிலப்பிரபுக்களும் முதலாளிகளும் பெருஞ் சேனைகளை உடையோராய் இருந்த போதிலும், இம்முயற்சிகள் படுதோல்வியிலே முடிவுற்றன. சோவியத் ருஷ்யாவுக்கு எதிரான யுத்தத்துக்கு முதலாளித்துவ நாடுகள் யாவற்றிலும் எதிர்ப்பு வெகுவாய் வளர்ந்து, பாட்டாளி வர்க்கத்தின் புரட்சி இயக்கத்துக்கு மேலும் தூபமிட்டும், குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகளின்

மிக விரிவான பகுதிகளுக்குப் பரவியும் வந்திருக்கிறது. பல்வேறு ஏகாதிபத்திய நாடுகளது நலன்களுக்கு இடையிலான மோதல் கடுமையாகியுள்ளதுடன், நாளுக்கு நாள் மேலும் மேலும் கடுமையாகி வருகின்றது. கிழக்கத்திய நாடுகளின் கோடானு கோடியான ஒடுக்கப்பட்ட மக்களது புரட்சி இயக்கம் குறிப்பிடத்தக்க வலிமை பெற்று வளர்ந்து வருகிறது. இந்த எல்லா நிலைமைகளின் விளைவு என்னவெனில், சர்வதேச ஏகாதிபத்தியம்—அது மிகவும் கூடுதலான பலம் படைத்திருப்பினும்—சோவியத் ருஷ்யாவின் மென்னியை நெரித்திட முடியாமற் போய், சோவியத் ருஷ்யாவுக்குத் தற்காலிகமாய் அங்கீகாரம் அல்லது பகுதியளவிலான அங்கீகாரம் அளிக்கும்படியும் அதனுடன் வாணிப ஒப்பந்தங்கள் செய்து கொள்ளும்படியும் நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதம் ஒரு சமநிலை ஏற்பட்டிருக்கிறது. சிறிதும் உறுதியற்றதுதான், எந்நேரத்திலும் தகர்ந்துவிடக் கூடியதுதான் என்ற போதிலும் இந்தச் சமநிலையானது சோவியத் குடியரசை முதலாளித்துவ வளையத்துக்குள்—அதிக காலத்துக்கு அல்லவென்பது மெய்தான்—அடைபட்டு நிலவ முடியும்படிச் செய்கிறது.

## 2. சர்வதேச அளவில் வர்க்க சக்திகளது பரஸ்பர உறவுநிலை

இந்த நிலவரம் வர்க்க சக்திகளது பின்வரும் சர்வதேச உறவுநிலையைத் தோற்றுவித்திருக்கிறது.

சோவியத் ருஷ்யாவை எதிர்த்துப் பகிரங்க யுத்தம் புரிய வாய்ப்பு இல்லாதவாறு தடுக்கப்பட்டிருக்கும் சர்வதேச முதலாளித்துவ வர்க்கம் திரும்பவும் யுத்தத்தை மேற்கோள்வதற்கு நிலைமைகள் அனுமதிக்கும்படியான தருணம் எப்போது வருமென்று காத்துக் கொண்டும் கவனித்துக் கொண்டும் இருக்கிறது.

முன்னேறிய முதலாளித்துவ நாடுகள் யாவற்றிலும் பாட்டாளி வர்க்கம் ஏற்கெனவே தனது முன்னணிப் படை

யினே, அதாவது கம்யூனிஸ்டுக் கட்சிகளே நிறுவிக் கொண்டு விட்டது. இந்தக் கட்சிகள் வளர்ந்து வருகின்றன, ஒவ்வொரு நாட்டிலும் பாட்டாளி வர்க்கத்தாரில் பெரும்பான்மையினரை கவர்ந்து இழுத்துக் கொள்வதை நோக்கியும், பழைய தொழிற்சங்க அதிகாரவர்க்கத்தாரது செல்வாக்கையும் ஏகாதிபத்தியத் தனியுரிமைகளால் சீரழிக்கப்பட்டுள்ள அமெரிக்க, ஐரோப்பியத் தொழிலாளி வர்க்க மேற்படிவத்தினரது செல்வாக்கையும் அழித்திடுவதை நோக்கியும் இடையருது முன்னேறி வருகின்றன.

முதலாளித்துவ நாடுகளில் குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகளேத் தான்—இவர்களது முன்னணிப் பிரிவினர் இரண்டாவது, இரண்டரையாவது அகிலங்களால் பிரதிநிதித்துவம் செய்யப்படுகிருர்கள்—இன்று முதலாளித்துவம் தனது பிரதான ஆதாரமாகப் பயன்படுத்தி வருகிறது; ஏனெனில் இவர்கள், ஏகாதிபத்தியத்துக்குள்ள தனியுரிமைகளால் உண்டாக்கப் பெற்ற ஒப்பளவிலான குட்டிமுதலாளித்துவ சுபிட்சத்தைப் புரட்சி மூளுமாயின் தாம் இழக்க நேருமென அஞ்சும் தொழில் துறை, வாணிபத் துறைத் தொழிலாளர்கள், அலுவலகச் சிப்பந்திகளில் பெரும்பான்மையோர் அல்லது கணிசப் பகுதியோர் இடத்தே செல்வாக்குடையோராக இருப்பவர்கள். ஆனுல் வளர்ந்து வரும் பொருளாதார நெருக்கடியானது எங்கும் மக்களது விரிவான பகுதியோருடைய நிலேமைகளே மோசமாக்கிச் செல்கிறது. இதுவும், முதலாளித்துவம் ஒழிக்கப்படவில்லேயாகுல் புதிய ஏகாதிபத்திய யுத்தங்கள் தவிர்க்க முடியாதபடி மூளும் அபாயமும் இந்தப் பிரதான ஆதாரத்தைத் தொடர்ந்து மேன்மேலும் பலவீனமாக்கி வருகின்றன.

உலக மக்கட் தொகையில் மிகப் பெருவாரியானேராய் இருக்கும் காலனி, அரைக் காலானி நாடுகளது உழைப்பாளி வெகுஜனங்கள் இருபதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில், குறிப்பாய் ருஷ்யாவிலும் துருக்கியிலும் பாரசீகத்திலும் சீனுவிலுமான புரட்சிகளால் அரசியல் உயிர்ப்பு பெறும்படி தட்டியெழுப்பப்பட்டிருக்கிருர்கள். இரண்டாவது, இரண்டரையாவது அகிலங்களின்[79] தலேவர்களும்

உட்பட ஐரோப்பாவையும், அமெரிக்காவையும் சேர்ந்த கல்வியறிவு படைத்த அற்பவாதிகள் இதைப் பார்ப்பதற்குப் பிடிவாதமாய் மறுத்த போதிலும், உலக அரசியலிலும் ஏகாதிபத்தியம் புரட்சிகரமாய் அழிக்கப்படுவதிலும் இந்த வெகுஜனங்கள் செயலூக்கங் கொண்ட காரணக் கூருக மாற்றப்படும் வளர்ச்சிப் போக்கினை 1914-18ஆம் ஆண்டுகளின் ஏகாதிபத்திய யுத்தமும் ருஷ்யாவிலான சோவியத் ஆட்சியதிகாரமும் நிறைவு பெறச் செய்து வருகின்றன. இந்நாடுகளில் தலையாயது பிரிட்டிஷ் இந்தியா. அங்கே ஒரு புறத்தில் தொழில் துறை, ரயில்வேப் பாட்டாளி வர்க்கத்தின் வளர்ச்சியையும், மறுபுறத்தில் பிரிட்டிஷாரது மிருகத்தனமான பயங்கரம் அதிகமாவதையும் தொடர்ந்து அதே விகிதத்தில் புரட்சியும் முதிர்ச்சியடைந்து வருகிறது—மேலும் மேலும் கூடுதலான அளவில் பிரிட்டிஷார் அடிக்கடி அங்கே படுகொலைகளிலும் (அமிர்தசரஸ்[80]), பொதுக் கசையடிகளிலும் இன்ன பிறவற்றிலும் இறங்குகிருர்கள்.

### 3. ருஷ்யாவில் வர்க்க சக்திகளது பரஸ்பர உறவுநிலை

சோவியத் ருஷ்யாவின் உள்நாட்டு அரசியல் நிலைமையானது பின்வரும் உண்மையால் நிர்ணயிக்கப்படுகிறது: வரலாற்றிலே முதன் முறையாய் இங்கே, கடந்த பல ஆண்டுகளாய் இரண்டு வர்க்கங்கள் மட்டுமே இருந்துள்ளன— பாட்டாளி வர்க்கம், மிகவும் இளையதாயினும் நவீனமான பெருவீத இயந்திரத் தொழில் துறையில் பல பத்தாண்டுகளாகப் பயிற்சி பெற்றது; சிறு விவசாயிகள், தேச மக்கள் தொகையில் மிகப் பெருவாரியானேராய் இருப்பவர்கள்.

ருஷ்யாவில் பெரிய நிலப்பிரபுக்களும் முதலாளிகளும் மறைந்துவிடவில்லை, ஆனுல் இவர்கள் முழுநிறை உடைமை நீக்கத்துக்கு உள்ளாக்கப்பட்டு வர்க்கமென்ற முறையில் அரசியல் வழியில் நசுக்கப்பட்டிருக்கிருர்கள், மிச்ச சொச்ச

மாய் இருப்போர் சோவியத் அரசின் சிப்பந்திகளிடையே ஒளிந்து கொண்டிருக்கிறுர்கள். குடிபெயர்ந்தோராய் வெளி நாடுகளில் இவர்கள் தமது வர்க்க நிறுவனத்தை அழியாது பாதுகாத்துக் கொண்டுள்ளனர்—எண்ணிக்கையில் இவர்கள் சுமார் 15, 00, 000 முதல் 20,00,000 வரை இருக்கலாம், முதலாளித்துவ, ''சோஷலிஸ்டு'' (அதாவது, குட்டி முதலாளித்துவக்) கட்சிகள் யாவற்றுக்குமாகச் சேர்ந்து 50க்கு மேற்பட்ட நாளேடுகளேயும் பழைய சேனையின் மீத மிச்சங்களேயும் பெற்றிருக்கிறுர்கள், சர்வதேச முதலாளித்துவ வர்க்கத்தாருடன் எண்ணற்ற பிணைப்புகள் கொண்டிருக்கிறுர்கள். நாட்டை விட்டுக் குடிபெயர்ந்தவர்களாகிய இவர்கள் சோவியத் ஆட்சியதிகாரத்தை ஒழிப்பதற்காகவும் ருஷ்யாவில் முதலாளித்துவத்தை மீட்டமைப்பதற்காகவும் முழு மூச்சுடன் பாடுபட்டு வருகிறுர்கள்.

### 4. ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கமும் விவசாயிகளும்

ருஷ்யாவில் உள்நாட்டு நிலேமை இவ்வாறு இருப்பதால், ஆளும் வர்க்கம் என்ற முறையில் அதன் பாட்டாளி வர்க்கத்தைத் தற்போது எதிர்நோக்கும் பிரதான பணி, விவசாயிகளுக்குத் தலேமை தாங்கி வழிநடத்தி, அவர்களுடன் உறுதியான கூட்டணியை நிறுவி, வரிசையாய் அமைந்த படிப்படியான கட்டங்களின் வாயிலாக, சமூகமயமானதும் இயந்திரமயமானதும் ஆகிய பெருவீத விவசாயத்துக்கான மாற்றத்தை நடந்தேறச் செய்வதற்குத் தேவையான நடவடிக்கைகளே நிர்ணயித்து அவற்றை நிறைவேற்றுவதுதான். குறிப்பாய் ருஷ்யாவில் இது கடினமான ஒரு பணியாகும். ருஷ்யாவின் பின்தங்கிய நிலேயும், மற்றும் ஏழு ஆண்டுகளாக ஏகாதிபத்திய யுத்தமும் உள்நாட்டு யுத்தமும் நடைபெற்றதன் விளேவாய் நாடு அளவுகடந்த அழிவுக்கு உள்ளாகியுள்ள நிலேயும் இதற்குக் காரணமாகும். ஆனுல் இந்தப் பிரத்தியேக நிலேமைகளே அன்னியில், இது சோஷலிசக் கட்டுமானத்தின் மிகவும் கடினமான பணிகளில்

ஒன்றாய் முதலாளித்துவ நாடுகள் யாவற்றையுமே எதிர் நோக்கும். இதற்கு ஒரேயொரு விதிவிலக்காய், பிரிட்டனை வேண்டுமானால் குறிப்பிடலாம். ஆயினும் பிரிட்டன் சம்பந்தமாகவுங்கூட, சிறிய குத்தகை விவசாயிகள் மிகச் சிறிய வர்க்கமாகவே இருந்த போதிலும், பிரிட்டனுடைய காலனி ''உடைமைகளில்'' நூறு கோடிக் கணக்கிலான மக்கள் அப்பட்டமாகவே அடிமைப்படுத்தப் பட்டிருக் கும் காரணத்தால் பிரிட்டனில் குட்டி முதலாளித்துவ வாழ்க்கைத் தரத்தை அனுபவிக்கும் தொழிலாளர்கள், அலுவலகச் சிப்பந்திகளது சதவீதம் மிக மிக அதிகம் என்பதை மறக்கலாகாது.

ஆகவே, ஒரே நிகழ்ச்சிப் போக்காய் உலகப் பாட்டாளி வர்க்கப் புரட்சி கண்டு வரும் வளர்ச்சியின் கண்ணோட்டத் தில், ருஷ்யா கடந்து கொண்டிருக்கும் இந்தச் சகாப்தமா னது, ஆட்சியதிகாரம் வகிக்கும் பாட்டாளி வர்க்கம் குட்டி முதலாளித்துவப் பெருந்திரளினர் பால் அனுசரிக்கும் கொள்கையின் நடைமுறைச் சோதனையாகவும் மெய்ப்பிப் பாகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது.

### 5. ரு. சோ. சோ. கூ. குடியரசில் பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்கும் இடையிலான இராணுவக் கூட்டணி

சோவியத் ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கத்துக்கும் விவ சாயிகளுக்குமிடையே ஒழுங்கான உறவுகளுக்குரிய அடித் தளம் 1917க்கும் 1921க்கும் இடையிலான காலத்தில் கட்டியமைக்கப்பட்டதாகும், அப்போது அனைத்து உலகின் முதலாளித்துவ வர்க்கத்தாராலும் எல்லாக் குட்டி முத லாளித்துவ ஜனநாயகக் கட்சிகளாலும் (சோஷலிஸ்டு-புரட்சியாளர்களாலும் மென்ஷிவிக்குகளாலும்) ஆதரிக்கப் பட்டு முதலாளிகளும் நிலப்பிரபுக்களும் நடத்திய படை யெடுப்பானது சோவியத் ஆட்சியதிகாரத்தைப் பாதுகாப் பதற்காகப் பாட்டாளி வர்க்கத்தையும் விவசாயிகளையும் இராணுவக் கூட்டணியை நிறுவி ஒப்பமிட்டு முத்திரை

பதித்து உறுதியாக்கிக் கொள்ளச் செய்தது. வர்க்கப் போராட்டத்தின் மிகமிகக் கடுமையான வடிவமே உள் நாட்டு யுத்தம். இந்த உள்நாட்டு யுத்தம் எவ்வளவுக்கு எவ்வளவு கடுமையாகிறதோ, அவ்வளவுக்கு அவ் வளவு விரைவாகக் குட்டி முதலாளித்துவப் பிரமைகள் யாவற்றையும் அதன் தீ சுட்டெரிக்கிறது; அவ்வளவுக்கு அவ்வளவு தெளிவாய் அனுபவமானது விவசாயிகளது மிக வும் பிற்பட்ட வகுப்பாருக்குங்கூட பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் ஒன்றுல் மட்டுமே தம்மைப் பாதுகாக்க முடியுமென்பதையும், சோஷலிஸ்டு - புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் உண்மையில் நிலப்பிரபுக்களுக்கும் முதலாளிகளுக்கும் தொண்டூழியம் புரிவோரே ஆவரென் பதையும் நிரூபித்துக் காட்டுகிறது.

பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்கும் இடை யிலான இராணுவக் கூட்டணியே அவர்களது உறுதியான கூட்டணிக்குரிய முதல் நிலே வடிவமாக இருந்தது, இன்றி யமையாதவாறு இருக்கவும் வேண்டியிருந்தது என்றுலும், இரு வர்க்கங்களுக்குமிடையே பொருளாதாரக் கூட்டணி இல்லாமற் போயிருந்தால் ஒரு சில வாரங்களுக்குங்கூட அதை நிலேக்கச் செய்திருக்க முடியாது. தொழிலாளர்களது அரசிடமிருந்து விவசாயிகள் எல்லா நிலங்களேயும் பெற்ற னர், நிலப்பிரபுக்களேயும் குலாக்குகளேயும் எதிர்த்து நிற் பதற்கு அவர்களுக்குப் பாதுகாப்பு தரப்பட்டது; தொழி லாளர்கள் பெருவீதத் தொழில் துறை மீட்டமைக்கப்படும் வரைக் கடனுக விவசாயிகளிடமிருந்து உணவுப் பொருள் களேப் பெற்று வந்துள்ளனர்.

### 6. பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்கும் இடையே ஒழுங்கான பொருளாதார உறவுகளுக்கு மாறிச் செல்லுதல்

போக்குவரத்தும் பெருவீதத் தொழில் துறையும் முழு அளவுக்கு மீட்டமைக்கப்படுவதன் மூலம் தொழிலாளி வர்க்கமானது உணவுப் பண்டங்களுக்குப் பரிவர்த்தனேயாக

விவசாயிகளுக்கு அவர்களது சொந்த உபயோகத்துக்கும் மற்றும் அவர்களது பண்ணைகளது மேம்பாட்டுக்கும் தேவையான எல்லாப் பண்டங்களையும் அளிக்க வல்லதாகும் போது தான் சோஷலிச நோக்குநிலையிலிருந்து சிறு விவசாயிகளுக்கும் பாட்டாளி வர்க்கத்துக்கும் இடையிலான கூட்டணி ஒழுங்கானதும் நிலையானதும் ஆக முடியும். பாழ்பட்ட நிலையில் இருக்கும் நாட்டில் இதனை உடனே சாதிப்பது முடியாத காரியம். போதுமான அளவுக்கு ஒழுங்கமைக்கப் படாத அரசு, நிலப்பிரபுக்களுக்கு எதிரான நம்ப முடியாத அளவுக்கு உக்கிரமான யுத்தத்தில் தன்னை நிலைநாட்டிக் கொள்வதற்கு இருக்கக் கூடிய சிறந்த முறை உபரியை வசூலித்துக் கொள்வதுதான். ஏற்கெனவே கடுமையாய் இருந்த விவசாயிகளது இன்னல்கள் 1920ல் விளைச்சல் தவறியதாலும் தீவனம் பற்றாக்குறையானதாலும் மேலும் அதிகமாயின, பண்ட வடிவிலான வரிக்கு உடனடியாக மாறிச் செல்வது அவசர அவசியமாகியது.

மிதமான பண்ட வடிவ வரி உடனே விவசாயிகளது நிலைமையினைப் பெரிய அளவில் மேம்படச் செய்யும், அதே போது சாகுபடிப் பரப்பை அதிகரிக்கும்படியும் சாகுபடி முறைகளை மேம்படும்படியும் செய்யும்.

பண்ட வடிவ வரியானது, விவசாயிகளது உபரி தானியம் அனைத்தையும் வசூலித்துக் கொள்வதிலிருந்து தொழில் துறைக்கும் விவசாயத் துறைக்குமிடையே சோஷலிச வழியிலான, முறையான பண்டப் பரிவர்த்தனை நடைபெறுவதற்கு மாறிச் செல்வதைக் குறிப்பதாகும்.

### 7. சோவியத் அரசாங்கம் எந்நிலைமைகளில் முதலாளித்துவத்துக்கும் சலுகைகளுக்கும் அனுமதியளிக்கலாம் என்பதும், இப்படி அனுமதியளிப்பதன் உட்பொருளும்

இயற்கையாகவே பண்ட வடிவ வரி என்பது, வரி போகத் தம்மிடம் எஞ்சும் உபரிப் பொருள்களை விவசாயி தம் விருப்பப்படி பட்டுவாடா செய்வதற்குச் சுதந்திரம்

பெறுவதையே குறிக்கிறது. விவசாயி வைத்திருக்கும் உபரி அனேத்துக்கும் பரிவர்த்தனேயாக அரசால் சோஷலிச ஆலே களிலிருந்து பண்டங்களே அளித்திட முடியவில்லே என் பதால், இந்த உபரியைக் கொண்டு வாணிபம் புரிவதற்கான சுதந்திரம் தவிர்க்க இயலாதவாறு முதலாளித்துவம் வளர் வதற்கான சுதந்திரத்தையே குறிக்கிறது.

ஆனுல் போக்குவரத்தும் பெருவீதத் தொழில் துறை யும் பாட்டாளி வர்க்கத்தின் கைகளில் இருக்கும் வரையில், இது இங்கு சுட்டிக்காட்டபடும் வரம்புகளுக்குள், எவ்விதத் திலும் சோஷலிசத்துக்கு அபாயகரமானது அன்று. மாருக, பாட்டாளி வர்க்க அரசால் கண்காணிக்கப்பட்டும் ஒழுங் கியக்கப்பட்டும் முதலாளித்துவம் வளர்வதானது (அதா வது, ''அரசு'' முதலாளித்துவம்—இத்தொடரின் இந்த அர்த்தத்தில்—வளர்வதானது), மிதமிஞ்சிய நாசத்துக்கு உள்ளாகியுள்ள நாடாகிய சிறு விவசாயிகளது பிற்பட்ட நாட்டுக்கு அனுகூலமானதும் அவசியமானதும் ஆகும் (குறிப் பிட்ட வரம்புகளுக்கு உட்பட்டே என்பதைக் கூறத் தேவை யில்லே), எப்படியெனில் விவசாயிகளது வேளாண்மை உடனடியாகப் புத்துயிர் பெறுவதை இந்த வளர்ச்சி துரிதப் படுத்த வல்லதாய் இருக்கின்றது. சலுகைகளுக்கு இது இன்னுங்கூட அதிக அளவுக்குப் பொருந்துவதாகும்: நாட்டு டைமையான எதையும் தனியுடைமை ஆக்காமல், தொழி லாளர்களது அரசு சிற்சில சுரங்கங்களேயும் வனப் பரப்பு களேயும் எண்ணெய் வயல்களேயும் பிறவற்றையும் அந்நிய முதலாளிகளிடம் குத்தகைக்கு விடுகிறது; சோவியத் பெரு வீதத் தொழில் துறை மீட்டமைக்கப்படுவதைத் துரிதப் படுத்துவதற்கு நமக்கு உதவக்கூடிய இயந்திர சாதனங்களே யும் பொறிகளேயும் கூடுதலாய் இவர்களிடமிருந்து பெறும் பொருட்டு இதைச் செய்கிறது.

உற்பத்தி செய்யப்படும் உயர் மதிப்புள்ள பண்டங் களில் ஒரு பங்கின் வடிவில் சலுகையாளர்களுக்குச் செலுத் தப்படும் தொகையானது சந்தேகத்துக்கு இடமின்றி கப் பமே ஆகும், தொழிலாளர்களது அரசு உலக முதலாளித் துவ வர்க்கத்துக்குக் கட்டும் கப்பமே ஆகும். இதை நாம்

எவ்வகையிலும் மூடிமறைக்க வேண்டியதில்லை, இந்தக் கப்பம் நமது பெருவீதத் தொழில் துறை மீட்டமைக்கப் படுவதைத் துரிதப்படுத்தியும் தொழிலாளர்கள், விவசாயி களது நிலையைக் கணிச அளவுக்கு மேம்படுத்தியும் வரும் வரை இதைக் கட்டுவதன் மூலம் நாம் ஆதாயமடைவோரே ஆவோம் என்பதைத் தெளிவாய் உணர்ந்து கொள்ள வேண் டும்.

### 8. நமது உணவுக் கொள்கையின் வெற்றி

*1917-21ல் சோவியத் ருஷ்யா பின்பற்றிய உணவுக் கொள்கை சந்தேகத்துக்கு இடமின்றி சிறிதும் நயமற்றதா கவும் மிகவும் குறைபாடானதாகவுமே இருந்தது, பல கேடுகளையும் விளைவித்தது. அதைச் செயல்படுத்துகையில் தவறுகள் பலவும் இழைக்கப்பட்டன. ஆனால் மொத்தத் தில் அக்காலத்திய நிலைமைகளில் அது ஒன்று மட்டுமே சாத்தியமான கொள்கையாக இருந்தது. தவிரவும் அதற் குரிய வரலாற்றுப் பணியை அது நிறைவேற்றவே செய் தது: பாழ்பட்டுவிட்ட பிற்பட்ட ஒரு நாட்டில் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை அது காப்பாற்றியது. படிப் படியாக அக்கொள்கை மேம்பாடு அடைந்தது, அதில் எந்தச் சந்தேகமும் இல்லை. நாம் முழு அளவில் ஆட்சியதி காரம் பெற்றதும் முதலாம் ஆண்டில் (1918 ஆகஸ்டு 1 முதல் 1919 ஆகஸ்டு 1 வரை) அரசு 11 கோடி பூடு தானி யத்தை வசூலித்தது; இரண்டாம் ஆண்டில் 22 கோடி பூடும், மூன்றும் ஆண்டில் 28 கோடி 50 லட்சம் பூடுக்கு அதிகமாகவும் வசூலித்தது. நடைமுறை அனுபவம் பெற் றிருக்கும் நாம் இப்போது 40 கோடி பூடு வசூலிக்க முற்பட்டுள்ளோம், வசூலிப்போமென எதிர்பார்க்கிறோம் (பண்ட வடிவ வரியின் மூலம் 24 கோடி பூடு கிடைக்கு மென எதிர்பார்க்கப்படுகிறது). தொழிலாளர்களது அரசு போதிய அளவில் உணவுப் பொருள்களை மெய்யாகவே கையிருப்பில் கொண்டுள்ள போதுதான் பொருளாதார வழியில் அது தனது சொந்தக் கால்களில் உறுதியாக*

நிற்கவும், பெருவீதத் தொழில் துறையை மெதுவாகவே எனினும் இடையருது தொடர்ந்து மீட்டமைத்திடவும், ஒழுங்கான நிதியமைப்பைத் தோற்றுவிக்கவும் முடியும்.

## 9. சோஷலிசத்தின் பொருளாயத அடித்தளமும் ருஷ்யாவை மின்மயமாக்கும் திட்டமும்

விவசாயத்தை புனரமைக்க வல்லதான பெருவீத இயந்திரத் தொழில் துறை ஒன்றுதான் சோஷலிசத்துக்குச் சாத்தியமான பொருளாயத அடித்தளம். ஆனல் இந்தப் பொதுவான முடிவுடன் நாம் நின்றுவிடலாகாது. இதனை மேலும் ஸ்தூலமாக்கியாக வேண்டும். தொழில்நுட்பத்தின் நவநவீன சாதனைகளை அடிப்படையாகக் கொண்டதும் விவசாயத்தைப் புனரமைக்க வல்லதுமான பெருவீதத் தொழில் துறையானது நாடு முழுதும் மின்மயமாதலைக் குறிக்கின்றது. ரு.சோ.சோ.கூ. குடியரசை இப்படி மின்மயமாக்குவதற்கான ஒரு திட்டத்தை வகுத்திடும் விஞ்ஞானப் பணியை நாம் மேற்கொள்ள வேண்டியிருந்தது, இதை நாம் செய்து முடித்துள்ளோம். ருஷ்யாவிலுள்ள சிறந்த விஞ்ஞானிகள், பொறியாளர்கள், விவசாய விஞ்ஞானிகளில் இருநூற்றுக்கும் அதிகமானேரது ஒத்துழைப்புடன் இந்தப் பணி இப்போது பூர்த்தியாகியுள்ளது. இது பெரியதொரு தொகுதியாக வெளியிடப்பட்டது, 1920 டிசம்பரில் சோவியத்துகளது எட்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசால் ஒட்டுமொத்தமாய் அங்கீகரிக்கப்பட்டது. அரசாங்கத்தால் இறுதியாக அங்கீகரிக்கப்படுமுன் இத்திட்டத்தை விவரமாகப் பரிசீலிப்பதற்காக மின் பொறியாளர்களது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ்[81] ஒன்றை 1921 ஆகஸ்டில் கூட்டுவதற்கு இப்போது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மின்மயமாக்கும் திட்டத்தின் முதற் பகுதியை நிறைவேற்ற பத்து ஆண்டுகளாகும் என்று மதிப்பிடப்படுகிறது, இதற்குச் சுமார் 37 கோடி வேலை நாட்கள் தேவையாய் இருக்கும்.

*1918ல் நாம் புதிதாக எட்டு மின் நிலையங்கள் கட்டினோம் (இவற்றின் மொத்த ஆற்றல்: 4,757 கிலோவாட்); 1919ல் இந்த எண்ணிக்கை 36ஆக உயர்ந்தது (மொத்த ஆற்றல்: 1,648 கிலோவாட்); 1920ல் இது 100ஆக உயர்ந்தது (மொத்த ஆற்றல்: 8,699 கிலோவாட்).*

*விரிந்து பரந்த நமது நாட்டுக்கு இந்தத் துவக்கம் பெரிதல்ல எனினும் துவக்கி வைக்கப்பட்டுவிட்டது, வேலை ஆரம்பமாகிவிட்டது, தொடர்ந்து முன்னேறி வருகிறது. ஏகாதிபத்திய யுத்தத்துக்குப் பிறகு, பத்து லட்சம் போர்க் கைதிகள் ஜெர்மனியில் நவீனத் தொழில் நுட்பத்தில் பரிச்சயம் பெற்ற பிறகு, கடுமையானது எனினும் உறுதியூட்டும் படியான மூன்றாண்டுக் கால உள்நாட்டு யுத்தத்துக்குப் பிற்பாடு, ருஷ்ய விவசாயி வேறொரு மனிதராகியிருக்கிறார். பாட்டாளி வர்க்கத்தின் வழிகாட்டல் மட்டும்தான் சிறு விவசாயிப் பெருந் திரளினரை முதலாளித்துவ அடிமை வாழ்விலிருந்து சோஷலிசத்துக்கு அழைத்துச் செல்ல வல்லது என்பதை இவ்விவசாயி மாதத்துக்கு மாதம் மேலும் மேலும் தெளிவாகவும் கண்கூடாகவும் காண்கிறார்.*

## 10. ''தூய ஜனநாயகமும்'' இரண்டாவது, இரண்டரையாவது அகிலங்களும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் மூலதனத்தின் கூட்டாளிகளாய் ஆற்றும் பாத்திரம்

*பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமானது வர்க்கப் போராட்டம் முடிவுற்றுவிட்டதைக் குறிப்பதல்ல, மாறாகப் புதிய வடிவில், புதிய ஆயுதங்களைக் கொண்டு தொடர்ந்து அது நடைபெறுவதைக் குறிப்பதாகும். வர்க்கங்கள் இருந்து வரும் வரையில், ஒரு நாட்டில் வீழ்த்தப்பட்டுவிட்ட முதலாளித்துவ வர்க்கம் சோஷலிசத்தின் மீதான தனது தாக்குதல்களைச் சர்வதேச அளவில் பத்து மடங்கு கடுமையாக்கி வரும் வரையில், இந்தச் சர்வாதிகாரம் இன்றியமையாத*

தாகும். மாறிச் செல்வதற்கான இடைநிலைக் கட்டத்துக்குரிய இந்தக் காலத்தில் சிறு விவசாயிகளது வர்க்கம் நிச்சயமாகச் சிற்சில ஊசலாட்டங்களுக்கு உள்ளாகவே செய்கிறது. மாறிச் செல்வதிலுள்ள இன்னல்களும் முதலாளித்துவ வர்க்கத்தின் செல்வாக்கும் தவிர்க்க முடியாதபடி இந்தப் பெருந் திரளினரது மனப்பாங்கை அவ்வப்போது மாறும்படிச் செய்கின்றன. பாட்டாளி வர்க்கம் அதற்கு ஜீவாதாரமாய் அமையும் அடித்தளமாகிய பெருவீத இயந்திரத் தொழில் துறையின் அழிவினுல் பலவீனமுற்றும் ஓரளவு வர்க்கத் தரங்கெட்டும் உள்ளது; மேற்கூறிய ஊசலாட்டங்களை மீறி உறுதியாக நின்று, மூலதனத்தின் ஒடுக்குமுறையிலிருந்து உழைப்பை விடுதலை பெறச் செய்வதென்ற மெத்தக் கடினமானதாயினும், தலையாய வரலாற்றுப் பணியானது இவ்வர்க்கத்திற்கே உரியதாகும்.

குட்டிமுதலாளித்துவ ஜனநாயகக் கட்சிகள், அதாவது இரண்டாவது, இரண்டரையாவது அகிலங்களுடன் இணைந்துள்ளவையும், ருஷ்யாவில் ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்'', மென்ஷிவிக்குக் கட்சிகளால் பிரதிநிதித்துவம் செய்யப்படுகிறவையுமான கட்சிகள் பின்பற்றும் கொள்கை, குட்டிமுதலாளித்துவப் பகுதிகளது ஊசலாட்டங்களின் அரசியல் வெளியீடே ஆகும். இந்தக் கட்சிகள் இப்போது தமது தலைமையகங்களையும் பத்திரிகைகளையும் வெளிநாடுகளில் வைத்திருக்கின்றன. உண்மையில் இவை முதலாளித்துவ எதிர்ப் புரட்சி அனைத்துடனும் கூட்டு சேர்ந்து கொண்டு விசுவாசமாக அதற்குத் தொண்டூழியம் புரிந்து வருகின்றன.

''காடேட்டு'' (''அரசியல் சட்ட-ஜனநாயகக்'') கட்சியின் தலைவரான மில்யுக்கோவின் தலைமையில் அமைந்த ருஷ்யப் பெரு முதலாளித்துவ வர்க்கத்தாரது கூர்மதி கொண்ட தலைவர்கள் குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகளுடைய (அதாவது சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளுடைய) இந்தப் பாத்திரத்தை மிகத் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் ஒளிவுமறைவின்றியும் மதிப்பீடு செய்திருக்கிருர்கள். மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-

புரட்சியாளர்களும் வெள்ளைப்படையினரும் கூட்டு சேர்ந்து செயல்பட்ட க்ரோன்ஷ்டாட் கலகம் சம்பந்தமாக, மில்யுக்கோவ் ''போல்ஷிவிக்குகள் இல்லாத ஸோவியத்துகள்'' என்னும் கோஷத்துக்கு ஆதரவு தெரிவித்து மொழிந்தார். இந்தக் கருத்தை மேலும் விரிவுபடுத்தி, சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் ''முயற்சி செய்வது வரவேற்கத் தக்கதே'' என்று அவர் எழுதினார் (**பிராவ்தா**,[82] இதழ் 64, 1921, பாரிஸ் **பஸ்லேத்னியெ நோவஸ்தியிலிருந்து**[83] தரப்பட்ட மேற்கோள்). ஏனெனில் போல்ஷிவிக்குகளிடமிருந்து ஆட்சியதிகாரத்தை முதலில் பறித்திடும் பணி அவர்களுக்கே உரியதாகும் என்றார். எல்லாப் புரட்சிகளும் அளித்திடும் படிப்பினையை—அதாவது குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகள் ஆட்சியதிகாரத்தை விடாது வைத்திருக்கத் திராணியற்றவர்கள், முதலாளித்துவ வர்க்கத்தின் எதேச்சாதிகாரத்துக்கு மூடுதிரையாகவும் இவ்வர்க்கம் வேறு எவருக்கும் பங்களிக்க வேண்டியிராத தனி ஆட்சியதிகாரம் பெறுவதற்கான இடைநிலையாகவுமே எப்போதும் பயன்படுகிறவர்கள் என்பதை—பெரு முதலாளித்துவ வர்க்கத்தின் தலைவரான மில்யுக்கோவ் பிழையற்றவாறு கணித்து வைத்திருக்கிறார்.

ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கப் புரட்சியானது, 1789-94ஆம் ஆண்டுகளும் 1848-49ஆம் ஆண்டுகளும் அளித்த இந்தப் படிப்பினையையும், மற்றும் 1884 டிசம்பர் 11ல் பெபெலுக்கு எழுதிய கடிதத்தில் பிரீட்ரிஹ் எங்கெல்ஸ் கூறியதையும் திரும்பத் திரும்ப உறுதி செய்து காட்டுகிறது.

''... தூய ஜனநாயகம்... புரட்சிக்குரிய தருணம் வருகையில் தற்காலிக முக்கியத்துவம் பெறுகிறது... முதலாளித்துவப் பொருளாதாரம் அனைத்துக்கும், பிரபுத்துவப் பொருளாதாரத்துக்குங்கூடத்தான் கடைசி ஆதாரமாய் முக்கியத்துவம் பெறுகிறது... இவ்வாறு 1848 மார்ச்சுக்கும் செப்டம்பருக்கும் இடையில் பிரபுத்துவ-அதிகார வர்க்கத் திரள் அனைத்துமாகச் சேர்ந்து, புரட்சிகர வெகுஜனங்களை அடக்கி வைக்கும் பொருட்டு மிதவாதிகளைப்

*பலப்படுத்தியது... தூய ஜனநாயகத்தைச் சுற்றிலும் கூடிக் கொள்ளும் பிற்போக்குத் திரள் அனைத்தும்தான் நெருக் கடி நாளிலும் நெருக்கடிக்கு அடுத்த நாளிலும் நமக்கு எதிரான ஒரே பகையாக அமைந்திருக்கும். இதை மறக் கலாகாதென நினைக்கிறேன்'' (ருஷ்ய ஏடான* **கம்யூனிஸ் திச்செஸ்கி துரூத்,**[84] *இதழ் 360, 1921 ஜூன் 9ல், தோழர் வி. அதோராத்ஸ்கியின் கட்டுரையான ''ஜனநாயகம் குறித்து மார்க்சும் எங்கெல்சும்'' என்பதில் வெளிவந்தது. ஜெர்மனில் ஃபிரீட்ரிஹ் எங்கெல்ஸ் புத்தகமான Politisches Vermächtnis,* Internationale Jugend-Bibliothek., *இதழ் 12, பெர்லின், 1920, பக்கம் 19ல் வெளிவந்தது).*

**நி. லெனின்**

*மாஸ்கோ, கிரெம்ளின், 1921 ஜூன் 13*

*கம்யூனிஸ்டு அகிலத்தின் பத்திரிகைத் துறையால் 1921ல் தனிப் பிரசுரமாய் வெளியிடப்பட்டது*

**நூல் திரட்டு,** *தொகுதி 44, பக்கங்கள் 3-12*

## அக்டோபர் புரட்சியின் நான்காவது ஆண்டு விழா

அக்டோபர் 25 இன் (நவம்பர் 7) நான்காவது ஆண்டு விழா நெருங்கி வருகிறது.

அம்மாபெரும் நாள் நம்மிடமிருந்து எவ்வளவுக்கு எவ்வளவு தொலைவில் செல்கிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமாய் நாம் ருஷ்யாவில் நடைபெற்ற பாட்டாளி வர்க்கப் புரட்சியின் முக்கியத்துவத்தைத் தெளிவாகக் கண்ணுறுகிறோம்; அவ்வளவுக்கு அவ்வளவு ஆழமாய் நமது ஒட்டுமொத்தப் பணியின் நடைமுறை அனுபவம் குறித்துச் சிந்தித்துப் பார்க்கிறோம்.

மிகவும் சுருக்கமாய், சிறிதும் நிறைவு பெறாத பெரும் போக்கான உருவரையில், இந்த முக்கியத்துவத்தையும் அனுபவத்தையும் பின்வருமாறு தொகுத்துரைக்கலாம்.

ருஷ்யாவில் நடைபெற்ற புரட்சியின் நேரடியான உடனடிக் குறிக்கோள் முதலாளித்துவ-ஜனநாயகக் குறிக்கோள்தான்: அதாவது மத்திய கால முறைமையின் மீத மிச்சங்களை அழித்து அவற்றை அறவே துடைத்தெறிவதும், இந்தக் காட்டுமிராண்டித்தனத்தை, இந்த அவக்கேட்டை ருஷ்யாவிடமிருந்து களைந்தெறிவதும், நமது நாட்டில் அனைத்துக் கலாசாரத்துக்கும் முன்னேற்றத்துக்கும் பிரம்மாண்டத் தடையாய் அமைந்த இதனை அகற்றிடுவதும்தான்.

நூற்று இருபத்தைந்து ஆண்டுகளுக்கு அதிகமான காலத்துக்கு முன்பு நடைபெற்ற மாபெரும் பிரெஞ்சுப் புரட்சியைக் காட்டிலும் அதிக வைராக்கியத்தோடும், மிக விரைவாகவும் துணிவாகவும் வெற்றிகரமாகவும், மற்

றும் பெருந்திரள் மக்களிடத்தே ஏற்பட்ட பலனைக் கொண்டு பார்க்கையில் பன்மடங்கு விரிவாகவும் ஆழமாக வும் இந்தக் களையெடுப்பினை நடத்தினேமென நாம் நியாய மாகவே பெருமை கொள்ளலாம்.

சோஷலிஸ்டு (அதாவது பாட்டாளி வர்க்கப்) புரட்சி யிடம் முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குள்ள உறவு குறித்து அராஜகவாதிகளும் குட்டிமுதலாளித்துவ ஜனநாயக வாதிகளும் (அதாவது, மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும்—இவர்களே அந்தச் சர்வதேச சமூக வகையினரது ருஷ்யப் பிரதிநிதிகள்) நம்ப முடியாத அள வுக்கு அபத்தம் பேசி வந்துள்ளனர், இனியும் தொடர்ந்து பேசி வருகின்றனர். இந்த விவகாரத்தில் மார்க்சிய ஆய்வு குறித்து நாங்கள் அளித்த விளக்கமும், முந்திய புரட்சிகளது அனுபவம் குறித்து நாம் செய்த மதிப்பீடும் பிழையற்றவை என்பதைக் கடந்த நான்கு ஆண்டுகள் முழு அளவுக்கு நிரூபித்துக் காட்டியிருக்கின்றன. முதலாளித்துவ-ஜனநா யகப் புரட்சியை இதன்முன் வேறு யாருமே செய்திராதபடி நாம் நிறைவு பெறச் செய்துள்ளோம். சோஷலிசப் புரட் சியை நோக்கி நாம் உணர்வு பூர்வமாகவும் உறுதியாகவும் இம்மியும் பிறழாமலும் முன்னேறிச் செல்கிறோம். இப்புரட்சி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியிலிருந்து எந்தச் சீன மதிலாலும் பிரிக்கப்பட்டிருக்கவில்லை என்பது நமக்குத் தெரியும்; நாம் எவ்வளவு தூரம் முன்னேறுவோம், இந்த பிரம்மாண்டமான, மகத்தான பணியில் எப்பகு தியை நாம் சித்தி பெறச் செய்வோம், நமது வெற்றி களைத் திண்மை பெறச் செய்வதில் எந்த அளவுக்கு வெற்றியடைவோம் என்பது (இறுதியாகப் பார்க்குமிடத்து) போராட்டத்தால் மட்டுமே நிர்ணயிக்கப்படும் என்பதும் நமக்குத் தெரியும். காலம் இதனைத் தெளிவுபடுத்தும். ஆயினும், சமுதாயத்தைச் சோஷலிசத் திசையிலே மாற்றி யமைத்திடுவதில் ஏற்கெனவே பிரம்மாண்ட அளவில்—அழிவுற்று, பலமிழந்து ஓய்ந்து போயுள்ள இந்தப் பிற்பட்ட நாட்டுக்கு இது பிரம்மாண்ட அளவுதான்—சாதிக்கப் பெற் றுள்ளதை இப்போதே காண்கிறோம்.

ஆனல் நமது புரட்சியின் முதலாளித்துவ-ஜனநாயக உள்ளடக்கம் குறித்துச் சொல்லி முடிப்போம். மார்க்சிய வாதிகள் இதன் பொருளைப் புரிந்து கொண்டாக வேண்டும். இதை விளக்கும் பொருட்டு, பளிச்சென தெரியும் சில உதாரணங்களை எடுத்துக் கொள்வோம்.

புரட்சியின் முதலாளித்துவ-ஜனநாயக உள்ளடக்கம் என்பது, நாட்டின் சமூக உறவுகளிலிருந்து (அமைப்பு, நிறுவன ஏற்பாடுகளிலிருந்து) மத்திய கால வாழ்வினை, பண்ணையடிமை முறையை, நிலப்பிரபுத்துவத்தைக் களைந்து அகற்றுவதைக் குறிப்பதாகும்.

ருஷ்யாவில் 1917 வரை பண்ணையடிமை முறையின் பிரதான வெளிப்பாடுகளாகவும் மீதமிச்சங்களாகவும் இருந்தவை எவை? முடியரசும், குலப் படிநிலை ஆதீனங்களும், நிலவுடைமை முறையும், நிலத்தைப் பயன்படுத்துவதற்கான முறையும், பெண்களின் நிலையும், மதமும், தேசிய இன ஒடுக்குமுறையும் ஆகியவையே. இந்த ''அவுகியஸ் லாயங்களில்''[85] எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்—அதிகம் முன்னேறிய அரசுகள் யாவும் **அவற்றின்** முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிகளை நூற்று இருபத்தைந்து ஆண்டுகளுக்கும் இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கும் அதற்கும் அதிகமான காலத்துக்கும் முன்பு சித்தி பெறச் செய்து கொண்ட போது (இங்கிலாந்தில் 1649), இந்த லாயங்களை அவை பெருமளவுக்குச் சுத்தம் செய்யாமலே விட்டு வைத்திருந்தன என்பதை இடைக்குறிப்பாய் இங்கு குறிப்பிட வேண்டும்—இந்த அவுகியஸ் லாயங்களில் எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள், இவற்றை நாம் துப்புரவாய்ச் சுத்தம் செய்திருப்பதைக் காண்பீர்கள். இத்துறையில் முதலாளித்துவ ஜனநாயகவாதிகளும் மிதவாதிகளும் (காடேட்டுகள்), குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகளும் (மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும்) அவர்கள் அதிகாரத்திலிருந்த **எட்டு மாதக் காலத்தில்** சாதித்ததைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிகமாய் நாம் **பத்தே வாரங்களில்**—அக்டோபர் 25 (நவம்பர் 7)க்கும் அரசியல் நிர்ணயச் சபை கலைக்கப்

பட்ட 1918 ஜனவரி 5க்கும் இடையிலான காலத்தில்—சாதித்தோம்.

இந்தத் தொடை நடுங்கிகளும் வாய்வீச்சுக்காரர்களும் தற்பெருமையாளரான நார்ஸீஸ்களும் குட்டி ஹாம்லெட்டுகளும்[86] தமது அட்டைக் கத்திகளை வீசி ஆர்ப்பாட்டம் செய்தனர்—ஆனால் முடியரசைக் கூட அழித்திடவில்லை! யாரும் என்றும் செய்திராத முறையில் நாம் முடியரசு அசிங்கம் அனைத்தையும் அகற்றிச் சுத்தம் செய்தோம். குலப் படிநிலை ஆதீனங்கள் என்னும் அந்தப் பழங்கால அமைப்பில் ஒரு கல்லையும் விட்டு வைக்காமல் நாம் அதனை ஒழித்திட்டோம் (மிகவும் முன்னேறிய பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி போன்ற நாடுகளுங்கூட அந்த அமைப்பின் மீத மிச்சங்களை இது நாள்வரை அறவே அகற்றியாகவில்லை!). குலப் படிநிலை ஆதீனங்களது ஆணி வேர்களாகிய நிலவுடைமையிலான பிரபுத்துவ மீதமிச்சங்களையும் பண்ணையடிமை முறை மீதமிச்சங்களையும் நாம் அடியோடு கெல்லியெறிந்து விட்டோம். மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சியால் செய்யப்பட்ட நிலச் சீர்திருத்தத்தின் ''இறுதியான'' விளைவு எப்படிப்பட்டதாய் இருக்குமென ''விவாதம் நடத்தலாம்'' (இம்மாதிரியான விவாதங்களில் மூழ்கியுள்ள எழுதுகோலர்களும் காடேட்டுகளும் மென்ஷிவிக்குகளும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் நாட்டுக்கு வெளியே ஏராளமாய் இருக்கிறார்கள்). இம்மாதிரியான விவாதங்களில் தற்போது நேரத்தை விரயமாக்க நாம் விரும்பவில்லை, ஏனெனில் இந்த விவாதத்துக்கும் இதனையொட்டிய ஏராளமான ஏனைய விவாதங்களுக்கும் போராட்டத்தின் வாயிலாய் நாம் முடிவு கட்டி வருகிறோம். ஆனால் குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகள் பண்ணையடிமை முறை மரபுகளின் காவலர்களாகிய நிலப்பிரபுக்களுடன் தொடர்ந்து எட்டு மாதங்களாய்ச் ''சமரசம் செய்து'' வந்திருக்க, நாம் ஒரு சில வாரங்களுக்குள் அந்த நிலப்பிரபுக்களையும் அவர்களது மரபுகள் யாவற்றையும் ருஷ்ய மண்ணிலிருந்து அறவே துடைத்தெறிந்தோம் என்பது எந்த விவாதத்தாலும் மறுக்கப்பட முடியாத உண்மையாகும்.

மதத்தையோ, பெண்களது உரிமையின்மையையோ, ருஷ்யர்களல்லாத தேசிய இனத்தோர் ஒடுக்கப்படுதலையும் அவர்களுக்குச் சமத்துவ உரிமைகள் இல்லாமையையுமோ எடுத்துக் கொள்ளுங்கள். இவை யாவும் முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குரிய பிரச்சினைகள். அற்ப புத்தி கொண்ட குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகள் தொடர்ந்து எட்டு மாதங்களாய் இவை குறித்து வாய்ப் பேச்சு பேசினார்கள். உலகின் மிகவும் முன்னேறிய நாடுகளில் ஒன்றிலேனும் இந்தப் பிரச்சினைகளுக்கு முதலாளித்துவ-ஜனநாயக வழியில் முடிவான தீர்வு காணப்படவில்லை. நமது நாட்டில் அக்டோபர் புரட்சியின் சட்டங்களால் முடிவாக இவை தீர்க்கப்பட்டிருக்கின்றன. மதத்துக்கு எதிராய் நாங்கள் மெய்யான போராட்டம் நடத்தினோம், தொடர்ந்து நடத்தி வருகிறோம். ருஷ்யர்களல்லாத எல்லாத் தேசிய இனத்தோருக்கும் அவர்களது சொந்தக் குடியரசுகள் அல்லது தன்னாட்சிப் பிராந்தியங்களை வழங்கியுள்ளோம். பெண்களை உரிமையற்றோராய் அல்லது முழுவுரிமை இல்லாதோராய் இருத்தி வைத்தல்—இந்த இழிவார்ந்த படுமோசமான அவக்கேடு—பண்ணையடிமை முறையின், மத்திய காலத்தின் இந்த அருவருக்கத்தக்க மீதமிச்சம்—இலாப வெறி கொண்ட முதலாளித்துவ வர்க்கத்தாராலும் மந்த புத்தியினரும் தொடை நடுக்கம் கொண்டோருமான குட்டி முதலாளித்துவப் பகுதியோராலும் உலகில் விதிவிலக்கின்றி ஏனைய ஒவ்வொரு நாட்டிலும் புதுப்பிக்கப்பட்டு வரும் இது—இங்கு ருஷ்யாவில் நம்மிடம் இல்லாதொழிந்து விட்டது.

இவை யாவும் சேர்ந்ததுதான் முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியின் உள்ளடக்கம். நூற்று ஐம்பது, இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அந்தப் புரட்சியின் (அல்லது ஒரு பொது வகையின் ஒவ்வொரு தேசியத் திரிபுருவையும் கருதுவோமாயின், அந்தப் புரட்சிகளின்) முற்போக்கான தலைவர்கள் வாக்குறுதி அளித்தார்கள்: மத்திய காலத் தனியுரிமைகளிலிருந்தும், ஆண்களுடன் பெண்களுக்குச் சமத்துவம் இல்லாமையிலிருந்தும், அரசில் அந்த

அல்லது இந்த மதத்துக்கான (அல்லது ''மதக் கருத்துக் கான'', பொதுவில் ''மதச் சார்புடைமைக்கான'') தனி யுரிமையிலிருந்தும், தேசிய இனச் சமவுரிமை இன்மையிலி ருந்தும் மக்களை விடுவிப்போம் என்றுர்கள். வாக்குறுதி அளித்தார்கள்—ஆனுல் நிறைவேற்றவில்லை. அளித்த வாக் குறுதிகளை அவர்களால் நிறைவேற்ற முடியவில்லை, ஏனெ னில் ''புனித உரிமையாகிய தனியார் சொத்துரிமையிடம்'' அவர்களுக்கு இருந்த ''மரியாதை உணர்வால்'' அவர்கள் தடுக்கப்பட்டனர். நமது பாட்டாளி வர்க்கப் புரட்சி இந்தக் கேடுகெட்ட ''மரியாதை உணர்வால்''—கொடுங் கேடுகெட்ட இந்த மத்திய கால முறைமையிடத்தும் ''புனித உரிமையான தனிச் சொத்துரிமை'' யிடத்துமான இந்த உணர்வால்—பீடிக்கப்பட்டிருக்கவில்லை.

ஆனுல் ருஷ்யாவின் மக்களுக்கு முதலாளித்துவ-ஜனநா யகப் புரட்சியின் சாதனைகளை உறுதியாய் நிலைபெறச் செய் யும் பொருட்டு நாம் மேலும் முன்செல்ல வேண்டியிருந்தது, அவ்வாறே முன்செல்லவும் செய்தோம். முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குரிய பிரச்சினைகளுக்கு நாம் போகிற போக்கில், நமது பிரதானமான, மெய்யான, **பாட்டாளி வர்க்க**-புரட்சிகர, சோஷலிசச் செயற்பாடுகளின் ''உடன் விளைவாய்த்'' தீர்வு கண்டோம். சீர்திருத்தங்கள் புரட்சி கர வர்க்கப் போராட்டத்தின் உடன் விளைவுகளாகும் என்றே நாம் எப்போதுமே கூறி வந்திருக்கிறோம். முத லாளித்துவ-ஜனநாயகச் சீர்திருத்தங்கள் பாட்டாளி வர்க்க, அதாவது சோஷலிசப் புரட்சியின் உடன் விளைவுகளாகும் என்று கூறினேம், செயல்கள் மூலம் அதை நிரூபித்தும் காட்டினேம். இடைக் குறிப்பாய் இங்கு இதனைக் குறிப்பிட வேண்டும்: காவுத்ஸ்கிகளும் ஹில்ஃபர்டிங்குகளும் மார்த்தவ் களும் செர்னேவ்களும் ஹில்குவித்துகளும் லொங்கேகளும் மாக்டொனுல்டுகளும் டுராட்டிகளும் மற்றும் ''இரண்ட ரையாவது'' மார்க்சியத்தின் ஏனைய எல்லாச் சூரர்களும் முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்கும் பாட்டாளி வர்க்க-சோஷலிசப் புரட்சிக்கும் இடையிலுள்ள இந்த உறவினைப் புரிந்து கொள்ளும் திராணியற்றேராய் இருந்தனர்.

முதலாவது இரண்டாவதாக வளர்ச்சியுறுகிறது. இரண்டாவது, போகிற போக்கில், முதலாவதுக்குரிய பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்கிறது. இரண்டாவது முதலாவதன் செயலைத் திண்மை பெறச் செய்கிறது. முதலாவதைக் கடந்து வளர்வதில் இரண்டாவது எவ்வளவு தூரம் வெற்றியடைகிறது என்பதை நிர்ணயிப்பது போராட்டம் தான், போராட்டம் மட்டுமேதான்.

ஒரு புரட்சி எப்படி மற்றொன்ருக வளர்ச்சியுறுகிறது என்பதற்கு மிகவும் கண்கூடான நிரூபணங்கள் அல்லது வெளிப்பாடுகளில் ஒன்றே சோவியத் அமைப்பு. தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் சோவியத் அமைப்பானது அதிகபட்ச அளவிலான ஜனநாயகத்தைக் கிடைக்கச் செய்கிறது; அதே போது **முதலாளித்துவ** ஜனநாயகத்திடமிருந்தான முறிவையும், ஜனநாயகத்தின் ஒரு **புதிய**, சகாப்த முக்கியத்துவம் வாய்ந்த **வகையின்**, அதாவது பாட்டாளி வர்க்க ஜனநாயகத்தின், அல்லது பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் உதயத்தையும் அது குறிக்கின்றது.

நமது சோவியத் அமைப்பினைக் கட்டியமைத்திடும் பணியில் நமது பின்னடைவுகள் குறித்தும் தவறுகள் குறித்தும் அந்திமக் காலத்திய முதலாளித்துவ வர்க்கத்தாரையும் அவர்களுக்கு வால் பிடித்துச் செல்லும் குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகளையும் சேர்ந்த கோட்டான்களும் காட்டேரிகளும் நம் மீது சாபங்களையும் வசவுகளையும் ஏளனத்தையும் பொழியட்டும். நிறைய தவறுகள் புரிந்துள்ளோம், புரிந்து வருகிறோம் என்பதையும், மிகப் பல பின்னடைவுகள் ஏற்பட்டுள்ளன என்பதையும் நாம் கணமும் மறந்துவிடவில்லை. முன்பின் கண்டிராத **வகையிலான** ஓர் அரசு அமைப்பினைக் கட்டியமைத்திடுவதைப் போன்ற ஒரு புதிய பணியில், உலக வரலாற்றிலே முற்றிலும் புதுமையான இதில் பின்னடைவுகளையும் தவறுகளையும் தவிர்க்கவும் முடியுமோ! நமது பின்னடைவுகளையும் தவறுகளையும் சரிசெய்வதற்கும், சோவியத் கோட்பாடுகளை நடைமுறையில் நாம் செயல்படுத்துவதை—குற்றங்குறையற்ற நிலையிலிருந்து இன்னமும் நெடுந் தொலைவில், மிக நெடுந் தொலை

வில் இருந்து வரும் இதனை—மேம்படுத்துவதற்கும் இடை யறுது பாடுபடுவோம். சோவியத் அரசு ஒன்றைக் கட்டி யமைக்க முற்படும் நற்பேறு, இவ்விதம் உலக வரலாற்றில் ஒரு புது யுகத்தை—முதலாளித்துவ நாடு ஒவ்வொன்றிலும் ஒடுக்கப்பட்ட வர்க்கமாய் இருப்பதும், ஆனால் புது வாழ் வினை நோக்கி, முதலாளித்துவ வர்க்கத்தின் மீதான வெற் றியை நோக்கி, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நோக்கி, மூலதனத்தின் ஒடுக்குமுறையிலிருந்தும் ஏகாதிபத் திய யுத்தங்களிலிருந்தும் மனித குலத்தை விடுதலை பெறச் செய்வதை நோக்கி எங்கும் முன்னேற்ற நடைபோடும் வர்க்கமாய் இருப்பதுமாகிய ஒரு புதிய வர்க்கத்தின் ஆட்சிக்கான புது யுகத்தைத் துவக்கி வைக்கும் நற்பேறு நமக்குக் கிட்டியுள்ளது குறித்துப் பெருமை கொள்ள நமக்கு உரிமை உண்டு, நாம் பெருமை கொள்ளவும் செய்கிறோம்.

ஏகாதிபத்திய யுத்தங்களைப் பற்றிய பிரச்சினை, இன்று அனைத்து உலகின் மீதும் ஆதிக்கம் புரியும் நிதி மூலதனத் தின் சர்வதேசக் கொள்கையைப் பற்றிய பிரச்சினை—புதிய ஏகாதிபத்திய யுத்தங்களைத் தவிர்க்க முடியாதவாறு தோற்றுவிக்கச் செய்வதாகிய ஒரு கொள்கையைப் பற்றிய பிரச்சினை—தேசிய ஒடுக்குமுறையையும் பலவீனமான, பின் தங்கிய, சிறிய தேசிய இனங்களை விரல்விட்டு எண்ணி விடக் கூடிய ஒருசில ''முன்னேறிய'' அரசுகள் கொள்ளை யடித்தலையும் சூறையாடுதலையும் மென்னியை நெரித்தலையும் தவிர்க்க வொண்ணாத முறையில் அளவுகடந்து கடுமை யாக்குவதாகிய ஒரு கொள்கையைப் பற்றிய பிரச்சினை—1914 முதலாய் உலகின் எல்லா நாடுகளிலும் இப்பிரச் சினைதான் கொள்கை அனைத்துக்குமான உயிர்நாடியாக இருந்துள்ளது. கோடானு கோடியான மக்களுக்கு இது ஜீவ மரணப் பிரச்சினையாகும். (1914-18ஆம் ஆண்டுகளின் யுத்தத்திலும் அதனுடன் சேர்க்கப்பட்டு இனியும் தொ டர்ந்து நடைபெறும் ''சிறு'' யுத்தங்களிலும் கொல்லப் பட்ட 1,00,00,000 பேருடன் கூட) முதலாளித்துவ வர்க் கம் தயாரித்து வருவதும் நம் கண்ணெதிரே முதலாளித்

அஞ்சாதோரும் ஆகியோருடன் கொள்ளப்படும் கூட்டணி இது.

ஐன்ஷ்டைன் சார்பியல் தத்துவம் குறித்து பத் ஸ்ஞமினெம் மார்க்சிஸ்மா இதழ் 1—2ல் வெளிவந்துள்ள அ. திமிர்யாஸெவின் கட்டுரையானது இந்த இரண்டாவது கூட்டணியை உருவாக்கிக் கொள்வதிலும் இந்த சஞ்சிகை வெற்றி பெறுமென்ற நம்பிக்கையை நமக்கு அளிக்கிறது. இதில் இன்னும் அதிக கவனம் செலுத்தப்பட வேண்டும். நவீன இயற்கை விஞ்ஞானத்தில் ஏற்பட்டு வரும் கடும் தகர்வானது பிற்போக்குத் தத்துவஞான மரபுகளையும் சில்லறை மரபுகளையும், போக்குகளையும் சில்லறைப் போக்குகளையும் அடிக்கடி தோற்றுவிக்கிறது. ஆகவே, அண்மைக் காலத்தில் இயற்கை விஞ்ஞானத்தில் ஏற்பட்டிருக்கும் புரட்சியால் எழுப்பப்படும் பிரச்சினைகளைக் கூர்ந்து கவனித்துச் சென்றாலொழிய, தத்துவஞான சஞ்சிகையாகிய இந்த சஞ்சிகையின் பணித்துறையில் இயற்கை விஞ்ஞானிகளைக் கவர்ந்து இழுத்துக் கொண்டாலொழிய, போர்க்குணம் கொண்ட பொருள்முதல்வாதம் உண்மையில் போர்க்குணமுடையதாகவோ, பொருள்முதல்வாதமாகவோ இருக்க முடியாது. திமிர்யாஸெவின் கருத்துப்படி பொருள்முதல்வாதத்தின் அடிப்படைகள்மீது ஐன்ஷ்டைன் நேரடித் தாக்குதல் நடத்தாமல் இருக்கையில், எல்லா நாடுகளிலும் முதலாளித்துவ அறிவுத்துறையினர் மிகப் பலரும் அதற்குள் துள்ளிக் குதித்து ஐன்ஷ்டைன் தத்துவத்தைப் பற்றிக் கொண்டுவிட்டதாய் இந்த சஞ்சிகையின் முதல் இதழில் திமிர்யாஸெவ் குறிப்பிட வேண்டியதாகியுள்ளது. இப்படி நிகழ்ந்திருப்பது ஐன்ஷ்டைன் சம்பந்தமாய் மட்டுமல்ல, பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி முதலாய் இயற்கை விஞ்ஞானத்தின் மாபெரும் சீர்திருத்தாளர்களில் பெருவாரியானோர் இல்லையேல், எப்படியும் மிகப் பலர் சம்பந்தமாகவும் இப்படித்தான் நிகழ்ந்தது என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும்.

இப்படிப்பட்ட புலப்பாடு குறித்து நம்முடைய போக்கு அரசியல் உணர்வுடைத்ததாய் இருக்க வேண்டுமாயின்,

எந்த இயற்கை விஞ்ஞானமும் சரி, எந்தப் பொருள்முதல் வாதமும் சரி, உறுதியான தத்துவஞான அடிநிலையின்மீது காலூன்றி நின்றாலன்றி, முதலாளித்துவக் கருத்துக்களுடைய வெறித்தாக்குதலுக்கும் முதலாளித்துவ உலகக் கண்ணோட்டத்தின் மீட்சிக்கும் எதிரான போராட்டத்தில் அதனால் தனது நிலையைப் பாதுகாத்துக் கொள்ள முடியாது. இந்தப் போராட்டத்தில் இயற்கை விஞ்ஞானி தமது நிலையைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டும் இந்தப் போராட்டத்தை வெற்றிகர முடிவுக்கு நடத்திச் செல்லும் பொருட்டும் அவர் நவீனப் பொருள்முதல்வாதியாய், மார்க்சைப் பிரதிநிதியாய்க் கொண்ட அந்தப் பொருள் முதல்வாதத்தின் உணர்வுபூர்வமான ஆதரவாளராய் இருந்தாக வேண்டும்; அதாவது, அவர் இயக்கவியல் பொருள் முதல்வாதியாய் இருந்தாக வேண்டும். இந்தக் குறிக்கோள் சித்தி பெறும் பொருட்டு, பத் ஸ்னமினெம் மார்க்சிஸ்மா வில் எழுதும் ஆசிரியர்கள் ஹெகலின் இயக்கவியலைப் பெருள்முதல்வாத நிலையிலிருந்து முறையாய் ஆய்ந்தறிந்து கொள்ள ஏற்பாடு செய்தாக வேண்டும். ஆதாவது, மார்க்ஸ் தமது மூலதனத்திலும் வரலாற்றையும் அரசியலையும் பற்றிய தமது நூல்களிலும் செயல்முறையில் கையாண்ட இயக்கவியலை, கிழக்குலகின் (ஜப்பானிலும் இந்தியாவிலும் சீனாவிலும்) புதிய வர்க்கங்கள்—உலக மக்கள் தொகையின் பெரும் பகுதியான, இது காறும் தமது வரலாற்றுச் செயலின்மையாலும் வரலாற்று உறக்கத்தாலும் ஐரோப்பாவின் வளர்ச்சி பெற்ற பல நாடுகளின் தேக்கநிலையையும் சீரழிவையும் நெறிமுறையாக்கி வந்த கோடானு கோடியானோர்—விழிப்புற்று உயிர்த்தெழுந்தும் போராடியும் வரும் இக்காலத்தின் ஒவ்வொரு நாளும், புதிய பல நாடுகளது மக்களும் புதிய வர்க்கங்களும் விழிப்புற்று உயிர்த்தெழும் இக்காலத்தின் ஒவ்வொரு நாளும் மார்க்சியத்தை மெய்ப்பித்து உறுதி செய்யும் புதிய நிரூபணமாய் அமையும்படி அவ்வளவு வெற்றிகரமாய் மார்க்ஸ் கையாண்ட இந்த இயக்கவியலை முறையாய் ஆய்ந்தறிந்து கொள்ள ஏற்பாடு செய்தாக வேண்டும்.

ஹெகலின் இயக்கவியலை இப்படி ஆய்ந்தறிவதும் விளக்கம் செய்வதும் பிரசாரம் புரிவதும் மிகமிகக் கடினம்தான். இந்தத் திசையிலான முதலாவது முயற்சிகளுடன் பிழைகளும் நிச்சயம் உடன்வரும்தான். ஆனால் ஏதும் செய்யாமலிருப்போரால்தான் பிழைகள் புரியாதிருக்க முடியும். பொருள்முதல்வாத வழியில் புரிந்து கொள்ளப்படும் ஹெகலின் இயக்கவியலைக் கையாளுவதற்குரிய மார்க்சின் முறையை நமது அடிப்படையாய்க் கொண்டு, எல்லா அம்சங்களிலும் நாம் இந்த இயக்கவியலை விரித்து விளக்க முடியும், விரித்து விளக்கவும் வேண்டும், ஹெகலின் முக்கிய நூல்களிலிருந்து சிறு பகுதிகளை இந்த சஞ்சிகையில் அச்சிட வேண்டும்; பொருள்முதல்வாத வழியில் இப்பகுதிகளுக்கு விளக்கம் அளித்து, இயக்கவியலை மார்க்ஸ் கையாண்டது பற்றிய உதாரணங்களின் துணை கொண்டும், மற்றும் அண்மைக்கால வரலாறும் முக்கியமாய் ஏகாதிபத்தியப் போரும் புரட்சியும் அசாதாரணச் செழுமையுடன் இயக்கவியலுக்குப் பொருளாதார, அரசியல் உறவுகளின் துறையில் மிகுதியாய் அளித்திடும் உதாரணங்களின் துணை கொண்டும் இவை குறித்துக் கருத்துரைக்க வேண்டும். என்னுடைய அபிப்பிராயத்தில் பத் ஸ்னுமினெம் மார்க்சிஸ்மாவின் ஆசிரியர்களும் கட்டுரையாளர்களும் ஒரு வகையில் ''ஹெகலிய இயக்கவியலின் பொருள்முதல்வாத நண்பர்களது கழகமாய்ச்'' செயல்பட வேண்டும். பொருள்முதல்வாத வழியில் விளக்கம் செய்யப்பட்ட ஹெகலின் இயக்கவியலில், நவீன கால இயற்கை விஞ்ஞானிகள்(அவர்களுக்குத் தேடிக் கண்டறிந்து கொள்ளத் தெரிந்திருந்து, நாமும் அவர்களுக்குத் துணை புரியக் கற்றுக் கொள்வோமாயின்) இயற்கை விஞ்ஞானத்தில் நடைபெறும் புரட்சியால் எழுப்பப்படும் தத்துவஞானப் பிரச்சினைகளுக்கு, முதலாளித்துவ மோஸ்தர்களால் மயக்கப்படும் அறிவுத்துறையினரைப் பிற்போக்கினுள் ''வழுக்கிவிழச்'' செய்யும் இப்பிரச்சினைகளுக்கு, வரிசையாய் விடைகள் இருக்கக் காண்பார்கள்.

இப்படிப்பட்ட ஒரு பணியை வகுத்துக் கொண்டு முறையாய் அதை நிறைவேற்றிச் சென்றாலொழிய, பொருள்

முதல்வாதம் போர்க்குணம் கொண்ட பொருள்முதல்வாதமாய் இருக்க முடியாது. ஷெத்ரீனுடைய சொற்களில் சொல்வதெனில் அது அவ்வளவாய்ப் போராடி வாகை சூடும் ஒன்றாய் இல்லாமல், போராடப்பட்டு வீழ்த்தப்படும் ஒன்றாகவே இருக்கும்[91]. இப்படி அது பணியாற்றாதவரை, தலைசிறந்த இயற்கை விஞ்ஞானிகள் தமது தத்துவஞான அனுமானங்களையும் பொதுமையாக்கப்பட்ட முடிவுகளையும் வந்தடைவதில் இதுகாறும் அடிக்கடி இருந்துள்ளது போலவே இனியும் திக்கற்றவர்களாகவே இருப்பார்கள். ஏனெனில் இயற்கை விஞ்ஞானம் அவ்வளவு வேகமாய் முன்னேறிச் செல்கிறது; எல்லாத் துறைகளிலும் அவ்வளவு ஆழ்ந்த புரட்சிகர மாற்றங்களுக்கு உள்ளாகி வருகிறது; அது தத்துவஞான அனுமானங்களின்றி இருக்கலாமென நினைக்க முடியவே முடியாது.

முடிவில் ஓர் உதாரணத்தை எடுத்துரைக்கிறேன். இது தத்துவஞானத்துடன் சம்பந்தப்பட்டதல்ல; ஆனால் எப்படியும் சமூகப் பிரச்சினைகளைப் பற்றியதுதான். பத் ஸ்னாமினெம் மார்க்சிஸ்மா சமூகப் பிரச்சினைகளிலும் கவனம் செலுத்த விரும்புகிறது.

நவீன காலத்திய போலி விஞ்ஞானம் உண்மையில் படுமோசமான, மிகவும் இழிவான பிற்போக்குக் கருத்தோட்டங்களுக்கான ஒரு சாதனமாய் எப்படிப் பயன்படுகிறது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

''ருஷ்யத் தொழில்நுட்பக் கழகத்தின்'' பதினொராவது இலாகாவினால் வெளியிடப்படும் எக்கனமீஸ்ட்[92], முதல் இதழின் (1922) பிரதி அண்மையில் எனக்கு வரப்பெற்றது. இந்த சஞ்சிகையை எனக்கு அனுப்பி வைத்த இளம் கம்யூனிஸ்டு (அதைப் படித்துப் பார்க்க அவருக்கு நேரம் கிடைக்காமல் இருந்திருக்கலாம்) அவசரப்பட்டு அதனுடன் பெருமளவு தாம் உடன்படுவதாய்க் குறிப்பிட்டார். உண்மையில் இந்த சஞ்சிகை நவீன பிரபுத்துவவாதிகளது ஏடாய்ச் செயல்படுகிறது—எந்த அளவுக்குத் தெரிந்து வேண்டுமென்றே இப்படிச் செய்கிறதோ நான் அறியேன்.

விஞ்ஞானம், ஜனநாயகம் இத்தியாதியான வேடங்களின் மறைவில் இவ்வேலையைச் செய்கிறது.

திரு. பி. அ. ஸரோக்கின் என்ற ஒருவர் ''போரால் ஏற்பட்ட விளைவு'' குறித்து, ''சமூகவியல்'' பரிசீலனை என்பதாய்க் கூறிக் கொண்டு இந்த சஞ்சிகையில் விரிவான ஆய்வுரை வெளியிட்டிருக்கிறார். புலமை வாய்ந்த இந்தக் கட்டுரையில், இந்த ஆசிரியரும் வெளிநாடுகளிலுள்ள இவருடைய எண்ணற்ற போதனாசிரியர்களும் சக ஆய்வாளர்களும் எழுதிய ''சமூகவியல்'' நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட புலமை வாய்ந்த மேற்கோள்கள் நிறைய இருக்கின்றன. இவருடைய புலமைக்கு இதோ ஓர் உதாரணம்:

பக்கம் 83ல் படிக்கிறேன்:

''பெத்ரொகிராதில் தற்போது நடைபெறும் திருமணங்களில் ஒவ்வொரு 10,000லும் திருமண ரத்துக்களின் எண்ணிக்கை 92.2.—நம்ப முடியாத பெரிய எண்ணிக்கை இது. ரத்து செய்யப்படும் ஒவ்வொரு 100 திருமணங்களிலும் 51.1 ஓராண்டுக்குக் குறைவாய் நீடித்தவை, 11 சதவீதமானவை ஒரு மாதத்துக்குக் குறைவாகவும், 22 சதவீதமானவை இரண்டு மாதங்களுக்குக் குறைவாகவும், 41 சதவீதமானவை மூன்றிலிருந்து ஆறு மாதங்களுக்குக் குறைவாகவும் நீடித்தவை. 26 சதவீதமானவையே ஆறு மாதங்களுக்கு மேல் நீடித்தவை. தற்காலத்திய சட்டபூர்வமான திருமணம் நடைமுறையில் தாம்பத்தியத்துக்குப் புறம்பான பாலுறவை மூடி மறைக்கும் ஒரு வடிவமாய் அமைந்து, 'பழம் தேடியலையும்' காதலர்கள் 'சட்டபூர்வமான' வழியில் தம் பசியைத் தீர்த்துக் கொள்ள வகை செய்கிறது என்பதைத்தான் இப்புள்ளிகள் காட்டுகின்றன'' (எக்கனமீஸ்ட், இதழ் 1, பக்கம் 83).

இந்தக் கனவானும் இந்த சஞ்சிகையை வெளியிட்டு இம்மாதிரியான பேச்சுக்களுக்கு இதில் இடம் தரும் ருஷ்யத் தொழில்நுட்பக் கழகத்தாரும் நிச்சயம் தம்மை ஜனநாயகத்தைப் பற்றியொழுகுவோராகவே கருதிக் கொள்வார்கள்; உண்மையில் இவர்களுக்கு உரிய பெயரைக் கொண்டு அழைத்தோமாயின், அதாவது பிரபுத்துவவாதிகள், பிற்போக்காளர்கள், ''சமய சித்தாந்தத்தின் பட்டம்

பெற்ற அடிவருடிகள்'' என்று கூறுவோமாயின், தாம் பெரிதும் அவமதிக்கப்படுவதாகவே கருதிக் கொள்வார்கள்.

முதலாளித்துவ நாடுகளில் திருமணம் குறித்தும், திருமண ரத்து குறித்தும், திருமணத்துக்குப் புறத்தே பிறந்த குழந்தைகள் குறித்தும் நடப்பிலுள்ள சட்டங்களை யும், இத்துறையில் உண்மையில் அங்குள்ள நிலைவரங்களை யும் பற்றி சொற்ப அளவு ஞானம் இருந்தாலே போதும், இந்த விவகாரத்தில் கருத்துடைய எவரும் நவீன முதலா ளித்துவ ஜனநாயகம், மிகவும் ஜனநாயகமான முதலாளித் துவக் குடியரசுகளில் இருப்பதுங்கூட, இத்துறையிலே பெண்கள் குறித்தும் திருமணத்துக்குப் புறத்தே பிறந்த குழந்தைகள் குறித்தும் மெய்யாகவே பிரபுத்துவ போக்கு கொண்டிருப்பதைக் கண்டு கொண்டுவிடலாம்.

இந்த நிலைமை மென்ஷிவிக்குகளையும், சோஷலிஸ்டு-புரட்சியாளர்களையும், அராஜகவாதிகளில் ஒரு பகுதியோ ரையும், மேலைய நாடுகளில் இவர்களை ஒத்தவையாயுள்ள எல்லா கட்சிகளையும், ஜனநாயகம் என்பதாகவும் போல் ஷிவிக்குகள் இதைக் குலைக்கிறார்கள் என்பதாகவும் கூச்சல் போடாதபடி தடுத்துவிடவில்லைதான். ஆனால் உண்மை என்னவெனில், போல்ஷிவிக் புரட்சி ஒன்று மட்டும்தான் திருமணம், திருமண ரத்து, திருமணத்துக்குப் புறத்தே பிறந்த குழந்தைகளின் நிலை ஆகியவை போன்ற பிரச்சினை களில் முரணில்லாத ஜனநாயகப் புரட்சியாய் நடந்தேறி யிருக்கிறது. எந்த நாட்டிலும் மக்களில் பாதிக்கு மேற்பட் டோரது நலன்களுடன் மிகவும் நேரடியாய்ச் சம்பந்தப் பட்ட ஒரு பிரச்சினை இது. போல்ஷிவிக் புரட்சிக்கு முன்பு மிகப் பல புரட்சிகள் நடைபெற்றிருப்பினும், இவை தம்மை ஜனநாயகப் புரட்சிகளாய் அழைத்துக் கொண்டன என்ற போதிலும், போல்ஷிவிக் புரட்சிதான் இத்துறையில் பிற்போக்கையும் பிரபுத்துவத்தையும் மற்றும் சொத்து டைத்த ஆளும் வர்க்கங்களது வழக்கமான கபடத்தையும் எதிர்த்து உறுதி வாய்ந்த போராட்டம் நடத்தியுள்ள முதலாவது புரட்சியும், ஒரே புரட்சியும் ஆகும்.

10, 000 திருமணங்களில் 92 திருமண ரத்துக்கள் என்

பது, திரு. ஸரோக்கினுக்கு நம்ப முடியாத பெரிய எண்ணிக்கையாய்த் தோன்றினுல், வாழ்க்கையிலிருந்து அறவே துண்டித்து ஒதுக்கி வைக்கப்பட்ட துறவி மடத்தில்—அப்படி ஒரு துறவி மடம் இருக்க முடியுமென யாராலும் நம்ப முடியாதபடி அந்த அளவுக்கு அறவே துண்டித்து ஒதுக்கி வைக்கப்பட்ட ஒன்றில்—வளர்ந்து ஆளாகி அங்கேயே வசித்து வருகிறவராகவே இந்த ஆசிரியர் இருக்க வேண்டும்; அல்லது பிற்போக்கின் நலத்தையும் முதலாளி வர்க்கத்தின் நலத்தையும் உத்தேசித்து இவர் உண்மையைத் திரித்துப் புரட்டுகிருர் என்றுதான் கொள்ள வேண்டும். முதலாளித்துவ நாடுகளிலுள்ள சமூக நிலைமைகளைச் சிறிதளவேனும் அறிந்தவர் எவரும், இந்நாடுகளில் எல்லாம் உண்மையில் நடைபெறும் திருமண ரத்துக்களின் மெய்யான எண்ணிக்கை (இந்தத் திருமண ரத்துக்கள் மதச் சபையாலும் சட்டத்தாலும் அங்கீகரிக்கப்படாதவை என்பதைக் கூறத் தேவையில்லை) கணக்கின்றி மிகவும் அதிகமாகும் என்பதை நன்கறிவார். இத்துறையில் ருஷ்யாவுக்கும் பிற நாடுகளுக்குமுள்ள ஒரே வித்தியாசம் என்னவென்ருல், நமது சட்டங்கள் கபடத்தையும், பெண்ணும் பெண்ணின் குழந்தையும் இழிவு செய்யப்படுவதையும் புனிதமாக்குவதில்லை; அதற்கு மாருய் எல்லா வகையான கபடத்தின் மீதும் இழிவு செய்தலின் மீதும் பகிரங்கமாகவும் அரசாட்சியின் பெயரிலும் முறையான போர்ப் பிரகடனம் செய்கின்றன.

மார்க்சிய சஞ்சிகை ''படித்தறிந்த'' இந்த நவீன பிரபுத்துவவாதிகளையும் எதிர்த்துப் போராடியாக வேண்டும். இவர்களில் பலர் அரசாங்கப் பணம் பெறுகின்றவர்களாகவே இருப்பார்கள்; வக்கரித்துப் போனவர்களாய்ப் பெயரெடுத்தவர்கள் வளரும் தலைமுறையினரது கல்வி நிலையங்களுடைய மேலாளர்களாய் இருக்க எப்படித் தகுதியற்றவர்களோ அதே போல சிறிதும் தகுதியற்ருேராகிய இவர்கள் நமது இளந் தலைமுறையினருக்குக் கல்வி போதகர்களாய் நமது அரசாங்கத்தால் அமர்த்தப்பட்டவர்களாகவே இருப்பார்கள்.

ருஷ்யாவின் தொழிலாளி வர்க்கம் ஆட்சியதிகாரத்தை வென்று கொண்டுவிட்டது. ஆனல் இந்த ஆட்சியதிகாரத்தைப் பயன்படுத்த இன்னும் அது கற்றுக் கொள்ளவில்லை. கற்றுக் கொண்டிருந்தால், நெடுங்காலத்துக்கு முன்பே அது இத்தகைய போதனசிரியர்களேயும் புலமை படைத்த கழகங்களது உறுப்பினர்களேயும் முதலாளித்துவ ''ஜனநாயகத்தைக்'' கொண்ட நாடுகளுக்குப் பணிவன்புடன் அனுப்பி வைத்திருக்கும். இப்படிப்பட்ட பிரபுத்துவவாதிகளுக்கு அவையே ஏற்ற இடமாகும்.

ஆயினும் கற்றுக் கொள்ள வேண்டுமென்ற திடச்சித்தம் இருக்குமாயின் நிச்சயம் அது கற்றுக் கொண்டு விடும்.

*1922 மார்ச் 12*

பத் ஸ்னமினெம் மார்க்சிஸ்மா,
*1922 மார்ச், இதழ் 3ல்*
*அச்சிடப்பட்டது*
*கையொப்பம்:* நி. லெனின்

நூல் திரட்டு,
*தொகுதி 45,*
*பக்கங்கள் 23-33*

## “பிராவ்தாவின்” பத்தாவது ஆண்டுவிழா

சட்டபூர்வமான போல்ஷிவிக்கு நாளேடு பிராவ்தா—ஜாரிஸ்டு சட்டங்கள் படியும் கூட சட்டபூர்வமானது—ஆரம்பமாகிப் பத்து ஆண்டுகள் ஆகின்றன. இந்தப் பத்தாண்டுக்கு முன்பு கடக்கப்பட்டது ஏறத்தாழ இன்னொரு பத்தாண்டு: போல்ஷிவிசத்தின் உதயத்திலிருந்து கணக்கிடுகையில் ஒன்பது ஆண்டு *(1903-1912)*, ‘‘போல்ஷிவிக்குத் திசைவழியிலான’’ பழைய இஸ்க்ரா *1900*ல் ஆரம்பமானதிலிருந்து கணக்கிட்டால் பதின்மூன்று ஆண்டு*(1900-1912).*

ருஷ்யாவில் வெளிவரும் போல்ஷிவிக்கு நாளேட்டின் பத்தாவது ஆண்டுவிழா... பத்து ஆண்டுகளே கழிந்துள்ளன! ஆனால் நமது போராட்டத்தின், இயக்கத்தின் உள்ளடக்கத்தைக் கொண்டு அளவிட்டோமாயின் அவை நூறு ஆண்டுகளுக்குச் சமமாகும். ஏனெனில் இரண்டாவது இரண்டரையாவது அகிலங்களின் தீரர்களைப் போன்ற ஐரோப்பிய அற்பர்களது பழைய அளவுகோலைக் கொண்டு அளவிட்டோமாயின், கடந்த ஐந்து ஆண்டுகள் கண்டிருக்கும் சமுதாய வளர்ச்சியின் வீச்சு மெய்யாகவே மலைக்கத்தக்கது. இந்த நாகரீக அற்பர்கள் ‘‘இயற்கையான’’ நிலைமையாகக் கருதப் பழகிக் கொண்டுவிட்டது எதுவெனில்: காலனிகளையும் அரைச்சார்பு நிலையிலுள்ள நாடுகளையும் ஏழை நாடுகளையும் சேர்ந்த கோடானு கோடியான மக்கள் (கறாராகச் சொல்வதெனில் நூறு கோடி மக்கள்), இந்தியர்களுக்கோ, சீனர்களுக்கோ இழைக்கப்படுவதை போன்றதைப் பொறுத்துக் கொண்டும், நம்பவே முடியாத சுரண்டலையும் அப்பட்டமான கொள்ளையையும் பட்டினியையும்

வன்முறையையும் மானபங்கத்தையும் சகித்துக் கொண்டும் இருக்கும்படியான ஒரு நிலைமையே; கொள்ளைப் பொருள் சமாதான வழியில் பாகப் பிரிவினை செய்யப்பட வேண்டுமா, அல்லது ஒரு கோடிக்கு அதிகமானோரையோ, குறைவானோரையோ சாகடித்து இந்த ஏகாதிபத்தியக் கொள்ளையானது—நேற்று ஜெர்மனிக்கும் பிரிட்டனுக்கும் இடையிலும், நாளைக்கு (பிரான்சும் பிரிட்டனும் ஏதேனும் ஒரு வகையில் பங்கெடுத்துக் கொள்ள) ஜப்பானுக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கும் இடையிலும்—பாகப் பிரிவினை செய்யப்பட வேண்டுமா என்று, ''நாகரீகமடைந்த'' ஆட்கள் ''சுதந்திரமாய்'', ''ஜனநாயக வழியில்'', ''நாடாளுமன்ற நடைமுறைக்கு'' ஏற்ப தீர்மானம் செய்யும் பொருட்டு, இம்மக்கள் இவ்வளவையும் சகித்துக் கொண்டிருக்கும் படியான ஒரு நிலைமையே.

உலக வளர்ச்சியின் வேகம் இப்படி அபாரமாய் அதிகரித்திருக்கிறது, கோடானு கோடியான புதிய மக்கள் இந்த வளர்ச்சியினுள் ஈர்க்கப்பட்டிருப்பதுதான் இந்த அதிகரிப்புக்குரிய அடிப்படைக் காரணம். பிரபஞ்சத்துக்கே தானேதான் மையமெனக் கருதப் பழகிக் கொண்டுவிட்ட பழைய முதலாளித்துவ, ஏகாதிபத்திய ஐரோப்பா கெட்டழிந்து போய், அழுகிய சீழ்க் கட்டி போல முதல் ஏகாதிபத்தியக் கொலைத்தாண்டவத்தில் வெடித்தது. பழைய ஐரோப்பாவின் இந்த நசிவு—ஷ்பெங்கிளர்களும்*, ஷ்பெங்கிளரைப் மெச்சிப் புகழக் கூடியோராகிய (அல்லது படிக்கவும் கூடியோராகிய) அறிவார்ந்த அற்பர்கள் எல்லோரும் எவ்வளவுதான் அழுது புலம்பினாலும்

* லெனின் இங்கு குறிப்பிடுவது, கருத்துமுதல்வாத ஜெர்மன் தத்துவவியலாளரான ஓஸ்வால்டு ஷ்பெங்கிளர். இவர் ஜெர்மன் பாசிஸத்தின் தத்துவார்த்த முன்னோடிகளில் ஒருவர். இவரது புத்தகமான ''மேற்கின் நசிவு'' ("*Decline of the West*"), முதல் உலக ஏகாதிபத்திய யுத்தத்தில் ஜெர்மனி தோல்வியடைந்ததும் 1918—1921ல் இரு தொகுதிகளில் வெளிவந்தது. ஏகாதிபத்தியத்தின் சித்தாந்தவாதிகளும் ஆதரவாளர்களும் உடனே இதை மெச்சிப் புகழ்ந்தார்கள்.—மொ-ர்.

உலக முதலாளித்துவ வர்க்கத்தினுடைய வீழ்ச்சி வரலாற்றின் பல நிகழ்ச்சிகளில் ஒன்றே அன்றி வேறல்ல. இந்த உலக முதலாளித்துவ வர்க்கம் ஏகாதிபத்தியக் கொள்ளையிலும் உலகோரில் பெருவாரியானோர் மீதான ஒடுக்கு முறையிலும் மிதமிஞ்சி ஊறி நலிவுற்றுவிட்டது.

இந்தப் பெருவாரியினர் இப்போது விழித்தெழுந்து விட்டனர், ''வலியவற்றிலும் வலிய'' வல்லரசுகளாலும் தடுத்து நிறுத்த முடியாத இயக்கத்தை இவர்கள் தொடங்கியிருக்கிறார்கள். இந்த வல்லரசுகளுக்கு இனி வாய்ப்பு இல்லை. முதல் ஏகாதிபத்திய யுத்தக் களரியில் ''வெற்றியாளர்களாய்த்'' தற்போது வெளிவந்திருப்பவையும் சிறிய—சின்னஞ் சிறிய என்றே சொல்வேன்—அயர்லாந்தைத் தோற்கடிப்பதற்குக் கூட திராணியற்றனவாய் இருக்கின்றன. செலாவணி, நிதி விவகாரங்களில் இவற்றினிடம் நிலவும் குழப்படியிலிருந்தும் இவற்றால் வெற்றிகரமாய் வெளிவர முடியப் போவதில்லை. இதற்கிடையில் இந்தியாவும் சீனாவும் கொந்தளித்துக் கொண்டிருக்கின்றன. இவை 70 கோடிக்கும் அதிகமான மக்களைக் கொண்டவை. எல்லா வழிகளிலும் இவற்றை ஒத்தவையான அக்கம்பக்கத்து ஆசிய நாடுகளையும் சேர்த்துக் கொண்டால், உலகில் வாழ்வோரில் பாதிக்கும் மேற்பட்டோரைக் கொண்டவை இவை. தவிர்க்கவொண்ணாத முறையில், மேன்மேலும் கூடுதலான வேகத்தில் இவை தமது 1905ஆம் ஆண்டினை நெருங்கி வந்து கொண்டிருக்கின்றன; சாரம்சமான முக்கிய வேறுபாடு என்னவெனில், 1905ல் ருஷ்யாவின் புரட்சி (எப்படியும் ஆரம்பத்திலேனும்) தனித்த ஒன்றாய், அதாவது ஏனைய நாடுகளும் உடனே புரட்சியினுள் ஈர்க்கப்படாமல், நடைபெற முடிந்தது. ஆனால் இந்தியாவிலும் சீனாவிலும் முதிர்ச்சியடைந்து வரும் புரட்சிகள், புரட்சிப் போராட்டத்துள், புரட்சி இயக்கத்துள், உலகப் புரட்சியினுள் ஈர்க்கப்பட்டு வருகின்றன, ஏற்கெனவே ஈர்க்கப்பட்டும் உள்ளன.

புரட்சிகள் யாவற்றிலும் பெரிதான இந்த உலகப் புரட்சி கண்டிருக்கும் இந்த அபார வேக அதிகரிப்பைச்

சட்டபூர்வமான போல்ஷிவிக்கு நாளேடு பிராவ்தாவின் பத்தாவது ஆண்டுவிழா மிகத் தெளிவாகக் குறியிட்டுக் காட்டுகிறது. 1906-1907ல் ஜாரிஸ்டு அரசாங்கம் புரட்சியை அறவே நசுக்கிவிட்டது என்பதாகவே தோன்றியது. ஆனால் சில ஆண்டுகளுக்கு எல்லாம் போல்ஷிவிக்குக் கட்சியால்—வேறொரு வடிவில், வேறொரு வழியில்—பகைவனது கோட்டைக்குள் ஊடுருவிச் சென்று, கேடுகெட்ட ஜாரிஸ்டு, நிலப்பிரபுத்துவ எதேச்சாதிகாரத்துக்குக் குழி பறித்திடும் தனது பணியை உள்ளிருந்தபடி நாள்தோறும் ''சட்டபூர்வமாய்'' நடத்திச் செல்ல முடிந்தது. மேலும் சில ஆண்டுகள் கழிந்தன, போல்ஷிவிக்குக் கட்சி ஏற்பாடு செய்த பாட்டாளி வர்க்கப் புரட்சி வெற்றி வாகை சூடியது.

பழைய இஸ்க்ரா 1900ல் ஆரம்பிக்கப்பட்ட போது, அதில் பத்துப் பன்னிரண்டு புரட்சியாளர்களே பங்கெடுத்துக் கொண்டார்கள். போல்ஷிவிசம் பிறப்பெடுத்த அந்த சட்டவிரோதக் காங்கிரசுகள் 1903ல் பிரஸ்ஸல்சிலும் லண்டனிலும் கூடிய போது, சுமார் நாற்பது பேர்தான் அவற்றில் கலந்து கொண்டார்கள்.[93]

1912-1913ல் லட்சக் கணக்கான தொழிலாளர்களது ஆதரவைப் பெற்று, சட்டபூர்வமான போல்ஷிவிக்குப் பிராவ்தா உதித்தெழுந்தது. இந்தத் தொழிலாளர்கள் சிறுசிறு தொகைகளாக வசூலித்துத் திரட்டியதன் மூலம், ஜாரிசத்தின் ஒடுக்குமுறையையும் சோஷலிசத்துக்கு வஞ்சகம் புரிந்த குட்டிமுதலாளித்துவ துரோகிகளாகிய மென்ஷிவிக்குகளின் போட்டியையும் அவர்கள் வெற்றி கொள்ள முடிந்தது.

1917 நவம்பரில் அரசியல் நிர்ணயச் சபைத் தேர்தல்களில் மொத்தம் 3 கோடி 60 லட்சம் வாக்காளர்களில் 90 லட்சம் பேர் போல்ஷிவிக்குகளுக்கு ஓட்டளித்தார்கள். மெய்ந் நடப்பில்—தேர்தல்களில் அல்ல—போராட்டத்தின் நடப்பில், 1917 அக்டோபர் முடிவிலும் நவம்பரிலும் போல்ஷிவிக்குகள் பாட்டாளி வர்க்கத்தாரிலும் வர்க்க உணர்வு கொண்ட விவசாயிகளிலும் பெரும்பான்மையின

ரது ஆதரவையும் (சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசின்[94] பிரதிநிதிகளில் பெரும் பான்மையினரால் இது பிரதிநிதித்துவம் செய்யப்பட்டது), மற்றும் உழைப்பாளி மக்களில் மிகுந்த செயல் முனைப்பும் அரசியல் உணர்வும் கொண்டதான பகுதியில் (அதாவது 1 கோடி 20 லட்சம் பேர் கொண்ட அன்றைய சேனையில்) பெரும்பான்மையோரின் ஆதரவையும் பெற்றிருந்தார்கள்.

கடந்த இருபது ஆண்டுகளில் உலகப் புரட்சி இயக்கம் கண்டிருக்கும் ''வேக அதிகரிப்புக்கு'' எடுத்துக் காட்டான இந்த ஒரு சில விவரங்கள், பெரிதும் அரைகுறையான மிகச் சிறிய சித்திரத்தையே தெரியப்படுத்துகின்றன. 15 கோடிக்கு மேற்படாத மக்களது வரலாறு குறித்துப் பெரிதும் குத்துமதிப்பான கருத்தினை மட்டுமே இவை நமக்கு அளிக்கின்றன. ஆனால் இதே இருபது ஆண்டுகளில் புரட்சியானது, 100 கோடிக்கும் அதிகமான மக்களைக் கொண்ட நாடுகளில் வெல்லற்கரிய சக்தியாய் வளர்ந்திருக்கிறது (அனைத்து ஆசியாவிலும் மட்டுமல்ல, தென் ஆப்பிரிக்காவையும் மறக்கலாகாது—அடிமை வாழ்வு அல்ல, மனித வாழ்வு வாழத் தனக்கு உரிமை உண்டு என்பதைத் தென் ஆப்பிரிக்கா அண்மையில் உலகுக்கு நினைவுபடுத்திக் காட்டிற்று, அதுவும் முழு அளவுக்கு நாடாளுமன்ற'' முறையில் அல்லாத வழிகளில் நினைவுபடுத்திக் காட்டிற்று).

''வக்கிரப் பிறவிகளான ஷ்பெங்கிளர்கள் சிலர்''—இப்படிச் சொல்வதற்காக மன்னிக்க வேண்டும்—புரட்சி சக்திகள் பற்றிய இந்த மதிப்பீடு ஐரோப்பிய, அமெரிக்கப் பாட்டாளி வர்க்கத்தைக் கணக்கில் எடுக்கத் தவறுவதாகக் கூறக் கூடும் (இரண்டாவது, இரண்டரையாவது அகிலங்களின் ''கெட்டிக்காரத்'' தலைவர்களிடமிருந்து எல்லா விதமான அபத்தங்களும் எதிர்பார்க்கக் கூடியவைதானே). கருத் தரித்தபின் ஒன்பது மாதம் கழித்து குழந்தை பிறக்கும் என்பதால், பிரசவம் நடைபெறப் போகும் மணியையும் நிமிடத்தையும் முன்கூட்டியே நிச்சயித்துச் சொல்லி விட முடியும்; அதோடு பிரசவத்தின் போது சிசுவின் இருக்கை நிலை, தாயின் உடல் நிலைமை, இருவருக்கும் ஏற்

படப் போகும் வலியின், அபாயத்தின் சரியான அளவு ஆகியவற்றை எல்லாம் நிர்ணயித்துவிட முடியும் என்பதாக இந்தக் ''கெட்டிக்காரத்'' தலைவர்கள் எப்போதும் வாதாடுகிறவர்கள். ரொம்ப ரொம்பக் ''கெட்டிக்காரர்கள்''! சர்வதேசப் புரட்சியினது வளர்ச்சியின் கண்ணோட்டத்தில், சார்ட்டிசத்திலிருந்து[95] மாறி, முதலாளித்துவ வர்க்கத்துக்கு அடிபணியும் ஹெண்டர்சனது அடிவருடித்தனக்குச் செல்வதையும், வர்லேனிலிருந்து மாறி ரெனெடேலுக்கும், வில்ஹெல்ம் லீப்க்னெஹ்டிலிருந்தும் பெபெலிலிருந்தும் சூடேகுமுக்கும் ஷெய்டெமனுக்கும் நோஸ்கேக்கும் செல்வதையும், நூற்றுக் கணக்கான மைல்களுக்கு நீண்டு செல்லும் அருமையான நெடுஞ்சாலையிலிருந்து மோட்டார் வண்டி ஒன்று ஒருசில கஜ தூரத்துக்கு அந்தச் சாலையில் இருக்கும் நாற்றம் வீசும் சகதிக்கு ''செல்வதற்கு'' ஒப்பானதே ஆகும்—இதை இந்தக் கனவான்களால் புரிந்து கொள்ள முடிவதே இல்லை.

மனிதர்கள்தாம் வரலாற்றைப் படைக்கிறார்கள். இதில் சார்ட்டிஸ்டுகளும் வர்லேன்களும் லீப்க்னெஹ்டுகளும் தமது மனத்தையும் இதயத்தையும் ஈடுபடுத்தினர். ஆனால் இரண்டாவது, இரண்டரையாவது அகிலங்களது தலைவர்கள் உடற்கூற்றின் பிற பகுதிகளை ஈடுபடுத்துகிறார்கள்: புதிய சார்ட்டிஸ்டுகளும் புதிய வர்லேன்களும் புதிய லீப்க்னெஹ்டுகளும் தளிர்த்தெழுவதற்காக இவர்கள் உரமிட்டு நிலத்தை வளம் பெறச் செய்கிறார்கள்.

மெத்தக் கடினமான இத்தருணத்தில் புரட்சியாளர்கள் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்ள முற்படுவது பெருங்கேடு விளைவிப்பதாகும். போல்ஷிவிசமானது சர்வதேச சக்தி ஆகியிருப்பது மெய்தான் நாகரீக வளர்ச்சியடைந்து முன்னேறியுள்ள எல்லா நாடுகளிலும் புதிய சார்ட்டிஸ்டுகளும் புதிய வர்லேன்களும் புதிய லீப்க்னெஹ்டுகளும் தோன்றியிருப்பதும், சட்டபூர்வமான கம்யூனிஸ்டுக் கட்சிகளாய் (பத்து ஆண்டுகளுக்கு முன்பு ஜாராட்சியில் நமது பிராவ்தா எந்த அளவுக்கு இருந்ததோ அதே அளவுக்குச் சட்டபூர்வமானவை) வளர்ந்து வருவதும் மெய்தான்.

*ஆயினும் தற்போதைக்குச் சர்வதேச முதலாளித்துவ வர்க்கம் அதன் வர்க்கப் பகைவனை விட ஒப்பிடற்கரிய அளவுக்குப் பலமுடையதாகவே இருக்கிறது. ருஷ்யாவில் பாட்டாளி வர்க்க ஆட்சியதிகாரம் உதித்தெழுவதைத் தடுப்பதற்காகவும், இதன் உதயத்துடன் கூடவே வரும் படியான அபாயங்களையும் துன்பங்களையும் பத்து மடங்கு அதிகமாக்குவதற்காகவும் தன்னால் இயன்றது அனைத்தும் செய்திருக்கும் இந்த முதலாளித்துவ வர்க்கம், தனது வெள்ளைப்படை மூலமான யுத்தங்களையும் ஏகாதிபத்திய யுத்தங்களையும் பிறவற்றையும் கொண்டு பத்து லட்சக் கணக்கானோரையும் கோடிக் கணக்கானோரையும் வதைபட வைக்கவும், செத்து மடியச் செய்யவும் முடியும்படியானதாகவே இன்னமும் இருக்கிறது. இதை நாம் மறக்கலாகாது. இந்தக் குறிப்பிட்ட நிலைமைக்கு ஏற்றவாறு நாம் நமது போர்த் தந்திரத்தைச் சாமர்த்தியமாகத் தகவமைத்துக் கொள்ள வேண்டும். முதலாளித்துவ வர்க்கம் தங்குதடையின்றி தொடர்ந்து வதைப்பதற்கும் சித்திரவதை செய்வதற்கும் கொல்வதற்கும் பலம் படைத்ததாகவே இருக்கிறது. ஆனால் புரட்சிகர பாட்டாளி வர்க்கத்தின் முழுமையான வெற்றியை—தவிர்க்க வொண்ணாததும் உலக வரலாற்றுக் கண்ணோட்டத்தில் அதிக தொலைவில் இல்லாததுமாகிய இந்த வெற்றியை—அதனால் தடுத்து நிறுத்திவிட முடியாது.*

*1922 மே 2*

பிராவ்தா, இதழ் *98*,
*1922 மே 5*
*கையொப்பம்:* நி. லெனின்

நூல் திரட்டு,
*தொகுதி 45,*
*பக்கங்கள் 173-177*

# ஜினேவா மாநாட்டுக்குச் சென்ற பிரதிநிதிக் குழுவின் உரை பற்றிய அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் கமிட்டியின் நகல் தீர்மானம்[96]

*இயோஃபெயின் உரை பற்றிய அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் கமிட்டியின் நகல் தீர்மானம் ஏறத்தாழ பின் வருமாறு வரையப்பட வேண்டும்:*

*1. அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் கமிட்டியின் பிரதிநிதிக் குழு, நாட்டைப் பலவந்தம் செய்து அடிமை நிலையில் இருத்தித் தனியார் சொத்தை மீட்டமைப்பதற் கான முயற்சிகளை எதிர்த்து ரு.சோ.சோ.கூ. குடியரசின் முழுநிறை அரசுரிமையைப் பாதுகாத்து நின்றதன் மூலமும், ஜெர்மனியுடன் ஓர் உடன்படிக்கை[97] முடித்துக் கொண்ட தன் மூலமும் தனது பணியினை சரிவர நிறைவேற்றியிருக் கிறது.*

*2. சர்வதேச அரசியல், பொருளாதாரச் சூழ்நிலையைக் குண நிர்ணயம் செய்யும் இயல்புகள் வருமாறு:*

*—அரசியல்: சமாதானம் இல்லாத நிலை, புதிய ஏகாதிபத்திய யுத்தங்கள் மூளும் அபாயம் [ஐயர்லாந்து, இந்தியா, சீனு, மற்றும் பிற; பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும் இடையிலும், ஜப்பானுக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டுக் கும் இடையிலும் உறவுகள் மோசமாகி வருதல், இன்ன* **பிற** *(இன்னும் விவரமாய்)].*

*3.—பொருளாதாரம்: ''வெற்றி'' நாடுகளால், மித மிஞ்சி வலுமிக்கனவாயும் யுத்தத்தின் மூலம் (=கொள்ளை யின் மூலம்) செல்வம் திரட்டியவையாகவும் இருக்கும்*

இவற்ருல், யுத்தம் முடிவுற்று மூன்றரை ஆண்டுகளுக்குப் பிற்பாடும் பழைய முதலாளித்துவ உறவுகளையுங்கூட திரும்பவும் அமைத்திட முடியவில்லை [செலாவணிக் குழப்பம்; வெர்சேய் உடன்படிக்கை நிறைவேற்றப்படாதிருத்தல், நிறைவேற்றப்படுதல் சாத்தியமற்றதாய் இருத்தல்; அமெரிக்க ஐக்கிய நாட்டுக்குக் கடன்கள் திருப்பித் தரப்படாமல் இருத்தல்; இன்ன பிற (இன்னும் விவரமாய்)].

4. ஆகவே, கானெ தீர்மானங்களின் §1, இரு சொத்து அமைப்புகளின் (முதலாளித்துவ அல்லது தனிச் சொத்தும், இதுகாறும் ரு.சே.சோ.கூ. குடியரசில் மட்டுமே ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கும் கம்யூனிசச் சொத்தும்) சமத்துவத்தை அங்கீகரிப்பதன் மூலம், முதலாவது சொத்து அமைப்பின் தகர்வையும் கையாலாகாத்தனத்தையும், சமத்துவத்தின் அடிப்படையில் இரண்டாவதுடன் அது உடன்பாட்டுக்கு வர வேண்டியதன் தவிர்க்கவொண்ணுமையையும், மறைமுகமாகத்தான் என்ருலுங்கூட, இவ்விதம் அங்கீகரிக்கும்படி நிர்ப்பந்திக்கப்படுகிறது.

5. ஜினேவாவில் அரசுகளது கானெ வரையறைகளின்[68] ஏனைய §§உம் மற்றும் பதிவுக்குறிப்புகளும் பிறவும் இதற்கு முரண்பாடாய் இருக்கின்றன, ஆகவே இவை செத்துப் பிறந்தவையே ஆகும்.

6. இரு சொத்து அமைப்புகளிடையிலான மெய்யான சமத்துவம்—தனிச் சொத்தையும் தனிச் சொத்தால் தோற்றுவிக்கப்படும் பொருளாதாரக் குழப்பத்தையும் யுத்தங்களையும் அனைத்து உலகும் விட்டொழித்துவிட்டு உயர் வகைச் சொத்து அமைப்புக்கு மாறும் காலம் வருகிற வரையில், தற்காலிக நிலையாக மட்டும்தான் எனினும்—ரப்பால்லோ உடன்படிக்கையில் மட்டுமே காணப்படுகிறது.

ஆகவே அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் கமிட்டியானது:

இன்னல்களிலிருந்தும் குழப்பங்களிலிருந்தும் யுத்தங்கள் மூளும் அபாயத்திலிருந்தும் (இரு சொத்து அமைப்புகள்—

இவற்றில் ஒன்று காலங் கடந்ததாகிவிட்ட முதலாளித்துவ சொத்து—இருந்து வரும் வரையில்) விடுபட்டு வெளி வருவதற்குரிய பிழையற்ற ஒரே வழியாக ரப்பால்லோ உடன்படிக்கையை வரவேற்கிறது;

ரு.சோ.சோ.கூ. குடியரசுக்கும் முதலாளித்துவ நாடுகளுக்கும் இடையிலான உறவுகளுக்கு இயற்கையானதாக இந்த வகை உடன்படிக்கையை மட்டுமே அங்கீகரிக்கிறது;

—இந்த வழிகளிலான கொள்கையைக் கடைப்பிடிக்கும்படி மக்கள் கமிசார் அவைக்கும் அயல் துறை மக்கள் கமிசாரகத்துக்கும் கட்டளையிடுகிறது;

—ரு.சோ.சோ.கூ. குடியரசுடன் சமஷ்டி உறவுகள் கொண்டுள்ள எல்லாக் குடியரசுகளுடனுமான உடன்பாட்டின் மூலம் இதை உறுதி செய்யும்படி அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் கமிட்டியின் தலைமைக் குழுவுக்குக் கட்டளையிடுகிறது;

—ரு.சோ.சோ.கூ. குடியரசின் உழைப்பாளி மக்களுக்கு மிகவும் விசேஷமான அனுகூலங்கள் பயக்கும் விதிவிலக்கான நிலைமைகளில் மட்டுமே ரப்பால்லோ வகைப்பட்ட உடன்படிக்கையிலிருந்து திரிபுகளுக்கு இடம் தரும்படி அயல் துறை மக்கள் கமிசாரகத்துக்கும் மக்கள் கமிசார் அவைக்கும் கட்டளையிடுகிறது; இன்ன பிற.

*1922 மே 15 அல்லது 16ல் எழுதப்பெற்றது*

| | |
|---|---|
| லெனின், நூல் திரட்டு,<br>4ஆவது ருஷ்யப் பதிப்பின்<br>தொகுதி 33ல், 1950ல்<br>முதன் முதல் வெளிவந்தது | நூல் திரட்டு,<br>தொகுதி 45,<br>பக்கங்கள் 192-193 |

## மாஸ்கோ சோவியத்தின் முழுநிறைக் கூட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு 1922 நவம்பர் 20[99]

(பலத்த கையொலி முழக்கம். ''சர்வ தேசியக் கீதம்'' பாடப்படுகிறது.) தோழர்களே, உங்களுடைய கூட்டத்துக்கு நான் முன்னரே வர முடியாமற் போனதற்காகப் பெரிதும் வருந்துகிறேன், மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். நான் அறிந்த வரை சில வாரங்களுக்கு முன்பே, மாஸ்கோ சோவியத்துக்கு வந்து கலந்து கொள்ள நீங்கள் எனக்கு வாய்ப்பளிக்க நினைத்தீர்கள். எனது உடல்நலக் குறைவுக்குப் பிற்பாடு, டிசம்பர் முதலாய் நீண்டதொரு காலத்துக்கு—ஊழியத் துறைக்குரிய பதத்தை உபயோகிப்பதெனில்—நான் ஏலாத நிலையில் இருந்ததால், என்னுல் வர முடியவில்லை. வேலை ஆற்றல் இவ்விதம் குறைந்து போய், நான் எனது தற்போதைய உரையினை ஒவ்வொரு வாரமாய் ஒத்திப் போட்டு வர நேர்ந்தது. உங்களுக்கு நினைவிருக்கும், எனது வேலையில் மிகக் கணிச பகுதியை முதலில் தோழர் திசியுரூப்பா மீதும், பிறகு தோழர் ரீக்கவ் மீதும் நான் குவியச் செய்து வந்தேன். தோழர் காமெனெவ் மீதும் கூடுதலாகக் குவியச் செய்ய வேண்டியிருந்தது. ஏற்கெனவே நான் உபயோகித்த உவைமையிலேயே சொல்வதெனில், திடுமென இரு சுமைகளை இவர் இழுக்க வேண்டியிருந்ததைக் குறிப்பிட்டாக வேண்டும். ஆயினும்—தொடர்ந்து உவமையைக் கையாளுவதெனில் — குதிரை அளவுகடந்த ஆற்றல் வாய்ந்ததாகவும் ஆர்வமிக்கதாகவும் அமைந்து விட்டதை எடுத்துரைக்க வேண்டும் (கையொலி.) இருப்பினும்

எவரும் இரு சுமைகளை இழக்கலாகாது. பொறுமை யிழந்தவனாய் இப்போது நான், தோழர்கள் திசியுரூப்பா வும் ரீக்கவும் திரும்பி வருவதற்காகக் காத்திருக்கிறேன். சிறிதளவேனும் நல்ல முறையில் வேலையினை நாங்கள் பகிர்ந்து கொண்டாக வேண்டும். என்னைப் பொறுத்த வரை எனது வேலை ஆற்றல் குறைந்திருப்பதால், விவ காரங்களைக் கவனிப்பதற்கு நான் விரும்புவதைக் காட்டி லும் எனக்கு மிக அதிக நேரமாகி விடுகிறது.

1921 டிசம்பரில், வேலை செய்வதை நான் அறவே நிறுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. அப்போது ஆண் டின் இறுதி. புதிய பொருளாதாரக் கொள்கைக்கான மாற் றத்தை நாம் செயல்படுத்திக் கொண்டிருந்தோம். 1921 உம் ஆண்டின் ஆரம்பத்திலேயே நாம் இந்த மாற்றத்தை மேற்கொண்டிருந்தும், இது மிகக் கடினமான—மிகமிகக் கடினமானதெனக் கூறுவேன்—மாற்றம் என்பது அப்போதே தெரிய வந்தது. இப்போது நாம் பதினெட்டு மாதங் களுக்கு அதிகமாய் இந்த மாற்றத்தைச் செயல்படுத்தி வந்துள்ளோம். புதிய நிலைமைகளுக்கு ஏற்ப, குறிப்பாய்ப் புதிய பொருளாதாரக் கொள்கைக்குரிய நிலைமைகளுக்கு ஏற்ப, பெரும்பான்மையோர் புதிய இடங்களை ஏற்றுத் தம்மை ஒழுங்கு செய்து கொள்ள இது போதுமான நேரம் என்பதாகவே எவரும் நினைப்பார்.

அயல் துறைக் கொள்கையைப் பொறுத்த வரை, இங்கே நாம் மிகச் சொற்ப மாற்றங்களையே செய்ய வேண்டி யிருந்தது. முன்பே நாம் ஏற்றிருந்த கொள்கை வழி யையே கடைப்பிடித்தோம். சிறிதும் முரணின்றியும் பெரிய அளவிலான வெற்றியோடும் நாம் இவ்வழியைக் கடைப் பிடித்தோம் என்று மனத்துள் மாசின்றிக் கூற முடியுமென நினைக்கிறேன். அதைப் பற்றி விவரமாய் விரித்துரைக்கத் தேவையில்லை என்பதே என் கருத்து. விளாதிவஸ்தோக் பிடிக்கப்பட்டிருப்பதும், அதைத் தொடர்ந்து நடைபெற்ற ஆர்ப்பாட்டமும் கூட்டரசு பிரகடனம் செய்யப்பட்ட தும்[100]—சில தினங்களுக்கு முன்புதான் இவை குறித்து நீங்கள் பத்திரிகைகளில் படித்தீர்கள்—இத்துறையில் மாறு

தல்கள் தேவையில்லை என்பதை நிரூபித்துக் காட்டியும், தெட்டத் தெளிவாகப் புலப்படுத்தியும் உள்ளன. நாம் செல்லும் பாதை முற்றும் தெளிவாகவும் திட்டவட்டமாக வும் வரையறை செய்யப்பட்டதாகும். உலகின் எல்லா நாடுகளுக்கும் எதிரே நமக்கு இந்தப் பாதை வெற்றி கிட் டும்படி உறுதி செய்துள்ளது. ஆயினும் இந்நாடுகளில் சில, நம்முடன் ஒரே மேசையின் முன் அமர மறுப்பதாகத் தயங்காமல் இன்னமும் அறிவிக்கின்றன. இருந்த போதி லும் பொருளாதார உறவுகளும் அவற்றைத் தொடர்ந்து அரசுத் தூது உறவுகளும் மேம்பட்டு வருகின்றன, மேம் படத்தான் வேண்டும், நிச்சயம் மேம்படவும் செய்யும். இதனை எதிர்க்கும் ஒவ்வொரு நாடும் தாமதத்துக்கு உள் ளாகிவிடும் அபாயத்தை எதிர்நோக்க வேண்டியிருக்கும், குறிப்பிடத்தக்க முக்கிய விவகாரங்களில் பிரதிகூலமடை யும்படி நேரலாம். இப்போது நாம் எல்லோருமே இதைக் காண முடிகிறது—சஞ்சிகைகளிலும் செய்தியேடுகளிலும் மட்டுமல்ல. ஏற்பட்டிருக்கும் மாற்றங்கள் பெரியவை என் பதை வெளிநாடுகளுக்குச் சென்று வரும் தோழர்களும் காண்கிறுர்கள் என்று நினைக்கிறேன். பழைய உவமை ஒன்றை எடுத்தாளலாமெனில், இங்கே நாம் பிற ரயில் வண்டிகளுக்கோ, பிற வாகனுதிகளுக்கோ மாறிச் சென்று விடவில்லை.

ஆனுல் நமது உள்நாட்டுக் கொள்கையில், 1921 வசந்தத் தில் நாம் செய்த மாற்றம் தொடர்ந்து நமக்குச் சில இன் னல்களை உண்டாக்கி வருகிறது—நம்மிடையே இது குறித்து சர்ச்சைகளோ, கருத்து வேறுபாடுகளோ எழ வழியில்லாத படி அப்படி அளவுமீறி வலு வாய்ந்த, ஐயமற அறிவுறுத் தும்படியான சூழ்நிலைமைகளால் அவசியமாக்கப்பட்டுவிட்ட இந்த மாற்றம் தொடர்ந்து நமக்குச் சில இன்னல்களை— பெரிய இன்னல்களை என்றே சொல்வேன்—உண்டாக்கி வருகிறது. இந்த மாற்றம் அவசியமே என்பது குறித்து நமக்கு எந்தச் சந்தேகமும் இருப்பதல்ல இதற்குக் கார ணம்—அது குறித்து எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை. நமது புதிய பொருளாதாரக் கொள்கையின் சோதனை நாம்

எதிர்பார்த்த வெற்றியை அளித்திருக்கிறது என்பது குறித்து நமக்கு எந்தச் சந்தேகமும் இருப்பதல்ல காரணம். அது சம்பந்தமாய் எந்தச் சந்தேகமும் இல்லை—இதை நான் திட்டவட்டமாகச் சொல்ல முடியும்—நமது கட்சி அணிகளிலும் சரி, கட்சி சார்பில்லாத தொழிலாளர்களும் விவசாயிகளுமான பெருந் திரள் மக்களது அணிகளிலும் சரி எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை.

இந்த அர்த்தத்தில் இப்பிரச்சினை எந்த இன்னலையும் உண்டாக்கிவிடவில்லை, நமக்குள்ள இன்னல்கள் நம்மை எதிர்நோக்கும் பணியிலிருந்து எழுகிறவை; அதன் நிறைவேற்றத்துக்குப் புதிய ஆட்களது சேவைகளும் அசாதாரண நடவடிக்கைகளும் அசாதாரண முறைகளும் அடிக்கடி தேவைப்படும் ஒரு பணியை நாம் எதிர்நோக்குவதிலிருந்து எழுகிறவை. இது சரியா, அல்லது அது சரியா என்பது பற்றி இன்னமும் நம்மிடையே சந்தேகங்கள் இருந்து வருகின்றன. ஒரு திசையிலோ, இன்னொன்றிலோ மாற்றங்கள் செய்யப்படுகின்றன. ஆனால் இவை இரண்டும் நீண்டதொரு காலத்துக்குத் தொடர்ந்து இருக்கவே செய்யும் என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும். "புதிய பொருளாதாரக் கொள்கை!" விபரீதமான பெயர்தான். இக்கொள்கை நம்மைத் திரும்பிச் செல்ல வைப்பதால் இது புதிய பொருளாதாரக் கொள்கை என்று அழைக்கப்பட்டது. இப்போது நாம் ஒரு விதத்தில் பின்வாங்கிச் செல்கிறோம், திரும்பிச் செல்கிறோம். ஆனால் முதலில் பின்வாங்கியபின் ஓடிவந்து தாவி முன்னிலும் பெரிய அளவில் முன்னால் பாயும் பொருட்டு நாம் இதைச் செய்கிறோம். இந்த நிபந்தனையின் பேரிலேதான் நாம் பின்வாங்கிச் சென்று நமது புதிய பொருளாதாரக் கொள்கையைக் கடைப்பிடிக்கின்றோம். இப்படிப் பின்வாங்கியபின், மிகவும் பிடிவாதமாகத் தாக்குதல் ஆரம்பிப்பதற்காக நாம் எவ்விடத்தில், எப்படித் திரும்பவும் சக்திகளை ஒன்றுதிரட்டித் தக்கபடி திருத்தி மாற்றமைவு செய்ய வேண்டும் என்பதைத் தற்போது நாம் அறியோம். இந்தச் செயல்கள் யாவற்றையும் செவ்வனே செய்யும் பொருட்டு—பழமொழி கூறுவது

போல்—பத்து தரமல்ல, நூறு தரம் பார்த்து விட்டுப் பாய வேண்டும். நமது பணிகள், பிரச்சினைகள் யாவற்றையும் சமாளிக்கையில் எதிர்ப்பட வேண்டியிருக்கும் நம்புதற்கரிய இன்னல்களை வென்று முன்செல்லும் பொருட்டு நாம் இவ்வாறு செய்தாக வேண்டும். சாதிக்கப் பெற்றுள்ளவற்றைச் சாதிப்பதற்காக எப்படிப்பட்ட தியாகங்கள் புரிய வேண்டியிருந்தது என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். உள்நாட்டு யுத்தம் எப்படி நீடித்துச் சென்றது, எவ்வளவு முயற்சி அதற்காகச் செலவிட நேர்ந்துள்ளது என்பது உங்களுக்குத் தெரியும். சரி, இப்போது விளாதிவஸ்தோக் பிடிக்கப்பட்டுவிட்டது (நெடுந் தொலைவுக்கு அப்பால் இருப்பினும் விளாதிவஸ்தோக் எப்படியும் நம்முடைய நகர்களில் ஒன்றுகும்) (நீடித்த கையொலி முழக்கம்). எல்லாரும் நம்முடன் சேர்ந்து கொள்ள, நம்முடைய சாதனைகளில் சேர்ந்து கொள்ள விரும்புவதை இது நமக்குத் தெரியப்படுத்துகிறது. ருஷ்யாவின் சோவியத் சோஷலிசக் கூட்டாட்சிக் குடியரசு இப்போது இங்கிருந்து அங்கு வரை விரிந்து பரந்து செல்கிறது. நம்முடன் சேர்ந்து கொள்ள வேண்டுமென்ற இந்த விருப்பமானது நமது உள்நாட்டுப் பகைவர்களிடமிருந்து மட்டுமல்லாமல், நம்மைத் தாக்கிய அந்நியப் பகைவர்களிடமிருந்தும் நம்மை விடுவித்திருக்கிறது. ஜப்பானை மனதிற்கொண்டு நான் இதைச் சொல்கிறேன்.

அரசுறவுத் துறையில் அனைத்து உலகும் அங்கீகரிக்கும் திட்டவட்டமான ஒரு நிலையை நாம் வென்று கொண்டுவிட்டோம். நீங்கள் எல்லோருமே இதைக் காண்கிறீர்கள். இதன் விளைவுகளைக் காண்கிறீர்கள். ஆனால் இதைப் பெறுவதற்கு எவ்வளவு காலமாகியுள்ளது! பொருளாதாரக் கொள்கைத் துறையிலும் மற்றும் வாணிபக் கொள்கைத் துறையிலும் நமது உரிமைகளுக்கு நமது பகைவர்களிடமிருந்தும் அங்கீகாரம் வென்று கொண்டுவிட்டோம். வாணிப ஒப்பந்தங்கள் முடிவாகியுள்ளதானது இதை நிருபிக்கிறது.

புதிய பொருளாதாரக் கொள்கை எனப்படும் பாதையைப் பதினெட்டு மாதங்களுக்கு முன்பு மேற்கொண்ட

நாம் அந்தப் பாதையிலே முன்னேறுவது நம்புதற்கு இயலாதபடி இவ்வளவு கடினமாயிருக்கக் காரணம் என்ன வென்பது புரிகிறது. நாம் வாழும் இந்நாடு யுத்தத்தால் அப்படிக் கடுமையாகப் பாழ்படுத்தப்பட்டிருக்கிறது, முறை யான வாழ்க்கைக்கு வழியில்லாதபடி அடித்துச் சாய்க்கப் பட்டிருக்கிறது; அந்த அளவுக்குத் துன்பப்பட்டு, அந்த அளவுக்குச் சகித்துக் கொள்ள வேண்டியிருந்ததால், வேறு வழியின்றி நாம் நமது கணக்கீடுகள் யாவற்றையும் மிக மிகச் சிறிய சதவிகிதத்திலிருந்து—யுத்தமுற்காலச் சதவி கிதத்திலிருந்து ஆரம்பிக்கிறோம். நமது வாழ்க்கை நிலைமை களுக்கு இந்த அளவுகோலையே நாம் அனுசரிக்க வேண்டி யிருக்கிறது. இதைச் செய்கையில் சில சமயம் நாம் பொறு மையிழந்து கொதிப்படைகிறோம், இன்னல்கள் பிரம்மாண்ட மானவை என்ற முடிவுக்கே எப்போதும் வந்தடைகிறோம். இத்துறையில் நமக்கு நாம் வகுத்துக் கொண்டுள்ள பணியினை சாதாரணமான முதலாளித்துவ நாடு ஒன்றில் இருந்து வரும் நிலைமைகளுடன் நாம் ஒப்பிட்டுப் பார்ப் பதால், இது மேலும் பிரம்மாண்டமானதாகத் தெரிகிறது. நமக்கு நாம் இந்தப் பணியை வகுத்துக் கொண்டோம், ஏனெனில் வழக்கமாய் இம்மாதிரியான நிலைமைகளில் அளிக் கப்படக் கூடிய உதவியை செல்வம் படைத்த அரசுகள் நமக்கு அளிக்குமென எதிர்பார்க்க முடியாதென்பதைப் புரிந்து கொண்டோம். உள்நாட்டு யுத்தத்துக்குப் பிற்பாடு அனேகமாய் முழு அளவுக்கு நம்மை எதிர்த்து மறியல் நடத்தினர், அதாவது முதலாளித்துவ உலகில் வழக்கமாக வும் முறையாகவும் இருக்கும்படியான பொருளாதாரத் தொடர்புகளை நம் சம்பந்தமாய் நிறுவிக் கொள்ளப் போவதில்லையென்று கூறுகிறார்கள்.

நாம் புதிய பொருளாதாரக் கொள்கையை மேற் கொண்டு பதினெட்டு மாதங்களுக்கு மேலாகின்றன, நமது முதலாவது சர்வதேச உடன்படிக்கையைச் செய்து கொண்டு அதற்கும் அதிகமான காலமாகிறது. அப்படியும் முதலாளித் துவ வர்க்கத்தார் எல்லாரும், அரசாங்கங்கள் யாவும், நம்மை எதிர்த்து நடத்தும் இந்த மறியல் ஓயவில்லை,

தொடர்ந்து நம்மைப் பாதித்து வருகிறது. புதிய பொருளாதார நிலைமைகளை நாம் கைக்கொண்ட போது, இதன்றி வேறு எதையும் நாம் எதிர்பார்க்கவில்லை. ஆயினும் நாம் மாற்றத்தைச் செய்தே ஆக வேண்டும், தன்னந் தனியே நின்று வெற்றி பெற்றே ஆக வேண்டும் என்பதில் நமக்கு எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை. நமக்கு அளிக்கப்படக் கூடிய எந்த உதவியும், முதலாளித்துவ அரசுகள் நமக்கு அளிக்கக்கூடிய எந்த உதவியும், இந்த நிலைமையை அகற்றுவதற்குப் பதில், மிகப் பெருவாரியான சந்தர்ப்பங்களில், இதைக் கடுமையாக்கும், உக்கிரமடையச் செய்யும் என்பதாகவே தெரிகிறது—நாம் தொடர்ந்து முன்செல்லச் செல்ல இது மேலும் மேலும் தெளிவாகி வருகிறது. ''தன்னந் தனியே''—என்று நாம் கூறிக் கொண்டோம். ''தன்னந் தனியேதான்'' என்றே கூறுகிறது அனேகமாய் ஒவ்வொரு முதலாளித்துவ நாடும்—நாம் எந்த உடன்பாடும் செய்து கொண்ட, எந்தக் காரியத்தையும் மேற்கொண்ட, எந்தப் பேச்சுவார்த்தைகளும் தொடங்கியுள்ள ஒவ்வொரு முதலாளித்துவ நாடும். விசேஷ இன்னல் இங்கேதான் காணக் கிடக்கிறது. இந்த இன்னலை நாம் உணர்ந்து கொண்டாக வேண்டும். நமக்குரிய அரசியல் அமைப்பை நாம் மூன்று ஆண்டுகளுக்கு மேல் வேலை செய்து கட்டி எழுப்பியுள்ளோம். நம்புதற்கரிய வீரம் நிறைந்த, நம்புதற்கரிய கடுமை வாய்ந்த வேலை அது. இதுகாறும் நாம் இருந்து வந்த நிலையில், அநாவசியமாய் எதையும் உடைத்தெறிகிறோமா என்று பார்ப்பதற்கு நமக்கு அவகாசம் இருக்கவில்லை; தியாகங்கள் மிகுதியாகிவிடுமோ என்று கவனிக்க அவகாசம் இருக்கவில்லை—தியாகங்கள் நிறைவே புரிய வேண்டியிருந்தது, ஏனெனில் அப்போது நாம் தொடங்கிய போராட்டம் பழைய சமுதாய அமைப்புக்கு எதிரான ஜீவ மரணப் போராட்டமாகும் (நீங்கள் இதை நன்கு அறிவீர்கள், இதை விவரிக்கத் தேவையில்லை). வாழ்வதற்கான, சமாதான வழியில் வளர்ச்சி காண்பதற்கான உரிமை நமக்கு வரப் பெறுவதற்காக அவ்வமைப்பை எதிர்த்து நாம் போராடினோம். இந்த உரிமையைப் பெறுவதில் நாம் வெற்றி

பெற்றுள்ளோம். இதைச் சொல்வது நாமல்ல; நம்பால் பாரபட்சம் கொண்டவர்களாகக் குற்றம் சாட்டப்படக் கூடிய சாட்சிகள் அளித்திடும் சாட்சியமல்ல இது. நமது பகைவர்களது முகாமில் இருப்போரும், ஆகவே இயல்பாகவே பாரபட்சம் கொண்டோருமான—நமக்கு ஆதரவாக அல்ல, எதிராகப் பாரபட்சம் கொண்டோருமான—சாட்சிகள் அளித்திடும் சாட்சியம் இது. இந்த சாட்சிகள் தெனீக்கினது முகாமில் இருந்தவர்கள், கைப்பற்றப்பட்ட பிரதேசங்களிலான ஆட்சியை நெறியாண்மை புரிந்தவர்கள். இவர்களது பாரபட்சம் நமக்குப் பெருத்த சேதம் விளைவித்ததை, பிரம்மாண்ட நாசத்தை உண்டாக்கியதை நாம் அறிவோம். இவர்களால் நாம் எல்லா வகையான நஷ்டங்களுக்கும் ஆட்பட்டோம்; எல்லா விதமான செல்வங்களையும், செல்வத்துக்கு எல்லாம் செல்வமான மனித உயிர்களும் உட்பட யாவற்றையும் நம்புதற்கரிய பெரிய அளவில் இழந்தோம். இப்போது நாம் நமது பணிகளை மிகவும் கவனமாக அலசி ஆராய்ந்தாக வேண்டும்; நமது முந்திய ஆதாயங்களைக் கைவிடாதிருப்பதே பிரதான பணியாய் இருக்குமென்பதைப் புரிந்து கொண்டாக வேண்டும். நமது பழைய ஆதாயங்களில் ஒன்றையேனும் நாம் கைவிட மாட்டோம். (கையொலி.) ஆயினும் முற்றிலும் புதியதான பணி ஒன்று நம்மை எதிர்நோக்குகிறது; பழையது மிகத் தெளிவான முட்டுக்கட்டையாகிவிடலாம். இந்தப் பணியைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாகவே இருக்கும். எனினும் இது புரிந்து கொள்ளப்பட வேண்டிய ஒன்று. அப்போதுதான், நம்மை வெகுவாக மாற்றிக் கொள்வது அவசியமாய் இருக்கும் ஒரு நேரத்தில், நாம் எப்படி வேலை செய்வதென்று கற்றுக் கொள்ள முடியும். தோழர்களே, இந்தச் சொற்களும் கோஷங்களும் புரியும்படியானவையே என்று நினைக்கிறேன், ஏனெனில், கட்டாயத்தின் காரணமாய் நான் ஏறத்தாழ ஓராண்டாய் இங்கில்லாமற் போக நேர்ந்த இக்காலத்தில், நடப்பு வேலைகளை நீங்கள் நடைமுறையில் நிறைவேற்றி வந்திருக்கிறீர்கள்; பல்வேறு வழிகளிலும் நூற்றுக் கணக்கான சந்தர்ப்பங்களிலும் இது

பற்றிப் பேசியும் ஆலோசித்தும் வந்திருக்கிறீர்கள்; இது சம்பந்தமான உங்களது சிந்தனைகள் ஒரேயொரு முடிவுக்கே, அதாவது இதுகாறும் உள்நாட்டு யுத்தத்தில் நாம் கையாண்ட நெகிழ்வினை மேலும் அதிக அளவுக்கு இப்போது வெளிப்படுத்தியாக வேண்டுமென்ற ஒரேயொரு முடிவுக்கே இட்டுச் செல்ல முடியும் என்று நான் திடமாக நம்புகிறேன்.

பழையதை நாம் கைவிடலாகாது. முதலாளித்துவ அரசுகளுக்கு நம்மைத் தகவமைக்கும் வரிசையான பல சலுகைகள், அவற்றை நம்முடன் தொடர்பு கொள்ளச் செய்து அவற்றின் இலாபத்துக்கு உறுதியளிக்கும் சலுகைகளாகும். இந்த இலாபம் சில நேரங்களில் அதற்குரிய அளவைவிட அதிகமானதாய் இருந்தாலும் இருக்கலாம். அதே போது உற்பத்திச் சாதனங்களில் ஒரு சொற்ப அளவையே நாம் விட்டுக் கொடுக்கிறோம், அனேகமாய் முழு அளவுக்கு உற்பத்திச் சாதனங்கள் அரசின் வசமே இருந்து வருகின்றன. ஆங்கிலேயர் உர்கார்ட் முன்மொழிந்த சலுகை[101] குறித்து சில நாட்களுக்கு முன்பு பத்திரிகைகள் விவாதித்தன. இதுகாறும் இவர் அனேகமாய் உள்நாட்டு யுத்தக் காலம் முழுதும் நமக்கு எதிராய் இருந்துள்ளவர். ''உள்நாட்டு யுத்தத்தில் ருஷ்யாவுக்கு எதிராய், இப்படியும் அப்படியும் நமக்கு இழப்பு உண்டாக்கத் துணிந்த இந்த ருஷ்யாவுக்கு எதிராய், நமது குறிக்கோளை நாம் ஈடேற்றிக் கொள்வோம்'' என்று இவர் கூறுவது வழக்கம். அதற்கெல்லாம் பிற்பாடும் நாம் அவருடன் பேச்சுவார்த்தைகள் நடத்த வேண்டியதாயிற்று. பேச்சுவார்த்தைகள் நடத்த முடியாதென நாங்கள் மறுக்கவில்லை, மிகுந்த மகிழ்ச்சியுடன் நாம் இவற்றை ஆரம்பித்தோம். ஆனால் நாங்கள் சொன்னோம்: ''மன்னிக்க வேண்டும், நாங்கள் வென்று பெற்றுக் கொண்டதை நாங்கள் கைவிடப் போவதில்லை. எங்கள் ருஷ்யா மிகப் பெரியது, எங்கள் பொருளாதார உள்ளாற்றல்கள் அளவுகடந்தவை. ஆகவே உங்களது அன்பான முன்மொழியை நிராகரிக்காதிருப்பதே நியாயமென எங்களுக்குப் படுகிறது. இந்த முன்மொழியை நிதானமாய், தொழில்-வாணிகத் துறையினருக்கு உரிய முறையில் விவாதிப்போம்.''

மெய்தான், எங்களிடையிலான முதலாவது பேச்சு பயன் தரவில்லை, ஏனெனில் அரசியல் காரணங்களை முன்னிட்டு நாம் அவருடைய முன்மொழியை ஒத்துக் கொள்ள முடியாமற் போயிற்று. நாம் அதை நிராகரிக்க வேண்டியிருந்தது. டார்டனல்ஸ் ஜலசந்தி[102] பற்றிய பேச்சுவார்த்தைகளில் நாம் பங்கு கொள்ளும் சாத்தியப்பாட்டிற்குப் பிரிட்டிஷார் இடந் தராமல் இருந்த வரை, நாம் அதை நிராகரிக்க வேண்டியிருந்தது. ஆனால் இவ்வாறு நிராகரித்ததும் உடனே நாம் இந்த விவகாரத்தின் கருப்பொருள் குறித்து பரிசீலனை செய்ய வேண்டியதாயிற்று. இதனால் நமக்கு அனுகூலம் உண்டா, இல்லையா என்றும், இந்தச் சலுகை உடன்பாட்டைச் செய்து கொள்வதால் நாம் இலாபமடைவோமா, எந்நிலைமைகளில் இலாபகரமாக இருக்கும் என்றும் நாங்கள் விவாதித்தோம். இதற்கான விலை குறித்து நாங்கள் பேச வேண்டியதாயிற்று. தோழர்களே, பிரச்சினைகளைத் தற்போது நாம் அணுகும் முறை முன்பு நாம் அணுகி வந்த முறையிலிருந்து எந்த அளவுக்கு மாறுபாடானது என்பதை இது உங்களுக்குத் தெரியப்படுத்துகிறது. முன்பெல்லாம், ''எனது உயிரைத் தருகிறேன்'' என்பதாகக் கம்யூனிஸ்டு கூறினர். அது அவருக்கு மிக எளியதாகத் தோன்றியது, ஆயினும் உண்மையில் எப்போதும் அது அவ்வளவு எளியதாக இருக்கவில்லை. ஆனால் கம்யூனிஸ்டுகளாகிய நாம் தற்போது அறவே வேறொரு விதமான பணியை எதிர்நோக்குகிறோம். தற்போது நாம் யாவற்றையும் கணக்கில் எடுத்துக் கொண்டாக வேண்டும். காரியக் கண்ணோட்டமுடையவராகச் செயல்பட நீங்கள் ஒவ்வொருவரும் கற்றுக் கொண்டாக வேண்டும். முதலாளித்துவச் சுற்றுச்சார்பில் நாம் அழிந்துவிடாமல் நிலைத்திருக்க எப்படி உறுதி தேடிக் கொள்ள முடியும், நமது பகைவர்கள் மூலம் நாம் எப்படி இலாபமடைய முடியும் என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். நமது பகைவர்கள் பேரம் பண்ணும் பேர்வழிகளே. எப்படிப் பேரம் பண்ணுவது என்பதை அவர்கள் மறந்துவிடவில்லை. நம் செலவிலே பேரம் பண்ணப் பார்ப்பவர்கள் அவர்கள். அதையும் நாம்

மறந்துவிடவில்லை. வாணிகப் பிரமுகர்கள் எங்கெனும் சாது வான பிராணிகளாக மாறி வருவதாகவோ, அவர்கள் இப் படி மாற்றமடைந்து, பயன் கருதாமலே எல்லா வகை யான பேறுகளையும் நமக்கு அளிக்க முன்வருவதாகவோ நாம் கற்பனை செய்து கொள்ளவில்லை, இல்லவே இல்லை. அப்படி ஒன்றும் நடைபெறாது, நாம் அப்படி ஒன்றும் எதிர் பார்க்கவில்லை. ஆனால் எதிர்த்து நின்று போராடப் பழகிக் கொண்டவர்களாகிய நாம் தீர்வுக்கான வழியைக் கண்டறிந்து கொள்வோம், வாணிகம் புரியவும் இலாபமடை யவும் கடினமான பொருளாதார சூழ்நிலைமைகளிலிருந்து தீங்கின்றி வெளிப்படவும் வல்லவர்களாக இருப்போம் என்பதன் அடிப்படையிலே செயல்படுகிறோம். அது மிக வும் கடினமான பணி. தற்போது நாம் அந்தப் பணியில் தான் ஈடுபட்டுள்ளோம். பழைய பணிக்கும் புதிய பணிக் கும் இடையில் மலைக்கும் மடுவுக்குமுள்ள பெரிய வேறு பாட்டை நாம் தெளிவாக உணர்ந்து கொள்ள வேண்டுமென விரும்புகிறேன். இந்த வேறுபாடு எவ்வளவுதான் பெரிதாய் இருப்பினும், யுத்தத்தின் போது நாம் தந்திரயுத்தியைக் கையாளக் கற்றுக் கொண்டோம், இப்போது நாம் செய்ய வேண்டியிருக்கும், செய்து கொண்டிருக்கும் தந்திரயுத்தி மிகமிகக் கடினமானது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஆனால் இதுவே நமது கடைசித் தந்திரயுத்தி என்பதாகத் தெரிகிறது. இத்துறையிலே நமது வலிமையை நாம் சோதித்துப் பார்த்தாக வேண்டும்; நேற்றைய படிப் பினைகளை மட்டுமல்லாது அவற்றுக்கு மேலும் கற்றுக் கொண்டுவிட்டோம், அடிப்படைகளைத் திருப்பிச் சொல்வ துடன் நின்றுவிடவில்லை என்பதை நிரூபித்தாக வேண்டும். நாம் ஒன்றும் அப்படி நின்றுவிடவில்லை. மேலும் மறுபடி யும் கற்க ஆரம்பித்துள்ளோம். திட்டவட்டமாகவும் தெட்டத் தெளிவாகவும் வெற்றி பெறும் வண்ணம் மேலும் மறுபடியும் நாம் கற்றுக் கொள்வோம். இப்படி மேலும் மறுபடியும் கற்கும் பொருட்டு, ஒருவருக்கொருவர் திரும்ப வும் திடமான வாக்குறுதி அளித்துக் கொள்ள வேண்டுமென நினைக்கிறேன்: புதிய பொருளாதாரக் கொள்கை என்ற

பெயரில் நாம் திரும்பிச் செல்கிறோம் என்றாலும், புதியவற்றில் எதையும் சரணடைக்காமல், அதே போது எந்த அரசையும்—எவ்வளவுதான் அது நமக்குப் பகையாய் இருப்பினும்—நம்முடன் தொடர்புகள் நிறுவி நம்முடன் கொள்வினை கொடுப்பனை கொள்ளும்படிக் கட்டாயப்படுத்தக் கூடிய அனுகூலங்களை முதலாளிகளுக்கு அளித்திடும்படியான முறையில் திரும்பிச் செல்கிறோமென வாக்குறுதி அளித்துக் கொள்ள வேண்டும். தலையீடு அனைத்துக்கும் தலைமையானவரும் முதுகெலும்பாகவும் இருந்தவரான உர்கார்ட்டுடன் தோழர் கிராசின் பல தரம் பேசிவிட்டு வந்திருக்கிறார். இந்த உர்கார்ட் ருஷ்யா எங்கிலும் பழைய அமைப்பை எப்படியாவது நம்மீது திணித்திட எவ்வளவுதான் முயற்சி செய்தாலும், தம்முடன், அதாவது கிராசினுடன் அதே மேசையின் எதிரே அமர்ந்து கொண்டாரென்றும், ''விலை என்ன? எவ்வளவு? எத்தனை ஆண்டுகளுக்கு?'' என்று கேட்க முற்பாட்டாரென்றும் தோழர் கிராசின் கூறுகிறார். (கையொலி.) சலுகை ஒப்பந்தங்கள் முடித்துக் கொண்டு, உடன்படிக்கை உறவுகள் கொள்வதிலிருந்து இன்னும் இது நெடுந் தொலைவிலே இருப்பதுதான்—இந்த உடன்படிக்கை உறவுகள் முதலாளித்துவச் சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் முற்றிலும் கறாராகவும் கட்டுப்படுத்துகின்றவையாகவும் இருப்பவை. ஆயினும் அந்த நிலையை நாம் வந்தடையப் போகிறோம், அனேகமாய் வந்தடைந்துவிட்டோம் என்பதைக் காண முடிகிறது. ஆனால் முழு அளவுக்கு இன்னும் நாம் வந்தடைந்தாகவில்லை. தோழர்களே, அதை நாம் ஒத்துக் கொண்டாக வேண்டும், தலைக்கனம் கொண்டுவிடலாகாது. நம்மை வலிமையும் சொந்த காலில் நிற்கும்படியான உறுதியும் பெறச் செய்யக் கூடியவற்றை—எந்த முதலாளித்துவ ஒப்பந்தங்களும் நம்மை மிரள வைத்துவிட முடியாது, ஒப்பந்தம் எவ்வளவுதான் கடினமானதாய் இருப்பினும் நாம் அதைச் செய்து முடிப்போமென்றும் முழு ஆழத்துக்கும் அதைப் பரிசீலித்துத் தீர்வு காண்போமென்றும் அசங்காத திட நம்பிக்கை அளிக்கக் கூடியவற்றை—முழு அளவுக்குச் சாதித்துக் கொள்ளும் நிலையிலிருந்து இன்னும் நாம் தொலை

விலேதான் இருக்கிறேம். எனவேதான், இத்துறையில் நாம் ஆரம்பித்திருக்கும் வேலை—அரசியல் வேலையும் கட்சி வேலையும்—தொடர்ந்து செய்யப்பட்டாக வேண்டும். எனவே தான் நாம் பழைய முறைகளிலிருந்து முற்றும் புதியனவற்றுக்கு மாறிச் சென்ருக வேண்டும்.

பழைய பொறியமைவுதான் இன்னமும் நம்மிடம் இருந்து வருகிறது. இதனைப் புதிய வழிகளுக்கு ஏற்றதாகத் திருத்தியமைப்பதே இப்போது நம் முன்னுள்ள பணி. உடனே நாம் இதைச் செய்துவிட முடியாது. ஆனல் கம்யூனிஸ்டுகள் தக்க இடங்களில் அமர்த்தப்படும்படி நாம் கவனித்தாக வேண்டும். நமக்கு வேண்டியது என்னவென்றல், அவர்கள்—கம்யூனிஸ்டுகள்—தமக்கு ஒதுக்கப்படும் பொறியமைவைக் கட்டுப்பாடு செய்தாக வேண்டும், நம்மிடைய அடிக்கடி நிகழ்வது போல் அந்தப் பொறியமைவு அவர்களைக் கட்டுப்பாடு செய்வதாகிவிடக் கூடாது. இதை நாம் மூடிமறைக்கலாகாது, ஒளிவு மறைவின்றி இதைப் பற்றிப் பேச வேண்டும். நம்மை எதிர்நோக்கும் பணிகளும் இன்னல்களும் இவையே. நாம் நமது நடைமுறைப் பாதையிலே நடைபோட ஆரம்பித்திருக்கும் இத்தருணத்தில், சோஷலிசத்தை விழாக் கோலம் பூண்டு தகதகக்கும் உற்சவமூர்த்தியாகப் பாவித்து அதனை நாம் அணுகலாகாது என்னும்படியான இத்தருணத்தில், நம்மை எதிர்நோக்குகின்றவை இவை. நாம் சரியான திசையில் சென்ருக வேண்டும், யாவும் சரிபார்க்கப்படும்படிக் கவனித்துக் கொண்டாக வேண்டும்; பெருந் திரளினர், நாட்டு மக்கள் அனைவரும் நாம் பின்பற்றும் பாதையினைச் சரிபார்த்து ''ஆம், பழைய அமைப்பை விட இது சிறப்பானது'' என்று சொல்லும்படி நாம் செயல்பட்டாக வேண்டும். இதுதான் நாம் நமக்கு வகுத்து அமைத்துக் கொண்டுள்ள பணி. நாட்டின் மக்களது மொத்தத் தொகையுடன் ஒப்பிடுகையில் எண்ணிக்கையில் மிகச் சிறியதேயான நமது கட்சி இந்தப் பணியைச் சமாளித்து வந்திருக்கிறது. இந்தச் சின்னஞ் சிறிய உட்கருவானது யாவற்றையும் திருத்தியமைத்திடும் பணியினைத் தனக்கு வகுத்துக் கொண்டுள்ளது, இந்தப் பணியை அது செய்து முடிக்கவே போகிறது. மக்களது

ஜீவிதத்துக்கான ஓர் இலட்சியமே அன்றி இது கற்பனு வாதப் படைப்பல்ல என்பதை நாம் நிரூபித்துக் காட்டி யிருக்கிறோம். நாம் எல்லாரும் இதனைக் கண்ணுற்றோம். ஏற்கெனவே இது செய்யப்பட்டிருக்கும் ஒன்று. யாவற்றை யும் நாம் திருத்தியமைத்தாக வேண்டும்; பெருந்திரள் மக்களில் மிகப் பெருவாரியானோர், தொழிலாளர்களும் விவசாயிகளுமானோர் நம்மைப் பார்த்து ''உங்களைப் போற்றிப் புகழ்வது நாங்களே அன்றி நீங்களல்ல. பிரமாத பலன்கள் தந்திருக்கும் சாதனைகளை நீங்கள் சாதித்திருக் கிறீர்கள், அறிவுடையவர் எவரும் இனி எந்நாளும் பழைய நிலைமைகளுக்குத் திரும்பிச் செல்ல வேண்டுமெனக் கனவிலும் நினைக்க மாட்டார்'' என்று சொல்லும் விதத் தில் நாம் திருத்தியமைத்தாக வேண்டும். அப்படிப்பட்ட நிலையை இன்னும் நாம் வந்தடைந்தாகவில்லை. எனவேதான் புதிய பொருளாதாரக் கொள்கை நடப்புக் காலத்துக்குரிய பிர தான கோஷமாய், அனைத்தும் தழுவிய இன்றையக் கோஷமாய் இருந்து வருகிறது. நேற்று நாம் கற்றுக் கொண்ட கோஷங் களில் எந்த ஒன்றையும் நாம் மறந்துவிடப் போவதில்லை. மிகவும் அமைதியாக, கிஞ்சித்தும் தயக்கமின்றி நாம் இதைச் சொல்ல முடியும், எவரிடத்தும் சொல்ல முடியும். நாம் மேற்கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கையும் இதைத் தெளிவுபடுத்திக் காட்டுகிறது. ஆனால் புதிய பொருளா தாரக் கொள்கைக்கு இனிமேல்தான் நம்மை நாம் தகவ மைத்துக் கொண்டாக வேண்டும். அதன் பாதகக் கூறுகளை எப்படி வென்று முன்செல்வதென, குறைந்தபட்சத் திட்ட வட்ட அளவுக்கு எப்படி அவற்றைக் குறையச் செய்வ தென நாம் தெரிந்து கொண்டாக வேண்டும். இந்தப் பாதகக் கூறுகளைப் பட்டியலிட்டுக் கூறத் தேவையில்லை, நீங்கள் நன்கு அறிந்தவையே இவை. யாவற்றுக்கும் சாமர்த்தியமாக எப்படி ஏற்பாடு செய்வதென்று நாம் தெரிந்து கொண்டாக வேண்டும். இதைச் செய்ய நமது சட்டங்கள் நமக்கு எல்லா வாய்ப்பும் அளிக்கின்றன. எல்லாவற்றையும் ஒழுங்காய் நம்மால் நடந்தேறச் செய்ய முடியுமா? இன்னமும் அது தீர்வுக்குரிய நிலையிலிருந்து தொலைவிலேதான் இருக்கிறது. விவகாரங்களை நாம் ஆய்ந்

தறிந்து வருகிறோம். இன்னாரது உடைமையாக இருக்கும் இப்படிப்பட்ட ஆலையில் வாடகை நிபந்தனைகள் இப்படி யிப்படி இருக்க, நமது கம்யூனிஸ்டுத் தோழர் நிர்வாகியாக இருக்கும் இன்னொரு ஆலையில் நிபந்தனைகள் இப்படியிப் படி இருப்பதாய் உங்களுக்குத் தெரியப்படுத்தும் பத்துப் பன்னிரண்டு கட்டுரைகளை நமது கட்சிச் செய்தியேட்டின் ஒவ்வோர் இதழும் உங்களுக்கு அளிக்கிறது. அது இலா பம் தருவதாய் இருக்கிறதா, இல்லையா? செலவுகளுக்கு ஈடு செய்யும் அளவில் அது வருமானம் பெறுகிறதா, இல்லையா? அன்றாடப் பிரச்சினைகளின் மையக் கூறினை நாம் அணுகிச் சென்றுள்ளோம். இது பிரம்மாண்டமான சாதனை யாகும். சோஷலிசமானது இப்போது தொலை நெடுங் காலத் துக்குரிய விவகாரமாய் இருக்கவில்லை, அல்லது கருத்தி யலான ஒரு சித்திரமாகவோ, புனிதத் தேவ உருவமா கவோ இருக்கவில்லை. தேவ உருவங்களைப் பற்றிய நமது கருத்து மாற்றமின்றி அப்படியேதான்—படு மோசமானதா கவே—இருக்கிறது. சோஷலிசத்தை நாம் அன்றாட வாழ்க் கையாகப் பரிமளிக்கச் செய்கிறோம், இங்கே விவகாரங் கள் எந்த நிலையில் இருக்கின்றன என்று நாம் கவனித்துக் கொண்டாக வேண்டும். இதுதான் நமது இந்நாளையப் பணி, நமது சகாப்தத்துக்குரிய பணி. இந்தப் பணி கடினமானதுதான் என்றாலும், நமது முந்திய பணியுடன் ஒப்பிடுகையில் புதுமையானதே என்றாலும், இதை நிறை வேற்றுகையில் எதிர்ப்பட வேண்டியுள்ள இடர்கள் எண் ணற்றவை எனினும், நாம் எல்லோருமாய் ஒன்றுசேர்ந்து, என்னதான் விலை கொடுக்க நேர்வதாயினும் — ஒரே நாளில் அல்ல, ஒருசில ஆண்டுகளில்—இப்பணியை நிறை வேற்றுவோம்; புதிய பொருளாதாரக் கொள்கைக்குரிய ருஷ்யா இவ்வழியில் சோஷலிச ருஷ்யாவாக மாற்றமடையும் என்ற திட நம்பிக்கையைத் தெரிவித்து எனது உரையை முடிப்பதற்கு அனுமதியுங்கள். (கரைபுரண்டோடும் ஆர்வமிக்க நீடித்த கையொலி முழக்கம்.)

பிராவ்தா, இதழ் 263,
1922 நவம்பர் 21

நூல் திரட்டு,
தொகுதி 45,
பக்கங்கள் 300-309

## காங்கிரசுக்குக் கடிதம்[103]

### 1

இந்தக் காங்கிரசில் நமது அரசியல் கட்டமைப்பில் பல மாற்றங்கள் செய்யப்பட வேண்டுமென்று வற்புறுத்திக் கூற நினைக்கிறேன்.

நான் மிகுந்த முக்கியத்துவம் அளித்திடும் எண்ணங்களை உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

இவற்றில் முதல் இடத்துக்கு உரியதாய் நான் கருதுவது என்னவெனில், மத்தியக் கமிட்டி உறுப்பினர்களது எண்ணிக்கையை சில பத்துகளாக, அல்லது ஒரு நூருகவுங்கூட அதிகமாக்க வேண்டும். இந்தச் சீர்திருத்தம் செய்யப்படாத வரை, நிகழ்ச்சிகளின் போக்கு நமக்கு அதிகம் சாதகமாய் இல்லாமற் போகுமாயின் (சாதகமாய் இருக்குமென நிச்சயமாகச் சொல்ல முடியாது) நமது மத்தியக் கமிட்டி பெரிய அபாயத்துக்கு உள்ளாக நேரலாம்.

பிறகு, இந்தக் காங்கிரஸ் சிற்சில நிபந்தனைகளின் பேரில் அரசுத் திட்டக் குழுவின் தீர்மானங்களுக்கு, சட்டங்களுக்கு உரித்தான செயல் வலிமை அளித்திட வேண்டுமென்றும், இவ்விதத்தில் தோழர் திரோத்ஸ்கியின் விருப்பங்கள்—குறிப்பிட்ட ஓர் அளவுக்கு, குறிப்பிட்ட சில நிபந்தனைகளுடன் — ஈடேற்றப்பட வேண்டுமென்றும் முன்மொழிய விரும்புகிறேன்.

முதலாவது விவகாரத்தை, அதாவது மத்தியக் கமிட்டி உறுப்பினர்களின் எண்ணிக்கையை அதிகமாக்குவதைப் பொறுத்த வரை, மத்தியக் கமிட்டிக்குள்ள செல்வாக்கை உயர்த்தும் பொருட்டும், நமது நிர்வாகப் பொறியமைவை முழு முனைப்புடன் செம்மை செய்திடும் பொருட்டும், மத்

தியக் கமிட்டியின் சிறு பிரிவுகளிடையே எழக் கூடிய மோதல்கள் கட்சியின் எதிர்காலத்துக்கு மிதமிஞ்சிய முக்கியத்துவம் அடைந்துவிடாதபடி தடுக்கும் பொருட்டும் இது அவசியமென்று நினைக்கிறேன்.

தொழிலாளி வர்க்கத்திடமிருந்து 50லிருந்து 100 வரையிலான மத்தியக் கமிட்டி உறுப்பினர்கள் வேண்டுமெனக் கோருவதற்கு நமது கட்சிக்கு முழு உரிமை உண்டென்றும், அந்த வர்க்கத்தின் சக்திகளை மட்டுமீறிய சுமைக்கு உட்படுத்தாமல் இவர்களை அதனிடமிருந்து பெற்றுக் கொள்ள முடியுமென்றும் எனக்குப் படுகிறது.

இத்தகைய ஒரு சீர்திருத்தம் நமது கட்சியின் நிலைப் பாட்டை வெகுவாய் அதிகரிக்கச் செய்யும்; பகை அரசுகளால் சுற்றி வளைக்கப்பட்டிருக்கும் நிலையில் அது புரிய வேண்டியிருக்கும் போராட்டத்தின் கடுமையைத் தணியச் செய்வதாய் இருக்கும்—வருகிற சில ஆண்டுகளில் இந்தப் போராட்டம் என் அபிப்பிராயத்தில் மேலும் உக்கிரமடையக் கூடும், உக்கிரமடையவும் செய்யும். நமது கட்சியின் நிலைப்பாடு இத்தகைய ஒரு நடவடிக்கையால் ஆயிரம் மடங்கு உறுதியடையும் என்று நினைக்கிறேன்.

**லெனின்**

1922 டிசம்பர் 23
எழுதிக் கொண்டவர்: ம. வ.*

## 2

குறிப்புகளின் தொடர்ச்சி.
1922 டிசம்பர் 24

மேலே நான் மத்தியக் கமிட்டியின் நிலைப்பாடு என்று சொன்னேன். இதன் மூலம் பிளவுக்கு எதிரான நடவடிக்

* ம. வ.—மரீயா வலோதிச்செவா, லெனினது செயலாளர்.

''காங்கிரசுக்குக் கடிதத்தை'' லெனின் வாய்ப்பட கூற, அவரது செயலாளர்கள் எழுதிக் கொண்டனர்.—ப-ர்.

கைகளைக் குறிப்பிடுகிறேன் — இத்தகைய நடவடிக்கைகள் எடுக்கப்படுவதற்குச் சிறிதேனும் சாத்தியப்பாடு இருக்கும் அளவுக்கு. ஏனெனில் ரூஸ்கயா மீசில்[104] ஏட்டில் வெள்ளைப் படையாள் (எஸ். எஸ். ஓல்டன்பர்காகவே இருக்கும் போல் தெரிகிறது) கூறியது சரியானதே: முதலாவதாக, சோவியத் ருஷ்யாவுக்கு எதிரான வெள்ளைப்படையினர் போராட்டத்தில் அவர், நமது கட்சியில் ஏற்படக்கூடிய பிளவை நம்பியிருந்தார்; இரண்டாவதாக, நமது கட்சியில் எழக்கூடிய கடுமையான கருத்து வேறுபாடுகள் இந்தப் பிளவை ஏற்படுத்துமென நம்பியிருந்தார்.

நமது கட்சி இரண்டு வர்க்கங்களைத் தனக்கு ஆதாரமாகக் கொண்டு செயல்படுகிறது. ஆகவே அதன் நிலைப்பாட்டின்மை சாத்தியமானதே. இந்த இரு வர்க்கங்களிடையே உடன்பாடு இல்லையெனில், அதன் வீழ்ச்சி தவிர்க்க முடியாததாகிவிடும். அப்படி நேர்ந்திடுமாயின் இந்த அல்லது அந்த நடவடிக்கையும், பொதுவாக நமது மத்தியக் கமிட்டியின் நிலைப்பாடு பற்றி எல்லாப் பேச்சுமே வீண் தான். அந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் எவ்வகையான நடவடிக்கைகளாலும் பிளவைத் தடுக்க முடியாது. ஆனால் அதைப் பற்றி விவாதிக்கத் தேவையில்லாதபடி அது அவ்வளவு தொலைவான எதிர்காலத்துக்கு உரியது, அரிதிலும் அரிதாகவே நிகழக் கூடியது என்பதே எனது நம்பிக்கை.

உடனடி எதிர்காலத்தில் பிளவு ஏற்பட்டு விடாதபடி உறுதி செய்யும்படியான நிலைப்பாட்டையே நான் மனதிற் கொண்டுள்ளேன். தனிப்பட்டோரது சொந்த இயல்புகள் குறித்துச் சில கருத்துகளை இங்கே எடுத்துரைக்க விரும்புகிறேன்.

இந்த நோக்கு நிலையிலிருந்து நிலைப்பாட்டுப் பிரச்சினையில் ஸ்டாலினையும் திரோத்ஸ்கியையும் போன்ற மத்தியக் கமிட்டி உறுப்பினர்களே பிரதான காரணக் கூறுகளாய் இருப்பதாய் நான் நினைக்கிறேன். பிளவு ஏற்படும்படியான அபாயத்தில் பெரும் பகுதி இவர்கள் இடையிலான உறவுகளிலிருந்தே எழுகிறதென்று நினைக்கிறேன். இந்தப் பிளவு தவிர்க்கப்படக் கூடியதே. ஏனைய பல

வற்றுடன்கூட மத்தியக் கமிட்டி உறுப்பினர்களது எண்ணிக்கையை 50 அல்லது 100ஆக அதிகமாக்குவதானது என் அபிப்பிராயத்தில், இந்த நோக்கம் ஈடேற உதவியாய் இருக்கும்.

தோழர் ஸ்டாலின் பொதுச் செயலாளராகி விட்டதால் அவர் கையில் வரம்பு கடந்த அதிகாரம் குவிந்திருக்கிறது. இந்த அதிகாரத்தை எப்போதும் அவர் போதுமான எச்சரிக்கை உணர்வுடன் பயன்படுத்தக் கூடியவரா என்பது குறித்து நான் உறுதியாகச் சொல்வதற்கில்லை. மறுபுறத்தில், தோழர் திரோத்ஸ்கி தனிப்பட வேறுபடுத்திக் காட்டப்படுவது—செய்திப் போக்குவரவு மக்கள் கமிசாரகம் பற்றிய பிரச்சினையில், மத்தியக் கமிட்டியை எதிர்த்து அவர் நடத்திய போராட்டம் நிரூபித்திருப்பது போல்—உன்னதச் செயலாற்றலால் மட்டுமல்ல. தற்போதைய மத்தியக் கமிட்டியில் தனிப்பட்ட முறையில் அவரே யாவரிலும் வல்லமை வாய்ந்தவர் எனலாம், ஆனால் அவர் அளவுக்கு மீறிய தன்னம்பிக்கையை வெளிப்படுத்தியிருக்கிறார், பணியின் முழுக்க முழுக்க நிர்வாகத் தன்மையதான தரப்பில் அளவுமீறி மூழ்கிவிடுகிறவராகவும் தம்மைக் காட்டிக் கொண்டிருக்கிறார்.

தற்போதைய மத்தியக் கமிட்டியின் இரண்டு சிறந்த தலைவர்களது இவ்விரு இயல்புகளும் மனமறியாத முறையில் பிளவுக்கு இட்டுச் சென்றுவிட முடியும். நம் கட்சி இதைத் தவிர்ப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ளாவிடில், இந்தப் பிளவு எதிர்பாராத விதத்தில் வந்து சேரலாம்.

மத்தியக் கமிட்டியின் ஏனைய உறுப்பினர்களது தனிப்பட்ட சொந்த இயல்புகள் குறித்து மேலும் தொடர்ந்து நான் மதிப்பீடுகள் அளிக்க வேண்டாம். ஸினோவியேவ், காமெனெவ் இவர்களது அக்டோபர் சம்பவம்[105] அகஸ்மாத்தாய் நிகழ்ந்ததல்ல என்பதை மட்டும் நினைவூட்டுகிறேன். ஆனால் அதற்குரிய குற்றம் தனிப்பட்ட முறையில் அவர்களுக்கே உரியதாய் அவர்கள் மீது சுமத்தப்படலாகாது, போல்ஷிவிசமல்லாத நிலையை அனுசரித்ததற்கான குற்றம்

எப்படி திரோத்ஸ்கியின் மீது சுமத்தப்படக் கூடாதோ அதே போல.

மத்தியக் கமிட்டியின் இளம் உறுப்பினர்கள் குறித்துப் பேசுகையில், புகாரினையும் பியத்தக்கோவையும் பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். என் கருத்துப்படி அவர்கள் (யாவரிலும் இளையவர்களில்) தலைசிறந்தவர்கள். அவர்கள் குறித்து, பின்வருவதை மனதிற் கொண்டாக வேண்டும்: புகாரின் கட்சியினது மதிப்பு மிக்க ஒரு பிரதான தத்துவார்த்தி மட்டுமன்றி, கட்சி அனைத்தின் அபிமானத்துக்கு உரியவராய் நியாயமாகவே கருதப்படுகிறவரும் ஆவார்; ஆனால் அவரது தத்துவார்த்தக் கருத்தோட்டங்களைப் பெரிய நிபந்தனை வரையறைகளுக்கு உட்பட்டே முழு அளவுக்கு மார்க்சியக் கருத்தோட்டங்களாக வகைப்படுத்த முடியும், எனெனில் பண்டிதப் புலமைவாதம் வாய்ந்த ஏதோ ஒன்று அவரிடம் காணப்படுகிறது (இயக்கவியலை அவர் எந்நாளும் ஆய்ந்தறிந்ததில்லை, எந்நாளும் அதைப் பூரணமாக உணர்ந்தவரல்ல என்று நினைக்கிறேன்).

டிசம்பர் 25. பியத்தக்கோவைப் பொறுத்த வரை, சந்தேகத்துக்கு இடமின்றி அவர் உன்னதமான திடச் சித்தம் கொண்டவர்தான், உன்னதமான செயலாற்றல் படைத்தவர்தான். ஆனால் பொறுப்பான அரசியல் விவகாரத்தில் அவரை நம்பிச் செயல்பட முடியாதபடி அப்படி அவர் நிர்வாகம் புரிவதிலும் பணியின் நிர்வாகத் தன்மையதான தரப்பிலும் அளவுமீறிய ஆர்வம் கொண்டுவிடுகிறார்.

இந்த இரு குறிப்புரைகளும், தலைசிறந்த, பற்றுறுதி வாய்ந்த கட்சி ஊழியர்களான இவர்கள் இருவரும் தமது அறிவை உயர்த்திக் கொள்வதற்கும் தமது ஒருச்சார்பினைத் திருத்திக் கொள்வதற்குமான சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தத் தவறுகிறவர்கள் என்கிற அனுமானத்தின் பேரில் தற்போதைக்கு மட்டுமே தரப்படுகிறவை.

**லெனின்**

*1922 டிசம்பர் 25.*
*எழுதிக் கொண்டவர்: ம.வ.*

### 1922 டிசம்பர் 24ஆம் தேதிக் கடிதத்துடன் கூடுதலாகச் சேர்க்கப்பட்டது

*ஸ்டாலின் பெரிதும் முரட்டுச் சுபாவமுடையவராய் இருக்கிறார், இந்தக் குறைபாடு நம் மத்தியிலும் கம்யூனிஸ்டுகளாகிய நம்மிடையிலான விவகாரங்களிலும் சகித்துக் கொள்ளக் கூடியதே என்றாலும், பொதுச் செயலாளராய் இருக்கும் ஒருவரிடம் சகிக்க முடியாததாகிவிடுகிறது. எனவேதான் ஸ்டாலினை அந்தப் பதவியிலிருந்து அகற்றிவிட்டு அவருக்குப் பதில் வேறொருவரை நியமிப்பதற்கான வழி குறித்துத் தோழர்கள் சிந்திக்க வேண்டுமென்று நான் யோசனை கூறுகிறேன். இந்த வேறொருவர் ஏனைய எல்லா விதத்திலும் தோழர் ஸ்டாலினிடமிருந்து, ஒரேயொரு அனுகூலமுடையவராய் இருப்பதில் மட்டுமே—அதாவது அதிகச் சகிப்புத் தன்மையும், அதிக விசுவாசமும், தோழர்கள்பால் அதிக நன்னயப் பாங்கும் அதிகப் பரிவுணர்வும், குறைவான தான்தோன்றிப் போக்கும், இன்ன பிறவும் உடையவராய் இருப்பதில் மட்டுமே—வேறுபடுகிறவராக இருத்தல் வேண்டும். இந்த விவரம் கவனியாது ஒதுக்கப்பட வேண்டிய சிறு விவரமாகத் தோன்றலாம். ஆனால் பிளவுக்கு எதிரான காப்பு நடவடிக்கைகளின் கண்ணோட்டத்திலும், ஸ்டாலினுக்கும் திரோத்ஸ்கிக்கும் இடையிலான உறவுநிலை குறித்து மேலே நான் எழுதியதன் கண்ணோட்டத்திலும் இது சிறு விவரமல்ல, அல்லது தீர்மானகரமான முக்கியத்துவம் பெறக் கூடிய சிறு விவரமாகும்.*

**லெனின்**

*எழுதிக் கொண்டவர்: லீ. ஃபோ.**
*1923 ஜனவரி 4*

---

* **லீ. ஃபோ.**—*லீதியா ஃபோத்தியெவா. லெனினது செயலாளர்.*—**ப-ர்.**

## 3

### குறிப்புகளின் தொடர்ச்சி.
### 1922 டிசம்பர் 26

மத்தியக் கமிட்டி உறுப்பினர்களது எண்ணிக்கை 50ஆக, அல்லது 100ஆகவுங்கூட அதிகமாக்கப்பட வேண்டுமென்பது, என் அபிப்பிராயத்தில், இரட்டை நோக்கங்களுக்கு, அல்லது மும்மடி நோக்கங்களுக்குங்கூட பயன்பட வேண்டும்: மத்தியக் கமிட்டியில் உறுப்பினர்கள் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாய் இருக்கிறார்களோ அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமானோர் மத்தியக் கமிட்டியின் வேலைகளில் பயிற்சி பெறுவார்கள், தெரியாத் தனமாய் இழைக்கப் படும் தவறுகள் காரணமாகப் பிளவு ஏற்படும் அபாயம் அவ்வளவுக்கு அவ்வளவு குறைவாகிவிடும்.மத்தியக் கமிட்டியினுள் தொழிலாளர்கள் பலரும் திரட்டப்படுவதானது, நமது நிர்வாகப் பொறியமைவை மேம்படுத்துவதற்குத் தொழிலாளர்களுக்கு உதவுவதாய் இருக்கும். நமது நிர்வாகப் பொறியமைவு மிக மோசமாகவே இருக்கிறது. நடைமுறையில் இது பழைய ஆட்சியிடமிருந்து நாம் வரித்துக் கொண்ட ஒன்று, ஏனெனில் இவ்வளவு குறுகிய காலத்துக்குள், அதுவும் யுத்தத்துக்கும் பஞ்சத்துக்கும் பிறவற்றுக்குமான நிலைமைகளில் அதைத் திருத்தியமைப்பது அறவே முடியாத காரியமாய் இருந்தது. எனவே நமது பொறியமைவின் குறைபாடுகளை ஏளனத்துடனோ, காழ்ப்புடனோ சுட்டிக்காட்டும் அந்த ''விமர்சகர்களைப்'' பார்த்து, நாம் இன்று புரட்சி எந்நிலைமைகளில் நடைபெறுகிறது என்பதை அவர்கள் கிஞ்சித்தும் புரிந்து கொள்ளவில்லையென அமைதியாகவே பதிலளிக்கலாம். இந்தப் பொறிமைவை ஐந்தே ஆண்டுகளில், முக்கியமாய் நமது புரட்சி நடைபெற்ற அந்த நிலைமைகளில், போதிய அளவுக்குத் திருத்தியமைத்திடுவது சிறிதும் சாத்தியமன்று. முதலாளித்துவ வர்க்கத்தை எதிர்த்துத் தொழிலாளர்கள் விவசாயிகளுக்குத் தலைமை தாங்கி அழைத்துச் செல்வதற்குரிய ஒரு

புதுவகை அரசை ஐந்து ஆண்டுகளில் நாம் தோற்றுவித்திருக்கிறோமே, இதுவே போதுமானது. பகைமை கொண்ட சர்வதேசச் சுற்றுச்சார்பில் இது பிரம்மாண்டமான சாதனையாகும். ஆனால் இது பற்றிய அறிவு எவ்விதத்திலும் நம் பார்வையை மறைத்துவிடக் கூடாது: நடைமுறையில் நாம் ஜாரிடமிருந்தும் முதலாளித்துவ வர்க்கத்தாரிடமிருந்தும் அரசின் பழைய பொறியமைவை வரித்துக் கொண்டோம் என்பதும், சமாதானம் ஆரம்பமாகிப் பஞ்சத்துக்கு எதிராய்க் குறைந்தபட்சத் தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டிய இத்தருணத்தில் நமது பணி அனைத்தும் நிர்வாகப் பொறியமைவை செம்மை செய்வதை நோக்கி நெறிப்படுத்தப்பட வேண்டும் என்பதும் தெரியாதபடி இந்த அறிவு நம் பார்வையை மறைத்துவிடக் கூடாது.

மத்தியக் கமிட்டி உறுப்பினர்களாய் இருக்கும் பத்து, இருபது தொழிலாளர்கள், ஏனைய எவரையும்விடச் சிறப்பான முறையில் நமது அரசு பொறியமைவைச் சரிபார்த்திடவும், செம்மை செய்யவும், திருத்தியமைக்கவும் முடியுமென நினைக்கிறேன். தொழிலாளர், விவசாயிகளது மேற்பார்வைத் துறையிடம்[106] ஆரம்பத்தில் இந்தப் பணி ஒப்படைக்கப்பட்டிருந்தது. இத்துறையால் இப்பணியைச் சமாளிக்க முடியவில்லை என்பதும், மத்தியக் கமிட்டியின் இந்த உறுப்பினர்களுக்குரிய ''துணையமைப்பு'' அல்லது சிற்சில நிபந்தனைகளின் பேரில் உதவியாளராக மட்டுமே இத்துறை பயன்படுத்தப்பட வேண்டும் என்பதும் தெரியலாயிற்று. மத்தியக் கமிட்டியில் சேர்த்துக் கொள்ளப்படும் தொழிலாளர்கள் சோவியத் அலுவலகங்களில் நீண்ட காலமாகச் சேவை புரிந்திருப்போர் மத்தியிலிருந்து வராதிருப்பது எனது அபிப்பிராயத்தில் நல்லது, ஏனென்றால் இப்படிச் சேவையாற்றியுள்ள தொழிலாளர்கள், எவற்றை எதிர்த்துப் போராடுவது விரும்பத் தக்கதோ அதே மரபுகளையும் அதே தப்பெண்ணங்களையும் ஏற்கெனவே தாமே பெற்றுக் கொண்டு விட்டவர்கள் (எனது கடிதத்தின் இந்தப் பகுதியில் தொழிலாளர்கள் என்னும் சொல், எங்கும் விவசாயிகளையும் சேர்த்துக் குறிப்பதாகும்).

தொழிலாளி வர்க்கத்தவரான மத்தியக் கமிட்டி உறுப்பினர்கள் கடந்த ஐந்து ஆண்டுகளில் சோவியத் உறுப்புகளில் சேவையாற்றுவதற்காக உயர்த்தப்பட்டவர்களைக் காட்டிலும் கீழ் அடுக்கைச் சேர்ந்த தொழிலாளர்களாகவே பிரதானமாய் இருத்தல் வேண்டும். அவர்கள் சாமான்யத் தொழிலாளர்கள், விவசாயிகளது நிலைக்கு நெருங்கியோராய் இருத்தல் வேண்டும், ஆனால் அதேபோது நேரடியாகவோ மறைமுகமாகவோ சுரண்டுவோரது இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கலாகாது. மத்தியக் கமிட்டியின் எல்லா அமர்வுகளிலும் அரசியல் குழுவின் எல்லா அமர்வுகளிலும் கலந்துகொள்வதன் மூலமும், மத்தியக் கமிட்டியின் எல்லா ஆவணங்களையும் படிப்பதன் மூலமும், இம்மாதிரியான தொழிலாளர்கள் சோவியத் அமைப்பின் பற்றுறுதி வாய்ந்த ஆதரவாளர்களாக விளங்கும் ஊழியர்களாய் அமைய முடியுமென்றும், முதலாவதாக மத்தியக் கமிட்டிக்கு நிலைப்பாடு அளிப்போராகவும், இரண்டாவதாக அரசு இயந்திரத்தை புதுப்பிப்பதற்காகவும் செம்மை செய்வதற்காகவும் பயனுள்ள முறையில் பணியாற்றுவோராகவும் இருப்பார்களென்றும் நினைக்கிறேன்.

**லெனின்**

எழுதிக் கொண்டவர்: லீ. ஃபோ.
*1922 டிசம்பர் 26*

முதன்முதல் *1956*ல்
கம்யூனிஸ்ட் சஞ்சிகை,
இதழ் *9*ல் வெளிவந்தது

நூல் திரட்டு,
தொகுதி *45*,
பக்கங்கள் *343-48*

# நாட்குறிப்பிலிருந்து சில பக்கங்கள்

*ருஷ்யாவின் மக்களிடத்தான எழுத்தறிவு பற்றிய விவர அறிக்கை, 1920ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பை அடிப்படையாய்க் கொண்டது, அண்மையில் வெளிவந்திருப்பதானது* (ருஷ்யாவில் எழுத்தறிவு, மாஸ்கோ, *1922, மத்தியப் புள்ளிவிவர வாரியத்தின் பொதுக்கல்விப் பிரிவால் வெளியிடப்பட்டது) மிகவும் முக்கியமான ஒரு நிகழ்ச்சியாகும்.*

*1897ஆம் ஆண்டிலும் 1920ஆம் ஆண்டிலும் ருஷ்யாவின் மக்களிடத்தான எழுத்தறிவு நிலை பற்றிய ஓர் அட்டவணையை இந்த விவர அறிக்கையிலிருந்து எடுத்து அடியில் தருகிறேன்.*

| | ஆயிரம் ஆடவர்களில் எழுத்தறிந்தோர் | | ஆயிரம் பெண்களில் எழுத்தறிந்தோர் | | மக்களில் ஆயிரம் பேரில் எழுத்தறிந்தோர் | |
|---|---|---|---|---|---|---|
| | *1897* | *1920* | *1897* | *1920* | *1897* | *1920* |
| *1. ஐரோப்பிய ருஷ்யா...* | *326* | *422* | *136* | *255* | *229* | *330* |
| *2. வட காக்கசஸ்.........* | *241* | *357* | *56* | *215* | *150* | *281* |
| *3. சைபீரியா (மேற்கு)..* | *170* | *307* | *46* | *134* | *108* | *218* |
| ஒட்டுமொத்த சராசரி | *318* | *409* | *131* | *244* | *223* | *319* |

பாட்டாளி வர்க்கக் கலாசாரம் குறித்தும் அதற்கும் முதலாளித்துவக் கலாசாரத்திற்கும் இடையே இருக்கும் உறவு குறித்தும் நாம் பொழிந்து தள்ளி கொண்டிருக்கும் ஒரு நேரத்தில், உண்மைகளும் புள்ளிவிவரங்களும் நாம் முதலாளித்துவக் கலாசாரம் பொறுத்த அளவிலுங்கூட மிகவும் மோசமான பின்னிலையில் இருக்கிறோம் என்பதைப் புலப்படுத்துகின்றன. எதிர்பார்க்கக் கூடியது போலவே நாம் அனைத்து மக்கள் எழுத்தறிவு நிலையை அடைவதிலிருந்து இன்னும் நெடுந் தொலைவிலே இருக்கிறோம் என்றும், ஜார் காலத்துடன் (1897) ஒப்பிடுகையிலுங்கூட நமது முன்னேற்றம் மிகமிக மெதுவாகவே இருக்கிறது என்றும் தெரிகிறது. ''பாட்டாளி வர்க்கக் கலாசாரத்தின்'' வானுச்சியில் கற்பனைச் சிறகடித்துப் பறப்போருக்கு இது ஒரு கடும் எச்சரிக்கையாகவும் கண்டனமாகவும் அமைதல் வேண்டும். சாதாரண மேற்கு ஐரோப்பிய நாகரிக நாட்டின் தரத்தை வந்தடைவதற்குக்கூட இன்னும் நாம் எவ்வளவு பிரம்மாண்ட அளவில் அவசரத் தயாரிப்பு வேலைகள் செய்ய வேண்டியிருக்கிறது என்பதை இது காட்டுகிறது. நாம் வென்றிருக்கும் பாட்டாளி வர்க்க ஆதாயங்களின் அடிப்படையிலே மெய்யான கலாசாரத் தரம் என்பதாய்க் கூறக் கூடிய ஒரு தரத்தை அடைய இன்று நாம் எவ்வளவு பெரிய அளவில் வேலை செய்தாக வேண்டும் என்பதையும் இது காட்டுகிறது.

மறுக்க முடியாததாயினும், பெரிதும் தத்துவார்த்த முறையிலே அமைந்த இந்த முடிவின் வரம்புக்குள் நாம் நின்று விடக்கூடாது. நமது காலாண்டுப் பட்ஜெட்டை நாம் திருத்தியமைக்கும் அடுத்த சந்தர்ப்பத்திலேயே, இந்த விவகாரத்தை நடைமுறை வழியிலும் கருதியாக வேண்டும். முதலாவதாக, கல்வித் துறை மக்கள் கமிசாரகத்தைத் தவிர ஏனைய அரசாங்க இலாக்காக்களின் செலவுகளைக் குறைத்து, இவ்வாறு கிடைக்கப் பெறும் தொகைகளை முன்னதன் தேவைகளுக்காக ஒதுக்க வேண்டுமென்பது தெளிவு. பண்ட வழங்கீடு ஒப்பளவில் நல்லபடியாய் இருக்கும் இவ்வாண்டைப் போன்ற ஓர் ஆண்டில் பள்ளி ஆசிரியர்களுக்கு

ரொட்டிப் பங்கீட்டை அதிகமாக்குவதில் நாம் தயக்கம் காட்டக் கூடாது.

பொதுவாய்ப் பேசுமிடத்து, பொதுக் கல்வித் துறையில் தற்போது செய்யப்பட்டு வரும் வேலை மிகக் குறுகலாய் இருப்பதாய்ச் சொல்வதற்கில்லை. பழங் காலத்திய ஆசிரியர்களை அவர்களுக்குப் பழக்கப்பட்டு போன அந்த மாருத பாதையிலிருந்து வெளிப்படுத்தி விலகி வரச் செய்யவும், புதிய பிரச்சினைகளில் அவர்களைக் கருத்துக் கொள்ளும்படி ஈர்க்கவும், புதிய கல்வி முறைகளிலும் மதத்தைப் போன்ற பிரச்சினைகளிலும் அவர்களுடைய அக்கறையைத் தூண்டவும் நிறைய முயற்சிகள் எடுத்து வரப்படுகின்றன.

ஆனல் பிரதான காரியத்தை நாம் செய்தாகவில்லை. எந்த விதமான கலாசாரமும் — பாட்டாளி வர்க்கத்தினுடையதோ, அல்லது முதலாளித்துவ வர்க்கத்தினுடையதோ ஆயினுங்கூட — பெற விரும்புவோமாயின், அதற்கு இன்றியமையாத தக்க நிலைக்குப் பள்ளியாசிரியரை உயர்த்த நாம் ஏதும் செய்யவில்லை, அல்லது தேவையானதிலிருந்து மிக மிகக் குறைவாகவே செய்து வருகிறேம். இன்னமும் நாம் நம்மை விடுவித்துக் கொண்டுவிடாத அரை-ஆசிய அறியாமை இருளை நினைவில் கொண்டிருக்க வேண்டும். அரும் பெரும் முயற்சிகள் இல்லாமல் நாம் நம்மை இதிலிருந்து விடுவித்துக்கொண்டுவிட முடியாது. ஆயினும் இப்படி விடுவித்துக் கொள்வதற்கு நாம் எல்லா வாய்ப்புகளையும் பெற்றிருக்கிறேம். எப்படியெனில், பெருந் திரளினரான மக்கள் நம் நாட்டில் இருப்பதைப் போல் வேறு எங்கும் மெய்யான கலாசாரத்தில் இவ்வளவு அக்கறை கொண்டோராய் இருக்கவில்லை; இந்தக் கலாசாரத்தின் பிரச்சினைகள் நம் நட்டைப் போல் வேறு எங்கும் இவ்வளவு தீர்க்கமாகவும் முரணின்றியும் சமாளிக்கப்படவில்லை; வேறு எந்த நாட்டிலும் அரசு அதிகாரம் தொழிலாளி வர்க்கத்தின் கைகளில் இருக்கவில்லை, இந்தத் தொழிலாளி வர்க்கத்தின் பெருந் திரளினர், தமது கலாசார நிலையின் குறைபாடுகளை என்று சொல்ல மாட்டேன், ஆனல் தமது எழுத்தறிவு நிலையின் குறைபாடுகளை முழு அளவுக்கு

உணர்ந்திருக்கின்றனர்; நம் நாட்டில் போல் வேறு எங்கும் தொழிலாளி வர்க்கம் இத்துறையில் தனது நிலையை மேம்படுத்திக் கொள்ள இப்படித் தியாகங்கள் புரிய இந்த அளவுக்குத் தயாராய் இருக்கவும் இல்லை, வேறு எங்கும் மெய்யாகவே இப்படி தியாகங்கள் புரிந்து வரவும் இல்லை.

ஆரம்பப் பொதுக் கல்வியின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு, முதல் நடவடிக்கையாய், நமது அரசு பட்ஜெட்டைத் திருத்தியமைக்க இன்னமும் நாம் மிகச் சொற்பமாகவே, மிகமிகச் சொற்பமாகவே முயற்சிகள் எடுத்து வருகிறோம். நமது கல்வித் துறை மக்கள் கமிசாரகத்திலுங்கூட அரசுப் பதிப்பகம் ஏதேனும் ஒன்றில் வெட்ககரமான அளவுக்கு எல்லைமீறி பெரிய எண்ணிக்கையிலான அலுவலர்கள் இருப்பதை அடிக்கடி காண்கிறோம். அரசு முதலாவதாய்க் கவலைப்பட வேண்டியது பதிப்பகங்களைப் பற்றியல்ல, படிக்கத் தெரிந்த மக்கள் இருக்க வேண்டுமென்பது பற்றியே யாவற்றுக்கும் முதலாய்க் கவலைப்பட வேண்டும். படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை அதிகரித்தாக வேண்டும், அப்பொழுதுதான் புத்தக வெளியீட்டுக்கு வருங்கால ருஷ்யாவில் விரிந்த அரசியல் அரங்கு கிடைக்கும் என்னும் கருத்துக்கு நேர் முரணான ஒரு நிலைமை இது. பழைய (மற்றும் மோசமான) பழக்கம் காரணமாய் இன்னமும் நாம், மக்களிடையிலான எழுத்தறிவு என்னும் பொது அரசியல் பிரச்சினையைக் காட்டிலும் புத்தக வெளியீட்டுப் பிரச்சினை போன்ற நுட்பவியல் பிரச்சினைகளில் தான் மிகவும் அதிக நேரமும் முயற்சியும் செலவிட்டு வருகிறோம்.

மத்தியத் தொழிற் பயிற்சிக் கல்வி வாரியத்தை[107] எடுத்துக்கொள்வோமானால், அங்கும் இலாகா நலன்களை முன்னிட்டு வேண்டாத அளவுக்கு ஊதிப் பெருத்து உபரியாகி விட்டவை பலவும், விரிவான பொதுக் கல்வியின் தேவைகளுக்கு உகந்தவாறு அமையாத பலவும் நிறைய இருக்கின்றன என்று நிச்சயமாய்க் கூறலாம். மத்தியத் தொழிற் பயிற்சிக் கல்வி வாரியத்தில் நாம் காண்பவற்றுள் பலவும் நியாயமுடைத்தவையே, முதற்கண் நமது

இளம் ஆலைத் தொழிலாளர்களுடைய கல்வியை மேம்படச் செய்யவேண்டும், அதை நடைமுறை சார்ந்த போக்குடைய தாக்கவேண்டும் என்னும் நேர்மையான விருப்பத்துக்கு இணங்க அமைந்தவையே என்பதாய்க் கூற முடியாது. மத்தியத் தொழிற் பயிற்சிக் கல்வி வாரியத்தின் அலுவலர் தொகுதியைக் கவனமாய்ப் பரிசீலித்தால், ஊதிப்பெருத்து உபரியாகிவிட்டதும், இந்த விதத்தில் கற்பனையானதும், கழித்துக் கட்டப்பட வேண்டியதும் ஆகியவை நிறைய இருக்க காண்போம். மக்களிடையே எழுத்தறிவை ஓங்கச் செய்யும் பொருட்டு, பாட்டாளி வர்க்க, விவசாயிகளது அரசில் செலவுச் சிக்கனத்துக்காகச் செய்யப்படக் கூடியவையும் செய்யப்பட வேண்டியவையும் இன்னமும் நிறையவே இருக்கின்றது. பாதியளவுக்கு பிரபுக்குலத்து ரகத்தைச் சேர்ந்த விளையாட்டு நிலையங்களானவற்றை, அல்லது இன்னமும் நமக்குத் தேவையில்லாத, இவை இல்லாமலே நம்மால் இருக்க முடியும்படியான, புள்ளிவிவரங்கள் புலப்படுத்துவது போல மக்களிடையிலே நிலவும் எழுத்தறிவின் நிலையைக் கருதுகையில் நீண்ட காலத்துக்கு இவை இல்லாமலே நாம் சமாளிக்க வேண்டியவையான நிலையங்களை மூடுவதன் மூலம் நாம் செலவுச் சிக்கனம் செய்ய முடியும்.

நமது பள்ளியாசிரியர், முதலாளித்துவச் சமுதாயத்தில் எந்நாளும் அவர் அடைந்திராத, அடையவும் முடியாத ஒரு தரநிலைக்கு உயர்த்தப்பட்டாக வேண்டும். இது யாவரும் அறிந்ததே, இதற்கு நிரூபணம் தேவையில்லை. ஆசிரியரை ஓர் உயர்ந்த கலாசார நிலைக்கு உயர்த்தவும், மெய்யாகவே உன்னதமான அவரது பணித்துறைக்கு ஏற்றவாறு அவருக்கு முழு அளவில் பயிற்சி அளிக்கவும், மற்றும்—பிரதானமாய், மிகவும் பிரதானமாய், மிக மிகப் பிரதானமாய்—அவருடைய நிலையைப் பொருளாயத வழியில் மேம்படுத்தவும் இடைவிடாமலும் முறையாகவும் விடாமுயற்சியோடும் பாடுபட்டு இப்படிப்பட்ட நிலைமையை உண்டாக்க வேண்டும்.

பள்ளியாசிரியர்கள் விதிவிலக்கின்றி எல்லா முதலாளித்துவ நாடுகளிலும் இன்னமும் முதலாளித்துவ அமைப்பின்

ஆதாரத் தூண்களாகவே இருந்து வரும் நிலையிலிருந்து அவர்களை மாற்றி, சோவியத் அமைப்பின் ஆதாரத் தூண் களாக்குவதற்காக, இவ்விதம் அவர்களுடைய பணியின் மூலமாய் விவசாயிகளை முதலாளித்துவ வர்க்கத்தாரு டனான கூட்டணியை விட்டு விலகிப் பாட்டாளி வர்க்கத்து டனான கூட்டணிக்கு வந்து சேரச் செய்வதற்காக, பள்ளி ஆசிரியர்களை ஒழுங்கமைத்திடுவதற்கான நமது முயற்சிகளை நாம் முறையாய் மும்முரமாக்கிச் செல்ல வேண்டும்.

இத்துறையில், கிராமங்களுக்கு முறைபடச் சென்று செயலாற்றுவோரின் விஜயங்களுக்குள்ள தனி முக்கியத்து வத்தைச் சுருக்கமாய்க் குறிப்பிட்டு வலியுறுத்த விரும்பு கிறேன். இத்தகைய விஜயங்கள் ஏற்கனவே நடைபெற்று வருவது மெய்தான். இவை முறைபட ஊக்குவிக்கப்பட வேண்டும். கிராமங்களுக்கான இந்த விஜயங்களைப் போன்ற நடவடிக்கைகளுக்காக நாம் பணம் செலவிடத் தயங்கக் கூடாது—அரசு இயந்திரத்துக்காக, அனேகமாய் முழு அள வில் வரலாற்றின் கடந்த சகாப்தத்தின் விளைவாகிய இந்த இயந்திரத்துக்காகத் தாராளமாய் நாம் விரயம் செய்யும் பணத்தை இந்நடவடிக்கைகளுக்காகச் செலவிடத் தயங்கக் கூடாது.

கிராமங்களின் காப்பு ஆதரவாளர்களாய் நகரத் தொழி லாளர்கள் ஆற்றும் பணிகள் குறித்து, 1922 டிசம்பரில் சோவியத்துகளின் காங்கிரசில் நான் நிகழ்த்துவதாயிருந்த சொற்பொழிவுக்காகப் புள்ளிவிவரங்கள் சேகரித்தேன். இந்தப் புள்ளிவிவரங்களில் ஒரு பகுதி தோழர் ஹூத ரோவ்ஸ்கி எனக்காகத் திரட்டியது. இந்த விவகாரத்தை எடுத்துரைத்து, காங்கிரசின் மூலம் இதை விளம்பரப் படுத்த முடியாமற் போய்விட்டதால், இப்பொழுது விவா தத்துக்காகத் தோழர்களுக்கு இதைச் சமர்ப்பிக்கிறேன்.

இங்கு நம் முன்னே இருப்பது ஓர் அடிப்படை அரசியல் பிரச்சினை — நகரத்துக்கும் கிராமத்துக்கும் இடையிலான உறவுகளைப் பற்றிய பிரச்சினை. நமது புரட்சி அனைத்துக் கும் தீர்மானகரமான முக்கியத்துவமுடைய பிரச்சினை இது. முதலாளித்துவ அரசு நகரத் தொழிலாளர்களை மயக்கி

ஏமாற்றுவதற்காகத் தனது முயற்சிகளைத் திட்டமிட்டு ஒன்றுகுவியச் செய்கிறது; இதன் பொருட்டு அரசாங்கச் செலவிலும் ஜாரிஸ்டு கட்சிகள், முதலாளித்துவக் கட்சிகளின் செலவிலும் வெளியிடப்படும் எல்லா வெளியீடுகளையும் ஒழுங்கு செய்து கொள்கிறது. ஆனால் நாம் நகரத் தொழிலாளியைக் கம்யூனிசக் கருத்துக்களை கிராமத்துப் பாட்டாளி வர்க்கத்திடம் எடுத்துச் செல்லும் பயனுள்ள தூதுவனுக்குவதற்காக நமது அரசியல் அதிகாரத்தைப் பயன்படுத்த முடியும், பயன்படுத்தவும் வேண்டும்.

''கம்யூனிசக் கருத்துக்கள்'' என்று சொன்னேன்; இதனால் தப்பான அபிப்பிராயம் ஏற்பட்டு விடலாம், அல்லது சொல்லின் நேர்பொருளில் அப்படியே அர்த்தப்படுத்தப் பட்டுவிடலாம் என்று அஞ்சி அவசரமாய் நிபந்தனை வரம்பிடுகிறேன். கலப்பற்ற, கருரான கம்யூனிசக் கருத்துக்களை உடனடியாகவே நாம் கிராமப்புறங்களில் பரப்ப வேண்டும் என்பதாய் எந்நிலைமையிலும் இதை அர்த்தப்படுத்திவிடக் கூடாது. கம்யூனிசத்துக்குத் தேவையான பொருளாயத அடித்தளம் நமது கிராமப்புறங்களில் இல்லாதவரை, இதைச் செய்வது கம்யூனிசத்துக்குத் தீங்கிழைப்பதாகவே இருக்கும், உண்மையில் பேராபத்து விளைவிப்பதாகவே இருக்கும் என்றே கூற வேண்டும்.

அதுதான் உண்மை. கிராமப் பகுதிகளில் கம்யூனிசத்தைப் புகுத்துவதென்று முன்கூட்டியே புனைந்தமைந்த நோக்கம் இல்லாமலே, நகரத்துக்கும் கிராமத்துக்குமிடையே நாம் தொடர்புகளை அமைத்திட முற்பட்டாக வேண்டும். கம்யூனிசத்தைப் புகுத்துவதென்ற நோக்கம் தற்போது சாதிக்கப்படக் கூடியதல்ல. இது காலத்துக்கு உகந்ததல்ல. இது போன்ற ஒரு நோக்கத்தை தற்போது ஏற்பது இலட்சியத்துக்குச் சேவை புரிவதற்குப் பதிலாய்த் தீங்கே இழைக்கும்.

ஆனால் நகரத் தொழிலாளர்களுக்கும் கிராமத் தொழிலாளி மக்களுக்குமிடையே தொடர்புகளை நிறுவுதல், அவர்களிடையே ஒரு வகைத் தோழமையுறவை நிறுவுதல் நமது கடமையாகும். இந்தத் தோழமையுறவை எளிதில்

ஏற்படுத்த முடியும். ஆட்சியதிகாரம் வகிக்கும் தொழிலாளி வர்க்கத்தின் முன்னுள்ள அடிப்படைப் பணிகளில் ஒன்று இது. இதை நிறைவேற்ற ஆலைத் தொழிலாளர்களது கழகங்கள் பலவற்றையும் (கட்சி, தொழிற் சங்க, மற்றும் தனியார் கழகங்களை) நாம் நிறுவ வேண்டும்; கிராமங்கள் கலாசார வளர்ச்சி பெற அவற்றுக்கு முறைபட தொண்டாற்றுவதற்கு இக்கழகங்கள் தம்மைப் பணித்துக் கொள்ள வேண்டும்.

எல்லா நகரக் குழுக்களையும் கிராமக் குழுக்களுடன் ''இணைத்து'', இதன் மூலம் தொழிலாளி வர்க்கக் குழு ஒவ்வொன்றும் அது ''இணைக்கப்பட்டிருக்கும்'' கிராமக் குழுவின் கலாசாரத் தேவைகளுக்குப் பணி புரிவதற்கான ஒவ்வொரு வாய்ப்பையும், ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் முறையாய்ப் பயன்படுத்திக் கொள்ளும்படி செய்ய முடியுமா? அல்லது தொடர்புகளுக்கான இதர முறைகளைக் கண்டுபிடிக்க வேண்டுமா? இங்கு நான் இக்கேள்வியைக் குறிப்பிடுவதுடன் நிறுத்திக் கொள்கிறேன். இதைத் தோழர்களின் கவனத்துக்குக் கொண்டு வருவதும், மேற்கு சைபீரியாவிலிருந்து கிடைத்திருக்கும் அனுபவத்தை (தோழர் ஹதரோவ்ஸ்கி இதை என் கவனத்துக்குக் கொண்டுவந்தார்) சுட்டிக் காட்டுவதும், வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்தப் பிரம்மாண்ட கலாசாரப் பணியை அதன் முழுப் பரிமாணத்திலும் எடுத்துரைப்பதும் தான் எனது நோக்கம்.

கிராமப் பகுதிகளுக்காக நமது அரசாங்கப் பட்ஜெட்டுக்கு வெளியே, அல்லது அரசாங்க மார்க்கங்களுக்கு வெளியே அனேகமாய் எதுவுமே நாம் செய்யவில்லை. நமது நாட்டில் நகருக்கும் கிராமத்துக்கும் இடையிலான கலாசார உறவுகளின் தன்மையானது தாமாகவே, தவிர்க்க முடியாத வழியில் மாறிவருவது மெய்தான். முதலாளித்துவத்தில் நகரமானது அரசியல், பொருளாதார, ஒழுக்க நெறி, பௌதிக, இன்ன பிற முறைகளிலான ஊழலைக் கிராமப் புறத்தில் புகுத்திற்று. நம்முடைய விவகாரத்தில், இவற்றுக்கு நேர்மாறானவற்றை நகரங்கள் கிராமப்

புறத்தில் புகுத்துவதற்குத் தாமாகவே முற்பட்டிருக்கின்றன. ஆனால் இவையாவும் தாமாகவே, தன்முனைப்பாகவே நடைபெற்று வருகின்றன என்பதைத் திரும்பவும் குறிப்பிடுகிறேன். உணர்வு பூர்வமாகவும், திட்ட வழியிலும், முறையாகவும் இப்பணியைச் செய்வதன் மூலம் இவற்றை மேம்படச் செய்ய முடியும் (பிற்பாடு நூறு மடங்கு கூடுதலாக்கவும் முடியும்).

இந்தப் பிரச்சினையை நாம் ஆராய்வோமாயின், இந்தப் பிரச்சினையைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளவும், இதை விவாதிக்கவும், காரியங்களைச் செய்து முடிக்கவும் எல்லாவகையான தொழிலாளர் நிறுவனங்களையும் அமைத்துக் கொள்வோமாயின் — இந்நிறுவனங்கள் அதிகாரவர்க்கத் தன்மை பெறுதபடித் தடுப்பதற்கு யாவும் செய்வோமாயின்—அதன்பின் நாம் முன்னேறத் தோடங்குவோம் (அதற்குப் பிற்பாடு இன்னும் நூறு மடங்கு அதிக வேகத்தில் நிச்சயம் முன்னேறுவோம்).

*1923 ஜனவரி 2*

பிராவ்தா, இதழ் 2,
*1923 ஜனவரி 4*
கையொப்பம்: நி. லெனின்

நூல் திரட்டு,
தொகுதி 45,
பக்கங்கள் 363-368.

## கூட்டுறவு குறித்து

### 1

நம் நாட்டில் கூட்டுறவு இயக்கத்தில் போதுமான கவனம் செலுத்தப்படவில்லை என்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. தற்போது, அக்டோபர் புரட்சி நடைபெற்றது முதலாய், புதிய பொருளாதாரக் கொள்கையையும் அன்னியில் (இதற்கு மாருய்ப் புதிய பொருளாதாரக் கொள்கையின் காரணமாய் என்றே இச்சந்தர்ப்பத்தில் நாம் கூற வேண்டும்), கூட்டுறவு இயக்கம் மிகுந்த முக்கியத்துவமுடையதாகி விட்டதை எல்லோரும் புரிந்து கொள்வதாய்ச் சொல்வதற்கில்லை. பழைய கூட்டுறவாளர்களுடைய கனவுகளில் கற்பனைப் புனைவுகள் மிகுதியாய் உள்ளன. அடிக்கடி அவை நகைக்கத்தக்க அளவுக்குக் கற்பனைப் புனைவுகளாய் அமைந்துவிடுகின்றன. அவை நம்ப முடியாத கற்பனைகளாய் இருக்கக் காரணம் என்ன? காரணம் என்னவெனில், சுரண்டலாளர்களுடைய ஆதிக்கத்தை வீழ்த்துவதற்காக நடைபெறும் தொழிலாளி வர்க்க அரசியல் போராட்டத்தின் அடிப்படையான, ஆழ்மட்டத்து முக்கியத்துவத்தை இவர்கள் புரிந்து கொள்வதில்லை. நாம் சுரண்டலாளர்களுடைய ஆதிக்கத்தை வீழ்த்திவிட்டோம், ஆகவே பழைய கூட்டுறவாளர்களுடைய கனவுகளில் கற்பனையாகவும், ஏன் புத்தார்வ மனப்பாங்காகவும், கொச்சையாகவும்கூட இருந்தவை பலவும் இப்பொழுது அப்பட்ட எதார்த்த உண்மையாகி வருகின்றன.

அரசியல் ஆட்சியதிகாரம் தொழிலாளி வர்க்கத்தின் கைக்கு வந்துவிட்டதால், உற்பத்திச் சாதனங்கள் யாவும்

இந்த அரசியல் ஆட்சியதிகாரத்துக்குச் சொந்தமாகிவிட்டதால், இனி மக்கள் எல்லோரையும் கூட்டுறவுக் கழகங்களில் ஒன்றுதிரளச் செய்வதுதான் நமக்குள்ள ஒரே பணி என்ருகி விட்டது. வர்க்கப் போராட்டத்தை நடத்துவதும், அரசியல் ஆட்சியதிகாரத்துக்காகப் போராடுவதும், இன்ன பிறவும் அவசியமென்று பிழையற்ற முறையில் கருதியோர், நியாயமாகவே நகைப்புக்கும் இகழ்ச்சிக்கும் ஏளனத்துக்கும் உரியதாய்க் கொண்ட அந்த சோஷலிசம், இப்பொழுது மக்கள் தொகையில் மிகப் பெருவாரியானோர் கூட்டுறவுகளில் ஒன்றுதிரட்டப்பட்டதும் தாஞகவே தனது குறிக்கோளை நிறைவேற்றிக் கொண்டுவிடும். ஆனுல் இப்பொழுது ருஷ்யாவின் மக்கள் எல்லோரையும் கூட்டுறவு சங்கங்களில் ஒன்றுதிரளச் செய்வது எவ்வளவு பிரம்மாண்ட, எண்ணிலடங்கா மடங்கு முக்கியத்துவமுடையதாகும் என்பதை எல்லாத் தோழர்களும் உணர்வதில்லை. புதிய பொருளாதாரக் கொள்கையை ஏற்றதன் மூலம் நாம், வியாபாரியாய்ச் செயல்படும் விவசாயிக்கு, தனியார் வர்த்தகமெனும் கோட்பாட்டுக்கு ஓரளவு விட்டுக் கொடுத்தோம். இதே காரணத்தால் (சிலர் நினைப்பதற்கு நேர் மாருய்), கூட்டுறவு இயக்கம் இன்று இந்தப் பிரம்மாண்ட முக்கியத்துவம் பெறுகிறது. புதிய பொருளாதாரக் கொள்கையின்கீழ் நாம் செய்ய வேண்டியதெல்லாம் போதுமான அளவுக்கு விரிவாய் ருஷ்யாவின் மக்களைக் கூட்டுறவுச் சங்கங்களில் ஒன்றுதிரட்டுவதுதான். ஏனெனில் இப்பொழுது நாம் தனியார் நலத்தை, தனியார் வர்த்தக நலத்தை, அந்த நலத்தின் மீதான அரசு மேற்பார்வையுடன், கண்காணிப்புடன் எந்த அளவுக்கு இணைக்க வேண்டுமென்று கண்டு கொண்டு விட்டோம்; அதைப் பொது நலன்களுக்கு எந்த அளவுக்குக் கீழ்ப்படியச் செய்ய வேண்டுமென்று கண்டு கொண்டுவிட்டோம். பல சோஷலிஸ்டுகளுக்கும் முன்பு முட்டுக்கட்டையாய் இருந்த இதனை நாம் கண்டு கொண்டுவிட்டோம். எல்லாப் பெருவீத உற்பத்திச் சாதனங்களும் அரசின் ஆட்சியதிகாரத்தின் கீழ் இருத்தல், அரசியல் ஆட்சியதிகாரம் பாட்டாளி வர்க்கத்தின் கையில் இருத்தல்,

இந்தப் பாட்டாளி வர்க்கம் கோடிக் கணக்கான சிறிய, மிகச் சிறிய விவசாயிகளுடன் கூட்டணி கொண்டிருத்தல், பாட்டாளி வர்க்கம் விவசாயிகளுக்குத் தலைமை தாங்குதல் உறுதி பெற்றிருத்தல் முதலான இவைதானே கூட்டுறவுகளைக் கொண்டு—கூட்டுறவுகளை மட்டுமே கொண்டு—முழுநிறை சோஷலிச சமுதாயத்தைக் கட்டியமைக்கத் தேவைப் படுகிறவை? முன்பு நாம் இந்தக் கூட்டுறவுகளை லாப வேட்டை அடிப்பவையாய் இழித்துக் கூறினோம், இப்பொழுதுங்கூட புதிய பொருளாதாரக் கொள்கையின் கீழ் இவற்றை ஓரளவுக்கு இவ்வாறு இழித்துக் கூற நமக்கு உரிமை உண்டு. இந்தக் கூட்டுறவுகளிலிருந்து முழுநிறை சோஷலிச சமுதாயத்தைக் கட்டியெழுப்ப வேண்டியதெல்லாம் மேற்கூறியவைதானே? இன்னும் இது சோஷலிச சமுதாயத்தைக் கட்டியமைப்பது ஆகிவிடாது என்றாலுங் கூட, சோஷலிச சமுதாயத்தைக் கட்டியமைக்கத் தேவையானதும் போதுமானதும் இதுதானே.

இதைத்தான் நமது செய்முறை ஊழியர்கள் பலரும் குறைத்து மதிப்பிட்டுவிடுகிறார்கள். நமது கூட்டுறவுச் சங்கங்களை அவர்கள் ஏளனமாய்க் கருதுகிறார்கள். அதன் தனி முக்கியத்துவத்தை—முதலாவதாய், கோட்பாட்டின் கண்ணோட்டத்திலிருந்தும் (உற்பத்திச் சாதனங்கள் அரசுக்குச் சொந்தமாயிருக்கின்றன), இரண்டாவதாய், மிகவும் எளிய, சுலபமான, விவசாயிக்கு மிகவும் ஏற்புடையதான வழிகளில் புதிய அமைப்புக்கு மாறிச் செல்லும் கண்ணோட்டத்திலிருந்தும் அவற்றுக்குள்ள தனி முக்கியத்துவத்தை—அவர்கள் புரிந்து கொள்ளத் தவறுகின்றனர்.

இதுவும் அடிப்படை முக்கியத்துவத்துக்குரியதே. எல்லாவகையான தொழிலாளர் சங்கங்களைக் கொண்டும் சோஷலிசத்தைக் கட்டியமைப்பது குறித்து விபரீதத் திட்டங்களை வகுப்பது ஒன்று; ஆனால் நடைமுறையில் சோஷலிசத்தைக் கட்டுவது, ஒவ்வொரு சிறு விவசாயியும் அதில் பங்கெடுத்துக் கொள்ளும்படியான முறையில் சோஷலிசத்தைக் கட்டுவது முற்றிலும் வேறொன்று. இப்பொழுது நாம் வந்தடைந்திருப்பது இதே கட்டத்தைத்தான். இதை

வந்தடைந்தபின், நாம் இதைச் சொற்ப அளவுக்கே பயன்படுத்திக் கொள்கிறோம் என்பதில் சந்தேகம் சிறிதும் இல்லை.

புதிய பொருளாதாரக் கொள்கையைக் கைக்கொண்ட போது நாம் அளவுமீறிச் சென்றுவிட்டோம்; தடையில்லாத் தனியார் தொழில், தடையில்லா வாணிபம் என்னும் கோட்பாட்டுக்கு மிதமிஞ்சிய இடம் அளித்தோம் என்பதாலல்ல, கூட்டுறவுகளைக் கருதத் தவறிவிட்டோம், கூட்டுறவுகளைக் குறைத்து மதிப்பிட்டோம்; மேற்கூறிய இரு கண்ணோட்டங்களிலும் கூட்டுறவுகளுக்குள்ள மிகுந்த முக்கியத்துவத்தை ஏற்கெனவே மறக்கத் தொடங்கிவிட்டோம் என்பதால் நாம் அளவுமீறிச் சென்றோம்.

இந்தக் ''கூட்டுறவுக்'' கோட்பாட்டின் அடிப்படையில் நடைமுறையில் என்ன செய்யலாம், என்ன செய்ய வேண்டும் என்பது குறித்து இப்பொழுது வாசகருடன் விவாதிக்கப் போகிறேன். ''கூட்டுறவுக்'' கோட்பாட்டின் சோஷலிசப் பொருள் எல்லோருக்கும் தெளிவாய்ப் புலப்படும் வண்ணம் உடனடியாய் இக்கோட்பாட்டை நாம் எவ்வழிகளில் வளர்க்க முற்படலாம், முற்படவும் வேண்டும்?

கூட்டுறவானது பொதுவாகவும் எப்பொழுதும் சில தனிச் சலுகைகள் பெற்றிருப்பதோடன்றி, இந்தத் தனிச் சலுகைகள் முற்றிலும் பொருளாயதத் தன்மையனவாகவும் (சலுகைக்குரிய வங்கி வட்டி விகிதம் முதலானவை) இருக்கும்படியான அரசியல் வழியில் அது ஒழுங்கமைக்கப்பட வேண்டும். தனியார் தொழில் நிலையங்களுக்கு நாம் அளிக்கும் கடன்களைக் காட்டிலும், கனரகத் தொழிலுக்கும் பிறவற்றுக்கும் அளிப்பதையும் காட்டிலும் அதிகமான, சிறிதளவேனும் அதிகமான, அரசாங்கக் கடன்கள் கூட்டுறவுகளுக்கு வழங்கப்பட வேண்டும்.

குறிப்பிட்ட ஒரு வர்க்கத்தின் நிதி ஆதரவு இருந்தால்தான் ஒரு சமுதாய அமைப்பு தோன்ற முடியும். ''தடையில்லா'' முதலாளித்துவம் பிறப்பதற்கு நூறு கோடிக் கணக்கான ரூபிள் தொகை செலவிட வேண்டியிருந்ததைக் குறிப்பிடத் தேவையில்லை. தற்போது நாம் வழக்கத்தைவிட அதிகமாய் உதவி அளிக்க வேண்டிய

சமுதாய அமைப்பு கூட்டுறவு அமைப்பே என்பதை நாம் உணர்ந்தாக வேண்டும். மெய்யாகவே நாம் இந்த உதவியை அளித்தாக வேண்டும். அச்சொல்லின் மெய்ப் பொருளில் அது உதவியாய் இருத்தல் வேண்டும். அதாவது எந்த வகையான கூட்டுறவு வர்த்தகத்துக்கும் அளிக்கப்படும் உதவியாய் அதை அர்த்தப்படுத்தினுல் போதாது; உதவி அளிக்க வேண்டும் என்று கூறும்போது, மெய்யாகவே பெருந் திரளான மக்கள் தொகையினர் நடைமுறையில் பங்கெடுத்துக் கொள்ளும் கூட்டுறவு வர்த்தகத் துக்கு உதவுவதையே அது குறிக்க வேண்டும். கூட்டுறவு வர்த்தகத்தில் பங்கு கொள்ளும் விவசாயிக்கு போனஸ் தருவது சரியானதோர் உதவி முறைதான், ஆனுல் பிரதான விவகாரம் என்னவெனில் விவசாயி எடுத்துக் கொள்ளும் இந்தப் பங்கின் இயல்பையும், அதில் அடங்கியுள்ள உணர்வையும், அதன் தன்மையையும் சரிபார்த்து உறுதி செய்து கொள்ள வேண்டும். சுருராய்ச் சொல்வதெனில், கூட்டுறவாளர் ஒருவர் கிராமத்துக்குச் சென்று கூட்டுறவுப் பண்டகசாலே திறந்தால், மக்கள் அதில் எந்தப் பங்கும் எடுத்துக் கொள்வதில்லே, ஆயினும் தமது சொந்த நலன்களால் உந்தப்பட்டு அதில் அவர்கள் பங்கெடுத்துக் கொள்ள முன்வரவே செய்வர்.

இந்தப் பிரச்சினேக்கு மற்ருேர் அம்சமும் இருக்கிறது. ''அறிவொளி படைத்த'' (பிரதானமாய் எழுத்தறிவு படைத்த) ஐரோப்பியரின் கண்ணுேட்டத்தின்படி கூட்டுறவுச் செயற்பாடுகளில் ஒருவர் பாக்கியில்லாமல் எல்லோரையும் தன்முனேப்பில்லாத முறையிலல்ல, முழுமுனேப்புடன் பங்கெடுத்துக் கொள்ளும்படி தூண்டுவதற்கு நாம் மேலும் செய்ய வேண்டியுள்ளது அதிகமில்லே. சுருராய்க் கூறுகையில் நாம் மேலும் செய்ய வேண்டியிருப்பது ''ஒன்றே ஒன்று தான்''. கூட்டுறவுகளில் எல்லோரும் பங்கெடுத்துக் கொள்வதன் அனுகூலங்களே நம் மக்கள் புரிந்து கொள்ளும் படியும், இவ்வாறு எல்லோரும் பங்கெடுத்துக் கொள்ள ஏற்பாடு செய்யும் படியும் அவர்களே ''அறிவொளி பெறச் செய்வது தான்'' அது. இந்த ''ஒன்றே ஒன்றுதான்''

மேலும் செய்ய வேண்டியதெல்லாம். சோஷலிசத்துக்கு முன்னேறிச் செல்வதற்குத் தற்போது வேறு வழிமுறைகள் தேவைப்படவில்லை. ஆனால் இந்த ''ஒன்றே ஒன்றைச்'' செய்து முடிப்பதற்கு ஒரு பெரும் புரட்சியே நடந்தேறியாக வேண்டும்—மக்கள் அனைவரும் கலாசார வளர்ச்சி பெறுவதற்குரிய ஒரு கட்டத்தைக் கடந்தாக வேண்டும். ஆகவே, தத்துவார்த்தம் பேசுவதையும் கரணமடித்து வித்தை புரிவதையும் கூடுமான அளவுக்குக் குறைத்துக் கொள்வதென நாம் விதி செய்து கொண்டாக வேண்டும். இவ்விதத்தில் புதிய பொருளாதாரக் கொள்கை ஒரு முன்னேற்றமாகும். ஏனெனில் இது சர்வ சாதாரண விவசாயியின் நிலைக்கு ஏற்றதாகக்கூடியதாய் இருக்கிறது, இந்த நிலைக்கு உயர்வானது எதையும் அது விவசாயியிடமிருந்து கோரவில்லை. ஆனால் மக்கள் தொகையினர் அனைவரையும் புதிய பொருளாதாரக் கொள்கையின் வாயிலாய்க் கூட்டுறவுகளில் பங்கு கொள்ளச் செய்வதற்கு ஒரு முழு வரலாற்றுச் சகாப்தமே வேண்டியிருக்கும். யாவும் நன்கு அமையின் இதைச் சாதிப்பதற்குப் பத்து, இருபது ஆண்டுகளாவது ஆகும். ஆயினும் இது ஒரு தனி வரலாற்றுச் சகாப்தமே ஆகும். இந்த வரலாற்றுச் சகாப்தம் இல்லாமல், அனைத்து மக்களும் எழுத்தறிவு பெறாமல், போதிய அளவு விவேகமுடையோராய் இராமல், புத்தகம் படிக்கும் பழக்கம் ஏற்படப் போதிய அளவுக்கு மக்கள் பயிற்சி பெறாமல், இதற்குரிய பொருளாயத அடித்தளம் இல்லாமல், உதாரணமாய் அறுவடை மோசமாகிவிடுதல், பஞ்சம் போன்ற பலவற்றிடமிருந்தும் பாதுகாப்பு பெறுவதற்கு வேண்டிய ஓரளவு நிறைவு நிலை இல்லாமல்—இவையாவும் இன்றி நாம் நமது குறிக்கோளை அடைய முடியாது. செயல்களில் விரிவான புரட்சிகர வீச்சை நாம் வெளிப்படுத்திக் காட்டி—மிகுதியாய் வெளிப்படுத்திக் காட்டி — முழு அளவில் வெற்றி ஈட்டியுள்ள புரட்சிகர ஆர்வத்தை விவேகமுள்ள, அறிவு பெற்ற வர்த்தகருக்குரிய திறனுடன் இணைக்கத் தெரிந்து கொள்வதுதான் இப்பொழுது தலையாயதாகும். சிறந்த கூட்டுறவாளராவதற்கு விவேகமும் அறிவு

முடைய வர்த்தகராய் இருப்பதற்குரிய ஆற்றல் இருந்தால் போதும். வர்த்தகராய் இருப்பதற்குரிய ஆற்றல் என்பதன் மூலம் நான் பண்பாடுடைய வர்த்தகராய் இருப்பதற்குரிய ஆற்றலேயே குறிப்பிடுகிறேன். வர்த்தகம் புரிகிறோம் என்பதால் தாம் நல்ல வர்த்தகர்களே என்பதாய்க் கற்பனை செய்து கொள்ளும் ருஷ்யர்கள் அல்லது விவசாயிகள் இதைத் தெளிவாய்ப் புரிந்து கொண்டாக வேண்டும். முன்னதிலிருந்து பின்னது பெறப்பட்டுவிடவில்லை. அவர்கள் வர்த்தகம் புரிவது மெய்தான், ஆனால் பண்பாடுடைய வர்த்தகர்களாய் இருப்பதற்கும் அதற்கும் நெடுந்தூரம். இப்பொழுது அவர்கள் ஆசிய முறையில் வர்த்தகம் புரிகின்றனர், ஆனால் நல்ல வர்த்தகராய் இருக்க வேண்டுமாயின் ஐரோப்பிய முறையில் வர்த்தகம் புரிந்தாக வேண்டும். அந்த நிலையிலிருந்து அவர்கள் ஒரு முழுச் சகாப்தம் பின் தங்கியோராய் இருக்கின்றனர்.

முடிவுரையாய்க் கூறவேண்டியது: சோஷலிச அரசு கூட்டுறவுகளுக்குப் பலவும் பொருளாதார, நிதித் துறை, வங்கித் துறை சலுகைகள் வழங்க வேண்டும்—மக்களை ஒன்று திரட்டுவதற்குரிய புதிய கோட்பாட்டுக்கு ஆதரவளிக்க இதுவே வழி. ஆனால் இது இப்பணியின் பொது உருவரையே தவிர, நடைமுறைப் பணியின் முழு உள்ளடக்கத்தையும் வரையறுத்து விவரமாய் எடுத்துரைக்கவில்லை. அதாவது கூட்டுறவுகளில் சேருவதற்காகத் தர வேண்டிய "போனசின்" வடிவம் என்ன (இதை நாம் எந்த நிபந்தனைகளின் பேரில் தருவது), கூட்டுறவுகளுக்கு நாம் போதுமான அளவில் உதவுவதற்கு வேண்டிய போனசின் வடிவம் என்ன, பண்பாடுடைய கூட்டுறவாளரை உருவாக்கக் கூடிய போனசின் வடிவம் என்ன என்பதை நாம் கண்டறிந்து கொண்டாக வேண்டும். உற்பத்திச் சாதனங்களில் சமூக உடைமை இருக்குமாயின், பாட்டாளி வர்க்கமானது முதலாளித்துவ வர்க்கத்தின் மீது வர்க்க வெற்றி பெற்று விடுமாயின், பண்பாடுடைய கூட்டுறவாளர்களது அமைப்பு தான் சோஷலிச அமைப்பு.

*1923 ஜனவரி 4*

## 2

புதிய பொருளாதாரக் கொள்கை குறித்து நான் எழுதிய போதெல்லாம், 1918ல் அரசு முதலாளித்துவத்தைப் பற்றி நான் எழுதிய கட்டுரையை எப்பொழுதுமே மேற்கோளாய்க் குறிப்பிட்டேன். பன்முறை இது சில இளந் தோழர்களது மனதில் சந்தேகங்களை எழுப்பியிருக்கிறது. ஆனால் இவர்களுடைய சந்தேகங்கள் பிரதானமாய்க் கருத்தியலான அரசியல் விவகாரங்களைப் பற்றியவையே.

அரசு முதலாளித்துவம் என்னும் தொடரை உற்பத்திச் சாதனங்கள் தொழிலாளி வர்க்கத்தின், அரசியல் ஆட்சியதிகாரம் வகிக்கும் தொழிலாளி வர்க்கத்தின் உடைமையாய் இருக்கும் ஓர் அமைப்பைக் குறிப்பதற்கு உபயோகிக்கக் கூடாதென இவர்கள் நினைத்தனர். ஆனால் ''அரசு முதலாளித்துவம்'' என்னும் தொடரை நான் முதலாவதாக, நமது தற்போதைய நிலையை இடதுசாரி கம்யூனிஸ்டுகள் என்போருடன் நடைபெற்ற எனது வாக்குவாதத்தில் ஏற்கப்பட்ட நிலையுடன் வரலாற்று வழியில் இணைத்துக் காட்டுவதற்காக உபயோகித்தேன் என்பதை இவர்கள் கவனிக்கவில்லை. தவிரவும் அப்பொழுது நான் அரசு முதலாளித்துவம் தற்போதுள்ள நமது பொருளாதாரத்தைக் காட்டிலும் மேம்பட்டதாய் இருக்கும் என்று வாதாடினேன். சாதாரண அரசு முதலாளித்துவத்துக்கும். புதிய பொருளாதாரக் கொள்கையை வாசகருக்கு அறிமுகம் செய்கையில் நான் குறிப்பிட்ட அசாதாரணமான—மிகமிக அசாதாரணமான என்றுகூட சொல்ல வேண்டும் —அரசு முதலாளித்துவத்துக்கும் இடையிலுள்ள தொடர்பைக் காட்டுவது எனக்கு முக்கியமானதாய் இருந்தது. இரண்டாவதாக, நடைமுறைக் குறிக்கோள் எப்பொழுதுமே எனக்கு முக்கியமானதாய் இருந்தது. சலுகை உரிமைக் குத்தகைகள் தருவதே நமது புதிய பொருளாதாரக் கொள்கையின் நடைமுறைக் குறிக்கோள். நடப்பிலுள்ள சூழ்நிலையில் நமது நாட்டில் சலுகை உரிமைகள் சந்தேகத்துக்கு இடமில்லாமல் அரசு முதலாளித்துவத்தின் கலப்பற்ற சுத்தமான

ஒரு வடிவமாகவே இருக்கும். அரசு முதலாளித்துவம் குறித்து இப்படித்தான் நான் வாதாடினேன்.

ஆனால் இந்த விவகாரத்தின் மற்றோர் அம்சமும் இருக்கிறது. இதற்கு அரசு முதலாளித்துவம் தேவைப்படலாம்; அல்லது குறைந்தது அதனுடனான ஒப்பிடலாவது தேவைப்படலாம். கூட்டுறவுகள் பற்றிய பிரச்சினையே இந்த அம்சம்.

முதலாளித்துவ அரசில், கூட்டுறவுகள் கூட்டு முதலாளித்துவ நிலையங்களாகும் என்பதில் ஐயமில்லை. நமது தற்போதைய பொருளாதார நிலைமைகளில், தனியார் முதலாளித்துவத் தொழில் நிலையங்களை—தேசவுடைமையாக்கப்பட்ட நிலத்தில் அல்லாது வேறு எவ்வழியிலும் அல்லாமல், தொழிலாளி வர்க்க அரசின் கண்காணிப்பின் கீழ் அல்லாது வேறு எவ்வழியிலும் அல்லாமல்—முழுக்க முழுக்க சோஷலிச வகையிலான தொழில் நிலையங்களுடன் (உற்பத்திச் சாதனங்களும் இந்நிலையங்கள் அமைந்திருக்கும் நிலமும் மற்றும் இந்நிலையங்கள் பூராவும் அரசின் உடைமையாய் இருப்பவை) இணைத்திடும் மூன்றாவது வகையிலான நிலையங்களைப் பற்றிய பிரச்சினை, அதாவது கூட்டுறவுகளைப் பற்றிய பிரச்சினை எழுவதிலும் ஐயமில்லை. முன்பெல்லாம் கூட்டுறவுகள் ஏனைய நிலையங்களிலிருந்து அடிப்படையாகவே மாறுபடும் சுயேச்சையான ஒருதனி வகை நிலையங்களாய்க் கருதப்படவில்லை. கூட்டுத்தொழில் நிலையங்கள் எப்படித் தனியார் தொழில் நிலையங்களிலிருந்து மாறுபடுகின்றனவோ அதே போல தனியார் முதலாளித்துவத்தில் கூட்டுறவு நிலையங்கள் முதலாளித்துவ நிலையங்களிலிருந்து மாறுபடுகின்றன. அரசு முதலாளித்துவத்தில் கூட்டுறவு நிலையங்கள் அரசு முதலாளித்துவ நிலையங்களிலிருந்து மாறுபடுகின்றன; ஏனெனில் முதலாவதாக, அவை தனியார் நிலையங்கள், இரண்டாவதாக, அவை கூட்டு நிலையங்கள். நம்முடைய தற்போதைய அமைப்பில் கூட்டுறவு நிலையங்கள் தனியார் முதலாளித்துவ நிலையங்களிலிருந்து மாறுபடுகின்றன, ஏனெனில் அவை கூட்டு நிலையங்கள்; ஆனால் அவை அமைந்துள்ள நிலமும் அவற்றின் உற்பத்திச்

சாதனங்களும் அரசுக்கு, அதாவது தொழிலாளி வர்க்கத்துக்குச் சொந்தமாயிருக்குமாயின் அவை சோஷலிச நிலையங்களிலிருந்து மாறுபடுகிறவை அல்ல.

கூட்டுறவுகள் குறித்து விவாதிக்கையில் இந்த நிலைமை போதிய அளவுக்குக் கவனிக்கப்படுவதில்லை. நமது அரசியல் அமைப்பினுடைய தனி இயல்புகளின் காரணமாய் நமது கூட்டுறவுகள் முற்றிலும் தனிவகைப்பட்ட முக்கியத்துவம் பெறுவது மறக்கப்பட்டுவிடுகிறது. சலுகை உரிமைகளை நாம் ஒதுக்கிவிடுவோமாயின்—எவ்விதத்திலும் இவை கணிச அளவில் வளர்ந்துவிடவில்லை என்பதை இடைக் குறிப்பாய் இங்கு குறிப்பிடலாம்—நமது நிலைமைகளில் கூட்டுறவானது அனேகமாய் எப்பொழுதும் முழு அளவுக்கு சோஷலிசத்துக்கு ஒத்ததாகிவிடுகிறது.

நான் நினைப்பதை விளக்கமாய்க் கூறுகிறேன் கேளுங்கள். ராபர்ட் ஓவன் போன்ற பழைய கூட்டுறவாளர்களுடைய திட்டங்கள் விபரீதமான கற்பனைகளாய் இருந்தது ஏன்? ஏனெனில் அவர்கள் வர்க்கப் போராட்டம், தொழிலாளி வர்க்கம் அரசியல் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுதல், சுரண்டும் வர்க்கத்தினுடைய ஆதிக்கத்தை வீழ்த்தல் போன்ற அடிப்படைப் பிரச்சினைகளைக் கருதாமலே அக்காலத்திய சமுதாயத்தை சமாதான வழியில் சோஷலிசமாய்த் திருத்தியமைக்கலாமெனக் கனவு கண்டனர். எனவேதான் நாம் இந்தக் "கூட்டுறவு" சோஷலிசத்தை முற்றிலும் கற்பனை மயமானதென்றும், நாட்டின் மக்களைக் கூட்டுறவுச் சங்கங்களில் ஒன்றுதிரட்டுவதாலேயே வர்க்கப் பகைவர்களை வர்க்க ஒத்துழைப்பாளர்களாகவும், வர்க்கப் போரை வர்க்க அமைதியாகவும் (சமூக அமைதி என்பதாய்க் கூறப்பட்டது) மாற்றிவிடலாம் என்ற கனவைப் புத்தார்வ மனப்பாங்காகவும் கொச்சையானதாகவும்கூட கருதுவதில் பிழை ஏதுமில்லை.

தற்போதுள்ள அடிப்படைப் பணியின் கண்ணோட்டத்தின்படி இவ்வாறு கருதுவது முற்றிலும் சரியே. ஏனெனில் அரசியல் ஆட்சியதிகாரம் பெறுவதற்கான வர்க்கப் போராட்டம் இல்லாமல் சோஷலிசத்தை நிறுவிவிட முடியாது.

ஆனல் இப்பொழுது அரசியல் ஆட்சியதிகாரம் தொழிலாளி வர்க்கத்தின் கைக்கு மாறியதால், சுரண்டலாளர்களுடைய அரசியல் ஆட்சியதிகாரம் வீழ்த்தப்பட்டதால், உற்பத்திச் சாதனங்கள் யாவும் (தொழிலாளர் அரசு தானே விரும்பி குறிப்பிட்ட நிபந்தனைகளின் பேரில் குறிப்பிட்ட காலத்துக்குச் சலுகை உரிமைகளின் வடிவில் சுரண்டலாளர்களிடம் விட்டு வைப்பதைத் தவிர்த்து) தொழிலாளி வர்க்கத்தின் உடைமையாய் இருப்பதால், நிலைமை எப்படி மாறிவிட்டது பாருங்கள்.

நமக்குக் கூட்டுறவின் வளர்ச்சியே முற்றிலும் சோஷலிசத்தின் வளர்ச்சிக்கு ஒப்பானதாகிவிட்டது (மேற்கூறிய ''சிறிய'' விதிவிலக்கைத் தவிர்த்து) என்று இப்பொழுது நாம் முழு உரிமையுடன் கூறலாம். அதே போது சோஷலிசத்தைப் பற்றிய நமது கண்ணேட்டம் அனைத்திலும் ஒரு தீவிர மாற்றம் ஏற்பட்டிருப்பதையும் நாம் ஒத்துக் கொண்டாக வேண்டும். முன்பு நாம் அரசியல் போராட்டத்தையும் புரட்சியையும் அரசியல் ஆட்சியதிகாரம் பெறுவதையும் இன்ன பிறவற்றையுமே பிரதானமாய் வலியுறுத்தி வந்தோம், வலியுறுத்தி வரவும் வேண்டியிருந்தது. வலியுறுத்தலானது இப்பொழுது சமாதான வழியிலான ஒழுங்கமைப்பு வகைப்பட்ட ''கலாசாரப்'' பணிக்கு இடம் பெயர்ந்து மாறி வருகிறது. நமது சர்வதேச உறவுகளையும், உலக அளவில் நாம் நமது நிலைக்காகப் போராட வேண்டியிருப்பதையும் கருதத் தேவை இல்லையாயின், வலியுறுத்தல் கலாசாரப் பணிக்கு மாறிச் செல்லுகிறது என்று நான் கூற வேண்டியிருக்கும். ஆனல் இதைக் கருதாது ஒதுக்கிவிட்டு, உள்நாட்டுப் பொருளாதார உறவுகளுடன் நிறுத்திக் கொள்வோமாயின், நமது பணியில் வலியுறுத்தலானது நிச்சயமாய்க் கலாசாரத் துறைக்கே இடம் பெயர்ந்து மாறிச் செல்கிறது.

இரண்டு பிரதான பணிகள் நம்மை எதிர்நோக்குகின்றன. இந்தச் சகாப்தமே இவ்விரு பணிகளாலுமானதுதான். முதலாவது, நமது அரசின் இயந்திரத்தைத் திருத்தியமைத்தல். இந்த இயந்திரம் முற்றிலும் உபயோகமற்றதாகும்;

முந்திய சகாப்தத்திலிருந்து முழுமையாய் இவ்வியந்திரத்தை நாம் பெற்றுக் கொண்டோம். போராட்டத்தின் கடந்த ஐந்து ஆண்டுகளில் இந்த இயந்திரத்தைத் தீவிரமாய்த் திருத்தியமைக்கவில்லை, திருத்தியமைக்க முடியவும் இல்லை. நமது இரண்டாவது பணி விவசாயிகளிடையே நடைபெற வேண்டிய கலாசாரப் பணி. விவசாயிகளைக் கூட்டுறவு களில் ஒன்றுதிரளச் செய்வதே, விவசாயிகளிடையே நடை பெற வேண்டிய கலாசாரப் பணியின் பொருளாதார நோக்கம். விவசாயிகள் அனைவரும் கூட்டுறவுகளில் ஒன்று திரட்டப்பட்டிருப்பார்களாயின், இப்பொழுது நாம் சோஷ லிசத்தில் இரு கால்களையும் ஊன்றிக் கெட்டியாய் நின்று கொண்டிருப்போம். ஆனால் விவசாயிகள் அனைவரையும் கூட்டுறவுகளில் ஒன்றுதிரட்டும் முன் விவசாயிகளுடைய (மிகப் பெருவாரியான மக்கள் திரளான விவசாயிகளு டைய) கலாசார நிலையை உயர்த்தியாக வேண்டும். கலா சாரப் புரட்சி இல்லாமல் உண்மையில் இப்பணியை நிறை வேற்ற முடியாது.

போதிய அளவு கலாசார வளர்ச்சி பெறாத ஒரு நாட் டில் நாம் சோஷலிசத்தை நாட்ட முற்பட்டது குருட்டுத் துணிச்சலான காரியமாகுமென நமது எதிராளிகள் திரும்பத் திரும்பக் கூறினர். தத்துவத்தால் (எல்லா வகை யான பகட்டுப் புலமையாளர்களது தத்துவத்தால்) விதிக் கப்பட்டதற்கு எதிர் முனையிலிருந்து நாம் தொடங்கியதால், அவர்களுக்கு இந்தத் தவறான எண்ணம் ஏற்பட்டது. ஏனெ னில் நமது நாட்டில் அரசியல், சமுதாயப் புரட்சி கலா சாரப் புரட்சிக்கு முன்னதாகவே நடைபெற்றது. இப்பொ ழுது நம்மை இதே கலாசாரப் புரட்சி எதிர்நோக்குகிறது.

இந்தக் கலாசாரப் புரட்சி இப்பொழுது நம் நாட்டை முழுநிறை சோஷலிச நாடாக்குவதற்குப் போதுமான தாகும். ஆனால் இப்புரட்சி முற்றிலும் கலாசாரத் தன்மைய தான இடர்ப்பாடுகளையும் (ஏனெனில் நாம் எழுத்தறியா தோராய் இருக்கிறோம்), முற்றிலும் பொருளாயதத் தன் மையதான இடர்ப்பாடுகளையும் (ஏனெனில் கலாசார வளர்ச்சி பெறுவதற்கு நாம் பொருளாயத உற்பத்திச்

*சாதனங்களில் குறிப்பிட்ட ஓர் அளவு வளர்ச்சி அடைந்தாக வேண்டும், குறிப்பிட்ட ஒரு பொருளாயத அடித்தளத்தைப் பெற்றாக வேண்டும்) மிகப் பெரிய அளவில் உண்டாக்குகிறது.*

*1923 ஜனவரி 6*

*முதன்முதல் 1923 மே 26, 27ல் பிராவ்தா, இதழ்கள் 115, 116ல் வெளிவந்தது*

*நூல் திரட்டு, தொகுதி 45, பக்கங்கள் 369-77*

*கையொப்பம்: நி. லெனின்*

## நமது புரட்சி

### (நி. சுகானவின் குறிப்புகள் சம்பந்தமாய்[108])

### 1

புரட்சியைப் பற்றிய சுகானவின் குறிப்புகளை அண்மையில் படித்துப் பார்த்தேன். நமது குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகள் எல்லோருக்கும், இரண்டாவது அகிலத்தின் வீரர்கள் எல்லோருக்கும் உரியதாயிருக்கும் பகட்டுப் புலமைதான் யாவற்றையும்விட எடுப்பாய்த் தெரிகின்றது. இவர்கள் எல்லோருமே நெஞ்சுத் துணிவு சிறிதும் இல்லாதவர்கள், ஜெர்மன் முன்மாதிரியிலிருந்து இம்மியளவு விலகிச் செல்வதென்றாலும் இவர்களில் மிகச் சிறந்தோருங்கூட வரம்புகள் இட்டு அரண்கள் அமைத்துக் கொள்கிறார்கள் என்பது அன்னியில்—குட்டிமுதலாளித்துவ ஜனநாயகவாதிகள் எல்லோருக்குமே பொதுவானதாய் அமைந்து, புரட்சிக் காலம் முழுதும் இவர்கள் வெகுவாய் வெளிப்படுத்திக் காட்டியிருக்கும் இந்தக் குணாதிசயத்தை அன்னியில், மிகவும் எடுப்பாய்த் தெரிவது என்னவெனில் கடந்த காலத்தை அப்படியே காப்பியடிக்கும் இவர்களுடைய அடிமைப் புத்திதான்.

இவர்கள் எல்லோரும் தம்மை மார்க்சியவாதிகளாய் அழைத்துக் கொண்ட போதிலும், மார்க்சியம் குறித்து இவர்களுக்குள்ள கருத்தோட்டம் முழுக்க முழுக்க பகட்டுப் புலமையின் பாணியிலேதான் இருக்கிறது. மார்க்சியத்தில் தீர்மானகரமாய் இருப்பது எதுவோ அதை—அதாவது மார்க்சியத்தின் புரட்சிகர இயக்கவியலை—புரிந்து கொள்ள இவர்கள் அறவே தவறிவிடுகின்றனர். புரட்சிக்

காலங்களில் உச்ச அளவுக்கு வளைந்து கொடுக்கும்படியான நெகிழ்வான போக்கு[109] தேவைப்படுகிறதென்று மார்க்ஸ் வெளிப்படையாகவே கூறியவற்றையும்கூட இவர்கள் புரிந்து கொள்ள அறவே தவறிவிடுகின்றனர். உதாரணமாய், ஜெர்மனியில் புரட்சிகர நிலைமையைத் தோற்றுவிக்கக் கூடிய விவசாயிப் போர் ஒன்றைத் தொழிலாளி வர்க்க இயக்கத்துடன்[110] இணைந்து நடைபெறச் செய்யலாம் என்கிற நம்பிக்கையைத் தெரிவித்து மார்க்ஸ் தமது கடிதங் களில்—1856ல் என்று நினைக்கிறேன்—எழுதியவற்றையும் கூட இவர்கள் கவனிக்கத் தவறிவிடுகின்றனர் — வெளிப் படையான இந்தக் கருத்துரையையுங்கூட நெருங்கி வரா மல், சூடான பால் சட்டியைச் சுற்றிக் கொண்டிருக்கும் பூனையைப் போல, தொலைவிலிருந்தபடி வட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

முதலாளித்துவ வர்க்கத்திடமிருந்து முறித்துக் கொள் வது போகட்டும், அதனிடமிருந்து சற்றே தடம் புரள் வதற்கும்கூட துணிவில்லாத கோழைகளான சீர்திருத்தவா திகளே ஆவோம் என்று தம்மைத் தாமே இவர்கள் தம் நடத்தையின் மூலம் அம்பலப்படுத்திக் கொள்கின்றனர். அதேபோது அடாபிடியான வாய்வீச்சையும் வீம்புப் பேச்சையும் கொண்டு தமது கோழைத்தனத்தை மூடி மறைத்துக் கொள்கிறார்கள். ஆனால் முற்றிலும் தத்து வார்த்த கண்ணோட்டத்திலுங்கூட இவர்கள் எல்லோரும் பின்வரும் மார்க்சிய ஆய்வு நிலைகளைப் புரிந்து கொள்ள சிறி தும் இயலாதோராய் இருப்பது எடுப்பாய்த் தெரிகிறது: இதுகாறும் முதலாளித்துவமும் முதலாளித்துவ ஜனநாயக மும் மேலைய ஐரோப்பாவில் குறிப்பிட்டதொரு வளர்ச்சிப் பாதையில் சென்றுள்ளதை இவர்கள் கண்டிருக்கிறார்கள்; இந்தப் பாதையைத் தக்க மாற்றங்களுடன்தான், சிற்சில திருத்தங்களுடன் மட்டும்தான் (உலக வரலாற்றின் பொது வான வளர்ச்சியினது கண்ணோட்டத்தில் சிறிதும் குறிப் பிடத்தக்கவை அல்லாத சில திருத்தங்களுடன் மட்டும் தான்) ஒரு முன்மாதிரியாய்க் கொள்ள முடியுமென்பது இவர்களுடைய சிந்தனைக்கு எட்டாத ஒன்றாய் இருக்கிறது.

முதலாவதாக—ஏகாதிபத்திய முதலாம் உலகப் போருடன் இணைந்த புரட்சி. இத்தகைய ஒரு புரட்சி இந்தப் போரின் விளைவாய் எழும் புதிய இயல்புகளை அல்லது உருத்திரிபுகளை வெளிக்காட்டவே செய்யும், ஏனெனில் உலகம் இத்தகைய ஒரு போரை இத்தகைய ஒரு சூழ்நிலையில் ஒரு போதும் கண்டதில்லை. இப்போருக்குப் பிற்பாடு மிகவும் செல்வந்த நாடுகளானவற்றின் முதலாளித்துவ வர்க்கத்தார் இது நாள் வரை ''முறையான'' முதலாளித்துவ உறவுகளை மீட்டமைக்க முடியாதோராய் இருப்பதைக் காண்கிறோம். ஆயினும் நமது சீர்திருத்தவாதிகள்—புரட்சியாளர்களாய் வேடம் பூண்டுள்ள குட்டிமுதலாளித்துவப் பகுதியினர்—முறையான முதலாளித்துவ உறவுகளே இறுதி வரம்பென (இவ்வளவுதான், இதற்கு மேல் ஓரடியும் போகலாகாது) நம்பினர், இனியும் நம்பி வருகின்றனர். ''முறையான'' உறவுகளைப் பற்றிய இவர்களுடைய கருத்தோட்டமுங்கூட அளவுமீறி ஒரேமாதிரியான வார்ப்பாகவும், அளவுமீறி குறுகியதாகவும் இருக்கிறது.

இரண்டாவதாக, ஒட்டுமொத்தமாய் உலக வரலாற்றின் வளர்ச்சியானது பொது விதிகளுக்கு ஏற்பவே நடைபெறுகிறது என்றாலும், வளர்ச்சியின் குறிப்பிட்ட சில காலகட்டங்களில் இந்த வளர்ச்சி அதன் வடிவத்திலோ, வரிசைக் கிரமத்திலோ சில தனி இயல்புகளை வெளிப்படுத்துவது எவ்வகையிலும் தடுக்கப்பட்டுவிடவில்லை, மாறாக எதிர்பார்க்கக் கூடியதே என்னும் கருத்து இவர்களுக்கு முற்றிலும் அன்னியமானதாய் இருக்கிறது. உதாரணமாய், ருஷ்யவானது நாகரிக நாடுகளுக்கும் இந்தப் போரால் முதன்முதல் நாகரிகத்தின் செயல் வட்டத்தினுள் திட்டவட்டமாய்க் கொண்டு வரப்பட்டிருக்கும் நாடுகளுக்கும்—அதாவது ஐரோப்பிய நாடுகளல்லாத எல்லாக் கிழக்குலக நாடுகளுக்கும் — எல்லைக் கோட்டில் அமைந்திருப்பதால், அது சிற்சில தனி இயல்புகளை வெளிப்படுத்தக் கூடும், நிச்சயம் வெளிப்படுத்தவும் செய்யும் என்பது குறித்து இவர்கள் நினைத்தே பார்ப்பதில்லை. இந்தத் தனி இயல்புகள் உலக வளர்ச்சியின் பொது வழிக்கு ஒப்பவே அமைந்

வின் ஆதரவாளர்களுக்கும் எதிர்ப்பாளர்களுக்கும் இடையே பிளவு ஏற்பட்டது. இந்தக் காங்கிரசில் கட்சியின் மத்திய உறுப்புகளுக்கு நடைபெற்ற தேர்தல்களில், லெனினியவாதிகள் பெரும்பான்மை வாக்குகள் பெற்றதால் (பெரும்பான்மையைக் குறிக்கும் ருஷ்யச் சொல்: ''போல்ஷின்ஸ்துவோ''), போல்ஷிவிக்குகள் என்று அழைக்கப்படலாயினர். சந்தர்ப்பவாதப் போக்கினர் சிறுபான்மை வாக்குகள் பெற்றதால் (சிறுபான்மையைக் குறிக்கும் ருஷ்யச் சொல்: ''மென்ஷின்ஸ்துவோ''), மென்ஷிவிக்குகள் என்று அழைக்கப்படலாயினர்.—15.

6 சமூக-ஜனநாயகவாதிகளது வலதுசாரி சந்தர்ப்பவாதப் பிரிவினராய் ரு.ச.ஜ.தொ. கட்சியில் இருந்து வந்த மென்ஷிவிக்குகளும், மற்றும் சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் உறுப்பினர்களும் இங்கு குறிப்பிடப்படுகிறார்கள்.

மென்ஷிவிக்குகள்—ருஷ்ய சமூக-ஜனநாயக இயக்கத்தில் நிலவிய சந்தர்ப்பவாதப் போக்கைச் சேர்ந்தோர்.

இவர்கள் கட்சியின் புரட்சி வேலைத்திட்டத்தையும் புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தையும் தொழிலாளி வர்க்கத்துக்கும் விவசாயி மக்களுக்கும் இடையிலான கூட்டணியையும் எதிர்த்தனர். மிதவாத முதலாளித்துவ வர்க்கத்தாருடன் சமரசம் செய்து கொள்ளும் கொள்கையை அனுசரித்தனர்.

மென்ஷிவிக்குகள் 1905-07ஆம் ஆண்டுப் புரட்சி தோல்வியுற்றபின் சட்டவிரோதமாக இயங்கி வந்த புரட்சிகரக் கட்சியை ஒழித்திட முயன்றனர். 1912 ஜனவரியில் நடந்த ரு.ச.ஜ.தொ. கட்சியின் ஆறுவது அனைத்து ருஷ்ய மாநாடு கட்சிக்கலைப்புவாதிகளாகிய மென்ஷிவிக்குகளைக் கட்சியிலிருந்து விலக்கியது.

1917 பிப்ரவரியில் நடைபெற்ற முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியைத் தொடர்ந்து மென்ஷிவிக்குகள் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தின் உறுப்பினர்களாகி, அதன் ஏகாதிபத்தியக் கொள்கையை ஆதரித்தனர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு மென்ஷிவிக்குகள் ஏனைய எதிர்ப்புரட்சிக் கட்சிகளுடன் சேர்ந்து சோவியத் ஆட்சியதிகாரத்தை எதிர்த்துச் சதிகளும் கலகங்களும் செய்தனர்.—18.

**சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள்**—ருஷ்யாவில் 1901 இறுதியிலும் 1902 துவக்கத்திலும் பல்வேறு நரோதியவாதக் குழுக்களும் வட்டங்களும் ஒன்றுகலந்ததின் விளைவாகத் தோன்றிய குட்டிமுதலாளித்துவக் கட்சி.

சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் பாட்டாளி வர்க்கத்தினருக்கும் விவசாயி மக்களுக்கும் இடையே உள்ள வர்க்க வேறுபாடுகளைக் காணத் தவறினர். விவசாயி மக்களிடையே உள்ள வர்க்கப் படித்தர வேற்றுமையையும் வர்க்க முரண்பாடுகளையும் மெருகிட்டு மறைத்தனர், புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தை நிராகரித்தனர். ஜார் எதேச்சாதிகாரத்துக்கு எதிரான போராட்டத்தில் இவர்கள் தனியாள் பயங்கரவாதப் போர்த்தந்திரத்தைக் கையாண்டனர்.

முதல் உலக ஏகாதிபத்தியப் போரின் போது பெரும்பான்மை சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் சமூக-தேசிய வெறி நிலையை மேற்கொண்டனர்.

1917 பிப்ரவரியில் நடந்த முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பிறகு சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் முதலாளிகள்-நிலப்பிரபுக்களின் எதிர்ப்புரட்சி இடைக்கால அரசாங்கத்தின் பிரதான தூண்களாய்ச் செயல்பட்டனர். சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் தலைவர்களும் அவ்வரசாங்கத்தில் அமைச்சர் பதவிகளை வகித்தனர் (கேரென்ஸ்கி, அவ்க்சேன்தியெவ், செர்னேவ்). நிலப்பிரபுக்களது நிலவுடைமையை ஒழிக்க வேண்டுமென்ற விவசாயிகளது கோரிக்கைக்கு ஆதரவளிப்பதை சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் கைவிட்டு விட்டனர். இடைக்கால அரசாங்கத்திலிருந்த இவர்களது அமைச்சர்கள், நிலப்பிரபுக்களின் பண்ணைகளைக் கைப்பற்றி வந்த விவசாயிகளுக்கு எதிராகத் தண்டனைப் படைகளை அனுப்பி வைத்தார்கள்.

ருஷ்யாவில் வெளிநாட்டுத் தலையீட்டின் போதும் உள்நாட்டுப் போரின் போதும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் எதிர்ப்புரட்சி நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்; வெளிநாட்டு படையினர், எதிர்ப்புரட்சியாளர்கள் ஆகியோருக்கு வெளிப்படையாகவே ஆதரவளித்தனர்; எதிர்ப்புரட்சி சதிகளில் கலந்து கொண்டனர், சோவியத் அரசு, கம்யூனிஸ்டுக் கட்சி ஆகியவற்றின் தலைவர்களுக்கு எதிரான பயங்கரவாதச் செயல்களுக்குத் திட்டமிட்டு ஏற்பாடு செய்தனர்.—18.

7 இங்கு குறிக்கப்படுவது சைபீரியாவில் லேஞ தங்க வயல்களில் நிராயுதபாணிகளான தொழிலாளர்கள் மீது 1912 ஏப்ரல் 4 (17)ல் நடத்தப்பட்ட துப்பாக்கிப் பிரயோகம்.

இரத்தத்தைப் பெருகச் செய்த இந்த கொடிய நிகழ்ச்சி பற்றிய செய்தி ருஷ்யாவில் புரட்சி இயக்கத்தைத் திரும்பவும் கிளர்ந்தெழச் செய்தது.—22.

8 இங்கு குறிக்கப்படுவோர் நான்காவது அரசாங்க டூமாவில் போல்ஷிவிக்குப் பிரதிநிதிகளாக இருந்த பதாயெவ், முரானவ், பெத்ரோவ்ஸ்கி, சமோய்லவ், ஷாகவ் ஆகியோர். 1914 ஜூலை 26ல் (ஆகஸ்டு 8) நடைபெற்ற டூமா அமர்வில் போல்ஷிவிக்குக் குழுவினர் ஏகாதிபத்தியப் போரில் ஜாரிஸ்டு ருஷ்யா பங்கு கொண்டதை வன்மையாகக் கண்டனம் செய்தனர். போர்ச் செலவுகளுக்காகத் தொகைகள் ஒதுக்க வாக்களிக்க மறுத்துவிட்டு, வெகுஜனங்களிடையே புரட்சிப் பிரசாரம் நடத்த முற்பட்டனர். 1914 நவம்பரில் போல்ஷிவிக்குப் பிரதிநிதிகள் கைது செய்யப்பட்டனர்; 1915 பிப்ரவரியில் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டுக் கிழக்குச் சைபீரியாவிலுள்ள துருஹான்ஸ்க் பிராந்தியத்துக்குக் கடத்தப்பட்டனர்.—22.

9 லொங்கேயிசம் என்பது பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியில் ழான் லொங்கேயின் தலைமையில் இருந்த மையவாதப் போக்கு. 1914-18ஆம் ஆண்டுகளின் ஏகாதிபத்தியப் போரின்போது லொங்கேயிஸ்டுகள் சமூக-தேசிய வெறியினர்பால் இணக்கம் கொள்ளும் கொள்கையைப் பின்பற்றினர். புரட்சிப் போராட்டத்தை நிராகரித்துவிட்டு, ஏகாதிபத்தியப் போரில் ''தாயகப் பாதுகாப்பு'' நிலையை மேற்கொண்டனர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிற்பாடு லொங்கேயிஸ்டுகள் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை ஆதரிப்பதாகக் கூறிக் கொண்டனர்; ஆனால் உண்மையில் இந்தச் சர்வாதிகாரத்தின் எதிரிகளாய் இருந்தனர். 1920 டிசம்பரில் லொங்கேயிஸ்டுகள் பகிரங்கமான சீர்திருத்தவாதிகளுடன் சேர்ந்து கட்சியிலிருந்து வெளியேறி, இரண்டரையாவது அகிலம் எனப்படுவதில் குறிப்பு 79ஐப் பார்க்க சேர்ந்து கொண்டனர்.—23.

10 பிரிட்டிஷ் சுயேச்சைத் தொழிற் கட்சி (*The Independent Labour*

*Party)*—இங்கிலாந்தில் வேலைநிறுத்தப் போராட்டமும் பிரிட்டிஷ் தொழிலாளி வர்க்கம் முதலாளித்துவக் கட்சிகளைச் சாராது சுயேச்சையாகச் செயல்பட வேண்டுமென்ற இயக்கமும் தீவிரமடைந்த போது, 1893ல் துவக்கப்பட்ட சீர்திருத்தவாதக் கட்சியாகும். தொழிற் சங்கங்களின் உறுப்பினர்களும், ஃபேபியன்களின் செல்வாக்குக்கு உட்பட்ட அறிவுத் துறையினரும் குட்டிமுதலாளித்துவ வர்க்கத்தினரும் அதில் சேர்ந்து கொண்டனர். முதலாளித்துவக் கட்சிகளைச் சாராத ஒரு சுதந்திரமான நிலை அதற்குள்ளது என்று அவர்கள் உரிமை கொண்டாடினர் என்ற போதிலும் உண்மையில் இது ''சோஷலிசத்திலிருந்து தான் 'சுயேச்சையானது' என்றும் மிதவாதத்தையே பெரிதும் சார்ந்திருக்கிறது'' என்றும் லெனின் அதைப் பற்றி எழுதினார். முதலாவது உலகப் போரின் போது அது மையவாத நிலையை அனுசரித்தது, பிற்பாடு சமூக-தேசியவெறிக் கொள்கையைக் கடைப்பிடிக்கத் தொடங்கியது.—23.

11 ஃபேபியன்கள்—ஃபேபியன் கழகத்தின் உறுப்பினர்கள். இந்த ஆங்கிலேய சீர்திருத்தவாதக் கழகம் 1884ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. கி. மு. மூன்றும் நூற்றாண்டைச் சேர்ந்த ரோமானியப் படைத் தலைவர் ஃபேபியஸ் மாக்ஸிமஸ் என்பவரின் பெயரை இது தனக்குச் சூட்டிக் கொண்டது. ஹனிபாலுடன் நடந்த போரில் உறுதியுடன் போரிடாமல் தட்டிக் கழித்தவாறு எதிர்பார்த்துக் காத்திருக்கும் போர்த்தந்திரத்தை மேற்கொண்டமையால் ஃபேபியஸ் மாக்ஸிமஸ் ''குன்க்டேட்டர்'' (இழுத்தடிப்பவன்) என்ற புனைபெயரைப் பெற்றார். ஃபேபியன்கள் பெரும்பாலும் முதலாளித்துவ அறிவுத் துறையினராவர்: விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள், அரசியல்வாதிகள் (சிட்னி வெபும், பியட்ரீஸ் வெபும், ராம்சே மக்டொனல்ட், பர்னார்ட் ஷா முதலியோர்). பாட்டாளிகளது வர்க்கப் போராட்டமும் சோஷலிசப் புரட்சியும் இன்றியமையாதவை என்பதை ஃபேபியன்கள் மறுத்தார்கள். சிறு சீர்திருத்தங்களின் வாயிலாகவும் சமுதாயத்தைப் படிப்படியாகப் புனரமைப்பதன் மூலமாகவுமே முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்கான மாற்றத்தை ஏற்படுத்தலாம் என்றனர். 1900ல் ஃபேபியன் கழகம் தொழிற் கட்சியுடன் இணைக்கப்பட்டது.—23.

12 அமைச்சரவைவாதிகள் (*அமைச்சரவைவாதம் அல்லது மில்லிரானியம்) — சமூக-ஜனநாயகத்தின் சந்தர்ப்பவாதப் போக்கினர், பிரெஞ்சு சோஷலிஸ்டுச் சீர்திருத்தவாதி அ. எ. மில்லிரான்* (Millerand) *பெயரிலான போக்கைச் சேர்ந்தவர்கள். 1899ல் மில்லிரான் பிரெஞ்சுப் பிற்போக்கு முதலாளித்துவ அரசாங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து கொண்டு அதன் மக்கள்-விரோத கொள்கைக்கு ஆதரவளித்தார். மில்லிரானியமானது திருத்தல்வாதமும் ஓடுகாலித்தனமும் ஆகும் என்றும், சமூக-சீர்திருத்தவாதிகள் முதலாளித்துவ அரசாங்கத்தில் சேர்ந்து கொண்டு முதலாளித்துவ வர்க்கத்தினரது மூடுதிரையாகச் செயல்பட்டு, அந்த அரசாங்கம் வெகு ஜனங்களை ஏமாற்றுவதற்குப் பயன்பட்டனர் என்றும் லெனின் குறிப்பிட்டார்.—24.*

13 ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சி—*1917 ஏப்ரலில் கோத்தேவில்* [Gothe] *கூடிய துவக்கக் காங்கிரசில் அமைக்கப்பட்ட மையவாதக் கட்சி. ''சுயேச்சையாளர்கள்'' சமூக-தேசியவெறியர்களுடன் ''ஒன்றுபட'' வேண்டுமென வாதாடினர்; வர்க்கப் போராட்டத்தை மறுக்கும் அளவுக்குச் சென்றனர். இக்கட்சியின் முக்கிய பிரிவு காவுத்ஸ்கிவாத ''உழைப்பு நட்புறவு'' நிறுவனமாகியது.*

*கம்யூனிஸ்டு அகிலம் நிறுவப்பட்ட பின் (1919) ''சுயேச்சையாளர்கள்'' இரண்டாவது அகிலத்திலிருந்து விலகினர். 1920 அக்டோபரில் ஹால்லேயில்* [Halle] *நடைபெற்ற காங்கிரசில் இக்கட்சியில் பிளவு ஏற்பட்டது. பெரும் பகுதியான ''சுயேச்சையாளர்கள்'' 1920 டிசம்பரில் ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்து கொண்டனர். வலதுசாரிப் பகுதியினர் ஒரு தனிக் கட்சியை நிறுவிக்கொண்டனர். ''ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சி'' என்ற பழைய பெயரையே தனக்கு இட்டுக்கொண்ட இக்கட்சி 1922 வரையில் இருந்து வந்தது.—25.*

14 ஸ்பார்த்தகிஸ்டுகள்—*ஜெர்மன் இடதுசாரி சமூக-ஜனநாயகவாதிகளது புரட்சிகர நிறுவனத்தின் உறுப்பினர்கள். ஏகாதிபத்திய உலகப் போரின் தொடக்கத்தில் கார்ல் லீப்க்னெஹ்ட், ரோஸா லுக்சம்பர்க், பிரான்ஸ் மேரிங், கிலாரா ஸெத்கின், யூலியஸ் மார்ஹ்லேவ்ஸ்கி, எல். ஜோகிஷெஸ் (திஷ்கா), வில்ஹெல்ம் பீக் ஆகிய*

*வர்களின் தலைமையின்கீழ் இந்த நிறுவனம் அமைக்கப்பட்டது. அவர்கள் பொது மக்களிடையில் புரட்சிப் பிரசாரம் நடத்தினார்கள்; வெகுஜன அளவில் போர் எதிர்ப்பு நடவடிக்கைகளுக்கும் வேலை நிறுத்தங்களுக்கும் ஏற்பாடு செய்தனர்; உலகப் போரின் ஏகாதிபத்தியத் தன்மையையும் சந்தர்ப்பவாத சமூக-ஜனநாயகக் கட்சியின் தலைவர்களுடைய துரோகத்தையும் அம்பலப்படுத்தினார்கள். ஆயினும் இவர்கள் முக்கியமான தத்துவார்த்த, அரசியல் தவறுகளைச் செய்தார்கள்: தொழிலாளி வர்க்கப் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கக் கட்சிக்குள்ள பாத்திரத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட்டார்கள், சந்தர்ப்பவாதிகளுடன் பிளவு ஏற்படுமென அஞ்சினார்கள், தொழிலாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்குமிடையே கூட்டணியின் அவசியத்தையும் தேசவிடுதலை இயக்கங்களின் முக்கியத்துவத்தையும் உணரத் தவறினர், பிரிந்து சென்று சுயேச்சை அரசுகளை அமைத்து கொள்வது வரையிலுமான சுயநிர்ணய உரிமை தேசங்களுக்கு உண்டென்பதை எதிர்த்தனர்.*

*1917 ஏப்ரலில் ஸ்பார்த்தகிஸ்டுகள் மையவாத ''ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சியில்'' சேர்ந்தனர்; ஆனால் தமது நிறுவனச் சுதந்திரத்தை விட்டுவிடாமல் தம்மிடம் இருத்திக் கொண்டனர். 1918 நவம்பரில் ஜெர்மனியில் நடந்த புரட்சியின் போது இவர்கள் ''ஸ்பார்த்தகஸ் கழகத்தை'' நிறுவினர். 1918 டிசம்பர் 14ல் தமது வேலைத்திட்டத்தை வெளியிட்டபின் ''சுயேச்சையாளர்களிடமிருந்து'' பிரிந்து சென்றனர். 1918 டிசம்பர் 30லிருந்து 1919 ஜனவரி 1 வரை நடைபெற்ற துவக்கக் காங்கிரசில் இவர்கள் ஜெர்மன் கம்யூனிஸ்டு கட்சியை அமைத்தார்கள்.—31.*

15 **பாரிஸ் கம்யூன்**—*1871ல் நடந்த புரட்சியின் விளைவாகப் பாரிஸ் நகரத் தொழிலாளர்களால் தோற்றுவிக்கப்பட்ட தொழிலாளி வர்க்க அரசாங்கம். வரலாற்றில் இது முதலாவது பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமாக விளங்கிற்று. மார்ச்சு 18 முதல் மே 28 வரை 73 நாட்களுக்குப் பாரிஸ் கம்யூன் நீடித்தது.—31.*

16 **பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் உடன்படிக்கை** — *சோவியத் ருஷ்யாவுக்கும் நால்வர் கூட்டணிக்கும் (ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரி, பல்கேரியா, துருக்கி ஆகியவற்*

ருலானது) இடையே பிரேஸ்த்-லித்தோவ்ஸ்கில் 1918 மார்ச் 3ல் கையெழுத்தாகி, மார்ச் 15ல் சோவியத்து களின் நான்காவது (சிறப்பு) அனைத்து ருஷ்யாவின் காங்கிரசால் அங்கீகரிக்கப்பட்ட சமாதான உடன்படிக் கையாகும். இதன் ஷரத்துகள் சோவியத் ருஷ்யாவுக்கு மிகவும் பாதகமாயிருந்தன. போலந்தும் அனேகமாய் பால்டிக் பிரதேசம் முழுவதும் பேலோருஷ்யாவில் ஒரு பகுதியும் ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரியின் கட்டுப் பாட்டில் விடப்பட்டன; உக்ரேனியா சோவியத் ருஷ் யாவிடமிருந்து பிரிக்கப்பட்டு ஜெர்மனியைச் சார்ந்து நிற்கும் தனி அரசாக்கப்பட்டது. கார்ஸ், பாத்தும், அர்தகான் நகர்கள் துருக்கியின் வசம் விடப்பட்டன. 1918 ஆகஸ்டில் சோவியத் ருஷ்யாவின்மீது ஜெர்மனி மேலும் ஓர் துணை உடன்படிக்கையையும் நிதி ஒப் பந்தத்தையும் திணித்தது. இவற்றின் ஷரத்துகள் கொள்ளைக்காரத்தனமாய் இருந்தன.

ஜெர்மனியில் 1918 நவம்பரில் புரட்சி நடைபெற்று முடியாட்சி கவிழ்க்கப்பட்டதைத் தொடர்ந்து நவம்பர் 13ல் அனைத்து ருஷ்ய மத்தியச் செயற் குழு கொள்ளைக் கார பிரேஸ்த்-லித்தோவ்ஸ்க் உடன்படிக்கையை நிரா கரித்தது.—32.

17 இங்கு குறிப்பிடப்படுவோர் ஒத்ஸொவீஸ்டுகளும் (வாபஸ்வாதிகள்) இறுதி எச்சரிக்கையாளர்களுமாவர். இந்தப் போக்குகளுக்கு எதிரான போராட்டம் 1908ல் வளரத் தொடங்கிற்று. இதன் விளைவாய், ஒத்ஸொ வீஸ்டுகளின் தலைவரான அ. பக்தானவ் 1909ல் போல் ஷிவிக் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார். ஒத்ஸொ வீஸ்டுகள் (''திருப்பியழை'' என்று பொருள்படும் ''ஒத் தஸ்வாத்'' எனும் ருஷ்யச் சொல்லே இதன் மூலம்) புரட்சிகரச் சொற் சிலம்பாடி, மூன்றாவது டூமாவி லிருந்து சமூக-ஜனநாயக உறுப்பினர்களைத் திருப்பிய ழைத்துவிட வேண்டுமென்றும், தொழிற் சங்கங்கள், கூட்டுறவு நிறுவனங்கள் முதலானவை போன்ற சட்ட பூர்வமான நிறுவனங்களில் கட்சிப் பணி அனைத்தை யும் நிறுத்திவிட வேண்டுமென்றும் கோரினர். இறுதி எச்சரிக்கைவாதம் என்பது ஒத்ஸொவீசத்தின் மற்றொரு உருவமாகும். இதனைப் பின்பற்றியவர்கள், டூமாவின் சமூக-ஜனநாயகப் பிரதிநிதிகளிடையே விடாமுயற்சி யுடன் அயராது பணியாற்றுவதன் அவசியத்தையும்,

அவர்களை முரணற்ற புரட்சிகர நாடாளுமன்றத்தினரா கும்படி பயிற்றுவிப்பதன் அவசியத்தையும் புரிந்து கொள்ளவில்லை. டூமா பிரதிநிதிகள் மத்தியக் கமிட்டியின் முடிவுகளுக்கு உடனடியாகக் கீழ்ப்படிய வேண்டும், இல்லையேல் அவர்கள் டூமாவிலிருந்து திருப்பியழைக் கப்பட்டு விடுவார்கள் என்று அவர்களுக்கு இறுதி எச்சரிக்கை விடுக்க வேண்டுமெனக் கூறினர். 1909 ஜூனில் போல்ஷிவிக் செய்தியேடு புரோலெட்டாரியின் [''பாட்டாளி''] ஆசிரியர் குழுவினது விரிவாக்கப்பட்ட மாநாடு ஒரு தீர்மானத்தில் ''ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியில் திட்டவட்டமான ஒரு போக்கான ''போல்ஷிவிசத்துக்கும்'' ஒத்ஸொவீசத் துக்குமோ, இறுதி எச்சரிக்கைவாதத்துக்குமோ பொதுவானது எதுவுமில்லை'' என்று கூறிற்று.—33.

18 அரசாங்க ஆலோசனை டூமாவின் அமைப்புச் சட்டமும் தேர்தல் விதிகளும் அடங்கிய ஜாரின் அறிக்கை 1905 ஆகஸ்டு 6 (19)ல் வெளியிடப்பட்டது. டூமாவின் சட்டத்துக்கான நகலை வரையுமாறு ஜாரினுல் உத்தர விடப்பட்ட உள்துறை அமைச்சர் அ. கி. புலீகினுல் தயாரிக்கப்பட்ட இச்சட்டத்தின்படி தோன்றிய டூமா, புலீகின் டூமா என்றழைக்கப்பட்டது. புலீகின் டூமாவுக்கான தேர்தல்கள் நடைபெறவில்லை; அரசாங்கத்தால் இந்த டூமாவைக் கூட்ட முடியவில்லை. புரட்சியின் எழுச்சியாலும் 1905 அக்டோபரில் நடைபெற்ற அனைத்து ருஷ்ய அரசியல் வேலைநிறுத்தத்தாலும் இந்த டூமா ஒழிக்கப்பட்டுவிட்டது.—33.

19 இங்கு குறிப்பிடப்படுவது, முதல் ருஷ்யப் புரட்சியின் போது 1905 அக்டோபரில் நடைபெற்ற அனைத்து ருஷ்ய அரசியல் வேலைநிறுத்தம். இருபது லட்சத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் இதில் பங்கெடுத்துக் கொண்டனர். இதன் கோஷங்களாவன: எதேச்சாதிகாரத்தை ஒழித்தல், புலீகின் டூமாவை முழுமுனைப்போடு பகிஷ்கரித்தல், அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுதல், ஜனநாயகக் குடியரசை நிறுவுதல். தொழிலாளி வர்க்க இயக்கத்தின் வலுவையும் சக்தியையும் இந்த வேலைநிறுத்தம் வெளிப்படுத்தி, கிராமப்புறத்திலும் சேனையிலும் கடற்படையிலும் வளர்ந்து வந்த புரட்சிப் போராட்டத்தை ஊக்குவித்தது.—33.

20 ''இடதுசாரி கம்யூனிஸ்டுகள்'' — *1918ஆம் ஆண்டுத் தொடக்கத்தில், ஜெர்மனியுடன் சமாதான ஒப்பந்தம் (பிரேஸ்த் சமாதான ஒப்பந்தம்) செய்து கொள்வது சம்பந்தமாய்த் தோன்றிய கட்சி-எதிர்ப்புக் கோஷ்டி. புரட்சி யுத்தம் என்னும் இடதுசாரிச் சொல்வீச்சுக ளின் திரைமறைவில், இன்னும் ஒரு சேனையைப் பெற் றிராத இளம் சோவியத் குடியரசை ஏகாதிபத்திய ஜெர்மனியுடன் யுத்தத்தில் இழுத்துவிட்டு அதை நாச மடைந்துவிடும் அபாயத்துக்கு உட்படுத்திய சாகச வாதக் கொள்கையைக் கடைப்பிடித்தனர். லெனினும் அவருடைய கொள்கை நிலையை ஆதரித்தோரும், இளம் சோவியத் குடியரசு நாசமாகாதபடிப் பாதுகாக் கும் பொருட்டு ஜெர்மனியுடன் சமாதான ஒப்பந்தம் முடித்துக் கொள்வதற்காக மத்தியக் கமிட்டியினுள் திரோத்ஸ்கியையும் ''இடதுசாரி கம்யூனிஸ்டுகளையும்'' எதிர்த்துக் கடும் போராட்டம் நடத்த வேண்டியிருந் தது.*

*கட்சியினுள் நடைபெற்ற இந்தப் போராட்டத்தின் விளைவாய் ''இடதுசாரி கம்யூனிஸ்டுகள்'' 1918 மே-ஜூனில் செல்வாக்கை அறவே இழந்துவிட்டனர்.—35.*

21 தொழிற் கட்சியினர் — *பிரிட்டிஷ் தொழிற் கட்சியின்* (''Labour Party'') *உறுப்பினர்கள். தொழிலாளர் பிரதி நிதிகள் நாடாளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படு வதற்கு வகை செய்வதற்காக 1900ல் ''தொழிலாளர் பிரதிநிதித்துவக் குழு'' என்ற பெயரில் ஆரம்பிக்கப்பட்டு, 1906ல் தொழிற் கட்சியாகியது. தொழிலாளர்களது கட்சியாக ஆரம்பமான இது. பிற்பாடு குட்டிமுதலாளித் துவப் பகுதியோரைக் கணிசமான அளவில் சேர்த்துக் கொண்டது. சித்தாந்தத்திலும் போர்த்தந்திரத்திலும் இது ஒரு சந்தர்ப்பவாத நிறுவனமாகும். ஆதியிலி ருந்தே இதன் தலைவர்கள் முதலாளித்துவ வர்க்கத் தினருடன் வர்க்க ஒத்துழைப்புக் கொள்கையைப் பின் பற்றி வந்திருக்கின்றனர்.—37.*

22 காடேட்டுகள் *(அரசியல் சட்ட-ஜனநாயகக் கட்சி)—ருஷ்ய மிதவாத-முடியரசுவாத முதலாளித்துவ வர்க்கத்தின ரின் முதன்மையான கட்சியாக இருந்தது. இக்கட்சி 1905 அக்டோபரில் நிறுவப்பட்டது. முதலாளித்துவ வர்க்கத்தினர், ஸெம்ஸ்துவோ உறுப்பினர்களான நிலப் பிரபுக்கள், முதலாளித்துவ அறிவுத்துறையினர் ஆகி*

யோர் இதில் சேர்ந்திருந்தனர். காடேட்டுகள் சட்ட முறை முடியரசைக் கோருவதற்கு மேல் செல்லவில்லை. முதலாவது உலகப் போரின்போது இவர்கள், ஜார் அரசாங்கத்தின் நாடுபிடிக்கும் கொள்கையை ஆதரித் தார்கள். 1917 பிப்ரவரியில் நடந்த முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியின் போது காடேட்டுகள் முடியர சைக் காப்பாற்ற முயன்றனர். முதலாளித்துவ இடைக் கால அரசாங்கத்தில் தலைமைப் பதவிகள் வகித்த இவர் கள் மக்களுக்கு விரோதமான எதிர்ப்புரட்சிக் கொள் கையைக் கடைப்பிடித்தார்கள்.—40.

23 வோலாபுக்—1880ல் யோகன் ஷிலேயரால் தயாரிக்கப் பட்ட செயற்கை மொழி.—44.

24 மூன்றுவது அகிலம் (கம்யூனிஸ்டு அகிலம்)—பல்வேறு நாடு களின் கம்யூனிஸ்டுக் கட்சிகளை ஐக்கியப்படுத்திய சர்வ தேசப் பாட்டாளி வர்க்கப் புரட்சி நிறுவனம். இது 1919 முதல் 1943 வரை செயல்பட்டு வந்தது.

இரண்டாவது அகிலத்தின் சந்தர்ப்பவாதத் தலைவர் கள் முதல் உலகப் போர் மூண்டதும் சோஷலிச இலட் சியத்துக்குத் துரோகம் இழைத்ததாலும், இதைத் தொடர்ந்து இரண்டாவது அகிலம் தகர்ந்ததாலும், தொழிலாளி வர்க்க இயக்கம் பிளவுண்டு விட்டது. இதனுல் மூன்றுவது அகிலத்தை நிறுவுவது வரலாற்று வழியில் அவசியமாகியது. கம்யூனிஸ்டு அகிலத்தை நிறுவுவதில் லெனின் தலைமைப் பங்காற்றினர்.

மூன்றுவது அகிலத்தின் நிறுவகக் காங்கிரசான முத லாவது காங்கிரஸ் 1919 மார்ச் 2-6ல் மாஸ்கோவில் நடைபெற்றது. அனைத்து உலகின் பாட்டாளிகளுக்கும் இந்தக் காங்கிரஸ் அறிக்கை வெளியிட்டது. கம்யூ னிஸ்டுக் கட்சி அறிக்கையில் பிரகடனம் செய்யப்பட்ட மார்க்ஸ், எங்கெல்ஸ் இலட்சியங்களது வழிவந்ததே இந்தக் கம்யூனிஸ்டு அகிலம் என்று இந்த அறிக்கை பறைசாற்றியது.

கம்யூனிஸ்டு அகிலம் எல்லா நாடுகளின் உழைப்பாளி மக்களிடையிலும் தொடர்புகளைத் திரும்பவும் அமைத்து வலுப்பெறச் செய்தது. சர்வதேசத் தொழிலாளி வர்க்க இயக்கத்திலிருந்த சந்தர்ப்பவாதப் போக்குகளை அம்பலப்படுத்துவதற்கும், இளங் கட்சிகளாய் இருந்த கம்யூனிஸ்டுக் கட்சிகளை உறுதி பெறச் செய்வதற்கும், சர்வதேசக் கம்யூனிஸ்டு இயக்கத்தின் ஆதாரநெறியை

யும் போர்த்தந்திரத்தையும் வகுத்திடுவதற்கும் கம்யூனிஸ்டு அகிலம் துணை புரிந்தது.

1943 மே மாதத்தில், கம்யூனிஸ்டு அகிலத்தின் செயற்குழு, பாட்டாளி வர்க்கச் சர்வதேச ஒழுங்கமைப்புக்குப் பழைய வரலாற்றுக் கட்டத்தில் பொருத்தமாய் இருந்த நிறுவன வடிவம் தற்போது பொருத்தமாய் இல்லை என்பதால், கம்யூனிஸ்டு அகிலத்தைக் கலைப்பதென்று தீர்மானித்தது.—47.

25 *Kommunistische Arbeiterzeitung* ("கம்யூனிஸ்டுத் தொழிலாளர் ஏடு")—ஜெர்மன் "இடதுசாரி" கம்யூனிஸ்டுகளாகிய அராஜக-சிண்டிக்கலிஸ்டுக் கோஷ்டியின் ஏடு, ஹாம்பர்கில் 1919 முதல் 1927 வரை வெளிவந்தது.—47.

26 இங்கு குறிக்கப்படுவது "தொழிலாளி வர்க்க விடுதலைப் போராட்டக் கழகம்". 1895ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் லெனினால் நிறுவப் பெற்ற இந்த நிறுவனத்தில் செயின்ட் பீட்டர்ஸ்பர்கின் சுமார் இருபது மார்க்சிய வட்டாரக் குழுக்கள் ஒன்றுபட்டிருந்தன. ஒரு மத்தியக் குழு இக்கழகத்துக்குத் தலைமை தாங்கியது. இந்த நிறுவனம் வட்டாரக் குழுக்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. வர்க்க உணர்வு கொண்ட முன்னேறிய தொழிலாளர்கள் இக்குழுக்களுக்கும் ஆலைகளுக்கும் இடையிலான இணைப்புகளாகச் செயல்பட்டனர்.

செயின்ட் பீட்டர்ஸ்பர்க் தொழிலாளி வர்க்க விடுதலைப் போராட்டக் கழகம், தொழிலாளி வர்க்க இயக்கத்தை ஆதாரமாகக் கொண்டு பாட்டாளி வர்க்கப் போராட்டத்துக்குத் தலைமை தாங்கும் புரட்சிக் கட்சிக்கான கருவாக அமைந்ததென்று லெனின் கூறினார். —51.

27 ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷிவிக்குகள்) ஒன்பதாவது காங்கிரஸ்—1920 மார்ச் 29லிருந்து ஏப்ரல் 5 வரை மாஸ்கோவில் நடைபெற்றது.

இக்காங்கிரசின் பெரும் பகுதி கவனம் பொருளுற்பத்தி நிர்வாகத்தின் ஒழுங்கமைப்பில் குவிந்திருந்தது. இந்தப் பிரச்சினை பற்றிய தீர்மானம், ஒற்றையாள் நிர்வாக முறையின் அடிப்படையில்தான் திறனுள்ள உறுதியான செயலாற்றல் மிகுந்த தலைமை நிறுவப்பட வேண்டுமென்று கூறியது. லெனினது ஆலோசனைகளை அடிப்படையாகக் கொண்டு இந்தக் காங்கிரஸ்,

பழைய நிபுணர்களில் கூடுமான அளவுக்கு அதிகமான பேரைப் பொருளுற்பத்தி நிர்வாகத்தில் பங்கு கொள்ளும்படி ஈர்ப்பது சோஷலிசப் பொருளாதாரத்தின் நலன்களுக்குது உகந்ததென்று வலியுறுத்தியது.

பொருளாதார வளர்ச்சி சம்பந்தமான கட்சிக் கொள்கையை இக்காங்கிரசில் கட்சி-விரோத ''ஜனநாயக மையத்துவக்'' கோஷ்டி எதிர்த்தது. ஜனநாயக மையத்துவம் குறித்து வாய்வீச்சடித்த இக்கோஷ்டி உண்மையில் இந்தக் கோட்பாட்டைத் திரித்துப் புரட்டியது; பொருளுற்பத்தித் துறையில் ஒற்றையாள் நிர்வாக முறைக்கு எந்த அவசியமும் இல்லை என்றது; மத்தியக் கமிட்டியில் கூட்டுத் தலைமை இருக்கவில்லை என்று பொய்யாகக் குற்றம் சாட்டி, உறுதி வாய்ந்த கட்சி, அரசுக் கட்டுப்பாட்டை எதிர்த்தது. ''ஜனநாயக மையத்துவவாதிகளது'' கட்சி-விரோத நிர்ணயிப்புகளை இந்தக் காங்கிரஸ் வன்மையாகக் கண்டித்து அவற்றை நிராகரித்தது.—51.

28 துருதொவிக்குகள் (உழைப்பாளர் கோஷ்டி)—அரசாங்க டூமாவில் விவசாயி, குட்டிமுதலாளித்துவப் பிரதிநிதிகளைக் கொண்டு அமைந்த சிறிய எண்ணிக்கையிலான கோஷ்டி. 1906 ஏப்ரலில் அமைக்கப்பட்டது. முதல் உலகப் போரின் போது இக்கோஷ்டியினர் தேசியவெறி நிலையை ஏற்றனர்.—52.

29 அரசியல் நிர்ணயச் சபை 1918 ஜனவரி 5ல் கூட்டப்பட்டது. அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்கு முன்பு தயாரிக்கப்பட்ட பழைய வாக்காளர் பட்டியல்களைக் கொண்டே இச்சபைக்குத் தேர்தல்கள் நடத்தப்பட்டன. முதலாளித்துவ வர்க்கம் ஆதிக்கம் செலுத்திய போது நிலவிய சக்திகளின் பரஸ்பரப் பலமே இதிலும் தொடர்ந்து நீடித்தது. சோவியத் ஆட்சியதிகாரத்தை ஆதரித்த பெருவாரியான மக்களது சித்தத்துக்கும், முதலாளித்துவ வர்க்கத்தார், நிலப்பிரபுக்களது நலன்களைப் பிரதிபலித்த, அரசியல் நிர்ணயச் சபையின் பெருவாரியான சோஷலிஸ்டுப் புரட்சியாளர்கள்-மென்ஷிவிக்குகள்-காடேட்டுகளது கூட்டின் கொள்கைக்கும் இடையிலிருந்த பெரும் தொலைவை இதில் தெளிவாகக் காண முடிந்தது. ''சுரண்டப்பட்ட உழைப்பாளி மக்களுடைய உரிமைப் பிரகடனத்தை'' அரசியல் நிர்ணய சபை விவாதிக்க மறுத்ததாலும், சமாதானம், நிலம்,

ஆட்சியதிகாரம் அனைத்தையும் சோவியத்துகளுக்கு அளித்தல் இவை குறித்து சோவியத்துகளின் இரண்டாவது காங்கிரஸ் நிறைவேற்றிய சட்டங்களை அங்கீகரிக்க அது மறுத்ததாலும், அனைத்து ருஷ்யாவின் மத்தியச் செயற் குழுவின் 1918 ஜனவரி 6 (19)ஆம் தேதிய தீர்மானத்தின்படி அது கலைக்கப்பட்டது.—63.

30 ''கம்யூனிஸ்டு இன்டர்னஷனல்'' (கம்யூனிஸ்டு அகிலம்)—கம்யூனிஸ்டு அகிலத்தின் செயற் குழுவினது சஞ்சிகை. ருஷ்யன், ஜெர்மன், பிரெஞ்சு, ஆங்கிலம், ஸ்பானிஷ், சீன மொழிகளில் வெளிவந்தது. முதல் இதழ் 1919 மே 1ல் வெளியாயிற்று. தத்துவார்த்த கட்டுரைகளும் கம்யூனிஸ்டு அகிலத்தின் ஆவணங்களும் இதில் அச்சிடப்பட்டன. லெனினது பல கட்டுரைகள் இதில் வெளிவந்தன. 1943ல் இந்த சஞ்சிகை நிறுத்தப்பட்டது.—63.

31 எங்கெல்ஸ் 1858 அக்டோபர் 7ல் மார்க்சுக்கு எழுதிய கடிதத்தைப் பார்க்கவும் (கார்ல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ், கடிதத் திரட்டு, 1953, பக்கம் 105). —64.

32 Folkets Dagblad Politiken (''மக்கள் அரசியல் நாளேடு'')—ஸ்வீடனின் இடதுசாரி சமூக-ஜனநாயகக் கட்சியின் ஏடு. ஸ்டாக்ஹோமில் 1916 ஏப்ரல் முதல் 1945மே வரை வெளிவந்தது. ஆரம்பத்தில் ஒரு நாள் விட்டு ஒரு நாளும், பிறகு நாளேடாகவும் வெளியாகியது (1917 நவம்பருக்கு முன்பு அதன் பெயர்: Politiken).—65.

33 ஆன்டான்ட்—இச்சொல் 1907ல் உருவான ஏகாதிபத்திய அரசுகளது (பிரிட்டன், பிரான்சு, ருஷ்யா ஆகியவை) கூட்டைக் குறிப்பதற்கு உபயோகிக்கப்படுகிறது. இக்கூட்டு மற்றொரு ஏகாதிபத்தியக் கூட்டான முக்கூட்டுக்கு (ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரி, இத்தாலி) எதிராக அமைக்கப்பட்டது. ''ஆன்டான்ட்'' என்னும் பெயர் பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும் இடையே 1904ல் ஏற்பட்ட "Entente Cordiale" (''நேசக் கூட்டு'') என்றழைக்கப்பட்ட ஒப்பந்தத்திலிருந்து வந்ததாகும். முதல் உலக ஏகாதிபத்தியப் போரின் போது

இந்த ஆண்டான்டில் அமெரிக்க ஐக்கிய நாடும் ஜப்பானும் வேறு பல நாடுகளும் சேர்ந்து கொண்டன. அக்டோபர் சோஷலிசப் புரட்சியைத் தொடர்ந்து, இக்கூட்டின் பிரதான உறுப்பினர்களான பிரிட்டனும் பிரான்சும் அமெரிக்க ஐக்கிய நாடும் ஜப்பானும் சோவியத் நாட்டுக்கு எதிராக நடத்தப்பட்ட ஆயுத மேந்திய தலையீட்டின் மூலவர்களாகவும் சூத்திரதாரி களாகவும் செயல்பட்டன.—*66*.

34 உலக ஆலைத் தொழிலாளர் நிறுவனம் (Industrial Workers of the World)—*1905*ல் நிறுவப்பெற்ற அமெரிக்க ஐக்கிய நாட்டுத் தொழிலாளர் நிறுவனம். பிரதானமாய் இதில் குறைந்த சம்பளம் பெறும் தேர்ச்சியற்ற தொழிலாளர்களே சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்தில் தலைமையானவர்களாக இருந்த டேனியல் தெ லியோன், யூஜின் டெப்ஸ், வில்லியம் ஹேவுட் முதலானோர் இந்த நிறுவனத்தை அமைத்திடுவதில் பங்கெடுத்துக் கொண்டனர். முதல் உலக ஏகாதிபத்தியப் போரின்போது உலக ஆலைத் தொழிலாளர் நிறுவனத்தின் பங்குடன் கூட அமெரிக்கத் தொழிலாளி வர்க்கம் யுத்த-எதிர்ப்பு நடவடிக்கைகள் பலவற்றையும் மேற்கொண்டது. உ. ஆ. தொ. நிறுவனத்தின் தலைவர்கள் சிலர் (ஹேவுடும் ஏனையோரும்) ருஷ்யாவின் அக்டோபர் சோஷலிசப் புரட்சியை வரவேற்றனர்; அமெரிக்க ஐக்கிய நாட்டுக் கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்து கொண்டனர். உ. ஆ. தொ. நிறுவனத்தின் நடவடிக்கைகளில் அராஜக-சிண்டிக்கலிசத்தின் கூறுகள் இடம் பெற்றிருந்தன. இந் நிறுவனம் பாட்டாளி வர்க்கத்தின் அரசியல் போராட்டத்தையும் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தையும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் அவசியத்தையும் அங்கீகரிக்க மறுத்தது, அமெரிக்க தொழில் சம்மேளனத்தைச் சேர்ந்த தொழிற் சங்க உறுப்பினர்களிடையே வேலை செய்ய மறுத்தது. பிற்பாடு உ. ஆ. தொ. நிறுவனம் குறுங்குழுவாத நிறுவனமாய் மாறி, தொழிலாளர் இயக்கத்தில் தன் செல்வாக்கை இழந்தது.—*67*.

35 கறுப்பு நூற்றுவர்—புரட்சி இயக்கத்தை எதிர்த்துப் போராடுவதற்காக ஜாரிஸ்டுப் போலீஸ் நிறுவிய முடியாட்சிக் குண்டர் கும்பல்கள். இவர்கள் புரட்சியாளர்

களைக் கொலை புரிந்தனர்; முற்போக்கான அறிவுத் துறையினரைத் தாக்கினர்; யூதர்களுக்கு எதிரான வன் முறைகளை நடத்தினர்.—68.

36 லெனின் இங்கு மனதில் கொண்டிருப்பது ''நிலம் குறித்து விவசாயிகளின் கட்டளை''. 242 வட்டார விவசாயிக் கட்டளைக் கோரிக்கைகளின் அடிப்படையில் இது தொகுக்கப்பட்டது. லெனினுல் வரையப்பட்ட நில அரசாணையில் இந்தக் கட்டளை ஒரு பகுதியாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டது.—84.

37 *Il Soviet* (''சோவியத்து'')—இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியால் 1918 முதல் 1922 வரை நேப்பிள்சில் வெளியிடப்பட்ட ஏடு. 1920ல் இது இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் ஒதுங்கி நிற்கும் கம்யூனிஸ்டுக் குழுவோரின் ஏடாகியது.—87.

38 *Comunismo* (''கம்யூனிசம்'') — இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் மாதமிரு முறை சஞ்சிகை. 1919 முதல்1922 வரை செராட்டியை ஆசிரியராகக் கொண்டு மிலானில் வெளிவந்தது.—87.

39 ஹங்கேரி 1919 மார்ச் 21ல் சோவியத் குடியரசாகப் பிரகடனம் செய்யப்பட்டது. ஹங்கேரிய சோஷலிஸ்டுப் புரட்சி ஒப்பளவில் அமைதி வழிப்பட்டதாய் இருந்தது. முதலாளித்துவ வர்க்கத்தால் வெகுஜனங்களை எதிர்த்து நின்று சமாளிக்க முடியவில்லை; உள்நாட்டு, வெளிநாட்டு இன்னல்களைத் தாக்குப்பிடிக்க முடியாத அது புரட்சியின் வளர்ச்சியைத் தடுக்கும் பொருட்டு வலதுசாரி சமூக-ஜனநாயகவாதிகளிடம் அதிகாரத்தை ஒப்படைப்பதெனத் தீர்மானித்தது. ஹங்கேரி உழைப்பாளி மக்களிடையே கம்யூனிஸ்டுக் கட்சியின் செல்வாக்கு மிக அதிகமாய் இருந்ததாலும், சமூக-ஜனநாயகக் கட்சியின் சாதாரண உறுப்பினர்கள் கம்யூனிஸ்டுகளுடன் கூட்டணி கொள்ள வேண்டுமென்று உறுதியுடன் கோரியதாலும், சமூக-ஜனநாயகக் கட்சியின் தலைவர்கள் கைது செய்யப்பட்டிருந்த கம்யூனிஸ்டுத் தலைவர்களுக்குக் கூட்டு சர்க்கார் அமைக்க முன்வரும்படி வேண்டுகோள் விடுத்தனர். சமூக-ஜனநாயகக் கட்சித் தலைவர்களுக்கும் கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர்களுக்கும் இடையே நடைபெற்ற பேச்சுவார்த்தைகளின் போது கம்யூனிஸ்டுகள் முன்வைத்த நிபந்தனைகளை—

சோவியத் அரசாங்கத்தை நிறுவுதல், முதலாளித்துவ வர்க்கத்தாரை நிராயுதபாணியாக்குதல், செஞ்சேனையையும் மக்கள் காவலர் பிரிவையும் அமைத்தல், நிலப்பிரபுக்களின் நிலங்களைப் பறிமுதல் செய்தல், தொழில் துறையை தேசவுடைமையாக்குதல், சோவியத் ருஷ்யாவுடன் கூட்டணி கொள்ளுதல் முதலானவற்றை—சமூக-ஜனநாயகத் தலைவர்கள் வேறு வழியின்றி ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. இதனுடன் கூடவே இரு கட்சிகளையும் ஹங்கேரிய சோஷலிஸ்டுக் கட்சியாக இணைத்துக் கொள்வதென்றும் ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது. இரு கட்சிகளையும் இணைத்தபோது சில தவறுகள் செய்யப்பட்டுவிட்டன; இவற்றின் விளைவுகளைப் பிற்பாடு அனுபவிக்க வேண்டியதாயிற்று. இந்த இணைப்பு யாந்திரிக முறையில் அமைந்துவிட்டது; சீர்திருத்தவாதப் பகுதியோர் வெளியேற்றப்படவில்லை. நிலச் சீர்திருத்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இதன்படி 57 ஹெக்டர்களுக்கு அதிகமான நிலங்களைப் பெற்றிருந்த பண்ணைகள் யாவும் பறிமுதல் செய்யப்பட்டு, பெரிய அரசுப் பண்ணைகளாக மாற்றப்பட்டன. ஆனால் உண்மையில் இவை தொடர்ந்து பழைய மேலாளர்களின் கையில்தான் இருந்து வந்தன. விவசாயிகளில் மிகவும் ஏழ்மைப்பட்ட பகுதியினர், சோவியத் ஆட்சியதிகாரத்திடமிருந்து தமக்கு நிலங்கள் கிடைக்குமென்று ஆவலோடு எதிர்பார்த்தனர், ஆனால் இவர்களது நம்பிக்கை இப்பொழுது தகர்ந்து போயிற்று. இதனால் பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்கும் இடையே உறுதி வாய்ந்த கூட்டணி ஏற்பட முடியாமல் தடுக்கப்பட்டு, ஹங்கேரியில் சோவியத் ஆட்சியதிகாரத்துக்குக் குழி பறிப்பதற்கு வகை செய்யப்பட்டது.

ஹங்கேரியில் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் நிறுவப்படுவதை ஆன்டான்ட் அரசுகளின் ஏகாதிபத்தியவாதிகள் எதிர்த்தனர். அவர்கள் பொருளாதார முற்றுகையைத் தொடங்கினர்; ஆயுதமேந்தியத் தலையீட்டுக்கும் ஏற்பாடு செய்தனர். தலையீட்டுப் படைகளின் தாக்குதல் ஹங்கேரிய எதிர்ப்புரட்சியை மும்முரமடையச் செய்தது. உலக ஏகாதிபத்தியத்துடன் கூட்டு சேர்ந்துவிட்ட வலதுசாரி சமூக-ஜனநாயகவாதிகளின் துரோகம் ஹங்கேரிய சோவியத் குடியரசின் வீழ்ச்சிக்கு ஒரு காரணமாகும்.

ஏகாதிபத்தியத் தலையீடு, உள்நாட்டு எதிர்ப்புரட்சி இவற்றின் கூட்டு முயற்சிகளால் 1919 ஆகஸ்டு 1ல் ஹங்கேரியில் சோவியத் ஆட்சியதிகாரம் கவிழ்க்கப்பட்டது.—87.

40 **பிளான்கிஸ்டுகள்**—புகழ்பெற்ற பிரெஞ்சுக் கற்பனாவாதக் கம்யூனிஸ்டான புரட்சியாளர் லுயீ ஒகுஸ்ட் பிளான்கி [Blanqui] (1805-1881) தலைமையில் சோஷலிஸ்டு இயக்கத்தில் தோன்றிய ஒரு போக்கின் ஆதரவாளர்கள் இவர்கள். ''கூலி அடிமை நிலையிலிருந்து மனிதகுலம் விடுதலை பெற பாட்டாளி வர்க்கப் போராட்டம் தேவையில்லை, சிறுபான்மை அறிவுத்துறையினரைச் சேர்ந்த சிறு கோஷ்டியினது சதியின் மூலமே இதைச் செய்துவிடலாம்'' என்று பிளான்கிஸ்டுகள் நம்பினர் (வி. இ. லெனின்). புரட்சிகரக் கட்சியின் செயற்பாட்டுக்குப் பதில் இவர்கள் ஒரு சில சதிகாரர்களுக்கான செயற்பாட்டை மேற்கொண்டனர்; வெகுஜனங்களுடன் தொடர்புகள் கொண்டிருக்க வேண்டிய அவசியத்தை உதாசீனம் செய்தனர்; வெகுஜனப் புரட்சி இயக்கம் இன்றியமையாததாகும் என்பதைப் புரிந்து கொள்ளவில்லை.—88.

41 *Der Volksstaat* (''மக்கள் அரசு'')—ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் (ஐசனாஹர்கள்) மத்திய ஏடு. வில்ஹெல்ம் லீப்க்னெஹ்ட்டை ஆசிரியராகக் கொண்டு 1869-1876ல் லைப்சிகில் வெளிவந்தது. மார்க்சும் எங்கெல்சும் இதற்குத் தமது ஒத்துழைப்பை அளித்தனர்.—89.

42 **சர்வதேசச் சங்கம்** (League of Nations)—முதலாவது, இரண்டாவது உலகப் போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் இயங்கி வந்த சர்வதேச நிறுவனம். முதல் உலகப் போரில் வெற்றி பெற்ற அரசுகளால் பாரிஸ் சமாதான மாநாட்டில் 1919ல் இச்சங்கம் அமைக்கப்பட்டது. ஆக்கிரமிப்பை எதிர்ப்பதும், படைக்கலக் குறைப்பை ஏற்படுத்துவதும் சமாதானத்தையும் தேசங்களது பாதுகாப்பையும் வலிமை பெறச் செய்வதுமே சர்வதேசச் சங்கத்தின் நோக்கம் என்பதாகத் தோன்றும்படி இதன் சாசனம் வரையப்பட்டது. உண்மையில் சர்வதேசச் சங்கத்தின் தலைவர்கள் ஆக்கிரமிப்பாளர்களுக்கு உடந்தையாளர்களாக இருந்தார்கள், ஆயுதப்

போட்டிக்கும் மற்றொரு உலகப் போருக்கான தயாரிப்பு களுக்கும் ஊக்கமளித்தார்கள்.

பிரெஞ்சு அரசுறவுத் துறையின் முன்முயற்சியைத் தொடர்ந்து 1934 செப்டம்பர் 15ல், சங்கத்தின் 34 உறுப்பு நாடுகள் சோவியத் கூட்டரசை இச்சங்கத்தில் சேர்ந்து கொள்ளுமாறு அழைத்தன. சமாதானத்தைப் பலப்படுத்தும் போராட்டத்தின் நலன்களை முன்னிட்டு சோவியத் கூட்டரசு இச்சங்கத்தில் சேர்ந்து கொண்டது. ஆனால் சமாதான அணியை அமைத்திடுவதற்காக சோவியத் கூட்டரசு மேற்கொண்ட முயற்சிகளை மேலைய அரசுகளின் பிற்போக்கு வட்டாரங்கள் விடாப்பிடியாக எதிர்த்தன. இரண்டாம் உலகப் போர் ஆரம்பமானதுமே சர்வதேசச் சங்கத்தின் செயற்பாடுகள் நின்று போயின, 1946 ஏப்ரலில் முறைப்படி அது கலைக்கப் பட்டது.—93.

43 இங்கு குறிக்கப்படுகிறவை சுவிட்சர்லாந்தில் ஸிம்மர் வால்டிலும் (1915 செப்டம்பர் 5-8), சுவிட்சர்லாந்தில் கின்தாலிலும் (1916 ஏப்ரல் 24-30) நடைபெற்ற சர்வதேச சோஷலிஸ்டு மாநாடுகள்.

ஸிம்மர்வால்டு, கின்தால் மாநாடுகள் ஐரோப்பிய சமூக-ஜனநாயகவாதிகளிடையே இருந்த இடதுசாரியினரிடம் மார்க்சிய-லெனினிய அடிப்படையில் சித்தாந்த ஒற்றுமையை உறுதி பெறச் செய்தன.—98.

44 ''புரட்சிகரக் கம்யூனிஸ்டுகள்''—இடதுசாரி சோஷலிஸ்டுப்-புரட்சியாளர்களின் 1918 ஜூலைக் கலகத்துக்குப் பிற்பாடு அக்கட்சியிலிருந்து முறித்துக் கொண்ட ஒரு கோஷ்டி. 1918 செப்டம்பரில் இக்கோஷ்டி ''புரட்சிகரக் கம்யூனிசக் கட்சியை ''அமைத்துக் கொண்டது. இக்கட்சி சோவியத் ஆட்சியதிகாரத்துடன் ஒத்துழைத்தது, பிறகு 1920 செப்டம்பரில் ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியில் (போல்ஷிவிக்குகள்) சேர்ந்து கொண்டது—98.

45 இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் — இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் உறுப்பினர்கள் (சர்வதேசியவாதிகள்). இக்கட்சி அதன் முதலாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசில், 1917 நவம்பர் 19-28 (டிசம்பர் 2-11)இல் நிறுவப்பட்டது. இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் இதன்முன் சோஷலிஸ்டு-புரட்சி

யாளர் கட்சியின் இடதுசாரியாக இருந்து வந்தனர் (குறிப்பு 6ஐப் பார்க்கவும்). சோவியத்துகளின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரசில் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் நிகழ்ச்சி நிரலின் முக்கிய விவகாரங்களில் போல்ஷிவிக்குகளைப் போலவே வாக்களித்தனர். ஆனால், சோவியத் அரசாங்கத்தில் சேரும்படி போல்ஷிவிக்குள் விடுத்த அழைப்பை அவர்கள் ஏற்கவில்லை.

மிகுந்த தயக்கத்துக்குப் பிற்பாடு, இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் விவசாயிகளிடையே தமக்கிருந்த செல்வாக்கை இழக்காது பாதுகாத்துக் கொள்ள விரும்பி, போல்ஷிவிக்குகளுடன் உடன்பாட்டுக்கு வந்தனர். மக்கள் கமிசாரகங்கள் பலவற்றின் குழுமங்களில் அவர்கள் சேர்ந்து கொண்டனர். ஆனால் சோஷலிச நிர்மாணத்தின் அடிப்படைப் பிரச்சினைகளில் அவர்கள் போல்ஷிவிக்குகளுடன் கருத்து வேற்றுமை கொண்டனர். பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை அவர்கள் எதிர்த்தனர். பிரேஸ்த் சமாதான உடன்படிக்கையை எதிர்த்து 1918 ஜனவரி-பிப்ரவரியில் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் மத்தியக் கமிட்டி போராட்டம் துவக்கிற்று. இந்த ஒப்பந்தம் கையொப்பமிடப்பட்டு 1918 மார்ச்சில் சோவியத்துகளின் நான்காவது காங்கிரசால் ஆமோதிக்கப்பட்டபின் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் மக்கள் கமிசாரகங்களை விட்டு விலகினர் என்றாலும், மக்கள் கமிசாரங்களின் குழுமங்களிலும் மற்றும் வட்டார ஆட்சியதிகார உறுப்புகளிலும் தொடர்ந்து இருந்து வந்தனர். கிராமப்புறங்களில் சோஷலிசப் புரட்சி வளர்ச்சியுற்றதைத் தொடர்ந்து இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் உறுப்பினர்களிடையே சோவியத்-எதிர்ப்பு உணர்ச்சிகள் அதிகமாயின. 1918 ஜூலையில் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் மத்தியக் கமிட்டி, சோவியத் ருஷ்யாவுக்கும் ஜெர்மனிக்குமிடையே யுத்தம் மூள்வதற்கு வழி வகுத்திடும் பொருட்டு, மாஸ்கோவிலிருந்த ஜெர்மன் தூதுவரின் கொலைக்கு ஏற்பாடு செய்தது. தவிரவும் சோவியத் ஆட்சியதிகாரத்தை எதிர்த்து ஆயுதமேந்திய கலகத்துக்கும் ஏற்பாடு செய்தது. இந்தக் கலகம் அடக்கப்பட்டதும், சோவியத்துகளின் ஐந்தாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ், இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்களில்

அவர்களது தலைவர்களுடைய கருத்துக்களை ஆதரித்தோரை சோவியத்துகளின் உறுப்பினர் அந்தஸ்திலிருந்து விலக்கியது.—99.

46 வெர்சேய் உடன்படிக்கை [The Treaty of Versailles]—முதல் ஏகாதிபத்திய உலகப் போருக்கு முடிவு கட்டிய இந்த உடன்படிக்கை ஒரு புறம் அமெரிக்க ஐக்கிய நாடு, பிரிட்டிஷ் சாம்ராஜ்யம், பிரான்ஸ், இத்தாலி, ஜப்பான் இவற்றுக்கும் போரின் போது இவற்றுடன் கூட்டு கொண்ட அரசுகளுக்கும், மறுபுறம் ஜெர்மனிக்கும் இடையே 1919 ஜூன் 28ல் கையொப்பமிடப்பட்டது. வெர்சேய் உடன்படிக்கை முதலாளித்துவ உலகு வெற்றிபெற்ற நாடுகளிடையே பகிர்ந்து கொள்ளப்பட்டதற்குச் சட்ட அந்தஸ்து அளிப்பதற்காகவும், சோவியத் ருஷ்யாவை நசுக்குவதற்கும் உலகெங்கும் புரட்சி இயக்கத்தைத் தோற்கடிப்பதற்கும் ஏற்றவாறு சர்வதேச உறவுகளின் அமைப்பு ஒன்றை ஏற்படுத்துவதற்காகவும் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கையே ஆகும் இது.—104.

47 பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சி (British Socialist Party)—சமூக-ஜனநாயகக் கட்சியும் இதர சோஷலிஸ்டுக் குழுக்களும் சேர்ந்து 1911ல் மான்சஸ்டரில் நிறுவிய கட்சியாகும். இக்கட்சி மார்க்சிய உணர்வுடன் கிளர்ச்சி நடத்தி வந்தது. இது "சந்தர்ப்பவாதக் கட்சியாக இல்லாமல், மிதவாதிகளுடன் கூடாமல் மெய்யாகவே சுயேச்சையானதாக" இருந்தது (வி. இ. லெனின்). பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சி ருஷ்யாவில் அக்டோபர் சோஷலிசப் புரட்சியை வரவேற்றது. இதன் உறுப்பினர்கள் அன்னியத் தலையீட்டிலிருந்து சோவியத் ருஷ்யாவைப் பாதுகாப்பதற்காக பிரிட்டிஷ் தொழிலாளர்கள் நடத்திய இயக்கத்தில் முக்கியப் பங்கெடுத்துக் கொண்டனர். 1919ல் இக்கட்சியின் நிறுவனங்களில் பெருவாரியானவை (4க்கு எதிராய் 98) கம்யூனிஸ்டு அகிலத்தில் சேர்ந்து கொள்வதை ஆதரித்து வாக்களித்தன. பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சி அமைக்கப்படுவதற்குப் பிரதானமாய் பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியும் கம்யூனிஸ்டு ஒற்றுமைக் குழுவும்தான் காரணமாய் இருந்தன. 1920ல் நடைபெற்ற முதலாவது ஐக்கிய காங்கிரசில் பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியின் மிகப் பெருவாரியான வட்டார

*நிறுவனங்கள் கம்யூனிஸ்டுக் கட்சியில் இணைந்து கொண்டு விட்டன.—108.*

48 **சோஷலிஸ்டுத் தொழிற் கட்சி** (The Socialist Labour Party)—*1903ல் ஸ்காட்லண்டில் நிறுவப்பட்ட புரட்சிகர மார்க்சிய நிறுவனம். சமூக-ஜனநாயகச் சம்மேளனத்திலிருந்து முறித்துக் கொண்டு சென்ற இடதுசாரி சமூக-ஜனநாயகவாதிகளின் கோஷ்டி ஒன்று இதனை நிறுவிற்று.*

**தெற்கு வேல்ஸ் சோஷலிஸ்டுக் கழகம்** (The South Wales Socialist Society)—*பிரதானமாய்ப் புரட்சிகரச் சுரங்கத் தொழிலாளர்களாலான ஒரு சிறிய குழு. சுரங்கச் சீர்திருத்தங்களுக்கான இயக்கமாய்த் தொடங்கிய இக்கழகம் முதல் உலகப் போருக்குச் சற்று முன்னால் குறிப்பிடத்தக்க வலிவுடையதாய் வளர்ந்தது.*

**தொழிலாளர் சோஷலிஸ்டுச் சம்மேளனம்** (The Workers' Socialist Federation)—*மாதர் வாக்குரிமைக் கழகத்திலிருந்து 1918 மேயில் தோன்றிய சிறிய நிறுவனம்; பிரதானமாய் மாதர்களையே உறுப்பினர்களாகக் கொண்டது.*

*பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சி துவக்கப்பட்டபோது (1920 ஜூலை 31—ஆகஸ்டு 1) அதன் வேலைத்திட்டத்தில் நாடாளுமன்றத் தேர்தல்களில் பங்கு கொள்வதும், தொழிற் கட்சியில் உறுப்பினர்களாய் இருப்பதும் ஏற்கப்பட்டன. மேற்கூறிய நிறுவனங்கள் குறுங்குழுவாதப் போக்குடையனவாகவே இருந்துவிட்டன; அவை பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியில் சேரவில்லை. 1921 ஜனவரியில் தெற்கு வேல்ஸ் சோஷலிஸ்டுக் கழகமும் தொழிலாளர் சோஷலிஸ்டுச் சம்மேளனமும் (இதற்குள் இது "கம்யூனிஸ்டுக் கட்சி — மூன்றாவது அகிலத்தின் பிரிட்டிஷ் பிரிவு" என்னும் பெயருடையதாகிவிட்டது) பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியில் இணைந்து கொண்டன. சோஷலிஸ்டுத் தொழிற் கட்சியின் தலைமை இணைய மறுத்துவிட்டது.—108.*

49 **தி ஒர்க்கர்ஸ் டிரட்நாட்** *(The Workers' Dreadnought) 1914 மார்ச் முதல் 1924 ஜூன் வரை லண்டனில் வெளியிடப்பட்டது; 1917 ஜூலை வரையில் The Woman's Dreadnought என்ற பெயருடைத்திருந்தது. தொழிலாளர் சோஷலிஸ்டுச் சம்மேளனம் 1918ல் துவக்கப்பட்டபோது, இது அந்நிறுவனத்தின் பத்திரிகையாகியது.—108.*

50 *Manchester Guardian* (''மான்ச்செஸ்டர் காவலன்'')—முதலாளித்துவ-மிதவாத ஏடு, பிரிட்டனில் செல்வாக்கு வாய்ந்த பெரிய முதலாளித்துவச் செய்தியேடுகளில் ஒன்று, 1821ல் ஆரம்பிக்கப்பட்டது. இன்று இது *Guardian* என்னும் பெயரில் வெளிவருகிறது.—114.

51 லெனின் இங்கு குறிப்பிடும் மூன்று ருஷ்யப் புரட்சிகள் வருமாறு: முதல் ருஷ்யப் புரட்சியான 1905-1907ஆம் ஆண்டுகளது முதலாளித்துவ-ஜனநாயக புரட்சி, 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயக புரட்சி, 1917 நவம்பர் 7ல் நடைபெற்ற மாபெரும் அக்டோபர் சோஷலிஸ்டுப் புரட்சி.—120.

52 முடியாட்சிவாத நிலப்பிரபு காப், ஜெனரல்கள் லுடென்டோர்ப், செக்த், லுட்விட்ஸ் ஆகியோரின் தலைமையில் ''காப் அதிகார மாற்றக் கலகம்'' என்றழைக்கப்பட்ட இராணுவ-முடியாட்சியாளர் கலகம் இங்கு குறிப்பிடப்படுகிறது. சமூக-ஜனநாயக அரசாங்கத்தின் உடந்தையுடன்தான் சதிகாரர்கள் இக்கலகத்துக்குத் தயார் செய்தனர். 1920 மார்ச் 13ல் கலகக்கார ஜெனரல்கள் சேனைப் படைப் பிரிவுகளைக் கொண்டு பெர்லினைத் தாக்கினர். அரசாங்கத்திடமிருந்து எதிர்ப்பு எதுவும் இல்லையாதலால், இராணுவச் சர்வாதிகாரத்தைப் பிரகடனம் செய்தனர். ஜெர்மன் தொழிலாளர்கள் உடனே பொது வேலைநிறுத்தத்தைத் தொடங்கி இந்த அதிகார மாற்றச் சதியை எதிர்த்தனர். பாட்டாளி வர்க்கத்தின் நிர்ப்பந்தத்தை எதிர்த்து நிற்க முடியாமல் காப் அரசாங்கம் மார்ச் 17ல் கவிழ்ந்துவிட்டது; வலதுசாரி சமூக-ஜனநாயகவாதிகள் திரும்பவும் அதிகாரத்துக்கு வந்தனர்.—135.

53 1917 ஜூலை 3-4 (16-17)ல் பெத்ரொகிராதில் நடைபெற்ற அமைதியான தொழிலாளர் ஆர்ப்பாட்டத்தின் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து அது கலைக்கப்பட்ட பிறகு, முதலாளித்துவ இடைக்கால அரசாங்கம் போல்ஷிவிக்குகளுக்கு எதிராகக் கட்டவிழ்த்துவிட்ட கொடிய அடக்குமுறையை லெனின் இங்கு குறிப்பிடுகிறார்.—147.

54 ஜெர்மன் கம்யூனிஸ்டுத் தொழிலாளர் கட்சி—ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்து 1919 அக்டோபரில் பிளந்து

வெளியேறிய ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகளது கோஷ்டியால் அமைக்கப்பட்ட கட்சி. இவர்களிடையே அராஜக-சின்டிக்கலிஸ்டுகள் பலரும் இருந்தனர். 1920 ஏப்ரலில் இக்கோஷ்டி கட்சியாகியது. இந்தக் கட்சி குறுங்குழுவாதக் கருத்தோட்டங்களைக் கொண்டிருந்தது; நாடாளுமன்றத்தைப் பயன்படுத்திக் கொள்வதை எதிர்த்தது; தொழிற் சங்கங்களில் வேலை செய்ய மறுத்தது; பாட்டாளி வர்க்கப் புரட்சியில் கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைமைப் பாத்திரத்தை நிராகரித்தது. கம்யூனிஸ்டு அகிலத்தின் மூன்றாவது காங்கிரசில் இக் கட்சியின் பிரதிநிதிக் குழு கலந்து கொண்டது. ஆனால் இந்தக் கட்சி, தனது குறுங்குழுவாதப் போர்த்தந்திரத்தை விட்டொழிக்க வேண்டுமென்றும் ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியுடன் சேர்ந்து கொண்டுவிட வேண்டுமென்றும் கோரிய மூன்றாவது காங்கிரசின் தீர்மானங்களை ஏற்றுச் செயல்படுத்தவில்லை. ஆகவே கம்யூனிஸ்டு அகிலத்திலிருந்து இது வெளியேற்றப்பட்டது. இதன் பிறகு இக்கட்சி கம்யூனிஸ்டு இயக்கத்துக்குப் பகைமையான சிறு குழுவாய்ச் சீரழிந்தது.—156.

55 *Die Rote Fahne* (''செங் கொடி'') கார்ல் லீப்க்னெஹ்ட்டும் ரோஸா லுக்சம்பர்கும் ''ஸ்பார்த்தக்கஸ் கழகத்தின்'' மத்திய ஏடாக ஆரம்பித்தது, பிற்பாடு ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்திய ஏடு ஆயிற்று. இது 1918 நவம்பர் 9ல் பெர்லினில் வெளிவரத் தொடங்கியது. ஜெர்மன் அரசாங்கத்தின் அடக்குமுறைக்கு உள்ளாகி வந்தது, திரும்பத் திரும்ப தடை விதிக்கப்பட்டது. ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டி தலைவரான எர்னஸ்ட் தேல்மன் அடிக்கடி இதில் எழுதி வந்தார். நாஜி சர்வாதிகாரம் ஆரம்பமானதும் இந்தச் செய்தியேட்டுக்குத் தடை விதிக்கப்பட்டது. ஆனால் இது சட்ட விரோதமாய் வெளிவந்து கொண்டிருந்தது. 1935ல் இது பிராகில் (செக்கோஸ்லோவாக்கிய) அச்சிடப்பட்டது, 1936 அக்டோபரிலிருந்து 1939 இலையுதிர் காலம் வரை பிரஸ்ஸல்சில் (பெல்ஜியம்) அச்சிடப்பட்டது.—159.

56 *Die Rote Fahne* (''செங் கொடி'')—ஆஸ்திரியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்திய ஏடு. 1918 நவம்பரில் வியன்னாவில் ஆரம்பிக்கப்பட்ட இது பல்வேறு பெயர்களில் வெளிவந்து கொண்டிருந்தது. 1957 பிப்ரவரி

21 முதல் *Volkstimme* (''மக்கள் குரல்'') என்ற பெயரில் வெளிவருகிறது.—162.

57 *Die Freiheit* (''சுதந்திரம்'')—ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சியின் நாளேடு. பெர்லினில் 1918 நவம்பரிலிருந்து 1922 அக்டோபர் வரை வெளிவந்தது.—162.

58 ''சோவியத் 'வழக்குரைஞர்கள்' '' — தொழிலாளர்கள், படைவீரர்கள், விவசாயிகள், கசாக்குப் பிரதிநிதிகளது சோவியத்துகளுக்குக்கீழ் 1918 பிப்ரவரியில் நிறுவப்பெற்ற வழக்கறிஞர் மன்றங்கள். இவை பலவற்றில் முதலாளித்துவ வழக்கறிஞர்கள் செல்வாக்கு செலுத்தமுற்பட்டு, சோவியத் நீதிமன்ற முறையின் அடிப்படைக் கோட்பாடுகளைத் திருத்திப் புரட்டலாயினர்; ஒழுங்கீனங்களுக்கு இடமளித்து வந்தனர்.—171.

59 லெனினது இந்த அறிவிப்புக்கு ஏற்ப, ''இடதுசாரி'' கம்யூனிசம்—இளம் பருவக் கோளாறு பூராவிலும் ''டச்சு டிரிபியூனிஸ்டுகள்'' என்ற தொடர் ''ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியின் சில உறுப்பினர்கள்'' என்பதாக மாற்றப்பட்டிருக்கிறது.—174.

60 நிலப் பிரச்சினை பற்றிய ஆய்வுரைகளின் பூர்வாங்க நகல் ஆரம்பத்தில் ''நிலப் பிரச்சினை குறித்து கம்யூனிஸ்டு அகிலச் செயற் குழுவின் ஆய்வுரைகள்'' என்கிற பெயரில் கம்யூனிஸ்டு அகிலச் செயற் குழுவால் அங்கீகரிக்கப்பட்டது. இந்த ஆய்வுரைகள் கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசால் ஏற்கப்பட்டு, நிலப் பிரச்சினை பற்றிய தீர்மானத்தை வகுத்திடும் படிச் சொல்லி ஒரு கமிஷனிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்தக் கமிஷனின் பணிக்கு லெனின் நெறியாண்மை புரிந்தார். ஆய்வுரைகளின் பூர்வாங்க நகலில் இக் கமிஷன் சில திருத்தங்களைச் செய்தது. பிறகு 1920 ஆகஸ்டு 4ல் இரண்டாவது காங்கிரஸ் இந்த ஆய்வுரைகளை அங்கீகரித்தது.—176.

61 யூ. மார்ஹ்லேவ்ஸ்கி எழுதிய ''நிலப் பிரச்சினையும் உலகப் புரட்சியும்'' என்னும் கட்டுரையை லெனின் இங்கு குறிப்பிடுகிறார். இக்கட்டுரை கம்யூனிஸ்டு அகிலம், இதழ் 12ல் (1920 ஜூலை 20) வெளிவந்தது. இதில் வெளியாகுமுன் லெனின் இக்கட்டுரையைப் படித்தார்.—176.

62 கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரஸ்—கம்யூனிஸ்டு அகிலத்தின் வேலைத்திட்ட, போர்த்தந்திர, நிறுவனக் கோட்பாடுகளை வகுத்தளித்த இக்காங்கிரஸ் 1920 ஜுலை 19லிருந்து ஆகஸ்டு 7 வரை நடைபெற்றது. 37 நாடுகளின் கம்யூனிஸ்டுக் கட்சிகளையும் தொழிலாளர் நிறுவனங்களையும் சேர்ந்த 200க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள்.

காங்கிரசின் முதல் அமர்வில், சர்வதேச நிலைமை குறித்தும் கம்யூனிஸ்டு அகிலத்தின் அடிப்படைப் பணிகள் குறித்தும் லெனின் உரை நிகழ்த்தினர். பிற்பாடு நடைபெற்ற அமர்வுகளில் அவர் கம்யூனிஸ்டுக் கட்சியைப் பற்றி சொற்பொழிவாற்றினர்; தேசிய இன, காலனிப் பிரச்சினைகள் குறித்து உரை நிகழ்த்தினர்; நாடாளுமன்றவாதம் குறித்தும் பிற பிரச்சினைகள் குறித்தும் பேசினர். காங்கிரஸ் கமிஷன்கள் மிகப் பலவற்றின் வேலைகளிலும் முக்கிய பங்கு ஆற்றினர்.

லெனினது அரும் பெரும் நூலான ''இடதுசாரி'' கம்யூனிசம்—இளம் பருவக் கோளாறு என்பதில் விவரிக்கப்பட்ட கருத்துக்கள் இந்தக் காங்கிரசின் தீர்மானங்களுக்கு அடிப்படை ஆயின. லெனினது கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசின் அடிப்படைப் பணிகள் பற்றிய ஆய்வுரைகள் இக்காங்கிரசின் தீர்மானமாய் ஏற்கப்பட்டது. பாட்டாளி வர்க்கப் புரட்சியில் கம்யூனிஸ்டுக் கட்சியின் பாத்திரமும், கட்சிக்கும் தொழிலாளி வர்க்கத்துக்கும் உள்ள உறவுகளும் இக்காங்கிரசால் விவாதிக்கப்பட்ட முக்கிய பிரச்சினைகளில் சில. ''பாட்டாளி வர்க்கப் புரட்சியில் கம்யூனிஸ்டுக் கட்சியின் பாத்திரம்'' என்னும் தீர்மானத்தில், கம்யூனிஸ்டுக் கட்சிதான் தொழிலாளி வர்க்கத்தின் விடுதலைக்குப் பிரதானமான, அடிப்படையான ஆயுதமாய் அமைகிறது என்று காங்கிரஸ் குறிப்பிட்டது. தேசிய இன, காலனிப் பிரச்சினைகளையும் நிலப் பிரச்சினைகளையும் பற்றிய லெனினது ஆய்வுரைகள் இப்பிரச்சினைகளில் காங்கிரசின் தீர்மானங்களாக ஏற்கப்பட்டன.

சர்வதேசக் கம்யூனிஸ்டு இயக்கம் ஓங்குவதற்கு இந்தக் காங்கிரஸ் அரும் பெரும் பங்காற்றியது.—198.

63 ஜிங்கோவெறி — ஆக்கிரமிப்பு ஏகாதிபத்தியக் கொள்கைகளுக்காகச் செயல்படும் இராணுவவாத தேசிய வெறி. ''ஜிங்கோ'' என்னும் பதம் 1870ஆம் ஆண்டு

களில் பாடப்பட்ட ஆங்கிலேய தேசியவெறிப் பாட்டு ஒன்றின் பல்லவியிலிருந்து வந்ததாகும்.—206.

64 **பாசெல் அறிக்கை** — இரண்டாவது அகிலத்தின் அறிக்கையான இது, 1912 நவம்பர் 24-25ல் பாசெல் நகரில் நடைபெற்ற சர்வதேச சிறப்பு சோஷலிஸ்டுக் காங்கிரசால் 1912 நவம்பர் 25ல் ஏற்கப்பட்டது. உலக யுத்தம் மூண்டு வந்ததன் அபாயத்தை இவ்வறிக்கை எடுத்துரைத்து எல்லா நாடுகளின் மக்களையும் எச்சரித்தது; இந்த யுத்தத்தின் கொள்ளைக்கார நோக்கங்களைத் தெளிவுபடுத்தி எல்லா நாடுகளின் தொழிலாளர்களையும் சமாதானத்துக்காக வைராக்கியமாகப் போராடும்படியும் ''முதலாளித்துவ ஏகாதிபத்தியத்தின் வலிமைக்கு எதிராய்த் தொழிலாளி வர்க்கச் சர்வதேச ஒருமைப்பாட்டினைச் செயல்படச் செய்யும்படியும்'' இவ்வறிக்கை அறைகூவியது. ஏகாதிபத்திய யுத்தம் மூளுமாயின் யுத்தத்தின் விளைவாக எழும் பொருளாதார, அரசியல் நெருக்கடியை சோஷலிஸ்டுகள் சோஷலிசப் புரட்சிப் போராட்டத்தை முன்கொண்டு செல்வதற்காகப் பயன்படுத்த வேண்டுமென்று கூறி 1907ஆம் ஆண்டு ஷ்டுட்கார்ட் காங்கிரஸ் தீர்மானத்தில் லெனின் வகுத்தளித்திருந்த ஒரு பகுதியும் இந்த அறிக்கையில் சேர்ந்திருந்தது.

இந்த யுத்த-எதிர்ப்பு அறிக்கை ஏற்கப்படுவதற்கு ஆதரவாய் இரண்டாவது அகிலத்தின் தலைவர்கள் வாக்களித்தார்கள், ஆனால் யுத்தம் ஆரம்பமானதும் இந்த அறிக்கையையும், யுத்தத்துக்கு எதிரான போராட்டம் குறித்து சர்வதேச சோஷலிஸ்டுக் காங்கிரசுகளது ஏனைய தீர்மானங்களையும் குழி தோண்டிப் புதைத்துவிட்டு, அவரவர்களது ஏகாதிபத்திய அரசாங்கங்களின் தரப்புக்கு ஓடிச் சென்றனர்.—206.

65 **ருஷ்யாவின் இளங் கம்யூனிஸ்டுக் கழகத்தின் மூன்றாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ்** 1920 அக்டோபர் 2-10ல் மாஸ்கோவில் நடைபெற்றது. ஏறத்தாழ 600 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். அக்டோபர் 2 மாலையில் காங்கிரசின் முதல் அமர்வில் லெனின் சொற்பொழிவாற்றினார்.—208.

66 **புரொலெட்குல்ட்** எனப்படும் பாட்டாளி வர்க்கக் கலாசார, கல்வித் துறை நிறுவனத்தின் உறுப்பினர்கள் இங்கு குறிப்பிடப்படுகிறார்கள். இவர்கள் நடைமுறையில்

கடந்த காலக் கலாசாரச் செல்வங்களை நிராகரித்து விட்டு, வாழ்க்கையிலிருந்து தனிமைப்படுத்தப்பட்ட "பாட்டாளி வர்க்கக் கலாசாரத்தை" "ஆய்வுக்கூட முறையில்" உருவாக்க முயன்றனர். இது ஒருபடித் தான நிறுவனமாய் இருக்கவில்லை. புரொலெட்குல்ட் அமைப்புகள் பலவற்றிலும் தலைமை நிலையில் இருந்த குட்டிமுதலாளித்துவ அறிவுத்துறையினருடன் கூட கலாசார ஆக்கப் பணிகளில் சோவியத் அரசுக்கு உதவி புரிய முயன்ற இளந் தொழிலாளர்களும் இருந்தனர். புரொலெட்குல்ட் 1919ல் அதன் வளர்ச்சியின் உச்ச நிலையை அடைந்தது, 1920ஆம் ஆண்டுகளின் ஆரம் பத்தில் அஸ்தமிக்க முற்பட்டது, 1932ல் மறைந்து போயிற்று.—215.

67 1920 அக்டோபர் 5-12ல் மாஸ்கோவில் நடைபெற்ற முதலாவது அனைத்து ருஷ்ய புரொலெட்குல்ட் காங் கிரசை ஒட்டி, "பாட்டாளி வர்க்கக் கலாசாரம் குறித்து" என்னும் நகல் தீர்மானத்தை லெனின் வரைந்தார். புரொலெட்குல்ட்டின் எல்லா அமைப்பு களும் கல்வித் துறை மக்கள் கமிசாரகத்துக்குக் கீழ்ப் படிந்து செயல்பட வேண்டுமெனக் கூறிய தீர்மானம் இக்காங்கிரசால் ஒருமனதாய் ஏற்றுக் கொள்ளப் பட்டது.—238.

68 குபேர்னியா, உயெஸ்து கல்வி இலாகாக்களின் அரசியல் கல்விப் பணித் துறையாளர்களது அனைத்து ருஷ்யாவின் மாநாடு 1920 நவம்பர் 2-8ல் மாஸ்கோவில் நடைபெற்றது. 283 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். குடியரசின் அரசியல் கல்வித் தலைமைக் கமிட்டி ஒன்றை நிறுவுவது சம்பந்த மான பிரச்சினைகள் இம்மாநாட்டின் மையப் பிரச்சினை களாய் இருந்தன. உணவு இயக்கம், அரசியல் கல்வி, நாட்டின் பொருளாதாரத்தைப் புத்துயிர் பெறச் செய்வதுடன் இணைந்த உற்பத்திப் பிரசாரம், எழுத் தறியாமையை ஒழித்திடல் முதலான பிரச்சினைகளும் நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றன.—241.

69 ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் (போல்ஷிவிக்குகள்) பத்தாவது காங்கிரஸ் — 1921 மார்ச் 8-16ல் மாஸ்கோ வில் நடைபெற்றது. காங்கிரசின் பணிகள் லெனின் தலைமையில் நடைபெற்றன. துவக்க உரை, முடி

வுரை, மத்தியக் கமிட்டியின் அரசியல் செயற்பாட்டையும், உபரி விளைபொருள் வசூலிப்புக்குப் பதில் பண்ட வகை வரியைக் கைக்கொள்ளுதலையும், கட்சி ஒற்றுமையையும், அராஜக-சிண்டிக்கலிசத் திரிபையும் பற்றிய உரைகள் ஆகியவற்றை அவர் நிகழ்த்தினர். மற்றும் தொழிற் சங்கங்கள் குறித்தும் எரிபொருள் பிரச்சினை குறித்தும் சொற்பொழிவு ஆற்றினர். காங்கிரசின் முக்கிய தீர்மானங்களை அவரே வரைந்தளித்தார்.

மத்தியக் கமிட்டியின் செயற்பாடுகள் பற்றிய உரையிலும், உபரி விளைபொருள் வசூலிப்புக்குப் பதில் பண்ட வகை வரியைக் கைக்கொள்வது பற்றிய உரையிலும் புதிய பொருளாதாரக் கொள்கைக்கு (குறிப்பு 77ஐப் பார்க்கவும்) மாறிச் செல்ல வேண்டிய அவசியத்துக்குரிய ஆழ்ந்த தத்துவார்த்த, அரசியல் காரணங்களை லெனின் விளக்கினர். இந்த உரைகள் குறித்து காங்கிரஸ் விவாதித்தது, பிறகு உபரி விளைபொருள் வசூலிப்பு முறைக்குப் பதில் பண்ட வடிவ வரியைக் கைக்கொள்வதையும் யுத்தக் கால கம்யூனிசத்திலிருந்து புதிய பொருளாதாரக் கொள்கைக்கு மாறிச் செல்வதையும் பற்றிய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தீர்மானங்களை ஏற்றது.

கட்சி ஒற்றுமை பற்றிய பிரச்சினையில் இக்காங்கிரஸ் முக்கிய கவனம் செலுத்தியது. லெனின் முன்மொழிந்த ''கட்சி ஒற்றுமை குறித்து'' என்னும் தீர்மானம், கட்சியைப் பலவீனப்படுத்தியும் அதன் ஒற்றுமைக்குக் குழி பறித்தும் வந்த எல்லாக் கோஷ்டிகளும் உடனடியாகக் கலைக்கப்பட வேண்டுமெனக் கோரியது. ''நமது கட்சியிலுள்ள சிண்டிக்கலிஸ்டு, அராஜகவாதத் திரிபு குறித்து'' என்ற தீர்மானமும் இக்காங்கிரசில் நிறைவேற்றப்பட்டது, இதுவும் லெனினல் வரையப்பட்டதுதான்.

பொருளாதார வளர்ச்சியில் தொழிற் சங்கங்களின் பாத்திரம் குறித்து பத்தாவது காங்கிரஸ் பரிசீலனை செய்தது. தொழிற் சங்கங்கள் குறித்து நடைபெற்ற விவாதத்தைத் தொகுத்துக் கூறுகையில் இக்காங்கிரஸ், ''தொழிலாளர் எதிர்த்தரப்பு'', ''ஜனநாயக மத்தியத்துவம்'' முதலான சந்தர்ப்பவாதக் கோஷ்டிகளுடைய கருத்துக்களை வன்மையாகக் கண்டித்தது; லெனினது கொள்கை நெறியை மிகப் பெருவாரியான

வாக்குகளின் பேரில் அங்கீகரித்தது; கம்யூனிசப் பயிற்சிப் பள்ளியாகச் செயல்படுவதே தொழிற் சங்கங்களுக்குரிய பாத்திரமென்று இக்கொள்கை நெறி வரையறுத்தது; தொழிற் சங்க ஜனநாயகத்தை விரிவுபடுத்துவதற்கான நடவடிக்கைகளை இது விளக்கிக் கூறியது.

தேசிய இனப் பிரச்சினை பற்றிய காங்கிரஸ் தீர்மானத்தை லெனின் தலைமையில் அமைந்த கமிஷன் வகுத்துத் தந்தது. முன்பெல்லாம் ஒடுக்கப்பட்டு வந்த தேசங்களிடையே மெய்ந் நடப்பில் நிலவும் சமத்துவமின்மையை அறவே ஒழித்திட்டு, சோஷலிசக் கட்டுமானத்தில் செயல் முனைப்புடன் பங்கு கொள்ளும்படி இவற்றை ஈர்த்திடும் பணியை இக்காங்கிரஸ் வகுத்தளித்தது. தேசிய இனப் பிரச்சினையில் கட்சி-விரோதத் திரிபுகளாய் அமைந்த பேரரசுவாதத் தேசியவெறியையும் பிராந்தியத் தேசியவாதத்தையும் இக்காங்கிரஸ் கண்டனம் செய்தது.—259.

70 ''தொழிலாளர் எதிர்த்தரப்பு'' — கட்சி-விரோத அராஜக-சிண்டிக்கலிஸ்டுத் தனிக் கோஷ்டி. 1920-21ல் தொழிற் சங்கங்களைப் பற்றி விவாதங்கள் நடைபெற்று வந்த போது உருவானது. தேசப் பொருளாதாரத்தின் நிர்வாகம் முழுவதையும் தொழிற் சங்கங்களில் ஒன்றிணைந்த ''அனைத்து ருஷ்ய உற்பத்தியாளர் காங்கிரஸ்'' இடம் ஒப்படைக்க வேண்டுமென இந்தக் கோஷ்டி முன்மொழிந்தது. பொருளாதார நிர்வாக உறுப்புகள் யாவும் அந்தந்தக் கிளையையும் சேர்ந்த தொழிற் சங்கங்களால் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றும், தொழிற் சங்கங்களால் நியமனம் செய்யப்படும் வேட்பாளர்களை எதிர்ப்பதற்கு கட்சி, அரசாங்க உறுப்புகளுக்கு உரிமை இருக்கக் கூடாதென்றும் இந்த எதிர்த்தரப்பு கோரியது. இந்தக் கோரிக்கைகளுக்கு இணங்குவது, கட்சியின் தலைமைப் பாத்திரத்தையும் சோஷலிசக் கட்டுமானத்துக்குரிய அடிப்படைக் கோட்பாடாகிய பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தையும் நிராகரிப்பதாகிவிடும். ''தொழிலாளர் எதிர்த்தரப்பு'' தொழிற் சங்கங்களை சோவியத் அரசாங்கத்துக்கும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் எதிரானவையாக வைத்தது, தொழிலாளி வர்க்கத்துக்குரிய மிக உயர்ந்த நிறுவன ஒழுங்கமைப்பு வடிவம் தொழிற் சங்கங்களே அன்றி கட்சியல்ல என்பதாகக் கருதியது. கட்சித் தலைமை

யானது ''கட்சியின் வெகுஜனங்களிடமிருந்து தனிப்பட்டிருக்கிறது'', ''தொழிலாளி வர்க்கத்தின் ஆக்கத் திறன் படைத்த சக்திகளை அது குறைத்து மதிப்பிட்டது'', ''சீரழிந்து வந்தது'' என்கிற அவதூறான குற்றச்சாட்டுகளே உட்கட்சிப் பிரச்சினைகள் குறித்த அதன் கொள்கைத் திட்டமாய் இருந்தது.

''தொழிலாளர் எதிர்த்தரப்பின்'' கருத்துக்களுக்குப் பத்தாவது கட்சிக் காங்கிரஸ் மரண அடி கொடுத்தது. லெனினால் முன்மொழியப்பட்ட ''நமது கட்சியில் சிண்டிக்கலிஸ்டு, அராஜகவாதத் திரிபு குறித்து'' என்னும் தீர்மானத்தின் மூலம் இக்காங்கிரஸ், ''தொழிலாளர் எதிர்த்தரப்பின்'' கருத்துக்களை எவ்வழியிலும் பரப்புவது கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினருக்கு ஒவ்வாததாகும் என்று பறைசாற்றியது.—259.

71 ''ஜனநாயக மையவாதக்'' கோஷ்டி — ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) எட்டாவது காங்கிரஸ் (1919 மார்ச்) இக்கோஷ்டி முதன்முதல் வெளிவந்தது. 1920-21ல் தொழிற் சங்கங்களைப் பற்றிய விவாதம் நடைபெற்ற போது இது தனது கோஷ்டி கட்டும் கொள்கைத் திட்டத்தை வெளியிட்டது. ''ஜனநாயக மத்தியத்துவவாதிகள்'' சோவியத்துகளிலும் தொழிற் சங்கங்களிலும் கட்சியின் தலைமைப் பாத்திரத்தின் அவசியத்தை அங்கீகரிக்க மறுத்தனர், ஒற்றையாள் தலைமையையும் தொழில் நிலைய நிர்வாகத்தில் தனியாள் பொறுப்புடைமையையும் எதிர்த்தனர், ஒழுங்கமைப்புப் பிரச்சினைகளில் லெனின் வகுத்தளித்த கோட்பாடுகளை மதியாது ஒதுக்கினர், கோஷ்டிகளுக்கும் உட்குழுக்களுக்கும் சுதந்திரம் வேண்டுமெனக் கோரினர். கட்சியின் வெகுஜனங்களிடையே அவர்களுக்குச் செல்வாக்கு இருக்கவில்லை.

1923ல் இந்தக் கோஷ்டி சிதைந்து போயிற்று.—259.

72 க்ரோன்ஷ்தாத் எதிர்ப்புரட்சிக் கலகம் — சோவியத் ஆட்சியதிகாரத்தை எதிர்த்து வெள்ளைப் படையினரும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களும் மென்ஷிவிக்குகளும் அராஜகவாதிகளும் ஏகாதிபத்திய அரசுகளது கையாட்களும் ஏற்பாடு செய்த கலகம். 1921 பிப்ரவரி 28ல் இந்தக் கலகம் ஆரம்பமாயிற்று. வர்க்கப் பகைவர்கள் முதலாளித்துவத்தை மீட்டமைக்க வேண்டுமென்ற தமது விருப்பத்தை மூடி மறைக்கும் பொருட்டு

அவர்கள் இந்தக் கலகத்தில் புதிய போர்த்தந்திரத்தைக் கையாண்டனர். வெகுஜனங்களை ஏமாற்றும் நோக்கத்துடன் ''கம்யூனிஸ்டுகள் இல்லாத சோவியத்துகள்'' என்னும் முழக்கத்தை எழுப்பினர். சோவியத்துகளில் தலைமைப் பதவியிலிருந்து கம்யூனிஸ்டுகளை அகற்றிவிட்டு முதலாளித்துவச் சர்வாதிகாரத்தையும் முதலாளித்துவ அமைப்பையும் நிறுவத் திட்டமிட்டனர். இந்தக் கலகம் மார்ச் 18ல் அடக்கப்பட்டது.—260.

73 திஸ்குஸ்ஸியோன்னி லிஸ்தோக் (''விவாத இதழ்'') — ரு.க.கட்சி (போல்ஷிவிக்குகள்) மத்தியக் கமிட்டி காலக்கிரம வரையறையின்றி வெளியிட்ட இதழ். ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) ஒன்பதாவது மாநாட்டின் தீர்மானப்படி இது வெளியிடப்பட்டது. பத்தாவது காங்கிரசுக்கு முன்னதாய் இரண்டு இதழ்கள் வெளியாயின. பிற்பாடு விவாதங்களின் போதும் கட்சிக் காங்கிரசுகளுக்கு முன்பாகவும் இந்த இதழ் வெளியிடப்பட்டு வந்தது.—263.

74 இங்கு குறிக்கப்படுவது ''நமது கட்சியில் சின்டிக்கலிஸ்டு, அராஜகவாதத் திரிபு குறித்து'' என்னும் தீர்மானம்.—263.

75 காங்கிரசின் தீர்மானப்படி, ''கட்சி ஒற்றுமை குறித்து'' என்ற தீர்மானத்தின் ஏழாவது அம்சம் அப்போது வெளியிடப்படவில்லை. ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) பதின்மூன்ருவது மாநாட்டுத் தீர்மானப்படி 1924ல் இது வெளியிடப்பட்டது.—265.

76 ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) பத்தாவது அனைத்து ருஷ்ய மாநாடு 1921 மே 26-28ல் மாஸ்கோவில் நடைபெற்றது. புதிய பொருளாதாரக் கொள்கையே நிகழ்ச்சி நிரலில் இருந்த பிரதான பிரச்சினை. மாநாட்டு வேலைகள் நேரடியாக லெனின் தலைமையில் நடந்தேறின. மாநாட்டை அவர் திறந்து வைத்தார், நிகழ்ச்சி நிரல் பிரச்சினை குறித்துப் பேசினுர், பண்ட வடிவ வரி குறித்து உரையாற்றினுர், இந்தப் பிரச்சினை பற்றிய முடிவுரையையும் மாநாட்டு முடிவுரையையும் நிகழ்த்தினுர். ''பொருளாதாரக் கொள்கை குறித்த'' மாநாட்டுத் தீர்மானத்தைப் பற்றிய விவாதத்தின் போதும் அவர் பன்முறை பேசினுர். ''கட்சி, அரசாங்க ஊழியர்கள் எல்லோரும் புதிய பொருளாதாரக் கொள்கையை முழு அளவுக்குக் கற்றுத் தேர்ந்து இம்மியும்

பிசகாது அதைச் செயல்படுத்தி நிறைவேற்றுவதே இத்தருணத்திய அடிப்படையான அரசியல் பணி'' என்று இந்தத் தீர்மானத்தில் வலியுறுத்தப் பட்டது. —266.

77 **புதிய பொருளாதாரக் கொள்கை** — முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்கு மாறிச் செல்வதற்குரிய கட்டத்தின் போது பாட்டாளி வர்க்க அரசு கடைப்பிடித்த பொருளாதாரக் கொள்கை. 1918ஆம் ஆண்டு வசந்தத்தின் போதே லெனின் இக்கொள்கையின் கோட்பாடுகளை வகுத்தளித்திருந்தார். 1918-1920ஆம் ஆண்டுகளிலான அந்நியத் தலையீடும் உள்நாட்டுப் போரும் இந்தக் கொள்கை நடைமுறைக்கு வர முடியாதபடி தடுத்தன. அந்நியத் தலையீடும் உள்நாட்டுப் போரும் நடைபெற்ற காலத்தில் கடைப்பிடிக்கப்பட்ட ''போர்க் காலக் கம்யூனிசம்'' என்பதான கொள்கையிலிருந்து வேறுபடுத்துவதற்காக இது ''புதிய'' கொள்கை என்றழைக்கப்பட்டது. போர்க் கால நிலைமைகளின் நிர்ப்பந்தம் காரணமாய் அவசியமாகியிருந்த ''போர்க் காலக் கம்யூனிசக்'' கொள்கையின் தனி இயல்புகள் என்னவெனில், உற்பத்தியையும் வினியோகத்தையும் அது வெகுவாய் மையப்படுத்தியிருந்தது, வாணிபச் சுதந்திரத்துக்குத் தடை விதித்திருந்தது, விவசாயிகள் உபரியாகத் தம்மிடமிருந்த விளைபொருள்கள் யாவற்றையும் அரசிடம் தந்துவிட வேண்டுமென விதித்தது (உபரி விளைபொருள் வசூலிப்பு).

அந்நிய இராணுவத் தலையீடும் உள்நாட்டுப் போரும் முடிவடைந்ததும் உபரி விளைபொருள் வசூலிப்பு கைவிடப்பட்டுப் பண்ட வடிவ வரி நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. விவசாயிகள் தம்மிடமிருந்த உபரி விளைபொருள்களைத் தடையின்றி பட்டுவாடா செய்வதற்கும் சந்தையில் விற்பதற்கும் அவசியமான செய்பொருள்களைச் சந்தையின் மூலம் பெறுவதற்கும் இவ்விதம் வகை செய்யப்பட்டது.

புதிய பொருளாதாரக் கொள்கை குறிப்பிட்ட சிறிது காலத்துக்கு, குறிப்பிட்ட வரம்புகளுக்கு உட்பட்டு முதலாளித்துவக் கூறுகள் இருப்பதற்கு அனுமதித்தது. ஆனால் அதே போது கேந்திரப் பொருளாதார நிலைகள் பாட்டாளி வர்க்க அரசின் கையிலேதான் இருந்தன. நாட்டின் உற்பத்தி சக்திகளை வளரச் செய்வதும்,

விவசாயத்தை ஓங்கச் செய்வதும், சோஷலிசத்துக்கு மாறிச் செல்வதற்கான பொருளாதார அடிக் கற்களை நிறுவுவதும்தான் புதிய பொருளாதாரக் கொள்கையின் நோக்கம்.—266.

78 **கம்யூனிஸ்டு அகிலத்தின் மூன்றுவது காங்கிரஸ்** *1921 ஜூன் 22 முதல் ஜூலை 2 வரை மாஸ்கோவில் நடைபெற்றது. 52 நாடுகளிலிருந்து 103 நிறுவனங்களைச் சேர்ந்த 605 பிரதிநிதிகள் இதில் கலந்து கொண்டனர். ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) பிரதிநிதிக் குழுவுக்கு லெனின் தலைமை தாங்கினுர். காங்கிரசுக்கான தயாரிப்புகளும் பிறகு காங்கிரஸ் பணிகளும் அவரது நெறியாண்மையின் கீழ் நடந்தேறின. அவர் காங்கிரசின் கவுரவத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) போர்த்தந்திரம் குறித்து உரை நிகழ்த்தினுர், பல பிரச்சினைகள் குறித்தும் பேசினுர். காங்கிரசின் பிரதான தீர்மானங்கள் யாவும் அவரது உதவியுடன் வரையப்பட்டன.*

*கம்யூனிஸ்டுக் கட்சிகளுடைய போர்த்தந்திரத்துக்கு அடித்தளம் அமைத்துத் தந்த காங்கிரசாக உலகக் கம்யூனிஸ்டு இயக்க வரலாற்றில் இந்தக் காங்கிரஸ் பெயர் பெற்றுள்ளது. மக்கள் பெருந் திரளினரைப் பாட்டாளி வர்க்கத்தின் தரப்புக்கு வருமாறு ஈர்த்திடல், தொழிலாளி வர்க்கத்தின் ஒற்றுமையைச் சாதித்தல், கூட்டு முன்னணிப் போர்த்தந்திரத்தைச் செயல்படுத்தல் ஆகிய பணிகளை இந்தக் காங்கிரஸ் வகுத்தளித்தது.—269.*

79 **இரண்டரையாவது அல்லது வியன்ன அகிலம்** *(அதிகார பூர்வமான பெயர்: ''சோஷலிஸ்டுக் கட்சிகளது சர்வதேசச் சங்கம்'')—1921 பிப்ரவரியில் வியன்னவில் கூடிய மாநாட்டில் அமைக்கப்பட்டது. இதன் தலைவர்கள் இரண்டாவது அகிலத்தைக் கண்டித்து விமர்சனம் செய்தனர், ஆனல் பாட்டாளி வர்க்க இயக்கத்தின் எல்லாப் பிரதான பிரச்சினைகளிலும் சந்தர்ப்பவாத, பிளவு படுத்தும் கொள்கையைப் பின்பற்றினர், தொழிலாளிப் பெருந் திரளினரிடம் கம்யூனிஸ்டுகளுக்கு வளர்ந்து பெருகிய செல்வாக்கை மட்டுப்படுத்துவதற்காகத் தமது நிறுவனத்தைப் பயன்படுத்த முயன்று வந்தனர்.*

*1923 மே மாதத்தில் இரண்டாவது, இரண்டரை யாவது அகிலங்கள் சோஷலிஸ்டுத் தொழிலாளர் அகிலம் என்பதான ஒரே நிறுவனமாக இணைந்தன.—271.*

80 *பஞ்சாபில் ஒரு முக்கிய தொழில் மையமான அமிர்தசரசில் உழைப்பாளி மக்கள் பல்லாயிரக் கணக்கில் குழுமியிருந்த பொதுக் கூட்டத்தின் மீது பிரிட்டிஷ் படையினர் துப்பாக்கிப் பிரயோகம் நடத்தினர். காலனியாதிக்கவாதிகள் கட்டவிழ்த்து விட்டிருந்த பயங்கர அடக்குமுறைக்குக் கண்டனம் தெரிவிப்பதற்காக இந்தக் கூட்டம் கூட்டப்பட்டிருந்தது. ஏறத்தாழ ஆயிரம் பேர் இந்தத் துப்பாக்கிப் பிரயோகத்தால் கொல்லப் பட்டார்கள், சுமார் இரண்டாயிரம் பேர் காயமடைந்தார்கள். அமிர்தசரஸ் படுகொலையைத் தொடர்ந்து பஞ்சாபில் மக்கள் கொதிப்புற்று கிளர்ந்தெழுந்தனர், இந்தியாவின் பிற பகுதிகளுக்கும் கலவரங்கள் பரவின. பிரிட்டிஷ் காலனியாதிக்கவாதிகள் பஞ்சாப் எழுச்சியை இரக்கமற்ற கொடிய முறையில் அடக்கினர்.—272.*

81 *இங்கு குறிப்பிடப்படும் மின் பொறியாளர்களது எட்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் மாஸ்கோவில் 1921 அக்டோபர் 1 முதல் 9 வரை நடைபெற்றது. தலைமையான விஞ்ஞானிகளும் தொழில் நிர்வாகிகளும் பிற நிபுணர்களும் மற்றும் மின் பொறியியல் ஆலைகளது பிரதிநிதிகள் மிகப் பலரும் இதில் கலந்து கொண்டனர். ரு.சோ.சோ.கூ. குடியரசின் மின்னுக்கத்துக்கான பொதுத் திட்டம் பற்றிய தீர்மானம் இந்தக் காங்கிரசால் ஏற்கப்பட்டது. ருஷ்யாவின் மின்னுக்கத்துக்கான அரசுக் கமிஷனின் கொயெல்ரோ திட்டம் சோவியத்துகளது எட்டாவது காங்கிரசால் ஏற்கப்பட்ட போதும் அந்தத் திட்டம் செயல்படுத்தப்பட்ட போதும் மின் பொறியாளர்களது எட்டாவது காங்கிரசின் சிபார்சுகள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டன.—279.*

82 பிராவ்தா *(''உண்மை'')—சட்டபூர்வமான போல்ஷிவிக்கு நாளேடு. இதன் முதல் இதழ் 1912 ஏப்ரல் 22ல் (மே 5) பீட்டர்ஸ்பர்கில் வெளிவந்தது. இந்த நாளேட்டுக்கு வேண்டிய நிதி தொழிலாளர்களிடமிருந்து திரட்டப் பட்டது. நாள் தோறும் 40,000 பிரதிகள் வினியோகமாயின, சில இதழ்கள் 60,000 பிரதிகள் வரை வினியோகமாயின. இந்த நாளேட்டின் அன்றுட*

வேலைகளுக்கு ஏற்பாடு செய்ததானது பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்களது சகாப்தகர சாதனையாகுமென லெனின் குறிப்பிட்டார். கட்சியைப் **பிராவ்தா** நாளேடு வெகு ஜனங்களுடன் இடையறாத தொடர்பு கொள்ளச் செய்தது. தொழிலாளர் நிருபர்களது ஒரு பெரும் படை இந்த நாளேட்டுக்காகச் செயலாற்றி வந்தது. லெனின் **பிராவ்தா**வை நெறியாண்மை புரிந்து வந்தார். அனேகமாய் நாள்தோறும் இதற்கு எழுதினார், ஆசிரியர் குழுவுக்கு வழிகாட்டினார், இந்நாளேட்டைப் போர்க் குணம் படைத்த புரட்சி மனோபாவம் கொண்ட ஏடாய் அதை ஆக்கினார். கட்சியின் ஒழுங்கமைப்பு வேலைகளில் ஒரு கணிச பகுதி **பிராவ்தா** மூலம் செய்யப் பட்டது.

போலீசாரின் விடாப்பிடியான தாக்குதலுக்குப் **பிராவ்தா** இலக்காகி வந்தது. இது 1914 ஜூலை 8ல் (21ல்) தடை விதிக்கப்பட்டு மூடப்பட்டது. 1917ஆம் ஆண்டு பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பிற்பாடுதான் திரும்பவும் வெளிவர ஆரம்பித்தது. முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தின் அடக்கு முறையின் காரணமாய், பன்முறை அது தனது பெயரை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. 1917 அக்டோபர் 27 (நவம்பர் 9) முதலாய் திரும்பவும் அது தனது பழைய பெயரில் வெளிவந்து கொண்டிருக்கிறது.—282.

83 **பஸ்லேத்னியெ நோவஸ்தி** *(''கடைசிச் செய்தி'')* — நாட்டை விட்டு வெளியேறிய வெள்ளைப் படையினரது நாளேடு, எதிர்ப்புரட்சிக் கட்சியான அரசியல் சட்ட-ஜனநாயகக் கட்சியின் பத்திரிகை. 1920 ஏப்ரல் முதல் 1940 ஜூலை வரை பாரிசில் வெளிவந்தது.—282.

84 **கம்யூனிஸ்திச்செஸ்கி துருத்** *(''கம்யூனிஸ்டு உழைப்பு'')*— ரு.க.கட்சியின் (போல்ஷிவிக்குகள்) மாஸ்கோ கமிட்டியாலும் தொழிலாளர், விவசாயிகளது மாஸ்கோ சோவியத்தாலும் மாஸ்கோவில் வெளியிடப்படும் நாளேடு. 1920 மார்ச் 18 முதல் வந்து கொண்டிருக்கிறது, தற்போது இது **மாஸ்கோவ்ஸ்காய பிராவ்தா** என்கிற பெயரில் வெளிவருகிறது.—283.

85 **அவுகியஸ் லாயங்கள்** — கிரேக்கப் புராணக் கதையின் படி எலீஸ் மன்னனான அவுகியசின் குதிரை லாயங்கள்

*மிகப் பல ஆண்டுகளாகச் சுத்தம் செய்யப்படாமல் கிடந்தபின் முடிவில் ஹெர்க்குலஸ் வீரனால் சடுதியில் சுத்தம் செய்யப்பட்டது. குப்பை சேர்ந்து அழுக்கடைந்து விட்ட எதையுமோ, கவனியாது விடப்பட்டுக் கெட்டுப் போன காரியத்தையோ குறிக்கும் தொடர்.—286.*

86 ஹாம்லெட் — *இதே பெயரிலான ஷேக்ஸ்பியர் துன்பியல் நாடகத்தின் தலைமைப் பாத்திரம்.—287.*

87 *எங்கெல்ஸ்,* நாடு கடந்து வாழ்பவரின் எழுத்துக்கள்.—*304.*

88 *''போர்க்குணம் கொண்ட பொருள்முதல்வாதத்தின் முக்கியத்துவம் குறித்து'' என்னும் கட்டுரை, பதினொன் ருவது கட்சிக் காங்கிரசுக்குமுன் (மாஸ்கோவில் 1922 மார்ச் 27—ஏப்ரல் 2ல் நடைபெற்றது) வெளிவரு வதற்காகத் திட்டமிடப்பட்டிருந்த* பத் ஸ்னமினெம் மார்க்சிஸ்மா *இதழ் 3க்காக எழுதப்பட்டதாகும்.*

பத் ஸ்னமினெம் மார்க்சிஸ்மா *(''மார்க்சியக் கொடியின் கீழ்'') — தத்துவவியல், சமூக-பொருளாதார மாத சஞ்சிகை. 1922 ஜனவரி முதல் 1944 ஜூன் வரை மாஸ்கோவில் வெளிவந்தது (1933-35ல் இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை வெளிவந்தது).—314.*

89 மக்கள்-சோஷலிஸ்டுகள் — *துருதொவிக்கு மக்கள்-சோஷலிஸ்டுக் கட்சி என்கிற குட்டிமுதலாளித்துவக் கட்சியின் உறுப்பினர்கள். சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் வலதுசாரியிடமிருந்து 1906ல் கிளைத்த கட்சி இது. மக்கள்-சோஷலிஸ்டுகள் காடேட்டுகளுடன் கூட்டணி வேண்டும் என்றனர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிக்குப் பிற்பாடு இவர்கள் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தை முனைப்புடன் ஆதரித்தனர், அதில் பதவிகள் வகித்தனர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு சோவியத் ஆட்சியதிகாரத்துக்கு எதிரான எதிர்ப்புரட்சி சதிகளிலும் ஆயுதமேந்திய நடவடிக்கைகளிலும் பங்கெடுத்துக் கொண்டனர்.—315.*

90 *பி. எங்கெல்ஸ் எழுதிய* நாடு கடந்து வாழ்பவரின் எழுத்துக்கள் *இங்கு குறிப்பிடப்படுகிறது.—318.*

91 *இந்தத் தொடரை மி.யெ.சால்திக்கோவ்-ஷேத்ரீனின்* ஒரு நகரத்தின் கதை *என்பதிலிருந்து லெனின் எடுத் தாளுகிறார்.—327.*

92 எக்கனமீஸ்ட் (''பொருளியலாளன்'')— ருஷ்யத் தொழில் நுட்பக் கழகத்தின் தொழில் துறை, பொருளாதாரப் பிரிவு வெளியிட்டு வந்த பத்திரிகை. சோவியத் ஆட்சியதிகாரத்துக்குப் பகைமையான முதலாளித்துவத் தொழில்நுட்ப அறிவுத்துறையினருடன் கூட முன்னாள் தொழிலதிபர்களும் இந்தக் கழகத்தில் உறுப்பினர் களாய் இருந்தனர். 1921 டிசம்பரிலிருந்து 1922 ஜூன் வரை பெத்ரொகிராதில் இப்பத்திரிகை வெளியாயிற்று.—327.

93 இங்கு குறிக்கப்படுவது 1903 ஜூலை-ஆகஸ்டில் நடை பெற்ற ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழில் கட்சி யின் இரண்டாவது காங்கிரஸ். பிரஸ்ஸல்சில் ஆரம்ப மான இந்தக் காங்கிரஸ், போலீஸ் அடக்கு முறையின் காரணமாய் அங்கிருந்து லண்டனுக்குச் சென்று தனது வேலைகளைத் தொடர்ந்தது.—335.

94 தொழிலாளர்கள், படையாட்கள் பிரதிநிதிகளது சோவியத்து களின் இரண்டாவது அனைத்து ருஷ்யக் காங்கிரஸ் — 1917 அக்டோபர் 25-26ல் (நவம்பர் 7-8ல்) நடை பெற்றது. குளிர்கால அரண்மனை பிடிக்கப்பட்டதை யும் இடைக்கால அரசாங்கத்தினர் கைது செய்யப் பட்டதையும் பற்றிய உரையைக் கேட்டது. லெனினால் வரையப்பெற்ற ''தொழிலாளர்கள், படையாட்கள், விவசாயிகளுக்கு'' என்ற வேண்டுகோளை இது அங்கீ கரித்து வெளியிட்டது. தொழிலாளர்கள், படையாட் கள், விவசாயிகள் பிரதிநிதிகளது சோவியத்துகளுக்கு ஆட்சியதிகாரம் மாற்றப்பட்டுவிட்டதை இந்த வேண்டு கோள் பிரகடனம் செய்தது.—336.

95 சார்ட்டிசம்—பிரிட்டிஷ் தொழிலாளர்களது வெகுஜனப் புரட்சி இயக்கம். தொழிலாளர்களது பொருளாதார இன்னல்கள் காரணமாகவும், அரசியல் உரிமைகளை முதலாளித்துவ வர்க்கத்தாருக்கு மட்டும் விரிவுபடுத்திய 1832ஆம் ஆண்டு நாடாளுமன்றச் சீர்திருத்தம் குறித்து எழுந்த அதிருப்தியின் காரணமாகவும் உதித்த இயக்கம் இது. 1830ஆம் ஆண்டுகளின் இறுதி யில் மாபெரும் பொதுக் கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள் ஆரம்பமான இந்த இயக்கம் சிற்சில இடைவெளிகள் விட்டு 1850ஆம் ஆண்டுகளின் ஆரம்பப் பகுதி வரை நடைபெற்றது.

*ஆங்கிலேய அரசியல் வரலாற்றின் மீதும் சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தினுடைய வளர்ச்சியின்மீதும் சார்ட்டிஸ்டுகள் பெருஞ் செல்வாக்கு செலுத்தினர். ''விரிவான, மெய்யாகவே வெகுஜனத் தன்மையிலான, அரசியல் வழியில் ஒழுங்கமைந்த முதலாவது பாட்டாளி வர்க்கத்தின் புரட்சி இயக்கம்'' என்று சார்ட்டிஸ்டு இயக்கத்தை லெனின் குண நிர்ணயம் செய்தார். —337.*

96 **ஜினேவா மாநாடு**—*1922 ஏப்ரல் 10முதல் மே 19 வரை நடைபெற்ற பொருளாதார, நிதித் துறை மாநாடு. 29 நாடுகள் இதில் கலந்து கொண்டன.*

*சமாதானத்தையும் தேசங்களிடையே பொருளாதார ஒத்துழைப்பையும் வலிமை பெறச் செய்தலையும், சோவியத் ருஷ்யாவுக்கும் முதலாளித்துவ நாடுகளுக்கும் இடையே காரிய முறையிலான வாணிப உறவுகளை நிறுவிக் கொள்ளுதலையும் நோக்கமாகக் கொண்ட விரிவானதொரு வேலைத்திட்டத்தை சோவியத் பிரதிநிதிக் குழு இம்மாநாட்டில் முன்மொழிந்தது. பொதுவான படைக்கலக் குறைப்பானது இந்த வேலைத்திட்டத்தின் முக்கிய கூறுகளில் ஒன்றாகும்.*

*சோவியத் ருஷ்யாவின் பொருளாதார இன்னல்களைப் பயன்படுத்திக் கொண்டு அதன் மீது மிகக் கடுமையான நிபந்தனைகளுடன் கூடிய ஓர் உடன்பாட்டைத் திணிப்பதற்கு ஏகாதிபத்திய அரசுகள் இந்த மாநாட்டில் எல்லா வழிகளிலும் முயன்று பார்த்தன. யுத்த முற்காலக் கடன்களும் அடங்கலாய் ஜார் காலத்தியக் கடன்களை எல்லாம் திருப்பித் தர வேண்டும் என்றும், நாட்டுடைமையாக்கப்பட்ட தொழில் நிலையங்கள் அவற்றின் முன்னாள் உடைமையாளர்களாகிய அந்நிய முதலாளிகளிடம் திருப்பி ஒப்படைக்கப்பட வேண்டும் என்றும் இன்ன பலவாறும் அவை கோரின.*

*கட்சியின் மத்தியக் கமிட்டி தாக்கீதுகளுக்கும் லெனினது நெறிமுறை ஆணைகளுக்கும் இணங்க சோவியத் பிரதிநிதிக் குழு ஏகாதிபத்தியவாதிகளது இந்த ஆணவக் கோரிக்கைகளை முற்றாக நிராகரித்து, சோவியத் அரசின் அரசுரிமையை மீறுவதற்கான அவர்களது முயற்சிகளை எதிர்த்தடித்தது.*

*முதலாளித்துவ நாடுகளுடன் சோவியத் ருஷ்யாவின் உறவுகளைச் சுமுகமாக்குவதில், ஆண்டான்ட் அரசுகளது*

*மேற்கூறிய பகை நிலேயின் காரணமாய் இந்த மாநாடு நேரடியான நடைமுறைப் பலனளிக்க முடியவில்லே.—339.*

97 *இங்கு குறிக்கப்படுவது 1922 ஏப்ரல் 16ல் ரப்பால்லோவில் (ஜிஞேவாவுக்கு அருகில்) சோவியத் ருஷ்யாவுக்கும் ஜெர்மனிக்கும் இடையே கையெழுத்தாகிய உடன்படிக்கை. ஜிஞேவா மாநாடு நடைபெற்று போது இந்த உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது.*

*இதன்படி இரு நாடுகளும் முதல் உலகப் போரின் விளேவாகத் தமக்கிடையே எழுந்த கோரிக்கைகளேக் கைவிட்டன. சோவியத் அரசாங்கத்தால் நாட்டுடைமையாக்கப்பட்ட ஜெர்மன் குடியினரது தொழில் நிலேயங்கள் திருப்பித் தரப்பட வேண்டுமென்ற கோரிக்கையை—பிற அரசுகளது இம்மாதிரியான கோரிக்கைகளுக்கு சோவியத் அரசாங்கம் இணங்காமல் இருக்கும் பட்சத்தில்—ஜெர்மன் அரசாங்கம் கைவிட உடன்பட்டது. அதே போது இரு நாடுகளும் தம்மிடையே அரசுறவுகளே நிறுவிக் கொண்டன, பொருளாதார உறவுகளில் அதிகச் சலுகைக்குரிய நாட்டுக்கான நிலேயை ஒன்றுக்கொன்று அளித்துக் கொண்டன.*

*ரப்பால்லோ ஒப்பந்தம் கையெழுத்தானது சோவியத் அரசுறவுத் துறைக்குக் கிடைத்த முக்கிய வெற்றியாகும். ஏனெனில் இது சோவியத் ருஷ்யாவின் சர்வதேசிய நிலேயை உறுதி பெறச் செய்தது, ஐக்கிய சோவியத்-எதிர்ப்பு அணியை அமைத்திடுவதற்கான முயற்சிகளேச் சீர்குலேயச் செய்தது.—339.*

98 *இங்கு குறிக்கப்படுவது 1922 ஜனவரி 6-13ல் பிரான்சில் கானெ என்னுமிடத்தில் நடைபெற்ற ஆன்டான்ட் நாடுகளது உச்ச அவை மாநாட்டில் 1922 ஜனவரி 6ல் ஏற்கப்பட்ட தீர்மானத்தின் முதல் பாரா. ஜிஞேவாவில் சர்வதேசப் பொருளாதார மாநாட்டைக் கூட்டுவதற்கான தீர்மானம் இது. திட்டமிடப்பட்ட மாநாடு பயன்தரத் தக்கதாய் அமைவதற்கு ஆன்டான்ட் நாடுகளது உச்ச அவையின் கருத்துப்படி அவசியம் ஏற்கப்பட வேண்டிய நிபந்தனேகள் இந்தத் தீர்மானத்தில் அடங்கியிருந்தன. தீர்மானத்தின் முதல் பாராவில் குறிக்கப்பட்ட இந்த நிபந்தனேகளாவன: ''எந்த ஒரு தேசமும் தனது உள்நாட்டுச் சொத்துடைமை அமைப்பு, பொருளாதாரம், அரசாங்கம் ஆகியவற்றை*

ஒழுங்கமைத்துக் கொள்வதற்கான கோட்பாடுகளைப் பிற தேசங்களுக்குக் கட்டளையிடுவதற்கு உரிமை கொண்டாடக் கூடாது. இது சம்பந்தமாகத் தனக்குரிய அமைப்பை தானே தெரிந்தெடுத்துக் கொள்வது ஒவ்வொரு தேசத்துக்கும் உரித்தான உரிமையாகும்''.—340.

99 மாஸ்கோ சோவியத்தின் முழுநிறைக் கூட்டம், மாஸ்கோவின் எல்லா வட்டார சோவியத்துகளின் முழுநிறைக் கூட்டங்களுடன் சேர்ந்து பொல்ஷோய் நாடக அரங்கில் நடைபெற்றது. நகர, வட்டார சோவியத்துகளுக்குப் பிரதிநிதிகளின் மறு தேர்தல் நடைபெறுமுன் இந்தக் கூட்டம் மாஸ்கோ சோவியத்தின் தலைமை குழு, செயற் குழு, ஆகியவற்றின் செயற்பாடுகளைப் பற்றிய உரையைக் கேட்டது.

லெனின் பொது மேடையில் பேசியது இதுவே கடைசித் தடவை.—342.

100 லெனின் இங்கு குறிப்பிடுவது தொலைக் கிழக்குக் குடியரசு ருஷ்யாவின் சோவியத் சோஷலிசக் கூட்டாட்சிக் குடியரசுடன் திரும்பவும் ஒன்றிணைவது பற்றிய தீர்மானம். தொலைக் கிழக்குக் குடியரசின் மக்கள் அவையில் 1922 நவம்பர் 14ல் இந்தத் தீர்மானம் நிறைவேறியது. மறு தினத்தன்று இத்தீர்மானம் வெளியிடப்பட்டது.—343.

101 ஜான் லெஸ்லி உர்கார்ட்டுடன் ஒப்பந்தம் முடித்துக் கொள்வது குறித்து விவாதக் கட்டுரைகளின் தொடர் 1922 அக்டோபர் இறுதியிலிருந்து நவம்பர் ஆரம்பப் பகுதி வரை பிராவ்தாவில் வெளிவந்தது.

பிரிட்டிஷ் தொழிலதிபரும் நிதி முதலாளியுமாகிய உர்கார்ட்டுக்கு சுரங்கத் தொழிற் சலுகை தருவது குறித்து 1921-1922ல் பேச்சுகள் நடைபெற்றன. பூர்வாங்க ஒப்பந்தம் ஒன்று தயாரிக்கப்பட்டது. அது கையெழுத்தான பின் ஒரு மாதத்துக்குள் மக்கள் கமிசாரகத்தால் அங்கீகரிக்கப்படுமாயின் செயலுக்கு வர வேண்டியது. லெனின் இந்த ஒப்பந்தத்தைப் பரிசீலித்த போது, தெளிவாகவே இது சோவியத் அரசுக்குப் பாதகமானதாக இருக்கக் கண்டார்; இது அங்கீகரிக்கப்படுவதை அவர் எதிர்த்தார்.

இந்தப் பூர்வாங்க ஒப்பந்தம் ரு.க. கட்சி (போல்ஷிவிக்குகள்) மத்தியக் கமிட்டியின் முழுநிறைக் கூட்டத்

*தால் 1922 அக்டோபர் 5லும் மக்கள் கமிசார் அவை யால் அக்டோபர் 6லும் நிராகரிக்கப்பட்டது.—350.*

102 *துருக்கியில் ஆங்கிலோ-கிரேக்கத் தலையீடு தோல்வியுற் றது சம்பந்தமாய் சமீபக் கிழக்கு நிலைமை குறித்து விவாதிப்பதற்காக பிரிட்டனும் பிரான்சும் இத்தாலியும் கூட்டிய லொசான் மாநாடு இங்கு குறிக்கப்படுகிறது. டார்டனல்ஸ் ஜலசந்தி பிரச்சினை பற்றி விவாதிப்பதற் காக மட்டும் சோவியத் ருஷ்யா இந்த மாநாட்டில் கலந்து கொள்ள அனுமதிக்கப்படும் என்று ஏகாதி பத்திய அரசுகள் அறிவித்தன.—351.*

103 காங்கிரசுக்குக் கடிதம்—*1922 டிசம்பர் 23, 24, 25, 26லும், 1923 ஜனவரி 4லும் லெனின் வாய்ப்பட கூற எழுதிக் கொள்ளப்பட்ட குறிப்புகள் இதில் அடங்கி யுள்ளன.*

*டிசம்பர் 23ல் எழுதப்பட்ட குறிப்புகளில் லெனின் தெரிவிக்கும் ஆலோசனைகளை, ''தொழிலாளர், விவசாயி களது மேற்பார்வைத் துறையை எப்படி நலம் திருத்தி யமைக்க வேண்டும்'', ''சொற்பமே ஆயினும் சிறப் பானதே நன்று'' என்னும் கட்டுரைகளில் அவர் மேலும் வளர்த்திடுகிறார். ஒழுங்கமைப்புப் பிரச்சினை குறித்து ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) பன்னிரண்டாவது காங்கிரசுக்காகக் கட்சியின் மத்தியக் கமிட்டி ஏற்ற தீர்மானத்துக்கு இந்த ஆலோசனைகள் அடிப்படையாகப் பயன்பட்டன.—357.*

104 ரூஸ்கயா மீசில் *(''ருஷ்யச் சிந்தனை'')—பி.பெ. ஸ்துரூவே வை ஆசிரியராகக் கொண்டு 1922ல் பிராகில் வெளிவந்த ஏடு.—359.*

105 *1917 அக்டோபர் 10லும் (23), 16லும் (29) நடை பெற்ற கட்சி மத்தியக் கமிட்டி அமர்வுகளில் கி.எ. ஸினோவியேவும், லெ.ப. காமெனெவும் வெளிப்படுத்திக் கொண்ட சரணகதிப் போக்கு இங்கு குறிப்பிடப்படு கிறது. ஆயுதமேந்திய எழுச்சிக்கு உடனே தயார் செய்ய வேண்டுமென்ற லெனின் தீர்மானத்தை எதிர்த்து இவர்கள் பேசினர்கள், இதை எதிர்த்து வாக் களித்தார்கள். இவர்களது முயற்சி தீர்மானகரமாய் எதிர்த்தடிக்கப்பட்டதும், காமெனெவ் தம் சார்பிலும் ஸினோவியேவ் சார்பிலும் செயல்பட்டு, மென்ஷிவிக்கு* நோவயா ழீஸின் *செய்தியேட்டில் ஓர் அறிக்கையை*

வெளியிட்டார். போல்ஷிவிக்குகள் எழுச்சிக்குத் தயார் செய்ததாகவும், இது சாகசவாதச் சூதாட்டமாகு மெனத் தாம் (காமெனெவும் ஸிநோவியேவும்) கருது வதாகவும் இந்த அறிக்கை கூறியது. உடனடியான வருங்காலத்தில் எழுச்சிக்கு ஏற்பாடு செய்வதென்ற கட்சித் திட்டத்தை—மத்தியக் கமிட்டி தீர்மானத்தை —இவ்விதம் இவர்கள் கேரென்ஸ்கியிக்கு வெளிப்படுத் தினர்.—*360.*

106 ரு.சோ.சோ.கூ. குடியரசின் தொழிலாளர், விவசாயி களது மேற்பார்வைத் துறை மக்கள் கமிசாரகம்.—*364.*

107 கல்வித் துறை மக்கள் கமிசாரகத்தின் தொழில் பயிற்சி, பல்துறைத் தொழில் நுட்பப் பள்ளிகள், மேற்கல்வி நிலையங்களது மைய நிர்வாகம்.—*369.*

108 மென்ஷிவிக்காகிய நி. சுஹானவின் ''புரட்சி குறித்துக் குறிப்புகள்'' என்பதன் மூன்றாவது, நான்காவது புத்த கங்கள் சம்பந்தமாய் லெனின் ''நமது புரட்சி குறித்து'' என்னும் கட்டுரையை எழுதினார்.—*388.*

109 பாரிஸ் கம்யூனைது ''அளவு கடந்த நெகிழ்வு கொண்ட அரசியல் வடிவமாகுமென்று'' பிரான்சில் உள்நாட்டுப் போர் என்ற நூலில் கார்ல் மார்க்ஸ் செய்திடும் மதிப் பீட்டையும், 1871 ஏப்ரல் 12ல் லு. குகல்மனுக்கு எழுதிய கடிதத்தில் ''பாரிஸ்வாசிகளிடம் எத்தனை நெகிழ்வு'' என்று குறிப்பிட்டு மார்க்ஸ் மெச்சிப் புகழ் வதையும் லெனின் இங்கு குறிப்பிடுகிறார்.—*389.*

110 லெனின் இங்கு குறிப்பிடுவது 1856 ஏப்ரல் 16ல் எங்கெல்சுக்கு மார்க்ஸ் எழுதிய கடிதத்தில் உள்ள பின்வரும் வாசகம்: ''ஜெர்மனியில் முழு விவகாரமும் பாட்டாளி வர்க்கப் புரட்சிக்கு விவசாயிப் போரின் ஒரு வகை இரண்டாம் பதிப்பு ஒன்றின் ஆதரவு கிடைப் பதற்கான சாத்தியப்பாட்டையே பொறுத்திருக்கிறது. அப்போது யாவும் பிரமாதமாகவே நடந்தேறும்....'' —*389.*

111 இங்கு குறிக்கப்படுவது ''தொழிலாளர், விவசாயிகளது மேற்பார்வைத் துறையை எப்படி நாம் திருத்தியமைக்க வேண்டும் (பன்னிரண்டாவது கட்சிக் காங்கிரசுக்குச் சிபார்சு)'' என்னும் கட்டுரை.—*400.*

112 ரு.க. கட்சியின் (போல்ஷிவிக்குகள்) மத்தியக் கண் காணிப்புக் கமிஷன்.—401.

113 லெனின் இங்கு குறிப்பிடும் புத்தகங்களாவன: அ. எர்மான்ஸ்கி, ''உழைப்பு, உற்பத்தி இவற்றின் விஞ் ஞான ஒழுங்கமைப்பும் டெய்லர் முறையும்''; பி.மி. கேர்ஜென்த்செவ், ''ஒழுங்கமைப்புக் கோட்பாடுகள்'' (1922ல் கோசிஸ்தாத் பதிப்பகத்தால் வெளியிடப் பட்டது).—406.

114 வோல்ஹவ் நீர்மின் நிலையம். 1926 இறுதியில் இது இயங்க ஆரம்பித்தது.—420.

# பெயர்க் குறிப்பகராதி

அக்செல்ரோத் [Axelrod], பாவெல் பரீசவிச் *(1850-1928)— மென்ஷிவிக் தலைவர்களில் ஒருவர். 1900 ஆண்டு முதல் இஸ்க்ரா ஆசிரியர்க் குழுவின் உறுப்பினர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பிறகு முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்திற்கு ஆதரவு காட்டினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சியின்பால் பகைமையுடன் நடந்து கொண்டார்.—97.*

அஸ்குவித் [Asquith], ஹெர்பெர்ட் ஹென்றி *(1852-1928)— ஆங்கிலேய அரசியல், அரசாங்கப் பிரமுகர்களில் ஒருவர், மிதவாதக் கட்சியின் தலைவர்களில் ஒருவர்—114,122.*

அதோராத்ஸ்கி [Adoratsky], விளதீமிர் வீக்தரவிச் *(1878-1945) — மார்க்சியத்தின் சிறந்த பிரசாரகர்களில் ஒருவர், முதன்மையான சோவியத் விஞ்ஞானி.—283.*

ஆஸ்டர்லித்ஸ் [Austerlitz], ஃபிரீட்ரிஹ் *(1862-1931) — ஆஸ்திரிய சமூக-ஜனநாயகக் கட்சியின் தலைவர்களில் ஒருவர்.—24.*

ஆட்லெர் [Adler], ஃபிரீட்ரிஹ் *(1879-1960) — ஆஸ்திரிய வலதுசாரி சமூக-ஜனநாயகவாதி. — 10, 24, 36.*

இயோஃபெ [Joffe], அடொல்ப் அப்ரமொவிச் *(1883-1927)— முக்கிய சோவியத் அரசுறவுத் துறையாளர்.—339.*

இன்க்பின் [Inkpin], அல்பேர்ட் *(1884-1944) — பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கத்தில் முக்கிய பிரமுகர், பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியின் நிறுவகர்களில் ஒருவர் (1920).*

*1920 முதல் 1929 வரை பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியின் பொதுச் செயலாளர்.—117.*

**உர்கார்ட்** [Urquart], **ஜான் லெஸ்லி** *(1874-1933)—பிரிட்டிஷ் நிதி முதலீட்டாளர், தொழில் அதிபர், ''ருஷ்ய-ஆசிய இணைவுச் சங்கத்தின்'' தலைவர், ருஷ்யாவில் பெரிய சுரங்கத் தொழில் நிலையங்களின் உடைமையாளர். 1921-22ல் சோவியத் அரசாங்கத்துடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினர், தமது பழைய தொழில் நிலையங்களைச் சலுகைகளின் வடிவில் திரும்பவும் பெறுவதற்காக முயற்சி செய்தார்.—350, 353.*

**எங்கெல்ஸ்** [Engels], **பிரெடெரிக்** *(1820-1895)—விஞ்ஞானக் கம்யூனிசத்தின் ஸ்தாபகர்களில் ஒருவர்; சர்வதேசப் பாட்டாளி வர்க்கத்தின் தலைவரும் ஆசானும், மார்க்சின் நண்பரும் போராட்டத் தோழரும் ஆவார்.—32, 46, 64, 88, 89, 96, 282-283, 301, 304, 318, 320.*

**எர்மான்ஸ்கி** [Yermansky], **அ. (கோகன், ஓசிப் அர்காதியெவிச்)** *(1866-1941) — சமூக-ஜனநாயகவாதி, மென்ஷிவிக்கு. 1921ல் மென்ஷிவிக்குக் கட்சியிலிருந்து வெளியேறி ஆராய்ச்சிப் பணிகளில் ஈடுபட்டு வந்தார்.—405.*

**எர்லெர்**—*லௌபென்பெர்கைப் பார்க்கவும்.*

**ஐன்ஷ்டைன்** [Einstein], **அல்பேர்த்** *(1879-1955)—மாபெரும் விஞ்ஞானி, பௌதிகவியலாளர்.—324.*

**ஒசின்ஸ்கி,** [Osinsky], **என். (ஒபலேன்ஸ்கி, வி.வி.)** *(1887-1938)—1907 முதல் போல்ஷிவிக் கட்சியின் உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின்னர் சோவியத்துகளின் பணிகளிலும் கட்சி வேலையிலும் தீவிரப் பங்கு எடுத்துக் கொண்டவர். 1918ல் ''இடதுசாரி கம்யூனிஸ்டு'' ஆனர். 1920-1921ல் ''ஜனநாயக மையவாதம்'' என்ற கட்சி விரோதக் கோஷ்டியில் ஊக்கமாகப் பணியாற்றியவர். 1923ல் திரோத்ஸ்கி எதிர்த் தரப்பில் சேர்ந்து கொண்டவர்.—266.*

**ஓல்டென்புர்க்** [Oldenburg], **எஸ். எஸ்.** *(மறைவு: 1940) — அரசியல் பார்வையாளர், பிராகில் 1922ல் வெளிவந்த வெள்ளைப் படையினரது* **ரூஸ்கயா மீசில்** *சஞ்சிகையில் முறையாக எழுதி வந்தவர்.—359.*

ஓவன் [Owen], ராபர்ட் *(1771-1858)—மாபெரும் ஆங்கிலேயக் கற்பனுவாத சோஷலிஸ்டு.—384.*

கர்னீலோவ் [Kornilov], லாவ்ர் கியோர்கியேவிச் *(1870-1918) ஜாரிஸ்டு ஜெனரல், முடியாட்சிவாதி. 1917 ஜூலை-ஆகஸ்டு மாதங்களில் ருஷ்யப் படைகள் எல்லாவற்றின் தலைவர். 1917 ஆகஸ்டு, இடைக்காலச் சர்க்காரைக் கவிழ்த்து ராணுவச் சர்வாதிகாரத்தை நிறுவுவதற்கான கலகத்திற்குத் தயாரிப்பு செய்தார். அக்கலகம் முறியடிக்கப்பட்டபின் கைது செய்யப்பட்டார். பிற்பாடு தோன் ஆற்றுப் பிரதேசத்துக்கு ஓடி, சோவியத் மக்களை எதிர்த்துப் போராடிய "தொண்டர் சேனை" என்ற வெண்படை ஒன்றை நிறுவி அதன் சேனுதிபதியானுர். எக்கதெரீனுதார் (இப்பொழுது கிராஸ்னெதார்) நகருக்கு அருகில் நடைபெற்ற போரில் கொல்லப்பட்டார்.—135.*

கலாஹர் [Gallacher], வில்லியம் *(1881-1965) — பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கத்தின் தலைவர்களில் ஒருவர்; கிரேட் பிரிட்டன் கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவர். 1943-56ல் கிரேட் பிரிட்டன் கம்யூனிஸ்டுக் கட்சி செயற் குழுவின் முதல்வர், 1956 முதல் கட்சியின் அவைத்தலைவர்.—109, 112, 114, 126.*

கல்ச்சாக் [Kolchak], அலெக்சாந்தர் வசீலியெவிச் *(1873-1920)—ஜார் காலத்தியக் கடற்படைத் தலைவர், முடியரசுவாதி; 1918-19ல் ருஷ்யாவில் எதிர்ப் புரட்சிக்குத் தலைமை தாங்கியோரில் ஒருவர், ஆன்டான்டின் கையாள். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு அமெரிக்க ஐக்கிய நாடு, ஆன்டான்ட் இவற்றின் உதவியுடன் ருஷ்யாவின் தலைமை அதிபராகத் தம்மைப் பிரகடனம் செய்து கொண்டு, உரால், சைபீரியா, தொலைக் கிழக்கு ஆகிய பிரதேசங்களில் முதலாளித்துவ வர்க்கத்தினர், நிலப்பிரபுக்கள் ஆகியோரின் இராணுவச் சர்வாதிகாரத்திற்குத் தலைமை தாங்கினுர். 1920இல் கல்ச்சாக் சேனை தோற்கடிக்கப்பட்டது, கல்ச்சாக் சுடப்பட்டார்.—40, 80, 230, 246, 312.*

காப் [Kapp], வோல்ஃப்கான்க் *(1858-1922) — ஜன்கர்கள் என்றழைக்கப்பட்ட ஜெர்மன் பெரு நிலப்பிரபுக்களின், ஏகாதிபத்திய இராணுவ ஆதிக்கத்தின் பிரதிநிதி. 1920 மார்ச்சில் இராணுவ-முடியாட்சிவாதிகளின் எதிர்ப்*

*புரட்சிக் கலகத்துக்குத் தலைமை தாங்கினர்.—135, 159, 162.*

காமெனெவ் [Kamenev, L.B.], லெவ் பரீசவிச் (ரோசென்ஃபெல்ட்) *(1883-1936)—1901 முதல் போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பிறகு சோஷலிசப் புரட்சியை நோக்கமாய்க் கொண்ட லெனினியக் கட்சிக் கொள்கையை எதிர்த்தார்.*

*அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பிற்பாடு மாஸ்கோ சோவியத்தின் தலைவர், மக்கள் கமிசார் அவையின் துணைத் தலைவர், மத்தியக் கமிட்டியின் அரசியல் குழு உறுப்பினர். லெனினியக் கட்சிக் கொள்கையை மீண்டும் மீண்டும் எதிர்த்து வந்தார். கட்சி-எதிர்ப்பு நடவடிக்கைகளுக்காகக் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார். —342, 360.*

காவுத்ஸ்கி [Kautsky], கார்ல் *(1854-1938)—ஜெர்மன் சமூக-ஜனநாயகம், இரண்டாவது அகிலம் இவற்றின் தலைவர்களில் ஒருவர். ஆரம்பத்தில் மார்க்சியவாதி, பிற்பாடு மார்க்சியத்துக்குத் துரோகம் புரிந்து ஓடுகாலியானவர். தொழிலாளர் இயக்கத்துக்கு மிகவும் ஆபத்தான சந்தர்ப்பவாதப் போக்காகத் தொழிலாளர் இயக்கத்துள் செயல்படும் மையவாதத்தின் (காவுத்ஸ்கிவாதத்தின்) சித்தாந்தத் தலைவர்.—11, 13, 24, 31, 96, 101, 106, 150, 160, 162, 289, 394.*

கிராசின் [Krasin], லியொனீத் பரீசவிச் *(1870-1926)—முக்கிய சோவியத் அரசுப் பிரமுகர். 1890ஆம் ஆண்டுகளிலிருந்து சமூக-ஜனநாயக இயக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டவர், போல்ஷிவிக்கு. 1919 முதல் அரசுறவுத் துறையாளராகச் செயலாற்றினர். 1922 முதல் அயல் வாணிப மக்கள் கமிசார் ஆனர்.—353.*

கிரிஸ்பின் [Crispien], ஆர்த்தூர் *(1875-1946)—ஜெர்மன் சமூக-ஜனநாயகத் தலைவர்களில் ஒருவர்; பத்திரிகையாளர். 1917-22ல் ஜெர்மன் சுயேச்சை சமூக-ஜனநாயகக் கட்சியின் வலதுசாரிப் பிரிவிற்குத் தலைவராய் இருந்தார். 1920ல் ''சுயேச்சையாளர்'' கட்சியின் பிரதிநிதிக் குழுவில் ஒருவராய் கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசுக்கு வந்தார். ஜெர்மனிக்குத் திரும்பியபின் கம்யூனிஸ்டு அகிலத்தில் இக்கட்சி சேர்ந்து கொண்டதை*

எதிர்த்துப் பிரசாரம் செய்தார்.—31,101,160,161,162.

கிளைனஸ் [Clynes], ஜான் ராபர்ட் (1869-1949)—ஆங்கிலேய அரசியல்வாதி, தொழிற் கட்சியின் தலைவர்களில் ஒருவர்.—110, 113.

குவெல்ச் [Quelch], தாமஸ் (1886-1954)—ஆங்கிலேய சோஷலிஸ்டு, பிறகு கம்யூனிஸ்டானவர்; தொழிற்சங்கத் தலைவர், கட்டுரையாளர். 1919 முதலாய், பிரிட்டனில் கம்யூனிஸ்டுக் கட்சி அமைக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்தினர். கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசில் கலந்து கொண்டார். 1920ல் பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்து கொண்டார், 1923-25ல் அதன் மத்தியக் கமிட்டி உறுப்பினராய் இருந்தார்.—206.

கெட்டு [Guesde], ழூல் (பசில், மத்தியே) (1845-1922)—பிரான்சில் சோஷலிச இயக்கம், இரண்டாவது அகிலம் ஆகியவற்றின் ஸ்தாபகர்களிலும் தலைவர்களிலும் ஒருவர். உலக ஏகாதிபத்திய யுத்தம் ஆரம்பமானதும் சமூக-தேசியவெறிப் போக்கைப் பின்பற்றி பிரான்சின் முதலாளித்துவ அரசாங்கத்தில் சேர்ந்தார்.—89, 151.

கேரென்ஸ்கி [Kerensky], அலெக்சாந்தர் ஃபியோதரவிச் (1881-1970) — சோஷலிஸ்டுப் புரட்சியாளர் கட்சியின் உறுப்பினர். உலக ஏகாதிபத்தியப் போரின் போது அதிதீவிர சமூக—தேசியவெறியர் ஆனர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப்பின் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் நீதி, இராணுவ,மற்றும் கடற்படை அமைச்சராகவும் பிற்பாடு அமைச்சர்-அதிபராகவும் தலைமைத் தளபதியாகவும் இருந்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பின் சோவியத் ஆட்சியதிகாரத்தை எதிர்த்துப் போரிட்டார்; 1918ல் வெளிநாடு போய்விட்டார்.—40, 52, 99, 119, 147.

கேர்ழென்த்செவ் [Kerzhentsev], (லேபிதெவ்), பிளட்டோன் மிகாய்லவிச் (1881-1940)—ரு.ச.ஜ.தொ.கட்சியில் 1904 முதல் உறுப்பினர், போல்ஷிவிக்கு. அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பின் சோவியத் அரசுப் பிரமுகர், கட்சிப் பணியாளர். வரலாற்றியலாளராகவும் கட்டுரையாளராகவும் இருந்தவர்.—405.

கோம்பர்ஸ் [Gompers], சமுவெல் *(1850-1924)* — *அமெரிக்கத் தொழிற்சங்க இயக்கத்தில் முக்கியஸ்தர். அமெரிக்கத் தொழிற் சங்க சம்மேளனத்தை நிறுவியோரில் ஒருவர். முதலாளிகளுடன் வர்க்க ஒத்துழைப்புக் கொள்கையைக் கடைபிடித்தார்; தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிப் போராட்டத்தை எதிர்த்தார். முதல் உலகப் போரின் போது சமூக-தேசியவெறியராக இருந்தார்.—62, 67.*

சர்ச்சில் [Churchill], வின்ஸ்டன் *(1874-1965)—பிரிட்டிஷ் அரசியல் தலைவர், கான்சர்வேட்டிவ். 1918-21ல் இராணுவ அமைச்சராய் இருந்தபோது, சோவியத் ருஷ்யாவின் மீதான இராணுவத் தலையீட்டின் மூலவர்களில் ஒருவராய் இருந்தார்.—119, 122, 127, 137.*

சுகானவ் [Sukhanov], நி. (கிம்மெர், நிக்கலாய் நிக்கலாயெவிச்) *(பிறப்பு: 1882)* — *பொருளியலாளர், சர்வதேச விவகாரங்கள் பற்றிய கட்டுரையாளர், மென்ஷிவிக்கு. 1917ல் பெத்ரொகிராது சோவியத்தின் செயற் கமிட்டியின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்; முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தை முனைப்புடன் ஆதரித்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் மார்த்தவின் மென்ஷிவிக்குக் கோஷ்டியில் சேர்ந்து கொண்டார். —388, 391, 393.*

சூடேகும் [Südekum], அல்பேர்ட் *(1871-1944)* — *ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதிகளின் சந்தர்ப்பவாதத் தலைவர்களில் ஒருவர், திருத்தல்வாதி. உலக ஏகாதிபத்தியப் போரின் போது தீவிரமான சமூக-தேசியவெறியராக இருந்தார்.—337.*

செராட்டி [Serrati], ஜியாச்சீன்டோ மெனேட்டி *(1872-1926)— இத்தாலியத் தொழிலாளர் இயக்கத்தின் பிரமுகர், இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவர், மையவாதி. உலக ஏகாதிபத்தியப் போரின் போது சர்வதேசியவாதியாய் இருந்தார். கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசில் இத்தாலியப் பிரதிநிதிக் குழுவின் தலைவராய்க் கலந்து கொண்டார். 1924ல் இத்தாலியக் கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்தார். இறுதி நாள் வரையில் அக்கட்சியின் வேலைகளில் தீவிரமாய்ப் பங்கு கொண்டார்.—87, 88.*

செர்னிஷேவ்ஸ்கி [Chernyshevsky], நிக்கலாய் கவ்ரீலவிச் *(1828—1889)—மாபெரும் ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதி, கற்பனாவாத சோஷலிஸ்டு, விஞ்ஞானி, எழுத்தாளர், இலக்கிய விமர்சகர்; ருஷ்ய சமூக-ஜனநாயகவாதிகளின் தலைசிறந்த முன்னோடி.—97, 315.*

செர்னோவ் [Chernov], விக்தர் மிஹாய்லவிச் *(1876-1952)—சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் தலைவர்களிலும் தத்துவவாதிகளிலும் ஒருவர். 1917 மே-ஆகஸ்டில், முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் விவசாய அமைச்சராய் இருந்தார்; நிலப்பிரபுக்களின் நிலங்களைக் கைப்பற்றிக் கொண்ட விவசாயிகளுக்கு எதிராக வன்முறையைக் கட்டவிழ்த்துவிட்டார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பின் சோவியத்-எதிர்ப்புக் கலகங்களைத் தூண்டுவதில் ஈடுப்பட்டார். 1920ல் வெளிநாடுகளுக்கு ஓடி, சோவியத்-எதிர்ப்பு வேலைகளில் ஈடுபட்டார்.—98, 289.*

டித்ஸ்கென் [Dietzgen], ஒய்கென் *(1862-1930) — யோசிப் டித்ஸ்கெனின் புதல்வர்.—316.*

டித்ஸ்கென் [Dietzgen], யோசிப் *(1828-1888) — ஜெர்மன் தொழிலாளர், முக்கிய சமூக-ஜனநாயகவாதிகளில் ஒருவர், தத்துவவியலாளர், தாமே சுயேச்சையாய் இயக்கவியல் பொருள்முதல்வாதத்தை வந்தடைந்தவர். இயக்கவியல் பொருள்முதல்வாதத்தைப் புரிந்து கொள்வதில் அவரது சில தவறுகளையும் குறைபாடுகளையும் மீறி, மகோன்னதக் கருத்துக்கள் பலவாற்றையும் வெளியிட்டார் என்றும், இக்கருத்துக்கள் வியக்கத் தக்க தொலைநோக்கிடைய தொழிலாளி ஒருவரது சுயேச்சையான சிந்தனையின் விளைவாகும் என்றும் கார்ல் மார்க்ஸ் கூறினார்.—81,316.*

டிரேவ்ஸ் [Drews], அர்த்தூர் *(1865-1935) — ஆதிக் கிறித்தவத்தின் வரலாறு குறித்து எழுதிய பிற்போக்கு ஜெர்மன் வரலாற்றியலாளர். கிறிஸ்து இருந்தது வரலாற்று உண்மை அல்ல என்று இவர் தமது நூல்களில் உரைத்தார்; சமயச் சபையின் கோட்பாடுகளையும் மதத்தின் தப்பெண்ணங்களையும் கருத்துமுதல்வாதக் கண்ணோட்டத்திலிருந்து விமர்சனம் செய்தார்.—321-322.*

டிரைஃபஸ் [Dreyfus], அல்ஃபிரேட் *(1859-1935) — பிரெஞ்சு இராணுவத் தலைமையகத்தில் அதிகாரி யூதர். தேசத்*

துரோகம் புரிந்ததாய்ப் பொய்க் குற்றம் சாட்டப் பெற்று 1894ல் கடுங்காவல் ஆயுள் தண்டனை விதிக்கப் பட்டார். இதனை எதிர்த்து பிரான்சில் நடைபெற்ற பொதுஜனக் கிளர்ச்சியின் விளைவாய்த் திரும்பவும் அவருடைய வழக்கு விசாரிக்கப்பட்டது. 1899ல் இவர் நிரபராதி என்று தீர்ப்பளிக்கப்பட்டது. 1906ல் அவர் தமது பதவியையும் உரிமைகளையும் திரும்பப் பெற்றார்.—143.

டுராட்டி [Turati], ஃபிலிப்போ *(1857-1932)* — இத்தாலியத் தொழிலாளர் இயக்கத்தில் பங்கு கொண்டவர்; சீர்திருத்தவாதி; இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியை நிறுவியவர்களில் (1892) ஒருவர். பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவ வர்க்கத்தோடு ஒத்துழைக்க வேண்டு மெனும் கொள்கையைக் கடைப்பிடித்தார். முதலாவது உலகப் போரின் போது மையவாத நிலையை அனுசரித் தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிபால் பகைமை யுடன் நடந்து கொண்டார், இத்தாலிய உழைப் பாளி மக்களின் புரட்சி இயக்கத்திற்கு எதிராகப் போராடினார்.—24, 87, 164-165, 289.

திசியுருப்பா [Tsyurupa], அலெக்சாந்தர் திமீத்திரியெவிச் *(1870-1928)*—1898 முதல் கட்சி உறுப்பினர், முழு நேர புரட்சியாளர், சோவியத் அரசுத் துறையாளர். 1921ல் மக்கள் கமிசாரவை, தொழிலாளர் மற்றும் பாதுகாப்பு அவை ஆகியவற்றின் துணைத் தலைவராக நியமிக்கப் பட்டார்.—342.

திமிர்யாஸெவ் [Timiryazev], அர்க்காதி கிலிமேன்தியெவிச் *(1880-1955)*—ருஷ்யப் பௌதிகவியலாளர், கணிதவியலாளர், ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியில் (போல்ஷிவிக்கு கள்) 1921 முதல் உறுப்பினர்.—324.

திரெவெஸ் [Treves], கிளாவுடீயொ *(1868-1933)*—இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் சீர்திருத்தவாதத் தலைவர்களில் ஒருவர்.—165.

திரோத்ஸ்கி [Trotsky] (பிரான்ஷ்டைன்), லெவ் தவீதவிச் *(1879-1940)*—ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, மென்ஷிவிக்கு ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரஸுக்குப் பிறகு (1903) சோஷலிசப் புரட்சியைப் பற்றிய தத்துவ, போர்த்தந்திரப் பிரச்சினைகள் எல்லாவற்றிலும்

போல்ஷிவிக்குகளை எதிர்த்துப் போராடினார். ரு.ச.ஜ.தொ. (போல்ஷிவிக்குகள்) கட்சியின் ஆறாவது காங்கிரசில் போல்ஷிவிக்குக் கட்சியில் உறுப்பினராக அனுமதிக்கப் பட்டார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு பல பொறுப்புள்ள பதவிகளை வகித்தார். ஆயினும் கட்சியின் பொதுக் கொள்கையையும், சோஷலிசக் கட்டுமானத்துக்கான லெனினிய வேலைத்திட்டத்தையும் எதிர்த்து 1923 முதலாய் மூர்க்கமான கோஷ்டிப் போராட்டம் நடத்தினார். சோவியத் நாட்டில் சோஷலிசம் வெற்றி பெறுவது சார்த்தியமல்ல என்று வாதாடினார். திரோத்ஸ்கியமானது கட்சியிலுள் செயல்படும் குட்டிமுதலாளித்துவப் போக்காகும் என்பதை கட்சி அம்பலப்படுத்தியது. சித்தாந்தத்துறையிலும் நிறுவன ஒழுங்கமைப்புத் துறையிலும் கட்சி அதனை முறியடித்தது. 1927ல் திரோத்ஸ்கி கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார், 1929ல் சோவியத் யூனியனிலிருந்து நாடுகடத்தப்பட்டார்; 1932ல் அவர் தமது சோவியத் குடியுரிமையை இழந்தார். வெளிநாட்டில் இருந்து தொடர்ந்து அவர் சோவியத் அரசுக்கும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் சர்வதேசக் கம்யூனிஸ்டு இயக்கத்துக்கும் எதிரான தமது போராட்டத்தை நடத்தி வந்தார்.—*314, 357, 359, 360, 362.*

துகோனி [Dugoni], என்ரீக்கோ *(1874-1945)*—இத்தாலிய சோஷலிஸ்டு; டுராட்டி-திரெவெஸ் சீர்திருத்தவாதக் கோஷ்டிக்கு ஆதரவாயிருந்தவர்.—*165.*

தெ லியோன் [De Leon], டேனியல் *(1852-1914)*—அமெரிக்க ஐக்கிய நாட்டின் தொழிலாளர் இயக்கப் பிரமுகர்; 1890லிருந்து சோஷலிஸ்டுத் தொழிற் கட்சியின் தலைவராகவும் சித்தாந்தவாதியாகவும் இருந்தவர்; பத்திரிகையாளர். 1905ல் உலக ஆலைத் தொழிலாளர் நிறுவனத்தின் ஸ்தாபகர்களில் ஒருவர்.—*64.*

தெனீக்கின் [Denikin], அந்தோன் இவானவிச் *(1872-1947)*—ஜாரிஸ்டு ஜெனரல்; உள்நாட்டுப் போரின்போது (1918-21) வெள்ளைப்படைகளின் தலைவர்களில் ஒருவர்; தெற்கு ருஷ்யாவில் சோவியத்து எதிர்ப்பு வெள்ளைப் படைகளின் தளபதி. அவருடைய படைகள் செஞ்சேனையால் முறிக்கப்பட்டபின் வெளிநாடுகளில் தஞ்சம் புகுந்தார்.—*40, 52, 54, 80, 230, 312, 349.*

நத்தன்சோன் [Natanson], மார்க் அந்திரேயெவிச் *(1850-1919)—புரட்சிகர நரோதியவாததின் பிரதிநிதிகளில் ஒருவர், பிற்பாடு சோஷலிஸ்டு-புரட்சியாளர் ஆனார். சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் தலைவர்களில் ஒருவர். 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பிறகு இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியை நிறுவியவர்களில் ஒருவர். 1918ல் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் நடத்திய கலகத்தைக் கண்டித்தார்.—98.*

நெப்போலியன் முதலாவது (போனப்பார்ட்) [Napoleon I (Bonaparte)] *(1769-1821)—தலைச்சிறந்த பிரெஞ்சுப் படைத் தலைவர், பிரெஞ்சுக் குடியரசின் முதலாவது கான்சல் (1799-1804), பிரான்சின் பேரரசர் (1804-14, மற்றும் 1815).—393.*

நோஸ்கே [Noske], குஸ்டவ் *(1868-1946)—ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் சந்தர்ப்பவாதத் தலைவர்களில் ஒருவர். 1919-20ஆம் ஆண்டுகளில் இராணுவ அமைச்சராக இருந்தார். பெர்லின் தொழிலாளர்கள் மீது கட்டவிழ்த்துவிடப்பட்ட வன்முறைக்கும், கார்ல் லீப்க்னெஹ்ட், ரோஸா லுக்சம்பர்க் ஆகியோரின் கொலைக்கும் தலைமை தாங்கினார்.—24, 110, 114, 149, 337.*

பத்ரேசவ் [Potresov], அலெக்சாந்தர் நிக்கலாயெவிச் *(1869-1934)—மென்ஷிவிக் தலைவர்களில் ஒருவர். பிற்போக்கு தலை விரித்தாடிய ஆண்டுகளில் கட்சிக்கலைப்புப் போக்கின் சித்தாந்தவாதி. அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிற்பாடு வெளிநாடுகளுக்கு ஓடி அங்கிருந்து சோவியத் ருஷ்யாவை எதிர்த்தவர்.—97.*

பாபுஷ்கின் [Babushkin], இவான் வசிலியெவிச் *(1873-1906)—தொழிலாளர்; முழுநேரப் புரட்சியாளர், போல்ஷிவிக்கு. லெனினிய ஏடான இஸ்க்ரா வெளிவருவதற்கான வேலைகளில் முனைப்புடன் பங்கெடுத்துக் கொண்டவர். 1905-07ஆம் ஆண்டுகளின் புரட்சியின் போது அடக்குமுறைப் படைகளது அதிகாரிகளால் சுட்டுக் கொல்லப்பட்டார்.—68.*

பான்க்ஹர்ஸ்ட் [Pankhurst], சில்வியா எஸ்தேல்லா *(1882-1960)—பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கத்தைச் சேர்ந்தவர்,*

*அக்டோபர் சோஷலிசப் புரட்சி வெற்றியடைந்ததும் ஏகாதிபத்திய அரசுகள் சோவியத் ருஷ்யாவுக்கு எதிராய் நடத்திய இராணுவத் தலையீடு நிறுத்தப்பட வேண்டுமென்று கோரினார். கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசில் கலந்துகொண்டார். 1921ல் பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்தார்; ஆனால் கட்சிக் கட்டுப்பாட்டுக்குக் கீழ்ப்பட மறுத்ததற்காகச் சீக்கிரமே கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்.—108-109, 114, 117-118, 126.*

**பியத்தக்கோவ்** [Pyatakov], **கியோர்கி லியொனீதவிச்** *(1890-1937)—போல்ஷிவிக்குக் கட்சியில் 1910ல் சேர்ந்து கொண்டார். 1917ல் பிப்ரவரி முதலாளித்துவ-ஜன நாயகப் புரட்சிக்குப் பிறகு சோஷலிசப் புரட்சி சம்பந்த மான கட்சிக் கொள்கை வழியை எதிர்த்தார். 1920 முதல் நிர்வாக, தொழில் பதவிகளில் செயலாற்றினார். லெனினியக் கட்சிக் கொள்கையை ஓயாமல் எதிர்த்து வந்தார். 1923க்குப் பிற்பாடு திரோத்ஸ்கி எதிர்த்தரப் பில் முனைப்புடன் செயல்பட்டார். கோஷ்டி கட்டும் செயற்பாடுகளுக்காகக் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார். —361.*

**பில்சூட்ஸ்கி, ஜோ.** [Pilsudski, J.] *(1867-1935) — முதலாளித் துவ-நிலப்பிரபுத்துவப் போலந்தின் பிற்போக்குவாத அரசியல் பிரமுகர். பாசிஸ்டு சர்வாதிகாரி. சோவியத் அரசை எதிர்த்து நிலப்பிரபுத்துவப் போலந்து நடத் திய யுத்தத்தின் (1920) சூத்திரதாரிகளில் ஒருவர்.—312.*

**பிளெஹானவ்** [Plekhanov], **கியோர்கி வலென்தீனவிச்** *(1856-1918)—ருஷ்ய, சர்வதேசத் தொழிலாளி வர்க்க இயக் கத்தின் தலைச்சிறந்த பிரதிநிதி, ருஷ்யாவில் முதன்முதல் மார்க்சியத்தைப் பரப்பியவர்.*

*ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரசுக்குப் பிறகு (1903) சந்தர்ப்பவாதத்துடன் இணக்கவாத நிலையை அனுசரித்தார், பிற்பாடு மென்ஷிவிக்குக ளுடன் சேர்ந்து கொண்டார். முதலாவது உலகப் போரின் போது (1914-18) சமூக-தேசியவெறியராக இருந்தார். 1917 பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பின் வெளிநாடுகளிலிருந்து ருஷ்யாவுக்குத் திரும்பினார், முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத் திற்கு ஆதரவு காட்டினார். அக்டோபர் சோஷலிசப்*

*புரட்சியின் பால் எதிர்மறைப் போக்கை அனுசரித்தார்.* ***—30, 97, 142, 151, 315.***

**புகாரின்** [Bukharin], **நிக்கலாய் இவானவிச்** *(1888-1938)—ருஷ்யப் பொதுத்துறை எழுத்தாளர், பொருளியலாளர். 1906லிருந்து ரு.ச.ஜ.தொ. கட்சியின் உறுப்பினர். அரசு, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம், தேசங்களின் சுயநிர்ணய உரிமை ஆகிய பிரச்சினைகளிலும் பிற பிரச்சினைகளிலும் லெனினியத்திற்கு எதிரான நிலையில் நின்றார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு பல பிரச்சினைகளில் கட்சியின் லெனினியக் கொள்கையை எதிர்த்தார். 1918ல் ஜெர்மனியுடனான பிரேஸ்த் சமாதான உடன்படிக்கை குறித்து விவாதம் நடைபெற்ற போது, ''இடதுசாரி'' கம்யூனிஸ்டுகளது கட்சி எதிர்ப்புக் கோஷ்டிக்குத் தலைமை தாங்கினார். தொழிற் சங்கங்கள் குறித்து கட்சியில் விவாதம் நடைபெற்ற போது (1920-21) ஆரம்பத்தில் ''இடைத்தட்டு'' நிலையில் இருந்தார், பிறகு திரோத்ஸ்கியின் லெனினிய-எதிர்ப்புக் கோஷ்டியில் சேர்ந்து கொண்டார். 1928ல் கட்சியில் வலதுசாரி எதிர்த்தரப்புக்குத் தலைமை தாங்கினார். 1929ல் மத்தியக் கமிட்டி அரசியல் குழுவிலிருந்தும் கம்யூனிஸ்டு அகிலச் செயற் கமிட்டியின் தலைமைக் குழுவிலிருந்தும் விலக்கப்பட்டார். 1937ல் கட்சிக்குப் பகைமையான நடவடிக்கைகளுக்காகக் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்.* ***—35, 361.***

**பெத்லியூரா** [Petlura], **சிமோன் வசீலியெவிச்** *(1877-1926)—உக்ரேனிய தேசியவாதிகளின் தலைவர்களில் ஒருவர். அந்நிய இராணுவத் தலையீட்டின் போதும், உள்நாட்டு யுத்தத்தின் போதும் உக்ரேனில் எதிர்ப்புரட்சியின் தலைமைப் பிரமுகர்களில் ஒருவர்.* ***—246.***

**பெபெல்** [Bebel], **ஔகுஸ்ட்** *(1840-1913)—ஜெர்மன் சமூக-ஜனநாயகம், இரண்டாம் அகிலம் ஆகியவற்றின் தலைவர்களில் ஒருவர். 1869ல் வில்ஹெல்ம் லீப்க்னெஹ்ட்டுடன் சேர்ந்து ஜெர்மன் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியை (ஐசனஹர்கள்) அமைத்தார்.* ***—32, 282, 301, 337.***

**பெர்ன்ஷ்டைன்** [Bernstein], **எடுவார்டு** *(1850-1932) — ஜெர்மன் சமூக-ஜனநாயகம், இரண்டாவது அகிலம் இவற்றில் கடைகோடியான சந்தர்ப்பவாதிகளது தலைவர்.*

சீர்திருத்தவாதம், திருத்தல்வாதம் இவற்றின் தத்துவ வாதி. மார்க்சியத்தின் புரட்சிகர சாரப்பொருளை நிராகரித்துவிட்டு முதலாளித்துவத்தில் தொழிலாளர்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதை நோக்கமாய்க் கொண்ட சீர்திருத்தங்களுக்காகப் போராடுவதே தொழிலாளி வர்க்க இயக்கத்தின் பிரதான கடமையாகுமென அவர் கூறினர்.—31.

**பௌவர்** [Bauer], ஓட்டோ *(1882-1938)*—ஆஸ்திரிய சமூக-ஜனநாயகம், இரண்டாம் அகிலம் ஆகியவற்றின் வலதுசாரி தலைவர்களில் ஒருவர். 1918-19ஆம் ஆண்டுகளில் முதலாளித்துவ ஆஸ்திரியக் குடியரசின் அயல்நாட்டு அமைச்சராய் இருந்தார். ஆஸ்திரியத் தொழிலாளர்களின் புரட்சிகர நடவடிக்கைகளை நசுக்குவதில் முக்கிய பங்கு கொண்டார்.—10, 24, 36, 96, 106, 150.

**பெனெகக்** [Panneckoek], **ஆன்டனி (ஹொார்னெர்** [Horner], **கார்ல்)** *(1873-1960)*—ஹாலந்து நாட்டைச் சேர்ந்த சமூக-ஜனநாயகவாதி. உலக ஏகாதிபத்தியப் போரின் போது சர்வதேசியவாதியாக இருந்தார். 1918-21ஆம் ஆண்டுகளில் ஹாலந்துக் கம்யூனிஸ்டுக் கட்சியின் உறுப்பினராய் இருந்தார்; கம்யூனிஸ்டு அகிலத்தின் வேலைகளில் கலந்து கொண்டார். அதிதீவிர இடதுசாரி, குறுங்குழுவாதப் போக்கைப் பின்பற்றினர்.—47, 53, 104.

**பொர்டிகா** [Bordiga], அமடேவோ *(பிறப்பு-1889)*—இத்தாலிய நாட்டு அரசியல்வாதி, இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் உறுப்பினர். கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசில் கலந்து கொண்டார். 1921ல் இத்தாலியக் கம்யூனிஸ்டுக் கட்சியை நிறுவுவதில் பங்கு கொண்டார். பொர்டிகா இடதுசாரிக் குறுங்குழுவாதக் கொள்கையைக் கடைப்பிடித்தார். பாசிஸ்டு-எதிர்ப்புக் கூட்டு முன்னணியை அமைத்திடுவதென்ற கம்யூனிஸ்டு அகிலப் போர்த்தந்திரத்தை எதிர்த்துச் செயல்பட்டார்.—87, 165.

**மஹ்னோ** [Makhno], **நேஸ்தர் இவானவிச்** *(1884-1934)*—உக்ரேனில் 1918-1921ல் சோவியத் ஆட்சியதிகாரத்துக்கு எதிராய்ப் போராடிய எதிர்ப்புரட்சி அராஜகவாத-குலாக்குப் படைப்பிரிவுகளின் தலைமைப் பிரமுகர்.—247.

**மலினேவ்ஸ்கி** [Malinovsky], **ரொலன் வத்சிலாவவிச்** *(1876-1918)—நான்காவது அரசாங்க டூமாவின் (1912-14) உறுப்பினர்; அந்த டூமாவின் போல்ஷிவிக் குழுவில் சேர்ந்தார். இவர் ஜாரிஸ்டு இரகசியப் போலீசின் கையாள் என்பது 1917ல் அம்பலமாயிற்று. 1918ல் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டு, அனைத்துருஷ்யாவின் மத்தியச் செயற் குழுவின் உயர் நீதிமன்றத்தால் மரண தண்டனை விதிக்கப்பட்டுச் சுடப்பட்டார்.—52.*

**மாக்டொனல்ட்** [MacDonald], **ஜேம்ஸ் ராம்சே** *(1866-1937)—ஆங்கிலேய அரசியலாளர்; சுயேச்சைத் தொழிற் கட்சி, தொழிற் கட்சி ஆகியவற்றை நிறுவியவர்களிலும் தலைவர்களிலும் ஒருவர். தீவிர சந்தர்ப்பவாதக் கொள்கையைக் கடைப்பிடித்தவர். உலக ஏகாதிபத்தியப் போரின் தொடக்கத்தில் அமைதிவாதக் கொள்கையைப் பின்பற்றினர்; பிற்பாடு ஏகாதிபத்திய முதலாளித்துவ வர்க்கத்தைப் பகிரங்கமாய் ஆதரிக்கத் தொடங்கினர். 1918-20ல் சோவியத் ருஷ்யாவின் மீதான தலையீட்டை எதிர்த்து பிரிட்டிஷ் தொழிலாளர்கள் நடத்திய போராட்டத்தைத் தடுக்க முயன்றார்.—110, 113.*

**மாரிங்** [Maring], **ஹென்ரிஹ்** *(1883-1942)— டச்சு சமூக-ஜனநாயகவாதி. 1902 முதல் டச்சு சமூக-ஜனநாயகக் கட்சி உறுப்பினர். 1913-19ல் ஜாவாவில் வசித்தார், ஜாவா, டச்சு கம்யூனிஸ்டுக் கட்சிகளின் உறுப்பினர் ஆனார். கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது காங்கிரசில் கலந்து கொண்டார். 1921-23ல் கம்யூனிஸ்டு அகிலத்தின் செயற் குழுவின் பிரதிநிதியாகத் தொலைக் கிழக்கு நாடுகளுக்குப் பொறுப்பேற்று சீனவில் செயலாற்றினர்.—198.*

**மார்க்ஸ்** [Marx], **கார்ல்** *(1818-1883)—விஞ்ஞானக் கம்யூனிசத்தின் ஸ்தாபகர், மேதைமை வாய்ந்த சிந்தனையாளர், சர்வதேசப் பாட்டாளி வர்க்கத்தின் தலைவராகவும் ஆசானுகவும் திகழ்கிறவர்.—32, 46, 64, 88, 96, 213, 215, 283, 320, 325, 389, 392.*

**மார்ஹ்லேவ்ஸ்கி** [Marchlewski], **ஜூலியன்** *(1886-1925)—போலந்து, ஜெர்மன், சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின் முக்கிய தலைவர்களில் ஒருவர்.*

*1918ல் சோவியத் ருஷ்யாவுக்கு வந்தார், அனைத்து ருஷ்யவின் மத்தியச் செயற் கமிட்டியின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். வாழ்நாளின் இறுதி வரை இதன் உறுப்பினராக இருந்து வந்தார். கம்யூனிஸ்டு அகிலத்தைக் கட்டியமைப்பதில் பங்கு கொண்டார். பொருளாதாரப் பிரச்சினைகள் குறித்தும் போலந்தின் வரலாறு குறித்தும் சர்வதேச உறவுகளின் வரலாறு குறித்தும் புத்தகங்கள் எழுதியவர்.—176.*

மார்த்தவ், லே, (ஸெதெர்பௌம் யூ.ஒ.) [Martov, L. (Tsederbaum Y. O.)] *(1873-1923)—மென்ஷிவிசத்தின் தலைவர்களில் ஒருவர். முதலாவது உலகப் போரின் போது மையவாதி. 1917 பிப்ரவரிப் புரட்சிக்குப்பின் மென்ஷிவிக்-சர்வதேசியவாதிகளின் குழு ஒன்றிற்குத் தலைமை தாங்கினார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சோவியத் ஆட்சியை எதிர்த்துப் பகிரங்கமாகவே பகைவனின் முகாமில் சேர்ந்து கொண்டார். 1920ல் வெளி நாடுகளுக்கு ஓடினார்.—97, 100, 289.*

மில்யுக்கோவ் [Milyukov], பாவெல் நிக்கலாயெவிச் *(1859-1943)—காடெட்டுக் கட்சியின் தலைவர், ருஷ்ய ஏகாதிபத்திய முதலாளிகளின் சித்தாந்தவாதி, வரலாற்றியலாளர், பத்திரிகையாளர். 1917ல் முதலாளித்துவ இடைக்கால அரசாங்கத்தில் அமைச்சராய் இருந்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப்பின் சோவியத் ருஷ்யாவிற்கு எதிராக அன்னிய இராணுவத் தலையீட்டுக்கு ஏற்பாடு செய்தவர்களில் ஒருவர். குடிபெயர்ந்த வெள்ளைப் படையினரிடையே முனைந்து செயல்பட்டவர்.—281.*

மெர்ஹெயிம் [Merrheim],அல்போன்ஸ்*(1881-1925)—பிரெஞ்சுத் தொழிற்சங்கப் பிரமுகர், சிண்டிக்கலிஸ்டு; 1905லிருந்து பிரான்சில் உலோகத் தொழிலாளர் சம்மேளனம், அனைத்து உழைப்புச் சம்மேளனம் இவற்றின் தலைவர்களில் ஒருவர். சமூக-தேசியவெறிப் போக்கையும் சீர்திருத்தவாதத்தையும் பகிரங்கமாய்ப் பின்பற்றியவர்.—62, 168.*

மொடிலியானி [Modigliani], விட்டோரியோ எமனுவலே *(1872-1947) — இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவர்; சீர்திருத்தவாதி.—165.*

யுதேனிச் [Judenich, N.N.] நிக்கலாய் நிக்கலாயெவிச் *(1862-1933)—ஜாரிஸ்டு ஜெனரல். அக்டோபர் சோஷலிசப்*

*புரட்சிக்குப்பின் ருஷ்யாவின் வட-மேற்குப் பிரதேசத்தில் இயங்கிய வெண்படைகளுக்குத் தலைமை தாங்கினார். 1919ல் பெத்ரொகிராதைக் கைப்பற்ற இரு முறை முயன்றார், ஆனால் தோல்வியடைந்தார். 1919 நவம்பரில் செஞ்சேனையால் தோற்கடிக்கப்பட்டபின் பின்வாங்கிச் சென்று எஸ்தோனியாவில் புகுந்து கொண்டார்.—54, 246, 312.*

**ராதெக்** [Radek], **கார்ல்** *(1885-1939)—இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கலீஷியா, போலந்து, ஜெர்மனியின் சமூக-ஜனநாயக இயக்கத்தில் ஈடுபட்டார். முதல் உலகப் போரின் போது சர்வதேசிய நிலையை ஏற்றுச் செயல்பட்டார், ஆனால் மையவாதத்தை நோக்கித் திரிபுற்றார். தேசங்களது சுயநிர்ணய உரிமை பற்றிய பிரச்சினையில் தவறான நிலையை அனுசரித்தார். 1917 ரு.க. கட்சியில் (போல்ஷிவிக்குகள்) சேர்ந்தார். பிரேஸ்த்லித்தோவ்ஸ்க் சமாதான உடன்படிக்கை பற்றிய விவாதத்தின் போது ''இடதுசாரி கம்யூனிஸ்டு''. 1923 முதல் திரோத்ஸ்கிய எதிர்த்தரப்பின் முனைப்பான உறுப்பினர். கட்சி விரோதச் செய்கைகளுக்காகக் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்.—35.*

**ராய், மனவேந்திர நாத்** *(1892-1948) — இந்திய அரசியல்வாதி; கம்யூனிஸ்டுக் கட்சியின் உறுப்பினர். கம்யூனிஸ்டு அகிலத்தின் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது காங்கிரஸ்களில் பிரதிநிதி; 1922ல் கம்யூனிஸ்டு அகிலத்தின் செயற் கமிட்டியின் வேட்பு உறுப்பினரும், 1924ல் முழு உறுப்பினரும் ஆனார். பிற்காலத்தில் கம்யூனிஸ்டுக் கட்சியை விட்டு விலகினார்.—198, 199.*

**ரீக்கவ்** [Rykov], **அலெக்செய் இவானவிச்** *(1881-1938) — ருஷ்யாவின் சமூக-ஜனநாயகக் கட்சியில் 1899ல் சேர்ந்து கொண்டார். 1917ல் பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பிற்பாடு, சோஷலிசப் புரட்சிக்காகக் கட்சி கடைப்பிடித்த லெனினியக் கொள்கை வழியை எதிர்த்தார்.*

*அக்டோபர் சோஷலிசப் புரட்சியைத் தொடர்ந்து உள்துறை மக்கள் கமிசார் ஆனார். உச்சப் பொருளாதார அவையின் தலைவராகவும், மக்கள் கமிசாரவையின், உழைப்பு மற்றும் பாதுகாப்பு அவையின் துணைத் தலை*

